# வீரபாண்டியன் மனைவி

## முதல் பாகம்


எழுதியவர

அரு. ராமநாதன்


**மின்னூலாக்கம் : செல்லா**


பிரேமா ™

பிரசுரம்

59, ஆற்காடு சாலை,

கோடம்பாக்கம்,

சென்னை - 600 024.

தொலைபேசி 24800325, 24833180, 24811755

E-mail : aruram@md2.vsnl.net.in

Website : www.premapirasuram.com

பிரேமா பிரசுரம் - 330

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | ஜூலை | 1986 |
| இரண்டாம் பதிப்பு | மே | 1992 |
| மூன்றாம் பதிப்பு | ஜூலை | 1998 |
| நான்காம் பதிப்பு | மே | 2003 |
| ஐந்தாம் பதிப்பு | மே | 2008 |
| ஆறாம் பதிப்பு | டிசம்பர் | 2010 |






**விலை ரூ. 100/-**

கம்ப்யூட்டர் வடிவமைப்பு ஏ.ஆர். எண்டர்பிரைசஸ், சென்னை 24.

அச்சிட்டோர் காரிஸ் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை 29

# வீரபாண்டியன் மனைவி

## கடவுள் வாழ்த்து

*உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்*
*நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா*
*அலகிலா விளையாட்டுடையார் அவர்*
*தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே!*

கம்ப ராமாயணம்

## அத்தியாயம் 1



மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் அர்த்த யாம மணி அடித்தது. ஆலவாய் பெருமானின் அருள் பிரசாதத்தை வழங்குவதற்காக அந்த மணியோசை நாலாபுறமும் பரவி, இருளில் அவதியுறும் மனிதகுலம் அனைத்தையும் அறைகூவி அழைத்தது.

அன்று பக்தர்கள் எவரும் கோயிலுக்குப் போகவில்லை. சித்தத்தைச் சிவன்பால் வைத்த சிவனடியார் எவரும் சொக்கநாதரைத் தரிசிக்கப் போகவில்லை; பரம்பரை ஆண்டிகள் மட்டுமல்ல, பஞ்சத்து ஆண்டிகள் கூடத் தங்கள் அன்னக் காவடிகளைத் தூக்கிக் கொண்டு பஞ்சாமிர்தப் பிரசாதம் பெறப் போகவில்லை. அன்று கையில் வாளேந்திய போர்வீரனைத் தவிர வேறு எவனுமே தெருவில் நடமாடப் பயந்தான். திருவோடுகளோடு அலையும் தினப்பட்டினிக் கூடத்

திருவீதிகளைக் கடந்து தேவாலயத்தை அடைவதற்குள் நடுவீதியிலே கைலாஸ பதவி சித்தித்து விடுமோ என்று நடுங்கினான்.

அது கி.பி. 1180ல் ஒரு பயங்கரமான இரவு!

தலைமுறை தலைமுறையாகப் பாண்டியர்களின் தலைநகராக விளங்கிய மதுரைக் கோட்டைமீது சோழர்களின் புலிக்கொடி வானளாவிப் பறந்தது. வீரபாண்டியனுக்குரிய மீனக்கொடியும் பாண்டியனின் நேசப்படையான சிங்களவர்களின் ஈழக் கொடியும் கீழே முறிந்து விழுந்து இரத்தச் சகதியில் சிதைந்து கிடந்தன.

மூன்றாவது குலோத்துங்கச் சோழ மன்னன். பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வீரபாண்டியனின் தலைநகரான மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான்.

பாண்டிய நாட்டின் வீர மண் பூமியில், பிணக் குவியல்களின் மத்தியில், சோழர்களின் வெற்றித் தூண் நடப்பட்டிருந்தது.

அந்தப் பயங்கரமான இரவில், இரண்டு சோழ நாட்டு அதிகாரிகள் தீப்பந்தங்களை ஏந்திய வண்ணம், வெற்றித் தூண் அருகே அமர்ந்திருந்தனர். இருவரும் மார்பில் வீரக் கவசங்களையும் இரத்தம் சொட்டும் உடை வாள்களையும், விலையுயர்ந்த ஆபரணங்களையும் அணிந்திருந்தனர். இருவரில் ஒருவர் கிழவர்: இன்னொருவன் வ்ாலிபன். இருவரும் அந்தக் கனத்த இருளில் சுவாரசியமாகக் கதை பேசுவதில் ஆழ்ந்திருந்தனர்.

"நீ ஆரம்பிப்பது புதுக்கதையா?" என்று கேட்டார் கிழவர்.

"இல்லை. எல்லாம் பழைய கதைதான்! போரும் காதலும் உலகம் பிறந்த நாள் முதலாய் இருந்து வரும் ஒரு மிகப் பழைய கதை! துரதிர்ஷ்டவசமாக உருவங்களும் சம்பவங்களும் மட்டுந்தான் காலத்திற்கேற்றபடி மாறுபடுகின்றன!" என்று சிரித்தான் வாலிபன்.

"அப்படியானால் நம் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தி இந்த மதுரை மீது படையெடுத்ததற்கும் நீ போரில் ஈடுபட்டதற்கும் காரணம் காதல் என்றா சொல்கிறாய்?"

"ஆமாம், சம்புவராயரே! இந்த ஜனநாதக் கச்சிராயன் ஏதாவது சொல்கிறான் என்றால் அது கல்வெட்டுக்குச் சமானம்!"

ஜனநாதன் வாலிபன்! சோழர் வாட்ப் படைத் தலைவன்; திருமுனைப்பாடி நாட்டைச் சிற்றரசர்களாய் ஆளும் காடவராயர்கள் வம்சத்தைச் சேர்ந்தவன்; பழைய பல்லவ மரபினன். சோழ அரசாங்கத்தில் அதிகச் செல்வாக்கு உள்ளவன். எதையும் விஷமச் சிரிப்புடன் பரிகாசமாகப் பேசுவது அவனது சுபாவம்.

சம்புவராயர் கிழவர் யானைப் படைத் தலைவர்களில் ஒருவர். மகாபலிபுரத்தைச் சிற்றரசர்களாய் ஆளும் செங்கேணி வம்சத்தைச் சேர்ந்தவர். கடவுள் பக்தியும், ராஜ பக்தியும் மிகுந்தவர். எதையும் நிதானமாகப் பேசுவது அவரது சுபாவம்.

"ஜனநாதா, நீ எவளைக் காதலிக்கிறாய்? நம் குலோத்துங்க சோழ மகாராஜா எவளைக் காதலிக்கிறார்?" என்று கிழவர் சம்புவராயர் கேட்டார்.

"இனிமேல் நடக்கப் போவதை உம்மைப் போன்ற கிழட்டு சேனாதிபதிகளிடம் சொல்லக் கூடாது. நீர் காயகற்பம் சாப்பிட்டு வந்திரானால் உம் கண் முன்னாலேயே ஒரு பெரிய கதை நடக்கப் போவதைக் காண்பீர்!"

"என் காலத்தில் நானே சரித்திரத்தில் எத்தனையோ கதைகளை உண்டாக்கியிருக்கிறேன். இப்போது நான் கிழவன். இனிமேல் உன்னையும் நம் குலோத்துங்க மன்னரையும் போன்ற வாலியர்களின் கதைகளைக் கேட்டுப் பெருமூச்சு விடுவதைத் தவிர வேறு வழியில்லை!" என்றார் சம்புவராயர்.

அந்தக் கிழவருக்கு ஜனநாதன் சொல்வது எதிலும் உள்ளூர நம்பிக்கையிருப்பதில்லை. குலோத்துங்க சோழ மன்னர்பிரானின் காதல்தான் மதுரை மீது படையெடுத்ததற்குக் காரணம் என்பதை அந்தப் பெரியவரால் நம்ப முடியவில்லை. சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் உள்ள அரசியல் விரோதத்தைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார்.

பழங்காலம் தொட்டுப் பாண்டிய நாடும் சோழ நாடும் தீராப் பகைமை பூண்டு ஓயாமல் போரிட்டு வந்தன. மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் முதலான கோட்டங்களை உடையது பாண்டிய நாடு. தஞ்சை, உறையூர், கும்பகோணம், காஞ்சி, கடப்பை' வரை உள்ளடங்கியிருப்பது சோழ நாடு. வையை நதியால் வளம்பெறும் பாண்டிய நாடு உடல் பலம் மிக்க வீர மறவர்களைக் கொண்டது. காவிரி நதியால் வளம் பெறும் சோழ நாடு மூளை பலம் மிக்க ராஜ தந்திரிகளைக் கொண்டது. பாண்டியர்கள், "அன்பே தெய்வம்" என்று பூஜித்து வாழ்ந்தனர். சோழர்களோ, "அறிவே தெய்வம்" என்று வாதித்தனர். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் கொள்கையைப் பாண்டியர் பரப்பினர். சோழர்களோ, கடவுளைவிட மதாசாரங்களையும் ஜாதியாசாரங்களையுமே அதிகம் மதித்தனர். ''மக்களுக்காகவே மன்னன்'' என்ற அரசியல் அடிப்படையில் பாண்டிய நாடு வளர்ந்து வந்து தற்காப்பிற்காக ஊர்ப்படைகளையும் கோட்டைகளையும் அதிகமாகப் பெருக்கிக் கொண்டது. சோழ நாடோ ''மன்னனுக்காகவே மக்கள்'' என்ற ஏகாதிபத்திய அடிப்படையில் வளர்ந்து வந்து ஆக்ரமிப்பிற்காக அரசாங்கப் படைகளையும் அரசியல் தந்திரிகளையும் அதிகம் பெருக்கிக் கொண்டது.

ஆக, பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் நடந்து வந்த ஓயாத போராட்டத்தை குடியரசுத் தத்துவத்திற்கும் ஏகாதிபத்திய வெறிக்கும் நடந்த போராட்டமென்றோ, தற்காப்புக்கும், ஆக்கிரமிப்புக்கும் நடந்த போராட்டம் என்றோ இருதயத்துக்கும், மூளைக்கும்,

அன்புக்கும் அறிவுக்கும், மனசாட்சிக்கும் குயுக்திக்கும் நடந்த போராட்டம் என்றோ, இயற்கைப் பண்பாட்டிற்கும் செயற்கை கலாசாரத்திற்கும் நடந்த மல்யுத்தமென்றோ சுருக்கமாகச் சொல்லலாம்.

இந்த நிலையில், மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டை அரசாண்டு வந்த வீரபாண்டியன், இலங்கை மன்னன் பராக்கிரமபாகுவின் நெருங்கிய நண்பனாகி, பௌத்த மதத்தின் சமதர்மக் கொள்கைகளைப் பின்பற்ற விரும்பினான். இதைக் கண்டு சோழ நாட்டு ஏகாதிபத்தியவாதிகள் மிரண்டனர். சோழ ஏகாதிபத்தியத்திற்கு ஓர் எதிர் சக்திபோல் வளரும் பாண்டிய நாட்டை வலியற்ற நாடாக ஒடுக்கிவிட விரும்பினர். அப்போது சோழ அரசனாயிருந்த மூன்றாவது குலோத்துங்க சோழன் பட்டத்திற்கு வந்த புதிது. இருபது வயசு வாலிபன். சோழர்களின் புலிக் கொடி உலகெங்கும் பறக்க வேண்டும், சோழ நாட்டுக் கலாசாரத்தை உலகெங்கும் பரப்ப வேண்டும் என்று ஏகாதிபத்தியக் கனவு கண்டான். முதலில் தன்னருகே உள்ள பாண்டிய நாட்டின் சக்திகளை நிர்மூலமாக்கிப் பாண்டிய நாட்டைத் தன் சாம்ராஜ்யத்தின் கீழ்க் கொண்டு வர விரும்பினான். ஆனால் ஒன்றுபட்ட சமுதாயமாக விளங்கும் பாண்டிய நாட்டின் வீர மறவர்களையும் அவர்களுக்குத் துணை வரக்கூடிய இலங்கைப் படையையும் வெல்வது அவ்வளவு இலகுவான காரியமல்ல. இதனை நன்குணர்ந்த குலோத்துங்க சோழன் குயுக்தியான முறையில்தான் பாண்டிய நாட்டை மெல்ல மெல்ல கவர வேண்டுமென்று நிச்சயித்தான். எங்கோ தென் பாண்டிய நாட்டின் மூலையில் கிடந்த குலசேகரன் மகன் விக்கிரம பாண்டியனை வாரிசு போட்டியிடும்படி தூண்டி விட்டு, பாண்டிய நாட்டில் இரண்டு கட்சிகளை உண்டாக்கிப் பிளவுபடுத்தினான். பிறகு வீரபாண்டியனிடமிருந்து ராஜமுடியைப் பறித்து விக்கிரம பாண்டியனுக்குத் தானம் செய்யப் போவதாகச் சொல்லிக் கொண்டு, மண்ணாசை வெறி பிடித்த மூன்றாவது குலோத்துங்க சோழன் பாண்டியர்களின் தலைநகரான மதுரை மீது படையெடுத்து வந்தான். சோழ நாட்டின் மூன்று

மகாசேனைகள், கைக்கோளப் படைகள், குஞ்சரமல்லர் என்ற யானைப் படைகள், வாள்பெற்ற வீரர்கள், வில்லிகள், குதிரைச் சேவகர்களெல்லாம் ஒருமிக்கத் திரண்டுவந்து மதுரைப் படையெடுப்பில் பயங்கரமாகத் தாக்கினார்கள்.

முன்னறிவிப்பின்றி எதிர்பாராமல் வந்த அப்படையெடுப்பை வீரபாண்டியனால் சமாளிக்க முடியவில்லை. அவனது வீர மறவர்களின் இரத்தத்தால் வைகை ஆறு இரத்த நெய்யாக ஓடியது. பலநாள் முற்றுகைக்குப் பிறகு படுதோல்வியடைந்து பகைவர் கையில் தலைநகரை விட்டுவிட்டு வீரபாண்டியன் தன் குடும்பத்துடன் எங்கோ ஓடிவிட்டான். வீரபாண்டியனுக்கு உதவியாயிருந்த இலங்கை மன்னன் பராக்கிரமபாகுவின் ஈழப் படையும் மூக்கறுப்புண்டு ஓடிவிட்டது. நான்மாடக் கூடல் நன்கலம் இழந்த விதவையைப் போல் எதிரிகளின் கையில் சிக்கிக்கொண்டது.

ஆனால் மதுரை கோட்டைக்குள்ளே...

சோழர்கள் எதிர்பார்த்தபடி, வீரபாண்டியன் போரில் வீரமரணமடைந்து போர்க்களத்தில் பிணமாகிக் கிடக்கவில்லை! தலையை கொடுத்தாகிலும் தலைநகரைக் காக்கவில்லை. அவன் தன் குடும்பத்தோடு எங்கோ தலைமறைந்து விட்டான்!

இது குலோத்துங்க சோழனுக்கு மிகவும் துயரத்தைத் தரக்கூடிய செய்தி! வீரபாண்டியனோ, அல்லது அவன் குமாரர்களில் ஒரு கைச்சிசுகூட உயிரோடிருக்கும்வரை, பாண்டிய நாட்டில் சோழ ஆக்ரமிப்புக்கு எதிராக ஒரு கட்சி ரகசியமாக வேலை செய்து கொண்டேயிருக்கும்; பாண்டியர்களின் வீர சிம்மாசனத்தில் விக்கிரம பாண்டியன் என்ற அரசனை ஒரு பொம்மை ராஜாவாகச் சோழர்கள் அமர்த்தி வைத்தாலுங்கூட, தலைமறைவாக எதிர்ப்பு இருந்துகொண்டேயிருக்கும். அந்தப் பொம்மை ராஜாவின் பெயரால் பாண்டியநாடு முழுவதும் சோழ அதிகாரிகளை அமர்த்தித் தன் இஷ்டம்போல் பாண்டிநாட்டை ஆளலாம் என்ற குலோத்துங்க சோழனின் ராஜதந்திரமும் பலிக்காமல் போய்விடலாம்.

பாண்டி நாட்டின் நிலங்களையும் அதிகாரங்களையும் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்ற சுயநல மனப்பான்மையோடு மதுரைப் படையெடுப்பில் கலந்து கொண்ட சோழ நாட்டு அதிகாரிகளும் சிற்றரசர்களுங்கூட அதிருப்தியடைவார்கள். குலோத்துங்கனின் அந்தரங்க அதிகாரியும் சேனைமீகாமனுமான இராஜராஜக் கம்பீர சேதிராயன் இவற்றையெல்லாம் தீவிரமாகச் சிந்தித்தான். வீரபாண்டியனும் அவனது குடும்பமும் நிர்மூலமாகும் வரை நிம்மதியில்லை என்று தோன்றியது. உடனே, வீரபாண்டியனையும் அவன் குமாரர்களையும் உயிரோடாவது பிணமாகவாவது கொண்டுவரும்படி சேனை மீகாமன் சேதிராயன் தன் போர் வீரர்களுக்கு உத்திரவிட்டான். வீரபாண்டியனைக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் வரையில் மதுரை மக்களைச் சித்திரவதை செய்யும்படியும் கட்டளை பிறப்பித்தான்.

மதுரையைக் கைப்பற்றி வெற்றி மாலை சூடிய சோழ வீரர்கள் இப்போது மதுரையைச் சூறையாடி மக்களை வேட்டையாடத் தொடங்கினர். மதுரையில் எஞ்சியுள்ள பாண்டிய வீரர்களையும் சிங்களவ வீரர்களையும் நடுவீதிகளிலே நிறுத்திக் குத்திக் கொன்றனர். இலங்கைப் படைத் தலைவர்களின் தலைகளை வெட்டிப் பாண்டிய வீரர்களின் குடல்களில் கட்டி மதுரைக் கோட்டை வாசல்களில் தொங்க விட்டனர். மதுரையின் . மாடமாளிகைகளையும் குடிசைகளையும் தீவைத்துக் கொளுத்தினர். தெருவில் தென்படுபவனை யெல்லாம் சித்திரவதை செய்து படுகொலை புரிந்தனர். கையில் சிக்கும் பாண்டியநாட்டுப் பெண்களையெல்லாம் நடு வீதிகளிலேயே மானபங்கம் செய்தனர். கன்னியென்றும் விதவையென்றும் கர்ப்பவதியென்றும் வித்தியாசம் பாராமல் இருளில் கண்மூடிப் போய் மிருகங்களைப் போல நடந்து கொண்டனர்.

மதுரை பிணக்காடு ஆயிற்று. கபாலீஸ்வரரின் கழுத்தில் தொங்கும் மண்டையோடுகளின் மாலையைப் போலத் திருவீதிகளிலெல்லாம் தலைகள் வரிசையாகக் கிடந்தன. கசங்கிய பூக்களைப்போல இருண்ட

சந்துகளிலெல்லாம் இளம் பெண்களின் உடல்கள் ஸ்மரணையற்றுச் சிதறிக் கிடந்தன. அழிவுக்கடவுள் ருத்திர தாண்டவம் புரியும் மயானக் கரைபோல மதுரை காட்சியளித்தது. எங்கு பார்த்தாலும், பிணக் குவியல்கள்! எந்தப்புறம் திரும்பினாலும் மதுரையம்மனுக்கு இரத்தக் காப்பு பூசியதுபோல ஒரே இரத்தச் சிகப்பு!

இருளின் தீயில் கருநீல ரத்தச் சிலப்பாகத் தெரியும் மதுரை நகரை, ஜனநாதன் தன் கண்களால் உற்றுப் பார்த்து விட்டு ஒரு பெருமூச்சுடன் கிழவர் சம்புவராயரின் பக்கம் திரும்பினான்.

"சம்புவராயரே, பாண்டிநாடு நம் காலடியில் விழுந்து விட்டது. பாண்டியனிடமிருந்து மதுரையைக் கைப்பற்றித் தீ வைத்துக் கொளுத்துகிறோம். இனிமேல் இந்த மதுரையிலிருந்துதான் ஒரு ரசமான கதை ஆரம்பமாகப் போகிறது!" என்று ஜனநாதன் புன்னகை செய்தான்.

"ஆமாம், நம் குலோத்துங்க சோழ மன்னரின் ஏகாதிபத்தியக் கதை ஆரம்பமாகப் போகிறது. ஜனநாதா!.... தீப்பிடித்து எரியும் ஜ்வாலையில் பாண்டி நாட்டின் இருதயத்தைக் கிழித்துக் கொண்டு திக்கெட்டும் பரவப்போகும் நம் சோழ ஏகாதிபத்தியத்தின் வெற்றி ஜ்வாலை வீசவில்லையா? ரத்தக் காடாகிக் கிடக்கும் இம் மதுரையின் ரத்தச் சிவப்பில், உலகம் முழுவதும் ஒளி மயமாக்கும் நம் சோழ சாம்ராஜ்யத்தின் சூரியோதயம் உன் கண்முன் வரவில்லையா?"

"இல்லை சம்புவராயரே! துரதிருஷ்டவசமாக நான் இந்த மதுரையின் அழிவுத் தீயில், வெற்றி பெற்ற நம் சோழ ராஜ்யத்தின் அழிவைத்தான் அதிகம் காண்கிறேன்! உதய சூரியன் மட்டுமல்ல, அஸ்தமன சூரியன் கூடத்தான் ரத்தச் சிவப்பாக இருக்கிறது!"

"ஜனநாதா! நம் சோழ நாட்டு அதிகாரிகளில் நீ ஒருவன்தான் எதற்கும் ஏறுமாறாகப் பேசுகிறவன். நம் குலோத்துங்கச் சக்கரவர்த்திக்கு அடங்கிய சிற்றரசர்களில்

நீ ஒருவன் தான் எதிலும் அதிருப்தி அடைபவன். நம் சோழநாட்டுப் படைகள் அனைத்திலும் உன் கையிலுள்ள வாலிபப் படைகள் தாம் எதைக் கண்டும் முணுமுணுப்பவர்கள்!"

"சம்புவராயரே, நீர் ஒருவர்தான் எந்த அல்ப காரியத்திலும் அதிகத் திருப்தியடைந்து விடுகிறீர். நம் சோழ நாட்டு அதிகாரிகளில் நீர் ஒருவர்தான் நம் மகாராஜாவை அதிகம் முகஸ்துதி செய்கிறீர். நம் சோழ நாட்டுப்படைகள் அனைத்திலும் உம்முடைய கிழட்டுப் படைகள் தான் அதிகம் ஆமை வேகத்தில் நகர்பவர்கள்!"

"ஜனநாதா! வீரபாண்டியன் தலையைக் கொடுத்தாகிலும் தலைநகரைக் காப்பாற்றவில்லை. படுதோல்வியடைந்து தன் மனைவி மக்களோடு ஒரு பேடியைப் போலத் தப்பி ஓடிவிட்டான்! இனியும் நம் வெற்றியில் உனக்கென்ன சந்தேகம்!"

"அவன் தன் தலைநகரைப் பறிகொடுத்தானே தவிர இன்னும் தன் தலையைப் பறிகொடுக்கவில்லை!... அதற்குக் காரணமும் அவனுடைய காதல்தான்!"

"நீ போர்க்களத்தில் பரணி பாடாமல் காதல் பிரபந்தம் படிக்கிறாய்! நீ வாலிபனாகையால் எதையும் காதலில் கொண்டுபோய் முடித்து விடுகிறாய்!"

"துரதிருஷ்டவசமாகக் காதலும் போரும் ஒன்றாகத்தானிருக்கின்றன! வீர பாண்டியன் தோற்றோடியதற்குக் காரணமே அவனுடைய காதல்தான்! அவனுக்குத் தன் புதுமனைவிமீது மகத்தான காதல்! அவள் வானலோகத்து அப்சரஸ். அதாவது நாம் வானவர்கள் என்று கேலி செய்யும் மலைநாட்டுச் சேர ராஜன் மகள்! புது மனைவியின் பிறந்த தினத்தை வீரபாண்டியன் அதி விமரிசையாகக் கொண்டாடினான். அன்றுதான் புதுமணத் தம்பதிகள் முதன் முதலாகத் தனிமையில் சந்தித்துக் கொஞ்சி மகிழும் இன்ப இரவு. அந்த உற்சாகத்தில் வீர பாண்டியனும் அவனது போர் வீரர்களும் மூழ்கிக் கிடந்தபோது நாம் சுலபமாக

மதுரைக் கோட்டைக்குக் கன்னம் வைத்துப் பாண்டி நாட்டுச் சுதந்திரத்தைத் திருடிக் கொண்டு விட்டோம்!...."

"மனைவியாவது மிஞ்சினாளேயென்று வீரபாண்டியன் தலைமறைந்து விட்டான். இனி புது மனைவியின் காதலோடு அவன் ஆயுள் முழுவதும் ஆரண்யங்களில் அலைந்து அஞ்ஞாத வாசம் புரிவான்! இனிப் பாண்டி நாடு நம் அடிமை நாடுகளில் ஒன்று என்பது நிச்சயம்!"

"சம்புவராயரே மதுரையைக் கைப்பற்றிய உடனேயே பாண்டிய நாட்டின் தலைவிதியில் அடிமை முத்திரையைச் சாசுவதமாகப் பதித்து விட்டதாக நினைத்துக் கொள்கிறீர். மதுரையில் துரதிருஷ்ட வசமாக நம் கையில் சிக்கிக் கொண்ட சில சிங்களவ வீரர்களையும் பாண்டிய வீரர்களையும் நாம் கொன்று குவித்தவுடனேயே, 'ஈழமும் பாண்டிய நாடும் கொண்டதாக' மெய்க்கீர்த்தி பாட விரும்புகிறீர்!"

"பின்னே உன்னைப்போல நிந்தாஸ்துதியாப் பாடச் சொல்கிறாய்? வெற்றி பெற்ற நாம் போர்க்களத்தில் பரணி பாடாமல் வசைமாரியான கலம்பகமா பாடுவது? இனி இந்தப் பாண்டி நாட்டில் பல தலைமுறைகளுக்கும் சுதந்திர உத்வேகம் எழாதபடி நாம் பலமாக நசுக்கி விடுவோம்!"

"ஒருவனை எவ்வளவு பலமாக உதைத்து மிதிக்கிறீரோ, அதைவிடப் பல மடங்கு பலமாக உம்மை உதைத்து மிதிக்க அவன் காத்திருப்பான் என்பதை மறந்துவிட்டீர்! தோற்றோடிய வீரபாண்டியன் நம் கையில் சிக்கினானா? வீரபாண்டியனுக்கு இலங்கை மன்னன் பராக்கிரமபாகு நெருங்கிய நண்பன். பராக்கிரமபாகுவின் ஆட்சியில் ஒரு புதிய பௌத்த மத சமதர்ம சமுதாயமாக உயிர் பெற்றெழும் இலங்கை, தென் பாண்டி நாட்டைத் தன் வியாபாரத் தோழனாகவும், வீரபாண்டியனைத் தன் ஞான சிஷ்யனாகவும் கருதுகிறது. இலங்கையிலிருந்து லட்சக்கணக்கான ஈழப்படைகள் இங்கே வந்து குதித்தால் நம் குலோத்துங்க

சோழரின் ஏகாதிபத்தியக் கனவு என்ன கதியாகும்? இந்த மதுரை வெற்றி நிச்சயமற்றது, மின்னலைப் போன்றது!"

"ஜனநாதா, உன்னைப்போன்ற வாலிபர்கள் எதிலும் அவநம்பிக்கைப்படுகிறார்கள்; எதிலும் அவர்களுக்கு நிலைத்த புத்தி இருப்பதில்லை?"

"கிழவர்களுக்கு எப்போதும் சமீபப் பார்வைதான். அவர்களுக்குத் தூரதிருஷ்டி இருப்பதில்லை!"

"என்னை ஓயாமல் கிழவன் கிழவன் என்று ஏதோ உபயோகப்படாத ஓட்டை உடைசலைப் போலக் கூப்பிடாதே. இதே செங்கேணி வீர அத்திமல்லன் குலோத்துங்கச் சோழ சம்புவராயன் இப்போது கையில் வாளை எடுத்தாலும் உன்னைப்போன்ற நூறு லாலிபர்களைக் கொன்று விடுவேன்!"

"பெரியவரே, இனிமேல் இவ்வளவு நீளமான பட்டப் பெயர்களைச் சுமக்க உம் உடம்பில் வலு இல்லை. இனி நீர் உடைவாளை உருவுவதைவிட எல்லோருக்கும் உபதேசம் செய்வதுதான் உமக்கு ஏற்ற தொழில்! உம்முடைய கத்தியைத் திட்டுவதற்குப் பதில் புத்தியைத் தீட்டிக் கொள்ளும். அதுதான் உமக்கும் நல்லது, உம் கத்திக்கும் நல்லது!"

"ஜனநாதா, நீ துஷ்டன். கிழவர்களை நையாண்டி செய்வது உனக்கு ஒரு வேடிக்கையாயிருக்கிறது!"

"சம்புவராயரே, கோபப்படாதீர். மூப்பும் சினமும் ஒன்று என்ற முதுமொழிக் காஞ்சிக்கு உதாரணமாகி விடாதீர்! கத்தி பலத்தைவிட மூளை பலந்தான் சக்தி வாய்ந்தது என்று சொல்ல வந்தேன். உம்முடைய கத்தியால் எதிரே நிற்கும் ஒருவன் தலையைத்தான் அறுக்க முடியும். ஆனால் நூற்றுக்கணக்கான தலைமுறைகளையும் உம்முடைய மூளை பலத்தால் அழித்துவிடலாம்!"

ஜனநாதன் சொல்வதை நம்பாதவர் போலக் கிழவர் காட்டிக் கொண்டாலும், அந்த வாலிபன் சொல்வது அனைத்திலும் ஒரு புதுக் கண்ணோட்டம் இருப்பதாகப்

பட்டது. கிழவர் சிந்தனையில் ஆழ்ந்து விட்டார். ஜனநாதன் மெல்லச் சிரித்துக்கொண்டே அவர் காதுக்குள் ஒரு பெரிய இரகசியத்தை உரத்த குரலில் சொன்னான்.

"சம்புவராயரே, வீரபாண்டியன் தலையை எவன் தங்கத் தட்டில் வைத்து நம் குலோத்துங்க சோழ சக்கரவர்த்திக்குப் பாத காணிக்கையளிக்கிறானோ அவனுக்குத்தான் இனிமேல் அரசியலில் அதிக அந்தஸ்தும் சலுகைகளும் கிடைக்கும்!"

"வீரபாண்டியனும் அவனது மனைவியும் இந்த மதுரை நகர் கோட்டைக்குள்தான் எங்கோ தலைமறைவாய்ப் பதுங்கியிருக்கிறார்களாம்...!" என்று கிழவர் சம்புவராயர் ஒரு பெருமூச்சு விட்டார்.

"சம்புவராயரே! கவலைப்படாதிர்! வீரபாண்டியன் குடும்பத்தை ஒரு சிசுவைக்கூட விடாமல் நாமிருவரும் ஒன்று சேர்ந்து பிடித்துவிடலாம்! அதனால் கிடைக்கும் லாப நஷ்டங்களை நாமிருவர் மட்டும் பங்கு போட்டுக் கொள்வோம். இதற்கு மத்தியில் நம்மை முந்திக் கொண்டு வேறு எவனும் வீரபாண்டியன் குடும்பத்தைப் பிடித்து விடாதபடியும் கவனித்துக் கொள்வோம்!"

கிழவர் சம்புவராயரின் முகத்தில் உற்சாகம் ததும்பியது. தனது புஜபல பராக்கிரமத்தை ஒருமுறை உற்றுப் பார்த்து உள்ளம் பூரித்துவிட்டு, இலேசாகப் புன்னகை செய்தார்.

"ஜனநாதா, நீ யவன நாடகங்களில் வரும் கட்டியக் காரனைப் போல எதையும் முன்கூட்டியே சொல்லி விடுகிறாய்! நம் குலோத்துங்க மகாராஜா எவளையோ காதலிக்கிறார் என்றாயே, யாரவள்?"

"உம்மிடம் இப்போது சொல்லக்கூடாது! அது ஒரு பெரிய அரசியல் ரகசியம்!"

"நீ எவளைக் காதலிக்கிறாய்?"

"அது என் சொந்த விஷயம்!"

*''நீ வீரபாண்டியன் மனைவியைப் பார்த்திருக்கிறாயா?"*

*"பிறத்தியான் மனைவியைப் பார்க்கும் வழக்கம் என்னிடம் இல்லை!"*

*"வீரபாண்டியன் மனைவி மிகவும் அழகானவள் என்று சொல்லுகிறார்கள். அதனால் கேட்டேன்!"*

*''பருவ வயசில் குருடி கூடத்தான் அழகாய் இருக்கிறாள்! புதுக் குறுத்தின் ராசியே அப்படித்தான்!"*

*"வீரபாண்டியன் மனைவியைப் போல அழகு திரிபுவனத்திலெங்கு தேடினாலும் இராதாம்! நம் அரச சபையை அலங்கரிக்கும் கவிச்சக்கரவர்த்தி கம்பர்கூட அவள் அழகை வர்ணிக்க முடியாதாம்!... 'இப்பாவை தோன்றலால், அழகு எனும் அதுவும் ஓர் அழகு பெற்றதே...' என்று சீதையைக் கம்பர் வர்ணிக்கிறாரே, அது வீரபாண்டியனின் மனைவியைப் பார்த்த பிறகுதானாம்; செம்பருத்தி போல ஒரு மஞ்சள் சிவப்பு... பருவக்கொப்பு போல தளதளவென்று உடல் வாளிப்பு. கண்களில் கயல்மீனைப்போல ஒரு துடிப்பு, நடையில் ஒரு மதமதப்பு, கொடிபோல் பின்னிக்கொள்ளும் ஒரு பசுமை. சவுக்குபோல சதா ஒரு துள்ளல் நிறைந்த போக்கு. சாட்டையில்லா பம்பரம் போல் ஆடும் அலாதியான அழகு ஜொலிப்பு..." என்று கிழவர் சம்புவராயர் வாய் கொள்ளாமல் உற்சாகமாக வர்ணித்துக் கொண்டே போனார்.*

*ஜனநாதன் புன்னகையுடன் பேச்சை இடைமறித்து, "மலைநாட்டுப் பெண்களுக்கே எப்பவும் ஓர் அலாதியான அழகு இருக்கும்! ஆனால் வீரபாண்டியன் அவளது அழகு ஒன்றை மட்டும் கருதி ஆசைப்பட்டவனாகத் தெரிய வில்லை. அவ்வளவுதூரம் அவன் சிறுபையனுமல்ல; அவ்வளவுதூரம் அவன் கிழவனுமல்ல!" என்று சிரித்தான்.*

*கிழவர் சம்புவராயரின் முகம் சுண்டிவிட்டது. ஆனால் ஜனநாதனிடமிருந்து ஏதாவது விஷயத்தைக்*

கிரகிக்க வேண்டுமென்ற ஆவலால் தம் வருத்தத்தை மறைத்துக் கொண்டார்.

"ஜனநாதா, நம் நாட்டில் இனிமேல்தான் ஒரு ரசமான கதை நடக்கப்போகிறதென்று சொன்னாயே, அது என்ன கதை?"

"சம்புவராயரே! கம்பர் ராமாயணம் பாடும் காலத்தில் நாம் பிறந்திருக்கிறோம். கம்பநாட்டாழ்வார் அவதரித்த அதே சோழ நாட்டில்தான் நாமும் அவதரித்திருக்கிறோம். கவிச்சக்கரவர்த்தி கம்பர் வீற்றிருக்கும் அதே குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் ராஜசபையில் தான் நாமும் வீற்றிருக்கிறோம். இதை ஒரு பெரிய பாக்கியமாகக் கருதுவீர், இல்லையா... ஆனால் கம்பராமாயணத்தை விட ஒரு பெரிய ராமாயணம் இனிமேல்தான் நம் நாட்டில் நடக்கப் போகிறது. அதில் நீரும் நானும்கூடக் கதாபாத்திரங்களாயிருப்போம்!"

"என்னது, இனிமேல்தான் ஒரு ராமாயணம் நடக்கப் போகிறதா?..."

"ஆமாம்! ராமன், ராவணன் முதல் சூர்பனகை கும்பகர்ணன் அனுமார் வரை சம்பூர்ண ராமாயணத்திற்கு வேண்டிய சகல நபர்களும் நம்மிடையிலே இருக்கிறார்கள்! ஆனால் கம்பராமாயணம் பால காண்டத்தில் ஆரம்பித்து யுத்த காண்டத்தில் முடியும். நம்முடைய ராமாயணம் யுத்தகாண்டத்தில் ஆரம்பித்து பாலகாண்டத்தில் போய் முடியும்!"

"ஜனநாதா! உன் ராமாயணத்தில் முதலில் உனக்கு என்ன வேஷம் என்பதைச் சொல்லிவிடு!"

"நான் ராமனுமல்ல; ராவணனுமல்ல! நீர் அனுமாருமல்ல; அவன் தம்பி அங்கதனுமல்ல! என் வேஷத்தை ஸ்பஷ்டமாகச் சொல்வதென்றால், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒவ்வொரு அவதாரமெடுக்கும் மாயாவி என்று வைத்துக்கொள்ளும்!"

"உன்மீது கம்பன் கவி பாட மறுத்தான் என்பதற்காக, ராமாயணத்தையே குட்டிச்சுவராக்காதே. உனக்குக்

காவியங்களைப்பற்றி என்ன தெரியும்? நீ ராமாயணம் படித்திருக்கிறாயா? அல்லது சிலப்பதிகாரந்தான் படித்திருக்கிறாயா?"

"இரண்டையும் படித்திருக்கிறேன்!"

"படித்திருப்பாய். ஆனால் அவற்றின் தத்துவங்களைப் புரிந்து கொண்டிருக்க மாட்டாய்!"

''நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறேன்! இன்னொருத்தியின் புருஷனை இன்னொருத்தி திருடிக் கொள்வது சிலப்பதிகாரம். இன்னொருவன் மனைவியை இன்னொருவன் திருடிக் கொள்வது ராமாயணம். முன்னதைச் சாதாரணமாக நினைக்கிறோம். பின்னது சர்வ சாதாரணமாக நடக்கிறது!"

"ஜனநாதா, உனக்கு கம்பராமாயணத்தில் ஒரு பாட்டாவது தெரியுமா?" என்று கிழவர் சம்புவராயர் கோபமாகக் கேட்டார்.

"எனக்குக் கடவுள் வாழ்த்து தலை கீழ்ப்பாடம்!"

இவ்வாறு சொல்லிவிட்டு ஜனநாதக் கச்சிராயன் மிருதுவான குரலில் அதே விஷமச் சிரிப்புடன் பாட ஆரம்பித்தான்:

"உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

கிழவர் சம்புவராயரின் முகம் பக்திப் பரவசத்தால் ஒளி பெற்றது.

"ஆகா, எவ்வளவு அற்புதமாக நம் கம்ப நாடார் கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கிறார்! கடவுளை எந்த மதப் பெயராலும் சொல்லாமல் பொதுவாகத் 'தலைவர்' என்றே கடவுளைக் குறிப்பிடுகிறார்... ஆகா... நம் மாணிக்க வாசகப் பெருமான் கூடத் திருவாசகத்தில் "ஆக்கம்

*அளவிறுதி இல்லாய்! அனைத்துலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்" என்று பக்திப் பரவசமாகி......"*

*"கொஞ்சம் நிறுத்தும்! முதலில் நான் சொன்ன கம்பன் கடவுள் வாழ்த்துக்கு என்ன அர்த்தம், சொல்லும்!"*

*"உலகம் யாவையும் ஆக்கியும் காப்பாற்றியும் அழித்தும் அளவற்ற திருவிளையாடல்கள் புரியும் அதாவது சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் முத்தொழில் களையுமுடைய எம்பெருமானான தலைவரையே நாம் வாழ்த்திச் சரணடைவோமாக என்று அர்த்தம்..."*

*"சம்புவராயரே! ஆக்கல், அழித்தல், காத்தல் முதலான அலகிலா விளையாட்டுடைய அந்தத் தலைவர் யாரென்று உமக்குத் தெரியுமா?... நம் குலோத்துங்க மன்னர் தாம் தான் அந்தத் தலைவர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்... ஆனால் உண்மையில் நான்தான் அந்தத் தலைவர்!"*

*"என்னது! நீயா? நீயா கம்பராமாயணத்தில் கடவுள் வாழ்த்தில் வரும் தலைவர்? நீயா கடவுள்?"*

*"ஆமாம்!... ஆதிசங்கரரின் அத்துவைத தத்துவப்படி நானே யாவும் என்று சொல்லிக் கொள்ளலாம். அதனால் கடவுளின் முத்தொழில்களையும் நானே எடுத்து நடத்தலாம். சம்புவராயரே, ஆக்கல், காத்தல், அழித்தல் முதலான அலகிலா விளையாட்டுடைய தலைவர்... நானேதான்! ஆகையால், "அன்னவர்க்கே சரண் நாங்களே!" என்ற கடைசி அடியை நீர் எல்லோருக்கும் பாடிக் காட்டும், அதுபோதும்!" என்று ஜனநாதன் விஷமமாகச் சிரித்தான்.*

*"ஜனநாதா! உன்னைக் கடவுளாகவும் என்னை உன் பக்தனாகவும் ஆக்கிவிட்டாய்! வாலிபனோடு கிழவர்கள் பேச்சு வைத்துக் கொள்வதே சுத்தத் தப்பு!" என்று சம்புவராயர் கோபமாக ரணகளத்தை விட்டு எழுந்தார்.*

*அப்போது எங்கிருந்தோ ஆண்டவனுக்குத் தீபாராதனையாகும் ஆலய மணி ஓசை கேட்டது.*

"திருச்சிற்றம்பலம்!" என்று சம்புவராயர் மெய் மறந்து கூவினார்.

"சம்புவராயரே! அதோ ஆண்டவன் மணியோசை! வாரும் கடவுள் வாழ்த்தோடு நம் ராமாயணம் ஆரம்பமாகி விட்டது!" என்று ஜனநாதன் எழுந்தான்.

"ஜனநாதா! எங்கே போகிறாய்!"

''வாரும்! நம் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்துவிட்டுப் பாண்டித் துஷ்டர்களை நிக்ரகம் செய்து கொண்டே, கடைசியில் நம் பள்ளியறையை அடைவோம்!" என்று ஜனநாதன் விஷமப் புன்னகையுடன் ஒரு குறுக்குப் பாதையை நோக்கி நடந்தான்.

''ஜனநாதா, ஏன் இந்தப் பழைய பாதையில் போகிறாய்?"

"சம்புவராயரே! இந்தப் பாதைக்குக் கம்பர் போன வழி என்று ஒரு பெயர் உண்டாம். கம்பர் எப்போதோ பாண்டி நாட்டிற்கு வந்தபோது இந்த வழியாகத்தான் போனாராம். வாரும், நாமும் கம்பர் போன வழியிலே போவோம்!" என்று ஜனநாதன் கலகலவென்று சிரித்தான். அந்தச் சிரிப்பு இருளில் வெகு தூரம் பரவி எதிரொலித்தது.

"திருச்சிற்றம்பலம்! நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!" என்று கிழவர் சம்புவராயர் மனத்திற்குள் முணுமுணுத்துக் கொண்டே, ஜனநாதனைப் பின்தொடர்ந்தார்.



# அத்தியாயம் 2

### அவையடக்கம்

*அறையும் ஆடரங்கும் மடப்பிள்ளைகள்*
*தறையில் கீறிடில் தச்சரும் காய்வரோ?*
*இறையும் ஞானம் இலாதஎன் புன்கவி*
*முறையின் நூலுணர்ந் தாரும் முனிவாரோ?*

**கம்ப ராமாயணம்**

மதுரை, பகைவர் கையில் வீழ்ந்த ஏழு நாட்களுக்குப் பிறகு தெருக்களெல்லாம் இருளின் சகதியில் அழுந்தி, ஊரடங்கி விட்டது.

எங்கும் சாவின் நிச்சப்தமும், பயங்கர இருளும் கவிந்திருந்தன. தூரத்தில் இரண்டொரு குடிசைகள் தீ வைத்துக் கொளுத்தப்படும் வெளிச்சத்தைத் தவிர, எந்த வீட்டிலும் விளக்கு வெளிச்சம் இல்லை. எல்லோரும் தெருக் கதவுகளை இழுத்துச் சாத்திவிட்டுப் பீதியால் ஒருவர் கையை ஒருவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, இருண்ட வீடுகளுக்குள் ஒடுங்கிக் கிடந்தனர். சாக விரும்புகிறவனைத் தவிர வேறு எவனும் வீட்டை விட்டு வெளியே வர நடுங்கினான்.

இருளடைந்த ராஜவீதியில் ஒரே ஒரு வீட்டிலிருந்து மட்டும் மங்கலான வெளிச்சமும், பைத்தியம் பிடித்தது போல ஒரு பெண்ணின் சிரிப்பும் வந்தன.

அந்த வீட்டின் வாசல் கதவை வேகமாகத் திறந்துகொண்டு உள்ளேயிருந்து ஒரு வாலிபன் வெளியே

ஓடி வந்தான். அவன் பின்னால் முப்பது வயதுள்ள ஒரு பெண்மணி ஓடிவந்து, அவன் கையைப் பிடித்து உள்ளே இழுத்தாள். அவனோ கையைப் பறித்துக் கொண்டு வெளியே ஓடிவிடவே முயன்றான். அவனது உடைவாளின் வெள்ளிக் கைப்பிடி, கேலிப் புன்னகை செய்வதுபோல, இருளில் மின்னியது.

தூரத்தில் நஞ்சுடையப் பெருமான் கோயிலில் அர்த்தசாம பூஜை மணி அடித்து, ஆத்ம சாந்தியளிக்க அவனை அறைகூவிக் கூப்பிட்டது.

வாலியன் கிளம்பினான். பெண்மணி பதறினாள்.

“வீரசேகரா! என்னை விட்டுவிட்டு நீ எங்கேயடா போகப் போகிறாய்?” என்று அவள் கத்தினாள்.

“சாகப் போகிறேன்!” என்று வாலிபன் கூவினான்.

“ஏன்?”

“எல்லோரும் ஒருநாள் சாகத்தான் போகிறார்கள்! நான் வீரவாலிபன். கத்தி முனையில் லட்சியத்திற்காகச் சாகப் போகிறேன். எனக்கு வீரமுக்தி வேண்டும்!”

“சாகப் போகிறாயா? அப்படியானால் என்னையும் கூட்டிக் கொண்டு போ!”

“முடியாது!”

“பார், இனிமேல் உன்னை வீட்டுக்குள் வைத்துப் பூட்டிவிடுகிறேன்! இந்தச் சிவகாமசுந்தரி உயிரோடிருக்கும் வரையில் நீ சாக முடியாது! தேசம் என்னிடமிருந்து உன்னைப் பறித்துக் கொள்ள விட மாட்டேன்...!”

“வீடு எனக்குச் சிறையாகி விட்டது. என் வீரவாள் துருப்பிடித்து உறங்குகிறது. ஒவ்வொரு நாளும் என்னைக் கோழையாக்கிக் கொண்டே வருகிறாய். நீ சுயநலக்காரி! உன் ஒருத்திக்காக என் உயிரைக் காப்பாற்ற விரும்புகிறாய்! எனக்கு உயிரும் வாழ்வும் கசந்து விட்டன.

தேசம் என் வீரத்தை அறைகூவி அழைக்கிறது. என் காலடியில் ஒரு லட்சியப் பாதை விரிந்து கிடக்கிறது. இனிமேல் என்னை நீ தடுக்கமுடியாது..." என்று கூவிக் கொண்டே வீரசேகரன் இருளில் ஓடி மறைந்தான்.

வாசல்படியில் தலையை மோதிக்கொண்டு துடிக்கும் சிவகாமசுந்தரியின் அழுகை அந்த வீர வாலிபனின் காதில் விழவில்லை. ஆத்ம சாந்தியளிக்கும் ஆண்டவன் மணியோசையும் அவன் காதுக்கு எட்டவில்லை.

வீரசேகரன் இருபது வயதுகூட நிரம்பப் பெறாத வாலிபத்தின் மிடுக்கு உள்ளவன். எந்த இளம் பெண்ணும் கண்டு மயங்கத்தக்க முகக்களை. எந்தக் காமினியும் கண்டு சபலம் கொள்ளும் தேகக்கட்டு. லட்சியக் கனவு காணும் கருவிழிகள். உதடுகளில் தோய்ந்திருக்கும் புன்னகைக்கு வரம்பு கட்டுவது போல மை போன்ற மீசை. பெண்மையும் ஆண்மையும் ஒருங்கே செறிந்த அலாதியான ஒரு வசிகரத் தோற்றம்.

பித்துப் பிடித்தவனைப் போல வீரசேகரன் வாளை உருவிக் கொண்டு சாவை எதிர்நோக்கி வீதிகளில் அலைந்து கொண்டிருந்தான். எதிரே தெருவில் கவிந்திருக்கும் கனத்த இருளையும் பனிக்காற்றையும், தூரத்தில் யாரோ வாளுக்குப் பலியிடப்படும் ஹீனமான புலம்பலையும் ஊடுருவிப் பார்த்தான். குற்றுயிராய்க் கிடக்கும் பாண்டிய ஆடவர்களின் புலம்பல்களும், மானத்தையும் மணாளரையும் ஒருங்கே இழந்த இளம் பெண்களின் விம்மல்களும் இரவின் வாடைக் காற்றோடு இணைந்து வந்தன. வீட்டிற்குத் திரும்பிச் செல்வதை விட அந்தப் பயங்கரமான இரவில் வீதிகளில் அலைவது தான் வீரசேகரனுக்கு நிம்மதியாயிருந்தது!

நடுநிசி ஆயிற்று. நள்ளிருள் நாறிப் பூக்களின் மணத்தோடு சாமக்கால மணி அடிக்கும் ஓசை கேட்டது.

தெருக்களில் உருவிய வாளுடன் எமகிங்கரர்களைப் போல அலைந்த சோழ வீரர்கள் ஓய்ந்து விட்டனர். ஆறலைக் கள்வரைப் போல வழிப்போக்கரைக்

கொள்ளையிட்டுத் திரிந்த காவற்காரர்களுக்கும் தூக்கம் அசத்தியது. இருள் அரக்கியின் இறுகிய அணைப்பில் உலகம் சோர்ந்து ஒடுங்கிவிட்டது.

அதே பயங்கரமான இரவில் ஓர் அழகான இளம்பெண் மீனாட்சியம்மன் கோயிலின் கம்பத்தடி மண்டபத்தை விட்டுக் கிழக்குக் கோபுர வாசலை நோக்கி மெல்ல நடந்து வந்தாள். கோபுர வாசலில் சோழ நாட்டுக் குதிரைச் சேவகர்கள் வரிசையாக அணிவகுத்துத் தீப்பந்தங்களுடன் செல்வதைக் கண்டதும், அங்குள்ள ஒரு சிலையினருகில் மற்றொரு பெண்சிலையாய் அசைவற்றுப் பதுங்கி நின்றாள். அவளது அழகிய முகம் பயத்தால் அதிகம் வெளுத்துப் போயிருந்தது.

குதிரைகளின் குளம்படியோசைகளும் தீப்பந்த வெளிச்சமும் தூரத்தில் போய் மறைந்த பிறகு, வெகு நாழிகை கழித்து அந்த யுவதி மெல்லத் தலையை நீட்டித் தெருவில் பார்த்தாள்.

தெருவில் ஆள் நடமாட்டமில்லை. பிணக்காடு போல ஒரே சூன்யமாக இருந்தது. எங்கும் ஒருவிதப் பேய்க் காட்டு அமைதி உறைந்து கிடந்தது. தூரத்தில் இரண்டொரு தெருநாய்கள் குரைக்கும் சப்தத்தையும், தூரத்தில் வையை நதியின் மெல்லிய சலசலப்பையும், வானத்தில் வட்டமிட்டுப் பறக்கும் கழுகுகள் படபடவென்று இறக்கைகளை அடித்துக் கொள்ளும் ஓசையையும் தவிர, எங்கும் ஒருவித நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

அவள் உச்சிமுதல் உள்ளங்கால்வரை ஒரு கறுப்புக் கம்பளியால் போர்த்திக்கொண்டு, காற்றில் புடவையின் சலசலப்புக் கூட ஏற்படாத வண்ணம் சேலைத் தலைப்பை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டு, கோபுர வாசலை விட்டுத் தெருவில் இறங்கினாள். அவளது மிருதுவான கால்கள் பின்னிக் கொண்டன. நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. பல்லைக் கடித்து, பயத்தை விழுங்கிய வண்ணம், கண்ணை மூடிக்கொண்டு வேகமாகத் தெருவில் நடந்து செல்ல ஆரம்பித்தாள்.

அழகிய இளம்பெண் பல இருண்ட தெருக்களையும் சந்துகளையும் வேகமாகக் கடந்து, ஓட்டமும் நடையுமாகப் போய்க் கொண்டேயிருந்தாள். நிசிக் காவலர்களோ போர் வீரர்களோ எதிரில் தென்பட்டால், தெருத் திண்ணைகளின் இருள் சரிவிலும் சந்து முனைகளின் இருட்டிலும் மறைந்து கொள்வாள். அவர்கள் தன்னைக் கடந்து போகும்வரை அவள் மூச்சை அடக்கிக் கொண்டு இருளோடு இருளாய் ஒட்டிப் போய்க் கற்சிலைபோல் அசைவற்று நிற்பாள்.

காவற்காரர்களும் தீப்பந்த வெளிச்சமும் வெகுதூரம் சென்று தெருவின் திருப்பத்தில் மறைந்த பிறகு அவள் தன் மறைவிடத்தை விட்டு மாடப் புறாவைப் போல வேகமாகக் கிளம்பி, ஓரிடத்திலிருந்து மற்றொரு இருள் படலத்திற்கு ஓடிவந்து நின்று பெருமூச்சு விடுவாள். இவ்வாறு அந்தப் பருவப் புறா எந்த வேடன் கையிலும் சிக்காமல் பல தெருக்களையும் கடந்துவந்து ஒரு சந்து முனையில் திரும்பினாள். காலடியில் ஏதோ ஒரு யுவதியின் நெஞ்சை மிதிப்பது போன்ற உணர்ச்சி தட்டியது. கீழே குனிந்து பார்த்தாள்.

அவளைப் போல் உடல் வனப்பு வாய்ந்த இளம் பெண் ஒருத்தி சந்து இருட்டில் சுவரோரமாகச் சரிந்து கிடந்தாள்... கூந்தல் கலைந்து, குங்குமம் அழிந்து, கண்கள் சிவந்து, முகம் களையிழந்து, புகையுண்ட ஓவியம் போல மூர்ச்சித்துக் கிடந்தது அந்தப் பெண்ணின் மெல்லிய உடல். முகம் வீங்கிப் போய் இரண்டொரு நகக்கீறல்கள் தென்பட்டன. அழகிய கன்னக் கதுப்புகளில் ரத்தத் திவலைகள். அவளது வறண்ட உதடுகளிலிருந்து புகையிலை நாற்றம் அடித்தது... "என் குழந்தை... ஐயோ அம்மா... என் புருஷன் முகத்தில்... இனி... எப்படி... விழிப்...பேன்? பாபிகள்..." என்று வாயிலிருந்து மெல்லிய முணுமுணுப்பு வந்தது. கூம்பிய தாமரைப் பூவைப் போலத் தெருப்புழுதியில் துவண்டு கிடந்தாள். அசைவதற்குக் கூட அவளது மெல்லிய உடலில் தெம்பு இல்லை...

இருளில் ஓடி வந்த இளம் பெண், சந்து முனையில் பிணம்போல் கிடக்கும் இளம் பெண்ணைத் தூக்கிவிட நினைத்தாள். அதற்குள் தன் பின்னால் யாரோ

தடதடவென்று ஓடிவரும் காலடி ஓசை கேட்கவே, அந்தச் சந்து முனையிலிருந்து எதிரேயுள்ள தெருவில் பாய்ந்து ஓடினாள்.

தெருவில் முரடர்களான நாலைந்து போர் வீரர்கள் குந்தியிருந்து தீவட்டியின் வெளிச்சத்தில் சூதாடிக் கொண்டிருந்தனர். குடிபோதையால் அவர்களது கண்கள் இரத்தம் போல் சிவந்திருந்தன. கள் வெறியால் மோகம் தலைக்கேறி, பாண்டி நாட்டுக் குமரிகளின் உடல் வனப்புகளைப் பற்றி உற்சாகமாக வம்பளந்து கொண்டிருந்தனர்.

அவர்களைக் கண்டதும் அழகிய மங்கை திடுக்கிட்டு, "ஆ!" என்று தன்னையறியாமல் மெல்லக் கூவி விட்டாள். மறுகணம் அந்த அபலை, முரடர்களின் கையில் சிக்காமல் மான்போலத் துள்ளித் தப்பி ஓடிவிட முயன்றாள்.

ஆனால், இரத்தவெறி பிடித்த ஐந்து புலிகளின் பாய்ச்சல் முன் ஒரு மான்குட்டி என்ன செய்யமுடியும்? ஐந்து முரடர்களும் அந்த இளம் பெண்ணை வேட்டை நாய்களைப் போலச் சூழ்ந்து கொண்டனர்.

அவள் அப்படியே வெலவெலத்து நின்று விட்டாள்.

மதயானைகள் போல் திமுதிமுவென்று நிற்கும் அம்முரடர்களின் மத்தியில் பூவைவிட மிருதுவான அவளது உடல் வெடவெடவென்று நடுங்கியது. மோகக் கிறக்கத்தோடு கூடிய அவர்களது பார்வையையும் சிரிப்பையும், அவர்களது தடித்த உதடுகளிலிருந்து வரும் கள் வாடையையும் தாங்க முடியாமல் அவளுக்கு மூச்சுத் திணறியது; முகமெல்லாம் குப்பென்று வியர்த்துவிட்டது- தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, தூண்டிலில் சிக்கிய மீனைப் போலத் துடித்தாள்.

அம்முரட்டுக் காவலர்களில் ஒருவன், முன்னால் வந்து தீவட்டி வெளிச்சத்தை அந்தப் பூங்கொடியின் முன் நீட்டி, அவளது முகத்தைப் பிடித்துத் தூக்கிப் பார்த்தான்.

"புத்தம் புதுசு! மூக்கும் விழியுமாகக் கொழு கொழுன்னு இருக்கிறாள்டா..." என்று குடிபோதையோடு ஆசைக்கிறக்கத்தில் தள்ளாடினான்.

"புதுக் குருத்துவிட்ட நாத்து மாதிரி தளதளன்னு இருக்கிறாள்... கெண்டை மீனைப் போல அவள் கண் இரண்டும் துள்ளுகிற துள்ளலைத்தான் பாரேன்... அராபிக் குதிரை மாதிரி திமுதிமுன்னு நிற்கிற சொகுசைப் பாரு..." என்று ஒரு சோனியன் சற்று கவி நயத்தோடு அவளது சர்வாங்கத்தின் அழகுக் கொழிப்பையும் வர்ணிக்கத் தொடங்கினான்.

"பாண்டி நாட்டுக் குட்டிகளுக்கே மதயானை மாதிரி நல்ல தேகக்கட்டு இருக்கிறதடா... இன்னைக்கு நல்ல சகுனம் பார்த்துத்தான் காவலுக்குக் கிளம்பியிருக்கிறோம். கண்ணி வைத்துக் காத்திருந்தாலும் இனி இது மாதிரி ஒரு புறா நம் கையில் வந்து சிக்காது!" என்று ஒரு முரடன் ஆசை மதமதப்போடு வாயில் எச்சில் ஊற அவளை நெருங்கினான். அவன் வாயிலிருந்து குப்பென்று கள் நாற்றம் அடித்தது.

இதுவரை காதுகளைப் பொத்திக் கொண்டு மருண்டு நின்ற அந்த இளம் பெண், வெடுக்கென்று தலை நிமிர்ந்து பார்த்தாள். பாதி ரோஷமும் பாதி அழுகையுமாக அவள் கத்தினாள்.

"இப்படியெல்லாம் பேசாதீர்கள்...நான் ஒரு குடும்பப் பெண், ஐயா...ஒவ்வொருவனின் துஷ்டச் செயலையும் கவனிக்கத் தலைக்கு மேலே கடவுள் இருக்கிறார் என்பதை மறந்து விடாதீர்கள்!..."

"தம்பி...மாடு புதுசு, அதுதான் மிரளுது!...உன் கலயத்தில் ஏதாவது குடிக்காமல் மிச்சம் வைச்சிருந்தால் கொஞ்சம் ஊத்திக் கொடு...அப்புறம் அவள் சொக்கி விழுகிற சொக்கைப் பாரேன்..." என்று ஒரு முரடன் சிரித்தான்.

அவனது பிடியிலிருந்து வெடுக்கென்று இளம் பெண் தன் கையைப் பறித்துக்கொள்ள முயன்றாள். ஆனால் பிடி உடும்புப் பிடியாக இருந்தது.

"ஏனடி, கெழுத்தி மீன் மாதிரியிருக்கிறே...என்னடி ஒரேயடியாக நெளிக்கிறே...வா இப்படி..."

"ஐயா...ஐயா..."

"ஏனடி, உன்னைப் பார்த்தால், கலியாணமான புதுசுலே என் பெண்சாதி இருந்த மாதிரி இருக்கிறாயே...?"

"ஐயா, தங்கை மாதிரி ஒருவன் கண்ணிலாவது படவில்லையா, ஐயா?... பெண் பாவம் பொல்லாதது... உங்கள் சோழ நாட்டுப் பத்தினித் தெய்வம் கண்ணகி இந்த மதுரையைச் சுட்டெரித்தாள் என்பதை மறந்து விட்டீர்களா, ஐயா?"

''என்ன வெட்டிக் கதை படிக்கிறே?... நடு ராத்திரியிலே ஏன் ஊரைச் சுத்துகிறே? இந்த இருட்டு நேரத்திலே ஒரு வயசுப் பெண்ணுக்கு தெருவிலே என்ன வேலை?"

"ஏய்! இந்த இருட்டு நேரத்தில் எங்களைத் தேடிக்கிட்டு எதுக்கு வந்தாய்?'' என்று இன்னொரு முரடன் வேடிக்கையாகச் சிரித்தான்.

"உங்களைத் தேடிக்கொண்டு வரவில்லை. என் கையில் ஒரு கத்தி இருந்தால் பாபிகளைக் குத்திவிட்டு உங்கள் கையிலிருந்து தப்பி ஓடியிருப்பேன்!" என்று அவள் அழாத குறையாய்க் கத்தினாள்.

"சரிதான், வா..." என்று முரடர்களின் தலைவன், அவள் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக் கொண்டு போனான்.

''ஐயா, என்னை எங்கே இழுத்துக்கொண்டு போகிறீர்கள்...?"

"இன்னும் நாலைந்து தெரு தாண்டிப் போனால் அங்கே ஒரு பாழடைந்த சத்திரம் இருக்கிறது! அங்கே எங்களைப் போல இன்னும் ஏழெட்டு ஆசாமிகள் இருக்கிறார்கள். உன்னைப் போல ஒரு மாடப்புறாவை எந்தப் பயலாலது பிடித்திருக்கிறானா என்று சவால் விடுகிறேன் பார்..."

''ராட்சஸர்களே! என்னை விட்டுவிடுங்கள். இல்லையெனில் இந்த அக்கிரமத்தை மேலதிகாரிகளிடம் சொல்லி உங்களைப் பழிதீர்ப்பேன்!"

"என்ன மிரட்டுகிறாய்? இது மாதிரியான எங்கள் சொந்த விஷயங்களில் மேலதிகாரிகள் தலையிட விரும்பமாட்டார்கள். தம் கீழ் உள்ள சேலகர்கள் குற்றம் செய்தாலும் அவர்கள் பக்கந்தான் நீதி பேசுலார்கள்!"

"உங்கள் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியிடம் சொல்லி என் அவமானத்திற்குப் பரிகாரம் கேட்பேன்!"

"வாயை மூடிக்கொண்டு நீ சமத்துப் பெண்ணாகச் சும்மா இராவிட்டால் உன்னைக் கொன்று போட்டு விடுவோம்!"

"என்னைக் கொன்றுவிடுங்கள்! நான் சாகத்தான் இந்த இருட்டு நேரத்தில் புறப்பட்டு வந்தேன்! ஒரு மானமுள்ள குடும்பப் பெண்ணை அவமானப்படுத்தித் தெருச் சகதியில் விட்டெறிந்துவிட்டுப் போனால் அவளுடைய கதி என்ன ஆகும் என்பதை யோசித்துப் பாருங்கள்..."

அம் முரடர்களில் சற்று நளினமாய் பேசக்கூடிய ஒருவன் பதில் சொன்னான்

"யானை செத்தால்தான் ஆயிரம் பொன் கிடைக்கும். நீ செத்தால் எங்களுக்கு என்னடி கிடைக்கும்? சோழ நாட்டவர்கள் எப்போதும் புத்திசாலிகள். ஒரே கல்லில் இரண்டு காய்களை எறியக்கூடிய சூரர்கள். உன்னை எங்கள் இஷ்டப்படி கொஞ்ச காலம் வைத்திருந்து விட்டு, நீ சலித்துப் போனதும் உன்னைக் கொண்டுபோய் ஆமூர்க் கிழவர் வயிராதராயரிடம் எழுநூறு காசுக்கு விற்று விடுவோம்."

"யார் அந்த வயிராதராயர் என்னும் கிழவன்?" என்று அந்த இளம் பெண் கலவரத்தோடு கேட்டாள்.

"அவர் ஓர் அடிமை வியாபாரி. போரில் நாங்கள் பிடிக்கும் ஆண்களையும் பெண்களையும் விலைக்கு வாங்கி மற்றவர்களிடம் அதிகக் காசுக்கு விற்பார். செக்கு மாடுபோல் உழைக்கக்கூடிய ஒரு வாலிபனை ஏழு காசுக்குமேல் விலைகொடுத்து வாங்கமாட்டார். ஆனால்

உன்னைப் போன்ற அழகான பெண்ணைப் பிடித்துக் கொண்டு போனால் எழுநூறு பொற்காசுகள்கூடக் கொடுப்பார்!"

அந்த மங்கையின் சிவந்த முகம் ஒளிமங்கி, கருவிழிகளில் நீர் ததும்பியது.

"இந்தா பெண்ணே! நாளை உன் கதி என்னாகு மென்று கலங்காதே. நீ புத்திசாலிப் பெண்ணாயிருந்து தோதாய் நடந்து கொண்டால், உன்னை யாருக்காவது ஒரு சிற்றரசனுக்கு ஆசை நாயகியாக விற்பார். நீ இடக்குப் பெண்ணாயிருந்தால் உன்னை ஏதாவது கோயிலுக்கு எழுபது காசுக்கு அடிமைக் கணிகையாக விற்றுவிடுவார்! ஜாக்கிரதை!"

"என்னடா அந்தச் சிறுக்கியிடம் வீணாக் கதை பேசிக் கொண்டு இருக்கிறாய்?... நாழியாகவில்லை...? சரிதான், வாடி..." என்று முரடன் அவளது கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக் கொண்டு போனான்.

அவள் நிச்சப்தமான இருண்ட தெருவிலெல்லாம் ஓலமிட்டு வீறிட்டு அழுதுகொண்டே போனாள்.

"ஐயோ, என்ன செய்வேன்...? ஓர் அபலையைக் காப்பாற்ற இந்தப் பாண்டி நாட்டில் ஒரு வீர மறவனு மில்லையா?... நடுத்தெருவில் ஒரு குடும்பப் பெண்ணின் மானம் சூறையாடப்படுகிறதே? வீடுகளைப் பூட்டிக் கொண்டு உள்ளே பத்திரமாகப் பதுங்கிக் கிடக்கிறீர்களே? ஒருவராவது வெளியே வந்து இந்த அபலையைக் காப்பாற்ற மாட்டீர்களா?" என்று அந்தப் பெண் வானமும் வாயும் கிழிய உரக்கக் கத்தினாள்.

ஆனால் ஒருவனாவது தெருக் கதவைத் திறக்க வில்லை. தெருவிலுள்ள ஒரு பெண்ணுக்காக வீட்டுக் கதவைத் திறந்தால் உள்ளேயிருக்கும் ஏழு பெண்களின் மானம் சூறை போகும் என்று ஒவ்வொருவனும் பயந்தான்.

குடி போதையில் தள்ளாடும் முரடர்களோ, தங்கள் கையில் சிக்கிய பருவப் பெண்ணின் கண்ணீரையும்

கூச்சலையும் பொருட்படுத்தாமல், அவளை இழுத்துத் தள்ளிக் கொண்டே, இருளடைந்த சத்திரத்தை நோக்கிப் போனார்கள்.

அப்போது மரணதேவனை எதிர்நோக்கி ஒவ்வொரு வீதியாக அலைந்து கொண்டிருந்த வீரசேகரன், அந்த அழகிய பெண்ணின் முன் வந்து நின்றான்.

அந்த வாலிபனின் முகத்திலிருந்த கண்ணியத்தையும், அவனது புஜபலத்தையும், இரத்தினக் கற்கள் பதித்த அவனது வீரவாளையும் கண்ட அந்த அனாதைப் பெண் ஓவென அழுது அதிகமாகக் கூச்சலிட்டாள்.

"அபலை ஒருத்தியின் மானத்தைக் காக்க இந்த நாட்டில் ஒரு வீரவாலிபனும் இல்லையா?... ஐயோ, கடவுளே!... உனக்குக் கண் இல்லை. இந்தக் கிராதகர்களுக்குக் காது இல்லை. பாண்டி நாட்டு மறவர்களுக்குக் கைகள் இல்லை. ஒரு சோழ நாட்டு வீரவாலிபனுக்குக் கூடவா இருதயம் இல்லை?..." என்று அவள் கூவிக் கொண்டே தன் முன்னே வரும் வாலிபனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

அழகான இளம் பெண் ஒருத்தியின் கண்ணீர், வாலிபனின் உள்ளத்தில் வாள் முனையைவிடக் கூர்மையாகத் தைத்துப் பரிதாபத்தை ஊட்டியது.

உடைவாளின் கைப்பிடிமீது கையை வைத்துக் கொண்டே வீரசேகரன், அம் முரடர்களின் முன் ஓடி நின்று வழி மறைத்துக் கொண்டான்.

"காவற்காரர்களே! இந்தப் பெண் ஏன் அழுகிறாள்? இவளை நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று வீரசேகரன் அதட்டினான்.

"நீ என்ன எங்களைக் கேட்பது? உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ, அப்பாலே!..." என்று முரட்டுக் காவற்காரர்களின் தலைவன் அலட்சியமாக உறுமினான்.

"என் வேலை எதுவென்று எனக்குத் தெரியும். இந்தப் பெண்ணிடம் உங்களுக்கு என்ன வேலை என்பதை

முதலில் சொல்லுங்கள். இந்தப் பெண் யார்?" என்று வீரசேகரன் மேலும் அதிகாரத் தொனியில் கேட்டான்.

"எங்களை அதட்டிக் கேட்பவன் யாரடா?"

"உங்களை அதட்டிக் கேட்க மட்டுமல்ல, உங்களைத் தண்டித்து அடக்கவும் உரிமையுள்ளவன்! வீரசேகரன் என்ற பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? நான் திட்டம் திட்டிக் கொடுத்திராவிட்டால், நம்முடைய சோழப் படைகள் இவ்வளவு நீண்ட காலம் மதுரையை முற்றுகையிட்டுப் பிடித்திருக்க முடியாது. நான் உயிரைத் திரணமாக மதித்துக் கோட்டை மீதேறி உள்ளே குதித்துக் கோட்டைக் கதவுகளைத் திறந்திராவிட்டால், நம்முடைய மூன்று மகாசேனைகள் உள்ளே புகுந்திருக்க முடியாது. என் வெற்றி வாளும் வீரக்குரலும் கிளம்பியிராவிட்டால், நம் சோழநாடு மதுரைக் கோட்டையைக் கைப்பற்றியிருக்க முடியாது! நான் மதுரைக் கோட்டையைக் கைப்பற்றியிரா விட்டால் நீங்கள் இப்படி ஒரு நிர்க்கதியான பெண்ணைத் தெருக்களில் முரட்டுத்தனமாக இழுத்துக் கொண்டு போக முடியாது!" என்று வீரசேகரன் படைமுகத்தில் வீர முழக்கம் செய்வது போலக் கூவினான்.

"உன்னை நாங்கள் முன்பின் பார்த்ததில்லையே?" என்று முரடன் சந்தேகத்தோடு கேட்டான்.

"நான் மின்னலைப் போல அரசியலில் புகுந்தேன். என் கத்திவீச்சைப் போலப் போர்த் தலைவரின் இருதயத்தை எளிதில் கவர்ந்தேன். மதுரைப் படை யெடுப்பில்தான் முதன் முதலில் கலந்து கொண்டேன். சேனை மீகாமன் இராஜ இராஜக் கம்பீரச் சேதியராயர் என் வீரசூர சாமர்த்தியங்களைக் கண்டு மதுரையைக் கைப்பற்றும் மகத்தான பொறுப்பை என் ஒருவனை நம்பித்தான் கொடுத்தார். குலோத்துங்க சோழ தேவரின் பலநாள் கனவான பாண்டிய நாட்டின் தலைநகரை இந்த வீரசேகரன்தான் கைப்பற்றினான். முந்தையப் போரில் பாண்டிய நாடு கொண்டானாகிய கண்டர் சூரியன் அம்மையப்பரின் வீரப்புகழும் இந்த வீரசேகரனின் முன் மங்கிவிட்டது. பாண்டி நாட்டுப்

படையெடுப்பு என் கன்னிப்போர்; இனி, சோழ சாம்ராஜ்யத்திற்காக நடக்கப் போகும் எண்ணற்ற போர்கள் என் வீரவாளைத் தான் நம்பியிருக்கின்றன. கங்கையும் கடாரமும் தாண்டி ஏழு கடல்களுக்கும் அப்பால் சோழரின் புலிக்கொடியை என் வீரத்தோள்களில் சுமந்து சென்று அகில உலகத்திலும் பறக்கவிடுவேன். குலோத்துங்க சோழ தேவரின் சோழ சாம்ராஜ்ய சரித்திரத்தில் இந்த வீரசேகரனின் பெயரைப் பொன்னெழுத்துக்களால் பொறிப்பார்கள். என் மதுரை வெற்றியைப் புகழ்ந்து நாளை எனக்கு அரசாங்க சபை வீரப்பதக்கம் அளிக்கப் போகிறது!" என்று பெருமை பொங்க, தன் பிரதாபங்களைக் கூறி விட்டுத் தன் புலி இலச்சினை பொறித்த வீரவாளைக் காண்பித்தான்.

அபயக் குரல் கொடுத்து அழுத இளம் பெண் இப்போது வீரசேகரனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்து ஏளனமாகச் சிரித்தாள்.

"வீரவாலிபனே! மதுரையைக் கைப்பற்றிய மகாசூரனான உனக்கு அவசியம் வீரப்பதக்கம் கொடுக்க வேண்டியதுதான். உன்னுடைய குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் புலிக்கொடி கங்கையும் கடாரமும் தாண்டி ஏழு கடல்களுக்கப்பாலும் அவசியம் பறக்க வேண்டியதுதான்! ஏனெனில், இங்கே மதுரையின் தெருக்களில் இளம் பெண்களின் மானத்திற்கு நேர்ந்த கதை உலகத்திலுள்ள ஒவ்வொரு தெருவிலும் நடக்க வேண்டுமல்லவா? அழகான பெண்களையும் ஆடவர்களையும் அடிமைகளாகப் பிடித்துக் கொண்டு போய் வியாபாரம் செய்யும் உங்கள் அற்புதமான கலாசாரம் கங்கையும் கடாரமும் தாண்டி ஏழு கடல்களுக்கு அப்பாலும் பரவ வேண்டுமல்லவா? குடும்பப் பெண்களைப் போரில் சூறையாடிக் கொண்டு போய் ஆண்டவன் பெயரால் அடிமைக் கணிகைகளாக்கி அறுபது எழுபது காசுகளுக்கு விற்றுக் கோயிலை அசுத்தப்படுத்தும் இந்த அபூர்வமான திருப்பணி உலகத்திலுள்ள ஒவ்வொரு புனிதமான தேவாலயத்திற்கும் எட்ட வேண்டுமல்லவா?" என்று அந்த இளம்பெண் பாம்புபோலச் சீறினாள்.

"வாயை மூடுடி, பாண்டி நாட்டுச் சிறுக்கி! எங்கள் சோழ நாட்டைப் பற்றி இனி ஏதாவது ஏளனமாகப் பேசினால் உன் வாயைக் கிழித்து விடுவேன்!" என்று முரடன் பயமுறுத்தினான்.

''அவளைப் பேசவிடுங்கள். யாருக்கும் பேச உரிமையுண்டு. கோழையும் குற்ற நெஞ்சமுள்ளவனுந்தான் பிறர் வாயை மூடி அடக்க விரும்புவான்!" என்று வீரசேகரன் அதிகாரத் தொனியோடு சொன்னான்.

அழகிய யுவதி தனக்கு ஆபத்பாந்தவனாய் வந்து உதவிய வீரவாலிபனை ஏறிட்டுப் பார்த்து ஏளனச் சிரிப்புடன் சொன்னாள்:

''வீரசேகரன் என்ற பெயர் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் என்று கனவு காணும் வீர வாலிபனே! மதுரையைக் கைப்பற்றிப் பெண்களின் மானத்தை இந்தத் துஷ்டர்கள் சூறையாட வழி வகுத்துக் கொடுத்த உன்மீது மானமுள்ள ஒவ்வொரு பெண்ணும் காறி உமிழ்வாள். பெண் மான்களின் மீது புலிகளைப் போலப் பாய்ந்து அடிமைக் கணிகைகளாக ஆறேழு காசுகளுக்கு விற்கும் உன் சோழ நாட்டுப் புலிக் கொடியை ஒவ்வொரு பெண்ணும் சபிப்பாள். ஆண்டவன் சந்நிதியில் ஒவ்வொரு பெண்ணும் கண்ணீருகுத்து உருகி உன் சோழ சாம்ராஜ்யம் சரிந்து விழவேண்டுமென்று கடவுளைக் கும்பிடுவாள்!"

இவ்வாறு அனாதைப் பெண் தொடுக்கும் வசையம்புகளைக் கண்டு வீரசேகரனுக்குக் கோபம் வரவில்லை. எதையோ தீவிரமாகச் சிந்தித்துவிட்டு முரட்டுக் காவற்காரர்களை நோக்கிக் கட்டளையிட்டான்:

"காவற்காரர்களே, அந்த அபலையை விட்டு விடுங்கள்!"

முரடர்களின் தலைவன் அபலையின் கையை இன்னும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கத்தினான்:

''முடியாது! எங்களுக்கு உத்தரவிட உனக்கு அதிகாரமில்லை. எங்கள் காவல் படைத்தலைவர்

ஏகவாசகன் வாணகோவரசரைத் தவிர வேறு எவர் கட்டளைக்கும் கீழ்ப்படிய மாட்டோம்! வீரசேகரா! மதுரையைக் கைப்பற்றியதோடு உன் அதிகாரமும் வேலையும் முடிந்து விட்டன. ஊர்களைக் கைப்பற்றுவ தொன்றுதான் உன்னுடைய போர்ப் படையின் வேலை! ஊர்களைக் காவல் புரிவதும் தெருக்களைப் பாதுகாப்பதும் எங்கள் காவல் படையின் வேலை. உன் வேலையை நீ பார். எங்கள் வேலையை நாங்கள் பார்க்கிறோம்!" என்று முரடன் சொன்னான்.

"ஊர்களைக் கைப்பற்றுவது மட்டுமல்ல. என் வெற்றியில் களங்கமேற்படாமல் பாதுகாப்பதும் என் வேலைதான்! உங்களைப் போன்ற சில கயவர்களால் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் வெற்றி விஜயத்தில் அபகீர்த்தி ஏற்படாமல் என் வாள் முனையால் துடைத்தெறிவதும் என் வேலைதான்; தெற்கே குமரிமுனை முதல் வடக்கே வேங்கி நாடுவரை பரந்து கிடக்கும் தமிழர் சமுதாயத்தை ஒன்றுபடுத்தும் வீரப்புலிக் கொடியில் அசுத்தக் கறை படியாமல் உங்கள் ரத்தத்தால் கழுவி விடுவதும் என் வேலைதான்! அன்று மதுரையைக் கைப்பற்றப் பாண்டியப் பகைவர்முன் என் வீரவாளை உருவினேன். இன்று என் மதுரை வெற்றியைக் களங்கமற்றதாக்க என் சோழ சகோதரர்கள் மீதே என் வீரவாளை உபயோகப்படுத்தப் போகிறேன், முரடர்களே! இந்த இளம் பெண்ணை விட்டுவிடுங்கள். இல்லையெனில் என் சோழ சகோதரர்களின் இரத்தம் ஒரு பாண்டிப் பெண்ணின் மானத்திற்காக வீணாக மண் தரையில் சிந்த நேரிடும். இந்த வீரசேகரன் ஒருமுறை உடைவாளை உருவினால் ஒன்பது தலைகள் அறுந்து விழும்வரை உள்ளே செருக மாட்டான்! ஒருதரம் கத்தியை வீசினால் ஒரே கணத்தில் உங்களுடைய பத்துக் கைகளும் ஐந்து தலைகளும் பந்துபோல் மண்ணில் உருண்டு விழுவது நிச்சயம்!" என்று வீரசேகரன் நவரத்தினக் கற்கள் பதித்த வீரவாளை உருவினான்.

முரடன் ஒரு கையால் இளம் பெண்ணைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு இன்னொரு கையால்

வாளை உருவினான். அவனுடைய சகாக்களான நால்வரும் தங்கள் வாள்களை உருவிக்கொண்டு நின்றார்கள்.

வீரசேகரன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே தன் முன் நிற்கும் அழகிய யுவதியை நோக்கி, "மதுரை வெற்றிக்குப் பிறகு என் வீரவாள் துருப்பிடித்து விட்டது. அதை மறுபடியும் உபயோகிக்கச் சந்தர்ப்பம் கொடுத்த பெண்ணே, உன் மானத்திற்காக வாளை உருவுகிறேன். வெற்றி பெற்ற பிறகு என் வீரவாளை உன் சிவந்த உதடுகளால் முத்தமிடு. என் வீரவாளில் கறைபடப் போகும் இந்தக் கயவர்களின் ரத்தப் பூச்சை உன் ஆனந்தக் கண்ணீரால் கழுவி விடு!" என்று புன்முறுவல் செய்தான்.

அந்த இளம் பெண்ணும் புதுத் தாமரையாய் முகம் மலர்ந்து இலேசாகப் புன்னகை செய்தாள்.

ஐந்து முரடர்களும் கத்திகளைத் தூக்கிப் பிடித்து வியூகம் வகுத்து யுத்த சன்னத்தர்களாய் நின்றார்கள்.

வீரசேகரன் அவர்களை நோக்கி அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே சொன்னான்:

"சகோதரர்களே, நாம் கத்திச் சண்டை புரியுமுன் ஒரு விஷயத்தைத் தீர ஆலோசியுங்கள். இந்தச் சிறு சண்டையில் இரண்டு முடிவுகள்தான் உண்டு. ஒன்று உங்களது ஐந்து தலைகளும் ஒன்றாகத் தரையில் உருண்டு விழும். அல்லது என் ஒருவனுடைய தலை அறுந்து விழும். நான் இரண்டுக்கும் தயார்! வெற்றி பெற்றால் ஒரு பெண்ணின் புன்னகை எனக்குப் பரிசு கிடைக்கும். தோல்வியடைந்தால் ஒரு பெண்ணின் மானத்தைக் காக்க உயிர் நீத்த தியாகியாவேன்! எனக்கு இரண்டு விதத்திலும் நன்மைதான் கிடைக்கும்! உங்களுக்கோ...........? நீங்கள் தோல்வியுற்றால், ஒரு குலப்பெண்ணின் மீதுள்ள துராசையால் உயிர் நீத்த இராவணர்களாவீர்கள். நீங்கள் வெற்றி பெற்றால், விலைமதிப்பற்ற ஒரு வீரவாலிபனைக் கொன்ற குற்றத்திற்காக அரசர்பிரான் உங்களை அங்கம் அங்கமாக வெட்டி உங்கள் இறைச்சியை உங்கள் கண்

முன்னாலேயே கழுகுகளுக்கு இரைபோடுவதைக் காண்பீர்கள். ஆக, வெற்றி தோல்வி இரண்டு விதத்திலும் உங்களுக்குக் கெட்ட சாவு நேர்வது நிச்சயம்!"

வீரசேகரனின் இந்தப் புத்தி கூர்மையான வாசகத்தைக் கேட்டதும் ஐந்து முரடர்களும் திடுக்கிட்டனர். தங்களுக்குள் இரகசியமாக ஏதோ குசுகுசுவென்று பேசிவிட்டு, உருவிய வாள்களை உடையுறைகளுக்குள் செருகிக் கொண்டனர்.

காவற்காரர்களின் தலைவன் ஆழ்ந்த துயரத்துடன் வீரசேகரனை நோக்கி, "ஒரு குற்றவாளியைத் தப்புவிக்கச் செய்து நீ ராஜத்துரோகியாக விரும்பினால் இந்த மோசக்காரியை நாங்கள் விட்டுவிடுகிறோம். ஆனால் நாளை மேலதிகாரிகளுக்கு நீ என்ன பதில் சொல்வாய் என்பதை யோசித்துக் கொள்!" என்றான்.

''இவள் என்ன குற்றம் செய்தாள்?'' என்று வீரசேகரன் கேட்டான்.

"நடுநிசியில் இந்தப் பெண் சந்தேகத்துக்கிடமான முறையில் தெருக்களில் அலைந்தாள். அமைதிக்குப் பங்கம் விளைவிப்பவர்களையும் கோயிலில் அர்த்தசாம மணி அடித்த பிறகு தனியாகவோ நாலைந்து பேராகவோ வீதிகளில் அலைபவரையும், ஆணாகயிருந்தாலும் பெண்ணாகயிருந்தாலும் சிறைபிடிக்க வேண்டுமென்று எங்கள் காவல்படை அதிகாரி ஏகவாசகர் வாணகோவரசர் கடுமையான உத்தரவு பிறப்பித்திருக்கிறார். மதுரை முழுதும் நமக்கு எதிராக ஒரே கலவரமாகக் கிடக்கிறதென்று உனக்குத் தெரியாதா? இவள் அரசாங்க உத்தரவை மீறி நடுநிசியில் வீதியில் நடமாடினாள். அதனால் இவளைப் பிடித்துக் கொண்டோம்!"

வீரசேகரன் இளம் பெண்ணை உற்று நோக்கி, "இந்த முரடர்கள் உன் வீட்டிற்குள் புகுந்து உன்னைத் தூக்கிக் கொண்டு வந்து விட்டார்களா?" என்று கேட்டான்.

அலள் தப்புவதற்காக "ஆமாம்" என்று பொய் சொல்லி விடுவாளோ என்று ஐந்து முரடர்களும்

கலவரமடைந்தார்கள். ஆனால் அவள் பொய்கூடச் சொல்ல முடியாதவளாயிருந்தாள்.

"இந்த ராட்சஸர்கள் என்னைத் தூக்கிக் கொண்டு ஓட என் வீட்டிற்குள் நுழைந்திருந்தால் எல்லோரையும் விஷம் வைத்துக் கொன்று வீட்டிற்குள்ளேயே புதைத்திருப்பேன். நானாகத்தான் இந்தத் துஷ்டர்களின் கையில் எதிர்பாராதவிதமாக மாட்டிக் கொண்டேன்!" என்று அவள் நிஜமாக நடந்ததைச் சொல்லி விட்டாள்.

காவற்காரரின் தலைவன் உடனே ஆக்ரோஷத்தால் கூவினான்: ''மதுரையின் அமைதிக்கு ஆபத்து சூழ்ந்திருக்கிறது. நடுநிசியில் நாசவேலைகளும் ராஜத் துரோகமான காரியங்களும் ரகசியமாக நடக்கின்றன. அத்தாணி மண்டபத்தில் பறக்கும் நம் புலிக்கொடி மீது சாணியுருண்டை வீசப்பட்டிருப்பது உனக்குத் தெரியாதா?"

"மதுரைக்கு ஆபத்து சூழ்ந்திருப்பதும் நாசவேலைகள் நடப்பதும் இளம் பெண் ஒருத்தி நடுநிசியிவ் மதுரையின் திருவீதிகளில் சஞ்சரிப்பதனால் அல்ல! தலைநகரைப் பறிகொடுத்துவிட்டுப் பேடியைப் போல ஓடிய கிராதகன் வீரபாண்டியனின் ஆட்கள் ரகசியமாக இந்த மதுரையில் நடமாடுகிறார்கள். நாளை நாம் மதுரை மழவராயன் சிம்மாசனத்தில் பட்டம் சூட்டி உட்கார வைக்கப்போகும் குலசேகர பாண்டியன் மகனை ரகசியமாகக் கொலை செய்துவிட ஒரு கட்சி சதிவேலைகள் புரிகிறது. அந்த நாசகாரக் கும்பலை நாம் நிர்மூலமாக்க வேண்டுமே தவிர, ஓர் இளம் பெண்ணின் மானத்தைப் பறிப்பது நம்முடைய கடமையல்ல!" என்று வீரசேகரன் உருக்கமான குரலில் சொன்னான்.

அந்த இளம் பெண் தன் புடவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நன்றியறிதல் பொங்க வீரவாலிபனைக் கடைக்கண்ணால் பார்த்து ஒரு சிறு புன்னகை செய்தாள். வைகறை ஒளிபோன்ற அந்தப் புன்னகையின் ஸ்பரிசத்தில் அவளது முகம் பூர்ணத் தாமரையாக மலர்ந்து அதிக அழகுடன் விளங்கியது.

அவளும் அந்தப் புன்னகையும் தனக்காகவே பிறந்திருப்பது போல வீரசேகரனின் வாலிப நெஞ்சில் ஏதோ ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. ஆனால் நடுநிசியில் வீதிகளில் அலையும் அவள்...?

"பெண்ணே, இந்த இருட்டு நேரத்தில் எங்கே கிளம்பினாய்?" என்று வீரசேகரன் அவளை உற்றுப் பார்த்துக் கொண்டே கேட்டான்.

"நான் எங்கேயும் கிளம்பவில்லை. என் வீட்டிற்குத்தான் திரும்பி வந்தேன்!"

"ஒரு கண்ணியமான குடும்பப் பெண் நடுநிசியில் இப்படிச் சந்து இருட்டுகளில் நடமாட மாட்டாள். அதுவும் காவற்காரர்களே வேட்டை நாய்களாக மோப்பம் பிடித்துத் திரியும் இந்தப் பயங்கரமான இரவில் மட்டரகமான தெருப் பரத்தைகூட..."

"வீர வாலிபனே, என் முகத்தைப் பார். நான் அப்படிப்பட்டவளாகத் தெரிகிறதா? உனக்கு ஒரு தங்கையோ மனைவியோ இருந்தால் எவ்வளவு வித்தியாசமாக நினைக்க மாட்டாயோ அப்படி என்னையும் நினை!"

"இல்லை... அரசாங்க உத்தரவை மீறி நீ ஏன் நடுநிசியில் தெருக்களில் அலைகிறாய்?"

"எனக்கு அப்படியொரு அரசாங்க உத்தரவு இருப்பது தெரியாது!"

"நகரின் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலும் பறையடித்துத் தெரிவித்தார்களே? செவிடன் காதிலும் அந்தப் பறை கொட்டு விழுந்திருக்குமே?"

"நான் இன்று இருட்டிய பிறகுதான் மதுரைக்கு வந்தேன். என் பாட்டியைப் பார்க்க அடுத்த ஊருக்குப் போயிருந்தேன். எனக்கு மதுரையில் நடந்தது ஒன்றும் தெரியாது!"

"மதுரை நகரின் நான்கு கோட்டை வாசல்களும் இழுத்துச் சாத்தப்பட்டுப் பலத்த காவல் இருக்கிறதே! நீ எப்படி நகருக்குள் நுழைந்தாய்?"

அவள் பதில் சொல்லவில்லை. அவளது முகம் கலவரமடைந்தது. கண்ணீர் கலங்கக் கெஞ்சும் பார்வையுடன் அவள் வீரசேகரனைக் கடைக்கண்ணால் பார்த்து மெல்லச் சிரித்தாள்.

உடனே காவற்காரர்களின் தலைவன், "இவள் மோகினிப் பிசாசு! இவளது அழகில் ஏமாந்து விடாதே! இவள் மாய்மாலக்காரி. வீரபாண்டியன் கட்சியைச் சேர்ந்தவள். நம் புலிக்கொடி மீது சாணியுருண்டை வீசியவள், இந்தச் சிறுக்கியாக இருக்கலாம். ஒருவேளை வீரபாண்டியன் மனைவியாகலே இருக்கலாம். இவளைச் சிறைப்பிடித்து அதிகாரிகளிடம் விசாரணைக்கு அனுப்பாமல் விட்டுவிடவா சொல்கிறாய்?" என்று கத்தினான்.

வீரசேகரன் குழம்பினான், அவனது இருதயமும் மனித உணர்ச்சியும் அந்த இளம் பெண்ணைக் காப்பாற்றும்படித் தூண்டின. ஆனால் மூளையும் கடமையுணர்ச்சியும் அவளைச் சிறைக்கு அனுப்பும்படி வற்புறுத்தின.

வெகு கணங்கள் தீர ஆலோசித்துவிட்டு வீரசேகரன் காவற்காரர்களை நோக்கி, "நீங்கள் சந்தேகப்படுவது போல இவள் காவற்படை அதிகாரிகளால் விசாரிக்கப்பட வேண்டியவளே! நீங்கள் அரசாங்க உத்தரவுகளை அணுவளவேனும் பிசகாமல் நிறைவேற்றுவதை நான் ஒரு சிறந்த ராஜவிசுவாசி என்ற முறையில் மிகவும் பாராட்டுகிறேன். ஆனால் சிறந்த மனிதப் பண்புள்ளவன் என்ற முறையில், நீங்கள் ஒரு பெண்ணிடம் கண்ணியமாகவும் மிருதுவாகவும் நடந்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்துகிறேன். இவளை உங்கள் இஷ்டம்போலச் சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லுங்கள். ஆனால் இவளிடம் நீங்கள் அணுவளவாவது கண்ணியக் குறைவாக நடந்து கொண்டதாகத் தெரிந்தால் உங்கள் ஐந்து தலைகளையும் அந்த இடத்திலேயே வெட்டி உங்கள் மண்டையோடுகளைக் கபாலிகப் பைராகிகளுக்குத் தானம் கொடுத்து விடுவேன்; ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான்.

மங்கை திடுக்கிட்டுப் பதறி, "வீரவாலிபனே! இந்தப் பாபிகளின் கையில் என்னைத் தள்ளாதே!" என்று உருக்கமாகக் கெஞ்சினாள்.

"அப்படியானால் என் கையைப் பிடித்துக்கொள்! நானே உன்னைச் சிறைச்சாலைக்கு அழைத்துப் போகிறேன்!"

"சிறைச்சாலைக்கா? நான் ஒரு குற்றமும் செய்ய வில்லையே?"

"நீ குற்றம் செய்தாயா இல்லையா என்பதை ஒற்றுப்படை அதிகாரிகள் தாம் விசாரித்து முடிவு செய்ய வேண்டும். அதுவரை உனக்கு எந்தவித ஹானியும் நேரிடாமல் உன்னைச் சிறைச்சாலைக்குக் கொண்டுபோய்ப் பாதுகாப்பதுதான் என் கடமை!" என்றான் வீரசேகரன்.

"ஐயோ! சிறைச்சாலைக்கா? செத்தேன்! வீர வாலிபனே! என்னை விட்டுவிடு. இல்லையென்றால் இந்த இடத்திலேயே என்னைக் கொன்றுவிடு. நான் சாகத்தான் இந்த இருட்டில் வழிதேடி அலைகிறேன்... நான் சாக விரும்புகிறேன்..." என்று பரிதாபமாகக் கெஞ்சினாள் மங்கை.

"நானும் சாக விரும்புவதாகச் சொல்லிக் கொண்டுதான் என் வீட்டை விட்டு வந்தேன்!" என்று வீரசேகரன் கலங்கிய குரலில் மெல்லச் சொல்லிவிட்டு, "பெண்ணே! உன் கண்ணீரோ புன்னகையோ என் கடமையைத் தடுக்க முடியாது... வீணாக முயற்சி செய்யாதே! என் பின்னால் சிறைக்கு வா..." என்றான்.

பிறகு சந்தேகக் கண்ணோடு பார்க்கும் காவற்காரர் தலைவனிடம் தன் உடைவாளை வீரசேகரன் கழற்றிக் கொடுத்து, "காவற்காரர்களே! வீரசேகரன் என்று என் பெயரும் புலி இலச்சினையும் பொறித்த என் வீர வெள்ளிவாள் இது! நான் இந்த வனிதையை உரிய அதிகாரிகளிடம் ஒப்புவித்த பிறகு நீங்கள் என் வீரவாளை என்னிடம் திருப்பி ஒப்புவிக்கலாம். இந்தப் பெண்ணிற்கு அடைக்கலம் கொடுத்ததற்காக என் உயிர் போன்ற

வீரவாள் அடைமானமாக இருக்கட்டும்!" என்று சொல்லி விட்டு, மான்போல் மருண்டு நிற்கும் இளம் பெண்ணின் கையை பிடித்துக் கூட்டிக் கொண்டு போனான்.

பின்னாலிருந்து காவல் தலைவன், "அவள் ஒரு வேளை வீரபாண்டியன் மனைவியாக இருந்தால்........?" என்று கத்தினான்.

"அவளைக் கண்டுபிடித்ததற்குப் பரிசு உங்களுக்கே கிடைக்கும்!" என்று வீரசேகரன் பதிலளித்தான்.

"ஒருவேளை நீ அவளைத் தப்பி ஓட விட்டு விட்டால்...?" என்று முரடன் மறுபடியும் கத்தினான்.

"அப்போதும் உங்களுக்குப் பரிசு கிடைக்கும்! அதனால் கிடைக்கும் தண்டனைகளை மட்டும் நான் அனுபவிப்பேன்" என்று வீரசேகரன் திரும்பிப் பாராமலேயே கூவிக்கொண்டு போனான்.

"அவள் வீரபாண்டியன் மனைவியாக இருந்து, அவளைத் தப்பியோடவிட்டால், நீ தேசத்துக்கு எவ்வளவு அவசியமான வீரவாலிபனாக இருந்தாலும், மன்னர் பிரான் உன் தலையை யானைக் காலில் வைத்து நசுக்கி விடுவார் என்பதை மட்டும் மறவாதே!" என்று முரடன் கத்தும் குரல் வீரசேகரன் காதில் வந்து விழுந்து கொண்டேயிருந்தது.

இருட்டு நேரத்தில் அந்த வீர வாலிபனும் இளமங்கையும் வெகு நேரம் மௌனமாக நடந்து சென்றார்கள்.

அவளை அவன் உற்றுப் பார்க்கும்போது அவள் தலையைக் குனிந்து கொண்டாள். அவன் பாராதபோது மெல்ல ஓரக்கண்ணால் ஏறிட்டுப் பார்த்தாள். அவளது சிவந்த உதடுகளில் இலேசாகப் புன்முறுவலும், சோக விழிகளின் கண்ணீரில் ஒருவிதக் குதூகலச் சோபையும் ததும்பின.

வீரசேகரன் அவளது முகத்தை ஊடுருவிப் பார்த்துவிட்டு, "நீ வீரபாண்டியன் மனைவியா?" என்று

துயரத்தோடு கேட்டான். அவள் வீரபாண்டியன் மனைவியாக இல்லாமலிருக்க வேண்டுமென்று உள்ளூர அவனுக்கு ஆசை அடித்துக்கொண்டது.

அவள் இலேசாகச் சிரித்தாள்; பதில் சொல்லவில்லை.

"நீ வீரபாண்டியன் மனைவிதானே...?" என்று வீரசேகரன் மறுபடியும் கேட்டான்.

"அந்தத் துரதிர்ஷ்டம் எனக்கு இல்லை! புருஷன் இல்லாமல் மனைவி இருட்டு நேரத்தில் தெருவில் அலைவதுண்டா? அதுவும் வீரபாண்டியர் ஒருகணமும் தம் மனைவியைவிட்டுப் பிரிந்திருக்கச் சம்மதியாராம்!" என்று அந்த இளம்பெண் சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"என் அதிர்ஷ்டத்தை நினைத்துச் சிரித்தேன்!"

"சிறைச்சாலைக்கு உன்னை அழைத்துச் செல்வதா அதிர்ஷ்டமாகத் தோன்றுகிறது?"

"உன்னைப் போல ஒரு நல்ல உள்ளம் வாய்ந்த வீரவாலிபன் அழைத்துச் சென்றால் சாவுகூட இனிக்கும்!"

வீரசேகரன் மௌனமானான். அவள் மிகவும் மர்மமான பெண்ணாகவும் நம்ப முடியாதவளாகவும் விளங்கினாள்.

இருவரும் ஒரு சந்து இருட்டில் திரும்பினார்கள். அவள் தப்பி ஓடிவிடுவாளோ என்று வீரசேகரன் அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டே நடந்தான்.

அவள் வெட்கம் கலந்த ஒரு சிறு புன்னகையுடன், "கையை விடு. எனக்குக் கூச்சமாயிருக்கிறது!" என்றாள்.

"இதுவரை சும்மா இருந்தாயே? அந்த முரடர்கள் பிடித்திருந்த போதுகூட நீ உன் கையைப் பறித்துக் கொள்ள முயலவில்லையே?..."

"இப்போதுதான் கூச்சமாக இருக்கிறது!... இப்போது தான் என் சுய நினைவும் இருதயமும் திரும்பி வந்தன!"

"நீ தப்பி ஓடிவிட்டால்...?"

"என்னைவிட அதிவேகமாக ஓடிவந்து என்னை உன்னால் பிடிக்க முடியாதா?... நீ ஆண்மகன் இல்லையா?..."

"ஒரு பிடி மண்ணை அள்ளி என் கண்ணில் தூவிவிட்டு நீ ஓடிவிடுவாய்...?"

"மாட்டேன்! நான் நன்றி மறப்பவளல்ல. நான் கனவிலும் எதிர்பாராத ஒரு பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றினாய். என் மானத்தைக் காத்த உனக்கு நான் ஏழேழு ஜன்மத்திலும் கடமைப்பட்டிருப்பேன்!"

"தயவுசெய்து தப்பி ஓடிவிடாதே. கடமை உன்னைக் கொல்லும்படித் தூண்டும். உன்னைக் கொன்றுவிட்டு அந்தச் சோகத்தில் நானும் தற்கொலை செய்து கொள்வேன்."

மங்கை சிரித்தாள். "நீ ஒரு பைத்தியம்! என் குற்றத்திற்கு நான்தான் சாக வேண்டியவள். நீயும் ஏன் எனக்காகத் தற்கொலை செய்துகொள்ள வேண்டும்? என்மீது உனக்கு அவ்வளவு அன்பிருந்தால் என்னை ஏன் கொல்லவேண்டும்?"

"என் கடமையும் நிலையும் அப்படிப்பட்டவை! என் லட்சியத்தின் கதை உனக்குத் தெரிந்தால்தான் என்னைப் புரிந்து கொள்வாய்!"

"முதல் சந்திப்பிலே புரிந்துகொண்டேனே..." என்று மெல்லத் தன் வாய்க்குள் சொல்லிக் கொண்டாள் அந்தக் குறும்புக்காரி.

"சிறு வயதுமுதல் நான் ஒரு பெரிய லட்சியக் கனவு கண்டேன். எங்கள் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் புலிக்கொடியைக் கங்கையும் கடாரமும் தாண்டி அகில

உலகத்திலும் பறக்க விட விரும்பினேன். அந்த வெற்றிச் சரித்திரத்தில் இந்த வீரசேகரனின் பெயர் என்றென்றும் வீரவிளக்காய் சுடர்விட்டெரிய வேண்டுமென ஆசைப்பட்டேன். வாள்நிலை கண்டான் ஜனநாதனையும், அத்திமல்லர் சம்புவராயரையும், ஏகவாசகர் வாணகோவரசரையும் போலச் சோழநாட்டு அரசியல் அவையில் மாபெரும் அந்தஸ்து வகிக்க விரும்பினேன். ஆனால் அரசியலில் என்னால் சாமானியத்தில் நுழைய முடியவில்லை. எனக்கு உயர்ந்த பிறப்பு இல்லை. உன்னதமான அரசியல் தலைவர்களின் தொடர்பு இல்லை. நான் அநாமதேயம். ஆனால் சாதாரண மனிதனைப் போல நான் சாமானிய வாழ்க்கை வாழமாட்டேன். எப்படியாவது அரசியல் புருஷனாக, லட்சியவாதியாக விளங்குவதே என் ஜன்ம சாபல்யமாகக் கருதினேன். இந்த மதுரை வெற்றி இப்போது எனக்கு ஓர் அரிய சந்தர்ப்பத்தை அளித்திருக்கிறது. நீ இந்தச் சமயம் தப்பி ஓடினால் அரசியல் வட்டாரம் என்னை இகழும். என் முன் திறந்து கிடக்கும் சுவர்க்கத்தின் வாசல் மறுபடி மூடிக்கொள்ளும்... என்ன, நான் பேசுவதைக் கவனிக்காமல் வேறு எங்கேயோ பார்க்கிறாயே?"

"இந்த இருட்டில் ஏதோ காலடி ஓசை கேட்டது..."

''ஒன்றுமில்லை. எல்லாம் வெறும் மனப் பிரமைதான்."

"உன் உடைவாளைக் கழற்றிக் கொடுத்துவிட்டாயே? இருட்டில் கத்தியில்லாமல் போவதென்றால்..."

"உடைவாளைப் பிரிவது என் உயிரைப் பிரிவது மாதிரிதான்! ஆனால் உன் உயிருக்கு ஆபத்து நேர்ந்துவிடாது. என் கத்தியைப் போல என் மதியும் நாக்கும் கூர்மையானவைதான்...! மேலே கேள்: நாளை குலோத்துங்க சோழ மன்னரின் தலைசிறந்த அமைச்சர்களும் உடன் கூட்டத்துப் பெருமக்களும் முதலி களும் இங்கே மதுரையில் ஒரு பெரிய சபை கூடிப் பேசப் போகிறார்கள். அந்த மாபெரும் அரச அவை, என் வீரத்திற்குச் சம்மானமாகப் பதக்கமும் பட்டமும்

அளிக்கப் போகிறது. அந்த அரசியல் அவையில் சோழ நாட்டின் தலைசிறந்த ராஜதந்திரிகளும் அரசியல் தலைவர்களும் நிறைந்திருப்பார்கள். அவர்கள் முன்னிலையில் வீரப்பதக்கம் பெறும் நான் ஏதாவது பேசியாக வேண்டும். அப்போது சங்கோஜத்தால் பேச முடியாமல் திண்டாடுவேன். என் கால்கள் பின்னிக்கொள்ளும். உடம்பு வெடவெடவென நடுங்கி வியர்த்து விடும். மனப்பாடம் செய்ததெல்லாம் மறந்துபோகும். கூச்சத்தால் எதையாவது திக்கித் திக்கி உளறிவிடுவேன். சபை முழுதும் பரிகாசமாகப் பார்க்கும். நாளை அரசவையில் எப்படிப் பேசுவது என்பதுதான் எனக்குப் பெரிய பயமாக இருக்கிறது..."

"ஆயிரக்கணக்கான போர் வீரர்களின் மத்தியில் வீரமுழக்கம் செய்து உயிர்களைப் பணயம் வைத்துப் போராடும்படி உணர்ச்சிகரமாகப் பேசக்கூடியவன் நீ! வீரப்பதக்கம் சம்மானம் பெறும்போது அரசசபையில் நாலு வந்தன வார்த்தைகள் பேச இப்படிப் பயப்படுகிறாயே?..."

''ஆயிரக்கணக்கான வீரர்களின் மத்தியில் உணர்ச்சிகரமாகப் பேசுவது மிகவும் சுலபம். ஆனால் இரண்டு ராஜதந்திரிகளின் முன்னால் புத்திசாலித்தனமாக இரண்டு வார்த்தை பேசுவது மிகவும் சிரமம். அதுவும் சோழ நாட்டு ராஜதந்திரிகளோ ஒரு வார்த்தைக்கு ஒன்பது அர்த்தம் வைத்துப் பேசக்கூடிய மதியூகிகள். ஒரே கேள்வியில் எதிரிகளின் பேச்சை மடக்கி விடுவார்கள். ஒரு சமயம் சோழ நாட்டின் தலைசிறந்த அரசியல் கிழவரான நாடாழ்வார் எங்கள் கிராமத்திற்கு வந்து கிராம சபையில் பேசினார். அப்போது நாற்பது வயதுக்கு மேற்பட்ட கிழவர்கள்தான் கிராம சபையில் அங்கத்தினர்களாகவோ தேர்தலுக்கு நிற்கவோ முடியும் என்று புதிதாக ஒரு மகாசபை திருத்தம் ஏற்பட்டிருந்தது. கூட்டத்திலிருந்து ஒரு வாலிபன் எழுந்து நின்று கிழவர் நாடாழ்வாரை நோக்கிக் கோபமாக ஒரு கேள்வி கேட்டான். ''கிழவர்கள்தான் கிராம சபையில் அங்கத்தினர்களாக முடியுமென்று விதித்திருக்கிறீர்களே! கிழவர்கள் பிற்போக்கானவர்களல்லவா? நாட்டை

முற்போக்கில் நடத்திச் செல்லவும் எதையும் துணிந்து சாதிக்கவும் கூடியவர்கள் வாலிபர்கள்தானே?" என்று அந்த வாலிபன் படுகோபமாகக் கேட்டுவிட்டான். அதற்கு அந்தக் கிழவர் சட்டென்று என்ன பதில் சொன்னார் தெரியுமா?"

"என்ன பதில் சொன்னார்?"

"வாலிபனுக்கு முதலில் அவையடக்கம் இராது. அவையடக்கம் இல்லாதவனுக்கு நிதானம் இராது. நிதானமில்லாதவனுக்கு, திர ஆலோசிக்கும் ஆற்றல் இராது. ஆலோசனை ஆற்றல் இல்லாதவன் நாட்டை அமைதியான முறையில் நடத்திச் செல்ல முடியாது. நாட்டில் அமைதியில்லாவிட்டால் பிரஜைகளுக்குச் சீர்கேடுகள் உண்டாகும். அதனால் லாலிபன் கிராமசபைக்கு லாயக்கில்லை என்று பதில் சொன்னாரே பார்க்கலாம்! அப்புறம் ஒருவன்கூட மூச்சுவிடவில்லை! அதுமுதல் எனக்கு ராஜதந்திரிகளையும் அரசியல் தலைவர்களையும் கண்டால் என்னையறியாமலே தாழ்வு மனப்பான்மை உண்டாகிச் சங்கோஜத்தால் உடம்பெல்லாம் நடுங்கும்... என்ன, வேறு எங்கேயோ கவனிக்கிறாய்?"

"ஒன்றுமில்லை..."

"உன் கவலை எப்படித் தப்பி ஓடுவது என்பது! என் கவலை நாளை அரச அவையில் எப்படி அவையடக்கமாகப் பேசுவது என்பது!... அரசியல் தலைவர்கள் நிறைந்த அந்த மாபெரும் அவையில் எந்தவிதமான அரசியல் சொற்களை உபயோகப்படுத்துவது, எவ்வாறு நடந்து கொள்வது, யாரார் எந்தெந்தக் கொள்கையுடையவராக இருப்பார், யார் யாருக்கு எந்தெந்தப் பட்டங்களைச் சொல்லி முகமன் கூறுவது என்ற அரசியல் சபைத் தோரணைகள் ஒன்றும் எனக்குத் தெரியாது. வெட்கத்தைவிட்டு யாரிடமாவது கேட்கலாமென்றாலோ அரசியல் லட்டாரத்தில் எனக்கு நண்பன் யாருமில்லை!"

"அலையடக்கம் என்பது அவ்வளவு பெரிய விஷயமா?" என்று அந்த இளம் பெண் வீரசேகரனோடு சந்து இருட்டில் திரும்பி நடந்தாள்.

"ஆமாம்! இலக்கண இலக்கியங்களைக் கரைத்துக் குடித்த கவிச்சக்கரவர்த்தி கம்பர்கூடத் தம் மாபெரும் ராமாயணத்தை ஆரம்பிக்குமுன் முதலில் அவையடக்கமாக ஆறு பாடல்கள் எழுதியிருக்கிறார். ராமாயண காவியம் எழுத வேண்டுமென்ற ஆசையால் அறிவுத் தச்சர்கள் முன் ஏதோ சிறு பிள்ளைபோல் கிறுகிறேனே தவிர வேறொன்று மில்லை என்றெல்லாம் அவையடக்கம் பாடுகிறார்..."

அந்த இளம் பெண் குறும்பாகச் சிரித்துக்கொண்டே மிருதுவான குரலில் பாட ஆரம்பித்துவிட்டாள்:

ஓசைபெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு
பூசைமுற்றவும் நக்குபு புக்கென
ஆசைபற்றி அறையலுற்றேன், மற்று, இக்
காசில் கொற்றத்து இராமன் கதை, அரோ!

"நீ இனிமையாகப் பாடுகிறாய்!" என்றான் வீரசேகரன்.

"இனிமையாகப் பாடுவது மட்டுமல்ல. அந்தப் பாட்டிற்குப் பொழிப்புரையும் எனக்குத் தெரியும்!" என்று அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள்: "பாற்கடல் முழுவதையும் ஒரே வாயில் நக்கிக் குடிக்கவேண்டுமென ஆசைப்படும் பூனையைப்போல, வால்மீகி இராமாயணம் முழுவதையும் சுவையாகப் பாட ஆசைப்படுகிறேன் என்று கம்பர் மிகவும் பணிவாக அவையடக்கம் பாடுகிறார்..."

"ஆமாம்; நான் ஒரு பூனை! என் முன்னால் இருக்கும் அரச அவை ஒரு பாற்கடல். அதைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறேன். அவையடக்கம் என்னவென்று தெரியாமலே அரச அவையில் நுழையப் போகிறேன்!" என்று கூறியபடி வீரசேகரன் இருண்ட சந்தில் திரும்பினான்.

அப்போது ஹிஹிஹிஹி என்ற பயங்கரமான சிரிப்புடன் இரண்டு கரிய உருவங்கள் அவன்முன் வந்து நின்றன. தொப்பையாக இருந்த ஆள் தீப்பந்தம் ஏந்தி நிற்க, மெலிவாக இருந்த ஆசாமி கத்தியை உருவி வீரசேகரனது மார்புக்கு நேரே நீட்டிக்கொண்டே பயங்கரமாகச் சிரித்தான்.

"தம்பி! உன்னிடம் வீரவாள் இல்லை. நீ சிறிது அசைந்தாலும் என் வாள்முனை என்னையும் உன்னையுமறியாமல் உன் இருதயத்துக்குள் புகுந்துவிடும். வீணாக ரத்தம் சிந்த வைக்காதே!" என்று பயங்கரமான இருட்டில் அந்தக் கரிய உருவினன் கலகலவென்று சிரித்தான்.

வீரசேகரன் திடுக்கிட்டு நின்றான். அந்த இரண்டு ஆட்களும் வீரபாண்டியனின் ஆட்களாக இருப்பார்களோ, தன்னை மடக்கித் தான் சிறைப்பிடித்துச் செல்லும் இளம் பெண்ணை மீட்டுச் செல்ல வந்திருப்பார்களோ என்று கலவரமடைந்தான்.

''தம்பி! உனக்கு அவையடக்கம் என்றால் என்னவென்று தெரியாது. நீ ஒரு பூனை; உன் முன்னால் தென்படப் போகும் அரச அவை ஒரு பாற்கடல் என்பது மட்டுந்தான் உனக்குத் தெரியும்! தம்பி கவிச் சக்கரவர்த்தி கம்பர், காவியத்தில் எழுதும் அவையடக்கம் வேறு. அவர் அமர்ந்திருக்கும் குலோத்துங்க சக்கரவர்த்தியின் ராஜசபையிலுள்ள அவையடக்கம் வேறு!" என்றான் அந்தப் பயங்கர மனிதன்.

வீரசேகரன் வியப்பும் பீதியும் நிறைந்த விழிகளால் அந்தக் கரிய மனிதனை ஏறிட்டுப் பார்த்தான்.

''தம்பி! அவையடக்கம் என்றால், என்ன தெரியுமா?...பதவி வேட்டை, ராஜதந்திரம், முகஸ்துதி, போட்டி, பொறாமை, சுயநலம், நயவஞ்சகம், கையூட்டு (வஞ்சம்), வறட்டு வாதம் இவை தான் அரசியல் அவையில் அடங்கியுள்ளவை; இவைதான் சோழ நாட்டு அவையடக்கம்!'' என்று அந்த மூர்க்கன் சிரித்தான். அவனது சிரிப்பு இருண்ட தெருவில், பயங்கரமாக எதிரொலித்தது!

## அத்தியாயம் 3

### உலாவியல் படலம்

'இவன்
கருணை என்பது கண்டறியான், பெரும்
பருணதன் கொல்? படுகொலையான்!' என்றாள்.

**கம்ப ராமாயணம்**

மந்தமான இரவில் உலகமே சூனியமாகி விட்டது போன்ற உணர்ச்சி வீரசேகரனுக்கு உண்டாயிற்று.

அவனது மார்புக்கு நேரே கத்தியை நீட்டிக் கலகலவென்று சிரிக்கும் கருநிற வாலிபனின் சிரிப்பு, இருள் அரக்கியின் வஞ்சனைச் சிரிப்புப் போல, வீரசேகரனுக்குத் தோன்றியது. தன்னை வழிமறித்து நிற்கும் காக்காசுரன் போன்ற அந்தக் கருநிற வாலிபனையும், அலனருகில் அக்கினியாசுரன்போல் தீப்பந்தம் ஏந்தி நிற்கும் கிழட்டு உருவத்தையும் ஏறிட்டுப் பார்த்தான். மாயாவிகளான அலர்களிருவரும் வீரபாண்டியனின் ஆட்கள் என்றும், தான் சிறைபிடித்துச் செல்லும் இளம் பெண்ணை மீட்டுச் செல்ல வந்தவர்களென்றும் நிச்சயித்துக் கொண்டான்.

ஆனால் எதிர்த்துப் போரிட அவனிடம் உடைவாள் இல்லை. பெண்ணின் கையை விடவும் அவன் கடமையுள்ளம் இடங்கொடுக்கவில்லை. அவளோடு பின்வாங்கி நழுவி மறைந்துவிடலாமென்று, தான் நிற்கும் குறுகலான சந்து முனையையும் எதிரேயுள்ள தெற்கு வெளி வீதியையும் ஊடுருவிப் பார்த்தான்.

"தம்பி! நான் அறியாமல் ஓர் அணுகூட அசைய முடியாது!" என்று வைடூரிய வாளை நீட்டிப் பயமுறுத்தும் கரியவனின் மாயச்சிரிப்பு, மதுரையின் துவஜஸ்தம்பங் களையெல்லாம் தாண்டிவரும் ஒரு வானொலிபோல் கேட்டது.

வீரசேகரன் யுவதியின் மிருதுலான கையை இன்னும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, கண்ணிமைகள் மூடி, சாவை எதிர் நோக்கி அவட்சியமாக நின்றான். அவளோ, ஆவலும் பயமும் ஒருங்கே நிறைந்தவளாய், பனித் திவலைகள் படிந்த புதுத் தாமரை போல, கண்ணீர்த் திவலைகளில் அதிகச் சோபையுடன் காணப்பட்டாள்.

''இந்த அழகான பெண்ணை நீ இலேசில் விடமாட்டாய்! இவளுக்காகச் சாகத் தயாராகிவிட்டாய், இல்லையா?" என்று கரியவன் விஷமப் புன்னகையுடன் பரிகாசமாகக் கேட்டான்.

"நான் எந்த நேரத்திலும் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே சாகத் தயாராயிருக்கிறேன்! இந்த வீரசேகரன் மரண தேவதையின் அணைப்பில் அலாதியான சுகம் காண்பவன்! மரணத்தோடு விளையாடுவதை, மணப் பெண்ணோடு கொஞ்சி மகிழ்வதாகக் கருதும் தமிழ்க் குடியில் பிறந்தவன்!" என்று வீரசேகரன் யுவதியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சிரித்தான்.

அவனது கைப்பிடியில் பூவைப் போலத் துவண்டு, மின்னலைப் போல மருங்கி நுடங்கி நின்ற அவளது கருமேக விழிகளில் கண்ணீர்த் துளிகள் அதிகமாக அரும்பி மழைத்துளிகளாய்ச் சிந்தின. அவை கண்ணீர் அருவியாகப் பெருகி, பாற்கடலாய் மாறி, அதில் வீரசேகரன் அமிழ்வது போன்ற பிரமை தட்டியது. அவன் நிற்கும் குறுகலான சந்து முனையும், தீபஸ்தம்பமும் மாயச் சக்கரத்தில் தலை கீழாய்ச் சுழன்றன. மதுரையின் மாடமாளிகைகளும், மணி மகுடங்களும், தங்கக் கலசங்களும், பட்டுக் கொடிகளும், கோயில் விமானங்களும் கோட்டை வாசல்களும் புகையுண்ட

ஓவியம் போல அவன் கண்ணிமைகளிலிருந்து மெல்ல மெல்லத் தேய்ந்து மறைந்தன. ஒரு மாய மோகினியின் இரத்தச் சிவப்பான இரண்டு பெரிய உதடுகளுக்கு மத்தியில் துயில்வது போலவும், புஷ்பக விமானத்தில் ஏறி, கோமேதகக் கற்கள் தூவிய வான வீதியில் பறப்பது போலவும், கந்தருவிகள் மகரயாழ் மீட்ட, சப்த மாதர்கள் மகரந்தப் பொடிகளைத் தூவ, செக்கர்வான மஞ்சத்தில் ஏதோ ஒரு வீரசுவர்க்கத்தில் கண் விழிப்பது போலவும், வீரசேகரன் ஓர் இலட்சிய புன்முறுவல் செய்தான்.

இரண்டு உஷ்ணமான கண்ணீர்த் துளிகள் அவன் கையில் விழுந்த பிறகுதான் அவனுக்குச் சுயநினைவு திரும்பிப் பூலோகத்தின் ஸ்மரணை வந்தது.

"வீரசேகரா! உனக்கு உயிர் பெரிதா? இந்தப் பெண்ணின் கண்ணீர் பெரிதா?" என்று கருநிற வாலிபன் பரிகாசமாய்ச் சிரித்தான்.

"இந்தப் பெண்ணைவிட என் உயிர் பெரிதல்ல! என் தேச பக்தியைவிடப் பெண்ணின் கண்ணீரும் பெரிதல்ல!" என்று வீரசேகரன் இலட்சிய வெறியோடு பதிலளித்தான்.

"விசித்திரமான பதில்! உயிரைப் பெரிதாக மதிக்காதவன் மகா ஞானி! ஆனால் நீ ஞான ரிஷியாகவும் அதே சமயத்தில் தேச பக்தனாகவும் இருக்க முயல்கிறாய்! துரதிர்ஷ்டவசமாக, மண்ணை மாயை என்று இகழும் மகா ஞானியாகவும், அதே சமயம் மண்ணைத் தெய்வம் என்று கும்பிடும் தேசபக்தனாகவும் ஒரே நபர் இருக்க முடியாது!"

"வீண் வார்த்தைகள் வேண்டாம். என் உடம்பி லிருந்து உயிர் பிரிந்தாலொழிய என்னிடமிருந்து இந்தப் பெண்ணை யாரும் பிரிக்க முடியாது!" என்றான் வீரசேகரன் தீர்மானமான குரலில்.

"முட்டாள்! ஒரு பெண்ணுக்காக உயிரை விடுவது, அழகான ஒரு கிளிஞ்சலுக்காகக் கடலில் விழுவதைவிடப் பைத்தியக்காரத்தனம்!"

"என்னை ராஜத் துரோகியாக்க முயலாதே! நீங்கள் இருவரும் வீரபாண்டியனின் ஆட்கள். என்னைக் கொன்றாலொழிய இந்தப் பெண்ணை நீங்கள் என்னிடமிருந்து காப்பாற்றிப் போக முடியாது!"

''அந்தப் பெண்ணின் துரதிர்ஷ்டம், நாங்கள் வீரபாண்டியனின் கூலியாட்களல்ல! உன்னைப் போன்ற சோழ நாட்டு மகாவீரர்கள் தான். ஆனால் புத்திசாலிகள்!" என்று சொல்லிவிட்டு அந்தக் கருநிற வாலியன் தன் அருகில் நிற்கும் கிழவரை நோக்கிப் புன்னகை செய்தான்.

யுவதி திடுக்கிட்டாள். தன்னை அவர்கள் காப்பாற்றுவார்கள் என்ற ஆவலினால் மலர்ந்திருந்த அவளது முகம் இப்போது அதிகமாக வாடியது.

அவர்கள் இருவரும் வேறு யாருமல்ல; சோழநாட்டு வாட்படைத் தலைவனான ஜனநாதக் கச்சிராயனும், யானைப் படைத்தலைவரான கிழவர் சம்புவராயருந்தான் அவர்கள்! இரவில் நகர்வலம் வந்தவர்கள், தங்கள் முன் ஓர் அழகிய யுவதியுடன் எதிர்பட்ட வீரசேகரனை விளையாட்டாக வழிமறித்து வேடிக்கை பார்த்தார்கள்.

வீரசேகரன் கோபம் நிறைந்த குரலில் ஜனநாதனை நோக்கிக் கேட்டான்: ''அப்படியானால் என்னை வழிமறித்துத் தடுத்து நிற்பது யார்?"

''வழிமறித்து நிற்க நான் நந்தியுமல்ல. நீ நந்தனாருமல்ல. என் பின்னால் நிற்கும் இந்தப் பெரியவர் தில்லைக்கூத்தப் பெருமானுமல்ல. என் வாள் முனையில் நீ எதிர்பார்ப்பது கைலாச பதவியுமல்ல!'' என்று ஜனநாதன் கலகலவென்று சிரித்தான்.

"நான் வீர வைஷ்ணவன். எனக்குக் கைலாச பதவி தேவையில்லை. நீ சுத்த சைலனாயிருப்பதோடு சுத்த வீரனாயுமிருந்தால், வெறுங் கையனாய் நிற்கும் என்னிடம் ஒரு வாளைக் கொடுத்துப் போரிட்டுப் பார். ஒரே வீச்சில் உனக்கு வைகுந்த பதவி அளிக்கிறேன்!"

"அரசியல்வாதிகள் ஆசைப்படாத பதவி அது ஒன்றுதான்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

இளம் பெண்ணோ மானினமும் மீனினமும் போல மருண்டு துள்ளி, "ஐயா, ஐயா! நான் அநாதைப் பெண். இந்த வாலிபனின் குரங்குப் பிடியிலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள். என் கையைவிடச் சொல்லுங்கள்!" என்று கூவினாள்.

"விட்டுவிடு!" என்றான் ஜனநாதன்.

"விடமுடியாது! என்னை ராஜத் துரோகியாக்காதே! இவள் ராஜாங்க விசாரணைக்கு ஆளாக வேண்டியவள்!"

"எனக்கு எல்லாம் தெரியும்! அவளுடைய கையைத்தான் விடச் சொன்னேன்! நம்முடைய கலாசாரத்தில் ஒரு பெண்ணின் கையை அவளுடைய புருஷன்தான் இவ்வளவு முரட்டுத்தனமாகப் பிடிக்கலாம்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"எனக்குக் கலாச்சாரத்தைப் பற்றிக் கவலையில்லை. கையை விட்டுவிட்டால் இவள் ஓடிவிடுவாள்!"

"ஓட மாட்டாள்! ஓட முயன்றால் இருட்டில் பதுங்கி யிருக்கும் என் சேவகர்கள் இவளைத் தாவிப் பிடித்துக் கொள்வார்கள். நான் எங்கே இருந்தாலும், எங்கே போனாலும், என்னைச் சுற்றிலும் என்னுடைய பரிவார மெய்க்காப்பாளர்கள் மாயாவிகளாய் மறைந்திருப்பார்கள்!"

அதைக் கேட்டதும் யுவதியின் மாந்தளிர் மேனி நடுங்கியது. மைதீட்டிய கருவிழிகளும், வாள் நுதலும் செவ்வாயும் நீரைக் கக்கின. அந்தக் கண்ணீர் வெள்ளம் ரத்த நதியாக ஓடி, அதில் வீரசேகரன் நீந்த முடியாமல் அமிழ்ந்து போவது போலவும், அவனது இரத்தத் துளிகளிலிருந்து நூற்றுக்கணக்கான ரத்தப் பேய்கள் சிரிப்பது போலவும் பிரமை தட்டியது. சுற்றிலும் இருள் படலத்திலிருந்து நூற்றுக்கணக்கான பூத கணங்கள் கிளம்பி வந்து அவளைப் பிடித்துக் கொள்வது போலவும், பாழடைந்த மண்டபங்களின் கோரச் சிலைகள்

கைகாலற்று உயிர்பெற்று ஆயிரக்கணக்காக நடமாடுவது போலவும், சோழியர்கள் நாசமாக்கிய மதுரையின் திருவீதிகளில் பல்லாயிரக்கணக்கான எமகிங்கரர்கள் சஞ்சரிப்பது போலவும் தோன்றியது. தான் நிற்கும் வீதியை அவள் மெல்ல உற்றுப் பார்த்தாள்.

வீதியில் பாண்டிய நாட்டுக் கேடயங்களும் கல்லெறி யந்திரங்களும் உடைந்து கிடந்தன. ஒவ்வொரு வீதியிலும், பூ மாலைகளும், சங்கு வளையல்களும், பூக்களும், நீண்ட கூந்தல்களும், காற் சிலம்புகளும் மேகலைகளும் அறுந்து சிதறிக் கிடந்தன.

"உன்னை ராஜத்துரோகி என்று சந்தேகித்தேன். மன்னித்துக் கொள்!" என்றான் வீரசேகரன்.

"சந்தேகந்தான் அரசியல் சதுரங்கத்தின் முதற்படை!" என்று ஜனநாதன் சிரித்தான்.

"நீயும் ஒரு சோழ நாட்டவனாயிருந்து என்னை ஏன் வழி மறைத்தாய்? இந்த நடுநிசியில் நீங்கள் உலாவுவதற்குக் காரணம் என்ன?"

"தம்பி! நம் அரசியல் படலம் நிலைத்திருப்பதற்கு அவ்வப்போது நாம் நாடெங்கும் உலாவியல் படலம் நடத்துவது அவசியம் என்பது உனக்குத் தெரியும்! தம்பி! நம்மால் இந்த மதுரைமாநகர் எவ்வளவு தூரம் நாசமடைந்திருக்கிறதென்பதைக் கண்டுகளிக்க நாங்கள் நகர்வலம் வந்தோம். நங்கையையும் நம்பியையும் கண்டோம். வாள் நுதல் நங்கையும், கையில் வாள் இல்லாத நம்பியும் ஊர்வலம் வருவதைக் கண்டு அதிசயித்தோம். ஒரு சோழநாட்டு வீரன் ஒரு பாண்டி நாட்டுப் பெண்ணோடு நடுநிசியில் உலா புறப்பட்டதால் நாங்கள் சந்தேகத்துடன் பின்தொடர்ந்தோம். நீ சிறந்ததொரு தேசபக்தன் என்பதை உணர்ந்ததும் உன் பக்தியைச் சோதிக்க முயன்றோம்! பக்த காண்டத்திலும் யுத்த காண்டத்திலும் இந்த யுக்தி முறை புதிதல்ல!" என்று விஷமப் புன்னகை செய்தான் ஜனநாதன்.

"நீ யார்?" என்று வீரசேகரன் வியப்பும் கோபமும் நிறைந்த குரலில் கேட்டான்.

"என்னை யாரென்று உனக்குத் தெரியாது; ஆனால், உன்னை யாரென்று எனக்குத் தெரியும்! சோழ ராஜசபையை ஆக்ரமித்துக்கொண்டிருக்கும் அரசியல் கிழவர்களின் ஜாதகங்களை மட்டுமல்ல, என் கீழ் வரக்கூடிய உன்னைப்போன்ற ஒவ்வொரு வீர வாலிபனின் ஜாதகத்தையும் நான் நன்றாகக் கணித்து வைத்திருக்கிறேன். கம்பரைப்போல ஒவ்வொரு பாத்திரத்தின் நெஞ்சிலும் புகுந்து கனகச்சிதமாகக் குணாதிசயங்களையும் கண்டுபிடித்து வைத்திருக்கிறேன்! தம்பி, மதுரை முழுதும் மகாவீரன் என்று வாழ்த்தும் வீரசேகரன் என்பது நீதானே?" என்று ஜனநாதன் விஷமப் புன்னகையுடன் கேட்டான்.

''ஆமாம்!'' என்று வீரசேகரன் வியப்புடன் பதிலளித்தான்.

அதைவிட வியப்படைந்தவராய்க் குலோத்துங்க சோழ சம்புவராயர், "இவனை உனக்கு எப்படித் தெரியும்? இவன் யார்?" என்று ஜனநாதக் கச்சிராயனை நோக்கிக் கேட்டார்.

''ராமாயணத்தில் வால்மீகிக்கும் கம்பனுக்கும் தெரியாத கதாபாத்திரங்கள் உண்டா? பெரியவரே, இந்த வீர வாலிபன்தான் நம்முடைய ராமாயணத்தில் இந்திரஜித்! இந்திரனை வென்றவன் இந்திரஜித். வீரபாண்டியனை வென்றவன் இந்த வீரசேகரன். பெண்கள் விஷயத்திலும் இவன் இந்திரனை வெல்லக் கூடிய அதிக அழகு, சாதுரியங்கள் உள்ளவனாகத்தான் இருக்கிறான்!" என்று ஜனநாதன் சிரித்துக்கொண்டே, வீரசேகரன் அருகில் உள்ள அழகிய யுவதியைக் கடைக்கண்ணால் பார்த்தான்.

"என்னது, இவனா வீரபாண்டியனை வென்றவன்?" என்று கிழவர் சம்புவராயர் வியப்புடன் கேட்டார்.

"ஆமாம்! நம்முடைய சோழ நாட்டுக் கைக்கோளப் பெரும்படை இந்த மதுரைக் கோட்டையைப் பலமாக முற்றுகையிடும் போது சோழ நாட்டின் அதிபராக்கிரம

அதிகாரிகளான நீரும் நானும் நம்முடைய அந்தப்புரங்களில் அதிகாரிச்சிகளோடு ஆனந்தமாக இருந்தோம்! அதாவது கம்பராமாயணத்தில் ஸ்ரீராமபிரான் இலங்கையை முற்றுகையிட விரும்பிய சமயத்தில் அவருடைய துணைப்படைகளான சுக்கிரீவ வானரங்கள் தங்களுடைய காதலிகளோடு பொழுதைக் கழித்ததுபோல! அப்போது இந்த இந்திரஜித் எங்கிருந்தோ வந்து, யுத்த காண்டத்தில் குதித்து நாக பாசத்தால் அதாவது, தன்னுடைய விஷ அம்புகளால் பாண்டிய சைன்யங்களை ஸ்தம்பிக்கச் செய்து, கல்மாரி பொழிந்து, மதுரைக் கோட்டையை வெகு சுலபமாகக் கைப்பற்றி விட்டான். இப்போது இந்திரஜித்தின் அந்தஸ்துக்கு வீரசேகரன் உயர்ந்துவிட்டான்!" என்றான் ஜனநாதன்.

"இவ்வளவு சிக்கிரம் அரசியலில் அந்தஸ்து கிடைப்பது ஆச்சரியம்!" என்றார் சம்புவராயர்.

"அதற்குக் காரணம் இவன் இளிச்சவாயனாக அரசியல் தலைவர்களான நம்மிடம், வராமல் நேரே அரசர்பிரானிடம் சென்றுவிட்டான்! நம்மிடம் வந்திருந்தால், எங்கே நம்மைவிடப் புத்திசாலியாகி விடுவானோ என்று இவனை அமுக்கி வைத்துக்கொண்டே யிருப்போம். இவன் கஜகர்ணம் போட்டாலும் இவ்வளவு சுலபத்தில் இந்திரஜித் பதவியை அடைந்திருக்கவே முடியாது!" என்றான் ஜனநாதன் விஷமமாக.

"இவன் பிடித்து வந்திருக்கும் பெண் யாராயிருப்பாள்?" என்று கிழவர் சம்புவராயர் மேலும் கேட்டார்.

"கம்ப ராமாயணத்தில் இந்திரஜித்தின் அருமைக் காதலியாய் வருபவள் சுலோசனாதான்! ஆனால் நம்முடைய ராமாயணப்படி இவள் தாரையாய்த் தானிருக்க வேண்டும்! ஏனென்றால் வானத்துத் தாரகைதான் இருட்டில் மினுமினுக்கிறது!" என்று சிரித்தான் ஜனநாதன்.

அவள் வெடுக்கென, "ஐயா! இவன் இந்திரஜித் தாகவோ சுக்கிரீவனாகவோ இருக்கலாம். ஆனால் நான்

சுலோசனாவுமல்ல; தாரையுமல்ல! அநாவசியமாக இந்த வாலிபனையும் என்னையும் சம்பந்தப்படுத்திப் பேசவேண்டாம்!" என்றாள்.

"பூர்வ ஜன்மத்தில் கூடவா உனக்கும் இவனுக்கும் சம்பந்தமில்லை என்று நினைக்கிறாய்? கர்மவினை பல ஜன்மங்களுக்கும் தொடரும் என்ற நம் கர்மா தத்துவத்தை நீ நம்பவில்லையா? இந்த வீரசேகரன் ஒவ்வொரு ஜன்மத்திலும் உன் கையைக் கோத்துக் கொண்டு ரத்தமயமான வீரசுவர்க்கத்தின் கோட்டை வாசலுக்கு அழைத்துப் போயிருக்கிறான்!"

"ஐயா, வேந்தர்கோன் ஆணை நோக்கான், வீரன் வில்லாண்மை பாரான் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஏந்திழையாரைத் துன்புறுத்துவான் இவன் யாலனோ ஒருவன்!" என்றாள்.

"பெண்ணே! நீ கம்ப ராமாயணத்தை நன்றாக மனப்பாடம் செய்து கவிதை மாதிரி பேசுகிறாய்! ஆனால் துரதிர்ஷ்டவசமாகக் கலாவதிகளுக்கும் ஆபத்துகளுக்குந் தான் அதிக சம்பந்தம் ஏற்படுகிறது!" என்று சிரித்தான் ஜனநாதன்.

வீரசேகரன் ஒன்றும் விளங்காதவனாய், "என்னையும் இந்தப் பெண்ணையும் பற்றி என்ன பேசகிறீர்கள்?... வாளை நீட்டிப் பயமுறுத்திய வாலிபனே, நீ யார்?" என்று ஜனநாதனை நோக்கிக் கேட்டான்.

ஜனநாதன் மௌனமாகச் சிரித்தான். "நீ யார்?" என்று வீரசேகரன் அதட்டினான்.

"உன்னுடைய பரம விரோதி!" என்றான் ஜனநாதன்.

"எனக்கு விரோதிகள் யாரும் இல்லை!"

"துரதிர்ஷ்டவசமாக நல்லவர்களுக்கும் திறமைசாலி களுக்குந்தான் அவர்களையறியாமலே விரோதிகள் உண்டாகிறார்கள்!"

"நான் எவனுக்கும் துரோகம் செய்ததில்லை."

"அதனால்தான் எந்தக் கோழையும் எளிதில் உனக்கு விரோதியாக முடியும்!"

"சோழ சாம்ராஜ்யத்தின் வீரப் புலிக் கொடியின்கீழ் வீரவாளேந்தி நிற்கும் நீ, உன்னைக் கோழை என்று சொல்லிக் கொள்வதற்காக நான் வெட்கப்படுகிறேன். நீ என் விரோதியாக விரும்பினால், என் கோபம் விசுவரூபம் எடுப்பதற்குள் உன் விரோதத்திற்குத் தகுந்த காரணத்தைச் சொல்லியாக வேண்டும்!"

"தம்பி! காரண காரியமில்லாதது நம்முடைய விரோதம். நீ வீர வைஷ்ணவன். நான் வீர சைவன். துரதிர்ஷ்டவசமாக, நம்முடைய கடவுள்கள் ஜன்ம விரோதிகளாக இருக்கிறார்கள். நம்முடைய கடவுள்களின் பிரதிநிதிகளோ பரம்பரை பரம்பரையாக நம்மைப் பரம விரோதிகளாக்குவதையே நம்முடைய மதக் கடமைகளாக உபதேசம் செய்து வருகின்றனர்!"

"உன்னிடமிருந்து நான் உபதேசம் பெற விரும்பவில்லை!"

"தம்பி, சற்றுமுன்தான் நீ சாகப் போகிறேன் என்று வீட்டை விட்டு ஓடிவந்தாய். நானோ சாக விரும்பிய ஜீவாத்மாக்களுக்கும் விடுதலையளிக்கும் வரப்பிரசாதி; உன் துன்பங்களுக்கெல்லாம் ஒரு முடிவு காணக் கடைசியில் என்னிடந்தான் நீ சரணாகதி அடைய வேண்டும்!"

"நீ வீரனாயிருந்தால் வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாகப் பேசு. நீ யார் என்பதைச் சொல்லப் போகிறாயா, இல்லையா?"

ஜனநாதக் கச்சிராயன் 'கலகல'வென்று சிரித்தான்.

"நானா? நான்தான் அழித்தல் கடவுள்! இதோ என் அருகில் நிற்கும் கிழவர் ஆக்கல் கடவுள்! இன்னும் காத்தல் கடவுளும் ஒருவர் இருக்கிறார்! அவரை நீ நாளை மந்திராலோசனை சபையில் சந்திப்பாய்!"

வீரசேகரன் பாதிக் கோபமும் பாதி வியப்பும் நிறைந்தவனாய் ஜனநாதனை ஏறிட்டுப் பார்த்தான்.

“தம்பி! மதுரையைக் கைப்பற்றியதோடு உனது போர்ப்படையின் வேலை முடிந்துவிட்டது. இனி இம் மதுரையை நிர்வகிக்கச் சோழ நாட்டின் மூன்று கடவுள்களும் மூன்றுவிதப் படைகளுடன் வந்திருக்கிறோம். மதுரையின் செல்வங்களையும் பெண்களையும் சூறையாடி, மாட மாளிகைகளைத் தீ வைத்துக் கொளுத்தி, பகைவர் களையும் துரோகிகளையும் நாசம் செய்ய வந்திருக்கும் நாசப்படையின் தலைவன் நான். அதாவது, அழித்தல் கடவுள். இதோ நிற்கும் முதியவர், புதிதாகப் போர் வீரர்களையும் போர் யானைகளையும் தயாரித்துக் கொடுக்கும் மூலப்படைத் தலைவர். அதாவது, ஆக்கல் கடவுள்; இனிக் கைப்பற்றிய மதுரையில் நிலப்படையை நிறுவி அரசாங்கத்தையும் துரோகிகளையும் கண் காணித்துப் பாதுகாக்க ஒரு காவல் படையும் ஏகவாசக வாண கோவரையர் தலைமையில் வந்திருக்கிறது! அதாவது அவர் காத்தல் கடவுள்! ஆக இந்த மூன்று கடவுள்களுந்தான் சோழ சாம்ராஜ்யத்தின் மூன்று தூண்கள்!” என்று ஜனநாதன் தூணைப்போலச் சிறிதும் அசையாமல் கம்பீரமாகச் சிரித்தான்.

“நீ விசித்திரமான வாலிபன். உன் பெயர் என்ன?” என்று கேட்டான் வீரசேகரன்.

“என் பெயரைக் கேட்டால் நீ மூர்ச்சித்து விழுந்து விடுவாய். அவ்வளவு நீளமானது என் பெயர்!”

“அனுமாரையே கண்டு பயப்படாதவன், அனுமாரின் வாலைக் கண்டு பயப்படமாட்டேன்! உன் நீளமான பெயர் என்ன?”

“வாள் நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயன் கூடல் ஆளப்பிறந்தான் ஏழிசை மோகன் இராசராச வீரசேகரக் காடவராயன்!” என்று ஜனநாதன் ஹடயோகம் செய்வதுபோலச் சுவாச பந்தனம் செய்துகொண்டு ஒரு வழியாகத் தன் பெயரைச் சொல்லி முடித்து விட்டு ஒரு பெருமூச்சும் விட்டான்.

வாலிபன் வீரசேகரனோ, அந்தப் பெயரைக் கேட்டதும் அப்படியே திகைத்துப்போய் மூர்ச்சித்தவனைப் போல அசைவற்று நின்று விட்டான்.

"தம்பி, இவ்வளவு நீளமான என் பெயர் எனக்கே அடிக்கடி மறந்துபோகும். அதனால் நான் எப்போதாவது ஆண்டவனுக்கு ஆடுமாடுகளையும் அடிமைகளையும் தானமளிக்கும்போது என்னுடைய பட்டப் பெயர்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் கோவில் கல்வெட்டுக்களில் பொறித்து வைப்பேன்!"

வீரசேகரன் பிரமிப்பினாலும் உணர்ச்சி மிகுதியாலும் முகம் பிரகாசிக்க, "என் கண்முன் நிற்பது நிஜமாக அந்த வாள் நிலை கண்டான் ஜனநாதன்தானா? வீரப் புகழ்பெற்ற அந்தக் காடவராய வம்சகுல திலகனா? கங்கையும் கடாரமும் தாண்டித் தமிழர்களின் புலிக் கொடியைப் பறக்கவிடப்போகும் குலோத்துங்க சோழ மன்னரின் மகிமை பெற்ற அந்தப் படைத் தலைவனா? எந்த வீரத் திலகனை என் இருதயத்தில் லட்சிய புருஷனாகக் கொண்டேனோ, எவனுடைய "வாள் நிலை கண்டான்" என்ற பட்டத்தைக் கோயிற் கல்வெட்டுக்களில் படித்துப் படித்து உள்ளம் பூரித்து மானசிக பூஜை செய்து வந்தேனோ, எவனுடைய வீர வம்சத்தைப்போல் வாள் வீச்சில் வல்லவனாகி வாள் நிலை கண்டான் என்ற பட்டத்தை அடைய வேண்டுமென்று சிறு வயதுமுதல் கனவுகண்டு வந்தேனோ, வீரசேகரன் என்று எவனுடைய பட்டப் பெயரை எனக்கும் பெயராகச் சூடிக் கொண்டேனோ, அந்த ஜனநாதக் கச்சிராயன் வாள் நிலை கண்டான் வீரசேகரக் காடவராயனா என் கண்முன் நிற்பது?" என்று கூவினான்.

"உன்னால் நம்ப முடியவில்லை, இல்லையா? எதிர்பாராத இடத்தில், பரிவார ஆடம்பரங்கள் இல்லாமல் அநாதைபோல் உலாவுகிறேன். இதை நீ நம்பமாட்டாய்! இல்லையா?"

"ஆமாம்! என் கண்ணையே என்னால் நம்ப முடியவில்லை! என் கண்முன் நிற்பது நிஜமாகவே வாள் நிலை கண்டான் ஜனநாதன் தானா? எவனுடைய பெயரை உச்சரித்ததும் எண்ணற்ற வீரசிங்கங்கள் விண்ணை முட்ட வெற்றி நிமிர்ச்சி பெறுகிறார்களோ, அந்த வீர ஜனநாதனா? எவனுடைய லட்சியக் குரல் கேட்டதும்

ஏராளமான இளங்காளைகள் மண்ணைச் செம்பொன்னாக்க ரத்தம் சிந்துகிறார்களோ, அந்த வாள் வீரன் ஜனநாதனா? எவனுடைய வீரவாளைச் சோழநாட்டிலுள்ள ஒவ்வொரு குக்கிராமமும் கதை கதையாகப் பேசுகிறதோ, எவனுடைய வெற்றிப் பிரதாபம் சோழ வளநாடு முழுதும் வானச் சுடராய் பிரகாசிக்கிறதோ, எவனுடைய வீரத் தோள் எந்த நாட்டுச் சரித்திரத்தையும் நடுநடுங்க வைக்கிறதோ, அந்த வாள் நிலை கண்ட ஜனநாதனா என் கண்முன் நிற்பது? என்னால் நம்பவே முடியவில்லை!"

"என் உருவத்தைக்கூட நம்பமாட்டாய்! மெலிந்த உருவம். கரிய நிறம். சிரித்த முகம். சின்ன மீசை. நையாண்டிப் பேச்சு. உறைக்குள் சும்மா உறங்கும் உடைவாள். முகத்திலோ உடம்பிலோ எந்தவிதக் கத்தி வடுக்களும் இல்லை. நீ கற்பனையில் பார்த்த வாள் நிலை கண்டான் ஜனநாதனுக்கும் நேரில் காணும் இந்த ஜனநாதனுக்கும் ஏராளமான வித்தியாசமிருக்கிறது. இல்லையா?"

"ஆமாம்!"

"தம்பி! இப்படி மெலிந்த உருவமுள்ள ஒரு சாதாரண மனிதன் எப்படி அசாதாரணமான காரியங்களைச் சாதிக்கிறேன், எவ்வளவு அமானுஷ்யமான அந்தஸ்தை அரசியலில் அடைந்திருக்கிறேன், எவ்விதம் ஒரு சாதாரண நாடு காவல் அதிகாரியாக இருந்தவன் படிப்படியாக உயர்ந்து சிற்றரசனானேன், அவனி ஆளப் பிறந்தான் என்ற பட்டத்தை எவ்வளவு தைரியமாகச் சூடிக்கொண்டு அரசர் பெருமான் முன் நடமாடுகிறேன், சோழநாட்டு அரசியலில் எவ்வாறு அரசர் உள்பட அரசியல் கிழவர்கள் அனைவரும் கண்டு நடுநடுங்கும் படியான அலாதியான செல்வாக்கை அடைந்திருக்கிறேன், என்றெல்லாம் நீ அதிசயப்படுகிறாய்; இல்லையா? என் குணாதிசயங்கள் தெரிந்தால் இப்படியெல்லாம் அநாவசியமாக அதிசயப்படமாட்டாய். என் குணாதிசயங்கள் என்ன தெரியுமா?"

"தெரியாது!"

''உறவாடிக் கெடுக்கும் உத்தம குணம் என் குணாதிசயங்களில் தலை சிறந்தது! சுயநலம், நயவஞ்சகம், நம்பிக்கைத் துரோகம், விஷமம், ஏளனம், பொறாமை, பேராசை முதலான நம் நீதி நூல்கள் கண்டிக்கும் துர்க்குணங்களெல்லாம் என்னிடம் பொதிந்திருக்கின்றன. ஆனால் இவை சாமானிய மனிதர்களிடமும் தென்படக் கூடிய குணங்களாகையால், என்னிடம் தென்படுவதில் விசேஷம் ஏதுமில்லை. என்னுடைய விசேஷமான குணங்களைச் சொல்லுகிறேன், கேள்!" என்று சிரித்தான் ஜனநாதக் கச்சிராயன்.

"இன்னுமென்ன?" என்று வீரசேகரன் வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தான்.

''நான் ராஜதந்திரத்தில் குள்ளநரி. அரசியல் கட்சிகளில் அடிக்கடி நிறம் மாறும் பச்சோந்தி. மதநம்பிக்கைகளில் கூடுவிட்டுக் கூடு பாயும் வேதாளம். பதவி மோகத்தில் வேட்டை நாய். பணப் பசியில் மலைப் பாம்பு. பழி தீர்ப்பதில் மத யானை. மத்தியஸ்தம் செய்வதில் ருத்ராக்ஷப் பூனை. ஆனால் அரசியலில் என் அந்தஸ்து நிலைத்திருப்பதற்கு இத்தனை மிருக குணங்களும் எனக்கு அத்தியாவசியமாய் இருக்கின்றன!"

அரசியல் கிழவரான சம்புவராயர் சந்தேகக் கண்ணாலும் வீரசேகரன் வியப்புக் கண்ணாலும் ஜனநாதனை ஏறிட்டுப் பார்த்தனர்.

''ஆனால் மிருகங்களைக் கண்டு பழக்கப்பட்ட மனிதர்கள் பயப்படுவதில்லை! ஆனால் என்னைக் கண்டு அரசியல் வட்டாரத்திலுள்ள ஒவ்வொருவனும் ஏன் பயப்படுகிறான் என்ற மகா ரகசியம் உனக்குத் தெரியுமா?" என்றான் ஜனநாதன்

"தெரியாது!"

"எவனாவது எனக்கு அற்பத் தீங்கு இழைத்தாலும், அவனைச் சாகடிக்கும்வரை மறக்கமாட்டேன். பழி தீர்த்துக் கொள்ள எந்தப் பாபகரமான வழியையும் பின்பற்றுவேன். எவனாவது என் காரியங்களில்

குறுக்கிடக் கூடியவனாய்ச் சந்தேகப்பட்டால்கூடப் போதும். அவனோடு ஆருயிர் நண்பனைப்போலப் பழகிக்கொண்டே அவனுக்குப் படுகுழி தோண்டிவிடுவேன். வாலியைக் கொன்ற ஸ்ரீராமபிரானைப் போல எந்தக் காரியத்தையும் பின்னால் மறைந்து நின்றே சாதித்துக் கொள்வேன். அரசியல் வட்டாரம் என்னைக் கண்டு நடுநடுங்குவதற்குக் காரணம் இல்லாமலில்லை. சோழநாட்டு அரசியலில் மட்டுமல்ல. பல நாடுகளின் அரசாங்கங்களிலும் எனக்குத் தனி அந்தஸ்து உண்டு. என் கையில் எந்தப் படுபாதகங்களுக்கும் துணிந்த ஏராளமான வாலிபப் படைகள் இருக்கின்றன. என் கருவூலத்தில் மணிமேகலையின் அமுதசுரபிபோல எடுக்க எடுக்கக் குறையாத எண்ணற்ற செல்வம் குவிந்து கிடக்கிறது. அரசியலை விட்டு என்னை எவனும் அணுவளவுகூட அசைக்க முடியாது!" என்று ஜனநாதன் சொல்லிவிட்டுக் கிழவர் சம்புவராயரைக் கடைக்கண்ணால் பார்த்தான். அந்தக் கிழவரின் முகம் பரிதாபகரமாகக் கலவரமடைந்திருந்தது. பிறகு ஜனநாதன் தொடர்ந்து சொன்னான்.

"அரசாங்கத்தின் ஒவ்வொரு அசைவிலும், ஒவ்வொரு அரசியல் சதியிலும், எந்தவிதமான நாசவேலையிலும் நான் சர்வ வியாபியாய் நீக்கமற நிறைந்திருப்பேன். குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் உடன் கூட்டத்துப் பெருமக்களிலே நான் மிகவும் பயங்கர புருஷன்; மதியூகிகளிலே நான் மிகவும் மர்மமான மனிதன். நான் நண்பனா, பகைவனா, நல்லவனா, கெட்டவனா என்பதை எவனுமே தீர்மானிக்க முடியாது. நான் என்ன செய்தேன், இனி என்ன செய்வேன், எவரெவர் எனக்கு நேசர்கள், எவரெவர் எனக்கு விரோதிகள், என் மூலபலம் என்ன, என் முயற்சி வழிகள் என்ன என்பதை எவ்வளவு பெரிய ராஜதந்திரியாலும் நிச்சயிக்க முடியாது! எவனாவது உயிரோடிருக்க விரும்பினால் என்னை விரோதித்துக் கொள்ள மாட்டான். அரசாங்கத்தில் யாராவது கௌரவத்தோடிருக்க விரும்பினால் என் சிநேகிதத்தை உதறித் தள்ளமுடியாது!" என்று சொல்லிவிட்டு ஜனநாதக் கச்சிராயன் கடகடவென்று சிரித்தான்.

வீரசேகரன் வியப்புடன் அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

ஜனநாதன் விஷமமான புன்னகையுடன், "தம்பி, உன் உள்ளக் கோயிலில் என்னை லட்சியத் தெய்வமாக வைத்து இத்தனை நாளும் மானசிகப் பூஜை செய்து வந்திருப்பாய்! இனி இந்த விக்கிரகத்தை விட்டு விட்டு வேறொரு விக்கிரகத்தைத்தான் நீ நாடவேண்டும். என்னுடைய குணாதிசயங்களையெல்லாம் என் வாயாலே வர்ணித்த பிறகு என்மீது உனக்குள்ள அநாவசியமான மதிப்பு மறைந்திருக்கும் என்று நம்புகிறேன்!" என்றான்.

"இல்லை! இன்னும் அதிகமான மதிப்புத்தான் உண்டாகிறது! இவ்வளவு வெளிப்படையாகப் பேசுபவனை என் வாழ்நாளிலே கண்டதில்லை!"

"தம்பி! வெளிப்படையாகப் பேசுவதுகூட நான் உபயோகிக்கும் வெற்றி ஆயுதங்களில் ஒன்றுதான்! ஏனெனில், இவ்வளவு வெளிப்படையாகப் பேசக்கூடியவன் எவ்வளவு சக்தி வாய்ந்தவனாயிருப்பான் என்று மற்றவர்கள் மதி குழம்புவார்கள். தன்னுடைய மோசங்களை வாய்விட்டுச் சொல்லக்கூடியவன் இன்னும் எவ்வளவு பெரிய மோசங்கள் செய்யக்கூடியவனா யிருப்பான் என்று கதிகலங்குவார்கள்!" என்று சொல்லி விட்டு, ஜனநாதன் தன்னருகிலுள்ள கிழவர் சம்புவராயரை மறுபடியும் கடைக்கண்ணால் பார்த்தான். அவரது முகம் இருளடைந்து பரிதாபகரமாக இருந்தது.

வீரசேகரனோ தெய்வதரிசனம் பெற்றவன்போல் பிரமை பிடித்தவனாய் ஜனநாதனை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஜனநாதனின் காடவராய வம்சம் சோழ வரலாற்றில் அதிமுக்கியமான அங்கம் வகிப்பதாலும், வாள் நிலைகண்டான் ஜனநாதன் நம்முடைய கதை நெடுகிலும் அதி சாமர்த்தியமான காரியங்களைப் புரிகிறவனான தாலும் அவன் உருவத்தை நன்றாகக் கவனிப்பது அவசியம்.

மத்திய உயரம்; கரிய நிறம்; கத்திக் கீற்றுபோல அரும்பு மீசை; நீளமான மூக்கு; ஜோதிபோல் பிரகாசிக்கும் கருவிழிகள். நிர்த்தாட்சண்யமாய் எவர் நெஞ்சையும் துருவி ஆராயும் பார்வை; அந்தப் பார்வையின் கூர்மையை எவ்வளவு திட நெஞ்சுள்ளவனாலும் தாங்க முடியாது. எப்போதும் விஷமமாய்ச் சிரிக்கும் அவன் சிரிப்பில் மகத்தான சாகஸம் மறைந்து கிடக்கும். அவன் பேச்சு, சிரிப்பு, நடையுடை பாவனைகள் அனைத்திலும் ஏதோ ஒரு மர்மம் நிறைந்திருந்து சகலரையும் நடுநடுங்க வைத்தது.

வீரசேகரனின் பிரமை கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கிச் சுயநினைவு திரும்பியது.

கிழவர் சம்புவராயரோ, எங்கே புது வாலிபன் தன்னைக் கவனிக்காமல் விட்டுவிடுகிறானோ, தன் அந்தஸ்து ஜனநாதனைவிட இறங்கிவிடுமோ என்று கருதிப் பெரிதாகக் கனைத்தார்.

அவரைச் சுட்டிக்காட்டி வீரசேகரன், "இந்தக் கிழவர் யார்?" என்று கேட்டான்.

"தம்பி, இவரைக் கிழவர் என்று சொல்லாதே. ஓர் அரசியல்வாதி; நிஜம் சொல்வதை இவர் விரும்பமாட்டார்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

வீரசேகரன் தன்முன் சிவப்பழம்போல நிற்கும் கிழவர் சம்புவராயரை உற்றுப் பார்த்தான். வழுக்கைத் தலை; கொழுக்கட்டைபோல் கொழுகொழுவென்ற உருவம்; மூஞ்சுறுபோல் முக அமைப்பு; பெரிய காதுகள்; நீளமான வளைந்த மூக்கு; அவர் தம் பெரிய தொந்தியைத் தடவிக் கொண்டு நின்றார்.

"இந்த முதியவரை, உனக்கு அறிமுகப்படுத்த வில்லையே? பார்த்ததும் தெரிந்துகொண்டிருப்பாய் என்று நினைத்தேன்!... இவர்தான் பிள்ளையார்!" என்றான் ஜனநாதன் விநயமான புன்முறுவலுடன்.

பிள்ளையார் என்றதும் கிழவர் சம்புவராயரின் பெரிய தொந்தியைப் பார்த்து வீரசேகரன் மனத்தில்

சிரித்துக் கொண்டான். சம்புவராயரோ முறைத்துப் பார்த்தார்.

ஜனநாதன் மேலும் சிரித்துக் கொண்டே, ''வீரசேகரா! இந்தப் பிள்ளையார் அரசியலில் எல்லோருக்கும் செல்லப் பிள்ளை! நீ சரித்திரங்களில் கேள்விப்பட்டிருப்பாய். கோயில் கல்லெட்டுகளில் படித்திருப்பாய். இவர்தான் பிள்ளையார் செங்கேணி வீரப்பெருமாள் அத்திமல்லர் குலோத்துங்க சோழ சம்புவராயர் என்ற நீளமான பட்டத்தைச் சுமப்பவர். மகாபலிபுரத்தின் ஒரு பகுதியை ஆளும் குறுநில மன்னர். நம் சோழசாம்ராஜ்யத்தின் அதி முக்கியமான யானைப் படைத் தலைவர்களில் ஒருவர். என்னுடைய வாள் படையின் திறமையைக் கண்டு எனக்கு 'வாள் நிலை கண்டான்' என்ற பட்டத்தை அருளிய மகராஜன், இவருடைய யானைப் படைகளின் அணிவகுப்பைக் கண்டு அத்திமல்லர் என்ற பட்டத்தை அருளியிருக்கிறான். சிறந்த ராஜவிசுவாசி. எனது உத்தம நண்பர். என்னோடு பேசிய பாவத்தைக் கழிக்க நீ சிவகங்கையில் தீர்த்தமாட வேண்டாம். இந்தப் புண்ணியமூர்த்தியைத் தரிசித்தாலே அந்தப் பாவம் தீர்ந்துவிடும்! அதனால்தான் , என் நண்பர்களுக்காக எந்நேரமும் விடாமல் இவரை என்னருகிலேயே வைத்துக்கொண்டிருக்கிறேன்!" என்றான்.

கிழவர் சம்புவராயர் சிறிது கோபமுற்றவராய் ஜனநாதனை நோக்கி, "ஜனநாதா, வீணாக ஏன் என்னை வம்புக்கு இழுக்கிறாய்? நீ என்னைப் புகழவும் வேண்டாம்; இகழவும் வேண்டாம்... வீரசேகரன் உன்னைப் போல வாலியன். அரசியல் துறைக்குப் புதிது. உன்னை லட்சிய புருஷனாகக் கருதி உனக்குச் சிஷ்யனாகும் ஆசையோடு வந்திருக்கிறான். தன் அரசியல் குருவிடம் தெரிந்து கொள்ளக் கூடியவையா உன்னுடைய போதனைகள்?" என்றார்.

"வீரசேகரா, இந்த முதியவர்தான் சரியான அரசியல் குரு. ராஜபக்தி என்றால் என்ன என்பதை நீ இவரிடமிருந்துதான் தெரிந்து கொள்ளவேண்டும். முதலில் இவருடைய பெயரை எடுத்துக் கொள்.

குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியிடமுள்ள ராஜபக்தியினால் இவரும் தம் பெயரைக் குலோத்துங்க சோழ சம்புவராயர் என்று சூடிக்கொண்டிருக்கிறார். அரசர் பெருமான்முன் அவருடைய மெய்க்கீர்த்திகளை அடிக்கடிப் புகழ்ந்து அதிகமான அந்தஸ்துகளை அடைந்திருக்கிறார். ஆக முகஸ்துதிதான் ராஜபக்தி என்ற மகா ரகசியத்தை இந்த அரசியல் குருவிடமிருந்துதான் நீ கற்றுக்கொள்ள வேண்டும்!'' என்றான் ஜனநாதன் ஏளனமாக.

"இல்லை. சிறு வயசுமுதல் என் நெஞ்சில் குருவாய்ப் பதிந்து விட்ட ஜனநாதன்தான் என் அரசியல் குரு! துரோணாச்சாரியாருக்குத் தெரியாமல் அவரையே மானசீகக் குருவாய் வழிபட்டு வில்வித்தை பயின்ற ஏகலைவனைப் போல, 'வாள் நிலைகண்டான் ஜனநாதனையே' என் குருவாகக் கற்பனை செய்து வாள் பயிற்சி பெற்று வந்தேன்..."

"தம்பி! ஏகலைவனின் விரல் நுனிக்கு அவனுடைய குருவால் ஏற்பட்ட ஆபத்து உனக்குத் தெரியும்! மேலும் நான் சுத்த சைவன். நீ வீர வைஷ்ணவன். நான் விவகார அறிவுள்ளவன். நீ லட்சிய உணர்ச்சி உள்ளவன். அறிவும் உணர்ச்சியும் எதிரெதிரான இரு துருவங்கள். ஆகையால் என்னுடைய சிஷ்யனாகாதே! அது உனக்கும் நல்லதல்ல, எனக்கும் நல்லதல்ல!"

''நல்லதோ கெட்டதோ, அரசியலில் நுழைய ஆசைப்பட்டு இத்தனை வருஷங்களாக நான் கற்பனை செய்து வந்த ஜனநாதன் தான் என் குரு; அரசியலில் மட்டுமல்ல, சகல துறைகளிலும் நீதான் என் குரு!''

"தம்பி! தயவுசெய்து என்னைக் குரு ஆக்காதே! இந்தத் தேசத்தில் எத்தனையோ ஞான குருக்கள் தோன்றினார்கள். அவர்களுடைய உன்னதமான உபதேசங்களெல்லாம் மக்களுக்கு உபயோகப்படாமல் போனதற்குக் காரணம் என்ன தெரியுமா? அவர்களுடைய சிஷ்யகோடிகள்தாம்!... திடுக்கிடாதே! தீவிரமாகச் சிந்தித்துப் பார். மகான் தோன்றுவார். மனித குலம்

அனைத்தும் ஒன்று என்று பேரொளி காண்பார். வீடு வாசல்களைத் துறப்பார். உற்றார் உறவினரை உதறி எறிவார். அன்னவிசாரமின்றி நாடெங்கும் கோவண ஆண்டியாகச் சுற்றித் திரிவார். பொருளாசை கூடாது என்பார். சுட்டெரிக்கப்படும் மனிதனுக்கு ஆறடி நிலங்கூடத் தேவையில்லை என்பார். ஜாதிமத பேதம் பாராதே என்பார். தீண்டாமை தீது என்பார். பறையரைத் தொடுவதைப் பகவானைத் தொடுவதைப் போலப் பரம சந்தோஷமுறுவார். நான் என்ற அகங்காரத்தை ஒழிப்பார். தம்முடைய உபதேசப் பாடல்களில் தம் பெயரைச் சொல்லுவதுகூட நான் என்ற அகங்காரமெனக் கருதித் தன்னைக் 'கட்டை'யென்றே சொல்லிக் கொள்வார். தன்னுடைய ஊத்தைச்சடலம் ஒரு காசுக்கு உதவாது என்று நிந்திப்பார். ஆனால் அந்தக் குருமகான் காலமான பிறகு, அவருடைய சிஷ்ய கோடிகள் என்ன செய்வார்கள் தெரியுமா? அவருடைய பெயரால் நாடெங்கும் குரு பீடங்களும், மடாலயங்களும் கட்டுவார்கள். அவருடைய தேக உருவத்தைப் பொற்சிலையாக்கி அவருடைய ஜாதிமத ஆசாரப்படி குருபூஜை செய்வார்கள். தீண்டாதவர்களைத் தள்ளி வைப்பார்கள்; அவருடைய பெயரால் மடங்களுக்குப் பொருள் சேகரிப்பார்கள். எண்ணற்ற மண் நிலங்களை வளைத்து வளைத்து வாங்குவார்கள். குருமகானின் பெயரையும் அவருடைய உபதேசங்களையும் சரியான வியாபாரச் சரக்குகளாக ஆக்கிவிடுவார்கள். பிறகு அந்தத் தர்மச் சொத்துகளைத் தங்களுடைய உறவினரும் தங்களுடைய மதத்தினரும் தங்களுடைய ஜாதியினருமே வாழையடி வாழையாக அனுபவிக்க வேண்டுமென்று வழி வகுப்பார்கள். இவ்வாறு குருமகானின் உபதேசம் அவருடைய சிஷ்ய கோடிகளாலேயே அர்த்தமற்றதாகப் பட்டு, மக்களால் அலட்சியப்படுத்தப்பட்டு, சீக்கிரம் செத்துப் போகும்!... ஆனதாலே, தம்பி நான் சிஷ்யக் கோடிகளை விரும்புவதில்லை!... தேவைப்பட்டால் நாமிருவரும் கூடுமானவரை நண்பர்களாகவே இருப்போம்!"

"சரித்திரப் பிரசித்தி பெற்ற வாள்நிலை கண்டான் ஜனநாதனின் நட்புக் கிடைப்பதை என் ஜன்ம

விமோசனமாகக் கருதுகிறேன்!" என்றான் வீரசேகரன் இலட்சியக் குரலோடு.

"ஆனால் ஒன்றுமட்டும் முன்னதாகச் சொல்லி விடுகிறேன்! என்னை நம்பாதே. என்னைப் போன்ற அரசியல்வாதிக்கு நண்பன் இல்லை; மனைவி மக்கள் இல்லை; பந்தபாசங்கள் இல்லை!" என்றான் ஜனநாதன் அறிவுப் புன்னகையோடு.

வீரசேகரன் அப்போதும் மனம் தளராமல் பெருமிதத்தோடு, "நீ காட்டும் லட்சியப் பாதையில் நடப்பேன்!" என்றான்.

"அப்படி ஒரு பாதை இருப்பது எனக்குத் தெரியாது!" என்று ஜனநாதன் சிரித்தான்.

"லட்சியம் என்பது ஒரு உன்னதமான பொருளல்லவா?" என்று வீரசேகரன் திகைப்புடன் கேட்டான்.

"தம்பி! உன்னைப்போன்ற உணர்ச்சியாளர்களுக்கு என்னைப் போன்ற அறிவாளிகள் உருட்டிப் போடும் களிமண் பொம்மைகள் தான் லட்சியங்கள்! இவ்வாறு மனிதச் சந்தையில் ஏராளமான பொம்மைக் கடைகள் வைத்து எங்கள் சுயநலத்திற்காக லட்சியங்களை வியாபாரம் செய்கிறோம்!"

வீரசேகரன் திடுக்கிட்டான். "லட்சியம் என்பது சுயநலமா?" என்று கூவினான்.

"தம்பி! ஒருவனுடைய ஆசைக்குப் பெயர் சுயநலம்! பல்லாயிரக்கணக்கானவர்கள் கூட்டாகச் சேர்ந்து ஆசைப்படுவதற்குப் பெயர் லட்சியம்! இரண்டுக்கும் எண்ணிக்கையளவில் வித்தியாசமே தவிர, குண பரிமாணத்தில் இரண்டும் ஒன்றுதான்!" என்றான் ஜனநாதன்.

அந்தச் சந்தர்ப்பத்தில் கிழவர் சம்புவராயர் இனியும் ஏதாவது வேடிக்கையாகப் பேசாவிட்டால் தம் அந்தஸ்து

தாழ்ந்துவிடுமென்று கருதி, ஜனநாதனை நோக்கிச் சிரித்துக்கொண்டே, ''ஜனநாதா! கண்ணபிரான் உபதேசத்தைக் கேட்கச் சரியான அர்ச்சுனன் தான் வந்து வாய்த்திருக்கிறான்!" என்று சொன்னார்.

''ஆமாம்! பாண்டவர் காலத்திலே, யமுனை நதிக்கரையிலே, போர்க்களத்திலே, கண்ணபிரானின் கீதோபதேசம் நடந்தது. நான் காலம் வரும்போது, பாளையடி நாட்டுப் போர்க்களத்திலே, வையை நதிக்கரையிலே, இந்த அர்ச்சுனனுக்குக் கீதையின் மகா ரகஸ்யத்தை உபதேசிப்பேன்!" என்று ஜனநாதன் கண்களில் ஒரு திட்சண்ய ஒளியுடன் சிரித்தான்.

இதுவரை மௌனமாய்ச் சம்பாஷணைகளைக் கவனித்து வந்த இளம் பெண் ஜனநாதனை நோக்கி, "ஐயா! உங்களுடைய கீதோபதேசத்தை இன்னொரு சமயம் வைத்துக் கொள்ளுங்கள். இனிமேல் எனக்குப் பொறுமை இருக்காது! முதலில் என்னை என் வழியே போகச் சொல்லுங்கள்!" என்று கூவினாள்.

"பெண்ணே, உன் வழி அவ்வளவு நேரானதல்ல!" என்றான் ஜனநாதன்.

"ஐயா, நான் நடுநிசியில் தெருவில் அலைந்ததைத் தவிர வேறு எந்தவிதக் குற்றமும் செய்யாதவள். இந்த வாலிபன் என்னைத் துர் ஆசையுடன் சிறைபிடித்துப் போகிறான். என்னைக் காப்பாற்றுங்கள். நீங்கள் பகவத் கீதையை அனுஷ்டிப்பவர்களானால் முதலில் குலமாதரின் கற்பைக் காப்பாற்றுங்கள்!" என்றாள் கெஞ்சுங் குரலில்.

ஜனநாதன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே, "வீரசேகரா, பார்த்தாயா பெண்ணின் சாகஸத்தை! தப்பித்துக் கொள்ள எந்தவிதப் பழியையும் சுமத்தத் தயாராகிவிட்டாள்! இவளுக்காக உன் வீரவாளைக் காவற்காரர்களிடம் அடைமானம் வைத்தாய். இவளுக்காக உன் உயிரைப் பலியிடவும் துணிந்தாய். இப்போது உன்னிடம் எஞ்சியிருக்கும் கௌரவத்தையும் இவள் பறித்துவிட முயல்கிறாள்! நாமோ நம்முடைய

காவியங்களில் பெண்ணைப் பேதையென்றும் பலஹீனமானவள் என்றும் வர்ணிக்கிறோம்!" என்றான்.

இளம்பெண் வெடுக்கென்று, ''நான் அழகாயிருப்பதைத் தவிர எந்தவிதக் குற்றமும் இல்லாதவள்!" என்று சொல்லிவிட்டு, ஜனநாதனை ஓரக் கண்ணால் பார்த்தாள். அவன் சோழ அரசியலைப் பற்றி அலட்சியமாகப் பேசியதில் அவளுக்கு அலாதியான ஓர் ஆனந்தம் உண்டாயிற்று. ஜனநாதன் தன்னை விடுவிப்பானா என்று ஆவலோடு அவனை நோக்கி இலேசாகப் புன்னகை செய்தாள்.

"பெண்ணே, அநாவசியமாக என்னைப் பார்த்துப் புன்னகை செய்யாதே! உன் புன்னகையில் ஏமாறக்கூடிய முட்டாள் நானல்ல!'' என்றான் ஜனநாதன், வீரசேகரனைக் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே.

"ஐயா, உங்களை ஏமாறச் சொல்லவில்லை. இந்த வாலிபனிடமிருந்து என்னைக் காப்பாற்றத்தான் சொல்கிறேன்!"

"பெண்ணே! நான் முதலையின் பிடியிலிருந்து மதயானையைக் காப்பாற்ற வந்த ஆபத்பாந்தவனல்ல!"

அவள் இனி ஜனநாதனிடம் கருணையை எதிர்பார்ப்பதில் பலன் இல்லை என்று உணர்ந்து, கிழவர் சம்புவராயரின் கால்களில் விழுந்து கெஞ்சினாள்.

"நீங்கள் வாலிபரல்ல. வயதான பெரியவர். சிறந்த பக்திமானாகவும் தெரிகிறீர்கள். எனக்குக் கருணை காட்டுங்கள்!"

ஜனநாதன் சட்டென்று, "அசட்டுப் பெண்ணே! பெண்ணை மாயை என்று கருதும் பக்திமானிடம் நீ கருணையுள்ளத்தை எதிர்பார்க்க முடியாது!" என்றான்.

அவள் வெய்துயிர்த்து, "ஐயா, நீங்கள் கறுப்பாய் இருப்பது போல, உங்கள் இரும்பு நெஞ்சமும் கறுப்பாய் இருக்கிறது!" என்றாள்.

ஜனநாதன் சிரித்துக்கொண்டே, "பெண்ணே! எங்கள் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியும் என்னைப் போலக் கறுப்பானவர்தான்! உன்னைப் போன்ற பெண்களின் அஞ்சனக் கருவிழிகள் ஓயாமல் படுவதால்தான் எங்கள் தேகங்கள் கறுப்பாகிவிட்டன! ஆனால் இந்த நிறத்தைச் சியாமள வண்ணம் என்று சொன்னால் தேவாமிர்தமா யிருக்கும்!" என்று சிரித்தான்.

பிறகு அவன் வீரசேகரனை நோக்கி, "தம்பி! கரியவனான என்னை முதலில் சந்திக்கும்போது காகாசுரன் என்று நினைத்திருப்பாய்! ஆனால் இப்போது கண்ணன் அவதாரமென்று கருதுவாய்! என்னுடைய அவதார மகிமையையும், இந்தக் காகுத்தன் கதையையும் சமயம் வரும்போது உனக்குச் சொல்லுகிறேன்!" என்றான்.

பாண்டியநாட்டு யுவதி வெடுக்கென்று, "ஐயா கருணையற்றவர்களே! உங்களைக் கருணை மயமான கிருஷ்ணபரமாத்மா என்று சொல்லிக் கொள்கிறீர்கள். உங்களுக்கு வாய் கூசவில்லையா?" என்று கூவினாள்.

பூங்கொம்பு போன்ற அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த கிழவர் சம்புவராயர், "இவள் யார், இவள் பெற்றோர் யாரென்று விசாரிக்க வேண்டாமா?" என்று கேட்டார்.

"விசாரிப்பதால் பலன் இல்லை! இவள் ஒழுங்கான பதிலைச் சொல்லமாட்டாள் ஆண்டாளையும் ஔவையாரையும் போல, பெற்றோர் யாரென்று தெரியாமலே பிறந்துவிட்டதாகச் சாதிப்பாள்!" என்றான் ஜனநாதன்.

"இவளுடைய பெயரைக்கூடச் சொல்ல மாட்டாளா?"

"சொல்லுவாள்! ஆனால் அதை நம்பமுடியாது! ஒற்றன் தன்னுடைய பெயரை ஒவ்வொருவனிடமும் ஒவ்வொரு விதமாகச் சொல்வதுபோல, அரசியல் துறையில் சஞ்சரிக்கும் நபர் ஒவ்வொரு சருக்கத்திலும் ஒவ்வொரு புதுப்பெயரை உபயோகப்படுத்துவது வழக்கம்!"

யுவதியின் முகம் ரோஷத்தால் சிவந்தது. "இதென்ன அநியாயம்? என்னை ஒன்றுமே விசாரிக்காமல் எல்லாவற்றையும் நீங்களே முடிவு கட்டிவிடுகிறீர்கள். ஓர் அபலை உங்கள் கையில் இசைகேடாய்ச் சிக்கிக் கொண்டால், அவளை என்னதான் பேசுவது என்று ஒரு நியதி இல்லையா? உங்கள் நெஞ்சில் கொஞ்சமேனும் கருணை இல்லாவிட்டாலும், எனக்குக் கடவுளின் கருணை இருந்தால் அதுவே போதும்! இந்த உலகில் வேறெதுவும் எனக்குத் துச்சம்!" என்று அவள் கூவினாள்.

வீரசேகரன் கண்களில் நீர் துளித்தது. அதை மற்றலர் பார்க்காவண்ணம் மறைத்துக் கொண்டு, அவளை நோக்கி, "என்னிடங்கூட உன் பெயரைச் சொல்வமாட்டாயா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டான்.

"லாலிபனே. நீ ஒருவனாவது நல்லவனாயிருக்கிறாய். நீ கேள். நான் எதையும் மறைக்க மாட்டேன். என் பெயர் ஊர்மிளா!"

ஜனநாதன் கலகலவென்று சிரித்தான். "வீரசேகரா, இவள் சொல்வது நிஜமென்று நம்புகிறாயா? இவள் ஊரைச் சுற்றி ஊர்ந்து செல்லும் தொழிலில் ஈடுபட்டிருப்பதால் தன் பெயரை ஊர்மிளா என்று கற்பனை செய்திருக்கிறாள்! ஆனால் தற்போதைக்கு இவளுடைய பெயரை ஊர்மிளா என்றே வைத்துக் கொள்வோம்!" என்றான் ஜனநாதன்.

யுவதி தலைகுனிந்தாள்! ஜனநாதனின் மதியூகத்தைக் கண்டு அவளுக்கு உள்ளூறக் கோபம், கோபமாய் வந்தது.

வீரசேகரன் சந்தேகக் குரலில், "ஒருவேளை இவள் வீரபாண்டியன் மனைவியாக இருப்பாளோ...?" என்று ஜனநாதனைக் கேட்டான்.

"இல்லை! இவள் வீரபாண்டியன் மனைவியாக இருந்திருந்தால், இந்நேரம் உன்னைக் கொன்றுவிட்டு, இவளைத் தூக்கிக் கொண்டு ஆகாசமார்க்கமாய்ப் பறந்து போயிருப்பேன்...! வீரபாண்டியன் மனைவி அழகானவள்!"

"இவளும் அழகானவள்தான்!"

"இருட்டில் எந்தப் பெண்ணும் அழகானவளாகத்தான் தோன்றுவாள்!"

"நிஜமாகவே இலள் அழகானவள்தான்! இவளது முகலாவண்யமும், கருவிழிகளும்..."

"தயவு செய்து பெண்ணின் அழகுகளை வர்ணிக்க ஆரம்பித்து விடாதே! திடகாத்திரமான வீர வாலிபர்கள் அநாவசியமான வர்ணனைகளில் பொழுதைப் போக்கமாட்டார்கள்! அது செயலற்றவர்களின் போக்கு."

யுவதியின் அழகிய முகம் கோபத்தால் சிவந்தது. "என்னுடைய அழகைப் பற்றி உங்களுக்குள் அநாலசியமாகச் சண்டை வேண்டாம்!" என்றாள் அவள் வெடுக்கென்று.

"இலளைப் பார்த்தால் அரசியல் சதிகளில் ஈடுபடக்கூடிய பெண்ணாய்த் தோன்றுகிறதா?" என்று வீரசேகரன் கேட்டான்

"தம்பி! நடுநிசியில் இவ்வளவு அழகான பெண் தெருக்களில் உலவுகிறாள். இது பெண்மணிகள் உலாப் புறப்படும் நேரமல்ல. அரசியல் படலத்திற்கும் உலாவியல் படலத்திற்குந்தான் அதிகச் சம்பந்தமுண்டு!"

"வேறு ஏதாவது காரணத்தை முன்னிட்டு இவள் வீதிக்கு வந்திருக்கக் கூடாதா?"

"இந்த நேரத்தில் கணிகைகூட வெளியே வரமாட்டாள்! இப்போது மதுரையின் திருவீதிகளிலே கூற்றுவ நாயனாரைத் தவிர வேறு யாரும் உலாவ முடியாது! இவள் துணிந்து உலாவியல் படலம் நடத்துகிறாள் என்றால் அது ஏதோ ஒரு அரசியல் சதிக்கு அஸ்திவாரத்தைத் தவிர வேறென்ன?"

யுவதிக்கு மெய் சிலிர்த்தது. ஒரு கணம் சுய நினைவு தடுமாறியது. சிந்தையும் உணர்வும் தேஜஸும் நாணும்

நிறையும், உயிர் ஒன்றைத் தவிர அனைத்தையும் உகுத்து விட்டு, அசைவற்று நின்றாள்!

வீரசேகரன் குழம்பினான்; அவளைப் பரிதாபகரமாய்ப் பார்த்தான்; அவள் பொலபொலவென்று கண்ணீர் வடித்தாள். ஜனநாதன் விஷமப் புன்னகையுடன் கூறினான்:

"தம்பி! இவளோ உலகம் தெரியாத கன்னிப் பெண்ணல்ல. கௌரவமோ, கூச்சமோ, நாசுக்கோ உள்ளவளாயும் தெரியவில்லை! நீலிக் கண்ணீர் வடிப்பதில் கைகேகியையும்விடக் கைதேர்ந்தவளா யிருக்கிறாள். என்னைக் கேட்டால், வீரபாண்டியனிடம் கைக்கூலி பெற்று ஒற்று வேலைகள் புரியும் நாசகாரிகளில் இவளும் ஒருத்தி என்றே சொல்வேன்! இவளால் நீ நாசமடைந்துவிடாதே!" என்றான் ஜனநாதன்.

ஊர்மிளாவோ, ''ஓ வாலிபனே!'' என்று வீரசேகரனை நோக்கிக் கூவி, யௌவனமும் சௌந்தரியமும் பொங்க உதடுகளில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "என்னை நன்றாகப் பார்! என்னைப் பார்த்தால் அவ்வாறு தோன்றுகிறதா?" என்று கேட்டுவிட்டு அடுத்த கணமே துயரந் தாங்காமல், பழுதிலாவொரு பாவையன்னாள் பதைத்தழுது வெய்துயிர்த்தாள்.

வீரசேகரன் அவளை வைத்த விழி வாங்காமல் உற்றுப் பார்த்தான். அவன் கண்கள் கூசின. சுவர்ப்பனபுரியின் அதிதேவதைபோல் அவள் மாசுமருவற்ற அழகு ஜொலிப்புடன் தோன்றினாள்.

"இவள் குற்றம் செய்யக்கூடியவளாய்த் தெரிய வில்லை!" என்று மெய்மறந்து கூவினான் வீரசேகரன்.

"முட்டாள்! இவளுடைய அழகால் உன் மூளையின் கூர்மை மழுங்கிவிட்டது! இவள் ஒருகணம் அழுகிறாள். மறுகணம் சிரிக்கிறாள். இவளை நம்பமுடியாது!" என்றான் ஜனநாதன்.

கிழவர் சம்புவராயர் குறுக்கிட்டு, "இவளை என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

"இவளைச் சிறையதிகாரிகளிடம் கொண்டுபோய் ஒப்புவிப்பது தான் என் கடமை!" என்று பதிலளித்தான் வீரசேகரன்.

"வேண்டாம்; இவளைச் சிறையதிகாரிகளிடம் ஒப்புவிக்காதே!" என்றான் ஜனநாதன்.

"அப்படியானால் இவளை விட்டுவிடச் சொல்கிறாயா?"

"இல்லை! இந்த அற்பப் பெண்ணை அரசாங்கம் கேட்கும்வரை நம்முடைய சொந்தப் பாதுகாப்பில் ரகசியமாகச் சிறை வைத்திருப்போம்! வைரத்தை வைரத்தால்தான் அறுக்கவேண்டும் என்ற நியதிப்படி, இவளைக் கொண்டே அரசியல் சதிகளைக் கண்டுபிடிப்போம். அதனால் கிடைக்கும் லாப நஷ்டங்களை நாம் மூவர் மட்டும் பங்கு போட்டுக் கொள்வோம்!" என்றான் ஜனநாதன்.

யுவதி பெண் புலிப்போல ஜனநாதன் முன் துள்ளி வந்து கூவினாள்; "ஐயா, உங்களுடைய சுயநலத்திற்காக ஒரு குடும்பப் பெண்ணை ரகசியமாக அடைத்து வைப்பதும், அவமானமாகப் பேசுவதும் மகாபாவம்! தெய்வம் உங்களைத் தண்டிக்கும். இந்தப் பழி பாவம் உங்களைச் சும்மாவிடாது!"

"பெண்ணே! பழி பாவத்திற்கு அஞ்சுபவர் களாயிருந்தால் நாங்கள் அரசியல் துறைக்கு வரவேண்டிய அவசியமே இல்லை! நாங்கள் இரக்கம் என்பதே இல்லாத அரக்கர்கள்!" என்று ஜனநாதன் கொடூரமாகச் சிரித்தான்.

வீரசேகரனின் இலட்சிய உள்ளமோ ஜனநாதனின் சூழ்ச்சி முறைக்குத் தயங்கியது.

"ஒருவேளை இவள் நிரபராதியாக இருந்தால்...? அரசியல் துறையில் எவரையும் தகுந்த காரணமின்றிச்

சிறைப்பிடித்து விசாரணையின்றி நீண்ட காலம் அடைத்து வைப்பது காட்டுமிராண்டித்தனமாகும். ஆகையால் இவளை இப்போதே சிறையதிகாரிகளிடம் கொண்டு போய் ஒப்புவித்து நாளையே இலளை விசாரித்துத் தீர்ப்புக் கூறும்படி செய்வதுதான் நியாயம்!"

"தம்பி! இவ்வளவு அழகான ஒரு பெண்ணைச் சிறையதிகாரிகள் இலேசில் வெளியே விடமாட்டார்கள்! நம்முடைய சோழ நாட்டுக் கோவில்களுக்குத் தேவதாசிகள் தேவைப்படுகிறார்கள். போரில் குற்றவாளிகளாகச் சிறைபிடிக்கும் இளம் பெண்களை, கலாவதிகளாக்கித் தேவதாசிகளாகச் சிலாசாஸனம் செய்விக்கும் அற்புதமான கலாசாரமும் நம் சோழ நாட்டில் இருந்து வருகிறது. நம்முடைய அடிமை வியாபாரி ஆமூர் வயிரதராயரின் ஆட்கள், இவளை எப்படியும் குற்றவாளியாக்கிவிடவே முனைந்து நிற்பார்கள்!"

"இதென்ன அக்கிரமம்? சூரியகுல மன்னர்களால் உதயமாயிருக்கும் நம் சோழிய அரசியல் நீதியே அஸ்தமித்து விடுமா? மேலதிகாரிகளின் நீதி விசாரணை சபை இல்லையா?"

"இருக்கிறது! ஆனால் அநாதைப் பெண்ணான இவளை நீதி மன்றத்தில் நிரபராதியென்று நிரூபிக்க இவளுக்குச் சாட்சி உண்டா? சான்று உண்டா? தம்பி! நீதி விசாரணை என்பது ஜனங்கள் முன்னால் தொங்கவிடப்படும் ஓர் அழகான நாடகத் திரை! அதை நீக்கிவிட்டு உள்ளே எட்டிப் பார்த்தால், அங்கே நம் சோழிய யதேச்சதிகாரந்தான் தென்படும், தம்பி! நம்முடைய சோழ அரசாங்கம் ஒரு நபரைக் குற்றவாளியென்று சந்தேகித்தால் கடைசிவரை அந்த நபரைக் குற்றவாளியென்றே சாதித்துவிடும்! அதற்கு அநுசரணையாக நம்முடைய நீதி விசாரணை சபையில் அபூர்வமான ஒரு முறையும் உண்டு. அதற்குத் தெய்வாதீன முறை என்று பெயர்! குற்றம் சுமத்தப்படுபவள் தன் கையில் பழுக்கக் காய்ச்சிய இரும்புத் துண்டைப் பிடித்துக் கொண்டு தெய்ல சாட்சியாகத் தான் குற்றவாளி இல்லை என்று சத்தியம் செய்யவேண்டும். அவள் நிரபராதியாக

இருந்தால் நெருப்பு அவள் கையைச் சுடாது. குற்றவாளியாயிருந்தால் நெருப்பு அவள் கையை சுட்டுப் பொசுக்கிவிடும்!... தம்பி! நம்முடைய சுயநலத்திற்காக, தாசிகள் விவகாரம் முதல் அரசியல் விஷயம் வரை, தெய்வத்தின் பெயரை நாம் சர்வ சாதாரணமாக உபயோகப்படுத்தி வருகிறோம்!"

"நீதி நிலை சரியுமானால், இவளை இந்த க்ஷணமே விட்டுவிடப் போகிறேன்!" என்றான் வீரசேகரன்.

"அது இன்னும் ஆபத்து! இந்தப் பாண்டிய தேசத்தில் நாம் பொம்மை ராஜாவாக விக்கிரம பாண்டியனுக்கு முடி சூட்டப் போகிறோம். அவனைக் கொலை செய்துவிட வீரபாண்டியனின் கட்சி ரகசியமாக முயற்சி செய்கிறது. நாமோ நம்முடைய அரசியல் சதுரங்கத்தில் முக்கியமான ராஜாக்காய் வெட்டுபடக் கூடாதென்பதற்காக, நம் பொம்மை ராஜாவை அரண்மனைக்குள் பூட்டி வைத்துப் பலத்த காவல் புரிகிறோம். அழகான பெண்களைத் தவிர எந்தவித ஆண் வாடையையும் உள்ளே அனுமதிப்பதில்லை. அதனால் வீரபாண்டியனின் கட்சி ஓர் அழகான பெண்ணை ஏவி விட்டிருக்கிறதாம். அந்தக் கொலைகாரி இவளாயிருக்கலாம்!" என்றான் ஜனநாதன்.

யுவதி பாம்பை மிதித்தவள்போல் துள்ளினாள். "ஒரு பாண்டிநாட்டுப் பெண் ஒரு சோழியனைக் கொல்வாளே தவிர, ஒரு பாண்டிய ஜீவனைக் கொல்லமாட்டாள். ஐயா, என்னை மாயக்காரி என்றீர்கள். சதிகாரி என்றீர்கள். இப்போது என்னைக் கொலைகாரியாக்குகிறீர்கள். இது அபாண்டம்!" என்று சீறினாள்.

"மயிலினமே! சந்தர்ப்பம் அவ்வாறு உன்னைச் சித்திரிப்பதில் தவறில்லை!" என்றான் ஜனநாதன்.

"ஐயா! நீர் ஒரு பெண்ணின் இருதயத்தைத் துரும்பாய் மதிக்கிறீர்! கருணை என்பதே கண்டறியாதவர்! நீரென்ன பெரிய தத்துவ ஞானியா? படுகொலையான்! பாபி! பாபி!" என்று கத்தினாள் ஊர்மிளா.

வீரசேகரன் பரிவோடு நோக்கிக் கொண்டே, "இவள் வீரபாண்டியனின் ஒற்றுப் பெண்ணாயிருக்கலாம்!

ஆனால் ஓர் அற்பப் புழுவைக் கூடக் கொல்லும் கொடூர இருதயம் இவளுக்கு இராது!" என்றான் குரல் தழதழக்க.

ஜனநாதன் அவனை நோக்கி, "தம்பி! இப்போது நான் சொல்வதை முக்கியமாய்க் கவனி! துரதிர்ஷ்ட வசமாக வீரபாண்டியன் நம்மிடம் தோற்றோடியபோது, எப்படியோ அவனுடைய மூத்தபிள்ளை இந்த மதுரைக் கோட்டைக்குள் சிக்கிக் கொண்டுவிட்டதாகவும், நான்கு கோட்டை வாசல்களையும் நாம் அடைத்துவிட்டதால் அந்த இளவரசனை ரகசியமாக வெளியேற்ற ஒரு சதி நடக்கிறதென்றும், அந்தச் சதியை இவளைப்போல ஒரு மங்கையர்க்கரசிதான் நடத்துவதாகவும் நம்முடைய ஒற்றர்கள் மூலம் கேள்விப்படுகிறேன்! ஒருவேளை அந்தச் சதிகாரி இந்த ஊர்மிளாவாயிருக்கலாம்!" என்றான் ஜனநாதன்.

ஊர்மிளா திகைத்தாள். அவள் முகம் ஏதோ ஒரு பீதியால் பிரேதம்போல் வெளுத்தது. மெல்லிய உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. ஆனால் மறுகணமே, அந்தத் திகைப்புணர்ச்சியை மறைத்துக்கொண்டு, "பொய்! பொய்!" என்று கத்தினாள்.

கிழவர் சம்புவராயர் இடையில் குறுக்கிட்டு, "ஜனநாதா! வீரபாண்டியன் சமீபத்தில்தான் சேரராஜன் மகளை மணந்தான் என்று சொன்னாயே; அதற்குள் அவளுக்கு எப்படி ஒரு மூத்த பிள்ளை பிறந்தான்?" என்று சந்தேகத்தைக் கிளப்பினார்.

ஜனநாதன் சிரித்துக்கொண்டே, "சம்புவராயரே! துரதிர்ஷ்டவசமாக வீரபாண்டியன் ஏகபத்தினி விரதனல்ல! அவனுக்கு எத்தனையோ மனைவிகள்! அவன் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி அல்ல! தசரதச் சக்கரவர்த்தி!" என்றான்.

வீரசேகரன் அதைக் கவனிக்காமல் ஏதோ ஒரு சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

ஜனநாதன் அவனை நோக்கி, "வீரசேகரா! என்ன யோசிக்கிறாய்? நான் சொல்கிறபடி செய். இவளை உன்

வீட்டிற்குக் கொண்டுபோய் அறையில் போட்டுப் பூட்டி வை!" என்றான்.

"இவளை என் வீட்டிற்குக் கொண்டு போனால் நான் காட்டிற்குப் போக நேரிடும். வேறு வினையே வேண்டாம்!"

"ஓ! அது ஒரு துரதிர்ஷ்டம் இருக்கிறதா! அப்படியானால்.... தெற்கு மாசி வீதியிலுள்ள ஏழாவது படை வீடுதானே, உன்னுடைய படை வீரர்கள் தங்கியிருக்கும் பாசறை? ஒவ்வொரு பாசறையிலும் ஒவ்வொரு சிறு சிறை இருக்கும், ஒழுங்கு தவறும் வீரர்களை அடைத்து வைப்பதற்காக! அதில் இந்தப் பெண்மணியை அடைத்துவை!"

"நான் தயங்குவதெல்லாம் என் உடைவாளுக்காகத் தான்! மதுரையில் வெற்றி விளைவித்த என் வீரலாளைக் காவற்காரர்களிடம் அடைமானம் வைத்துவிட்டு வந்தேன். இலளைச் சிறையதிகாரிகளிடம் கொண்டுபோய் ஒப்புவித்த பிறகுதான், என் உடைவாளை என்னிடம் திருப்பிக் கொடுப்பார்கள்!" என்றான் வீரசேகரன்.

''இன்று பொழுது விடிவதற்குள் அந்தக் காலற்காரர்களைக் கொன்றுவிட்டு உன் உடைலாளை உன்னிடம் சேர்ப்பிக்கச் செய்கிறேன்!'' என்றான் ஜனநாதன் அலட்சியமாக.

வீர.சேகரன் அழகிய யுவதியை அழைத்துப் போக அவள் பக்கம் திரும்பினான். அவள் இன்னதென்று இயம்ப இயலாத ஒரு குறும்புச் சிரிப்புடன், தலை கவிழ்ந்து மின்னலைப்போல நாணி நுடங்கி நின்றாள்.

அதைக் கவனித்த ஜனநாதன் தன்னருகில் மௌனப் பொம்மையாய் நிற்கும் கிழவர் சம்புவராயரை நோக்கி, "சம்புவராயரே! இப்போது நம் வீரசேகரன் அருகில் இந்தப் பெண் எப்படி நிற்கிறாள் தெரியுமா?... சொல்நலம் கடந்த காமச் சுவையே ஓர் உருவமாக்கி இன்னலம் தெரிய வல்லோன் எழுதியது என்ன நின்றாள்... என்று நம் கம்பர் உலாவியல் படலத்தில் வர்ணிக்கிறாரே

*அந்தக் கவிதை வரிகள்தான் ஞாபகம் வருகின்றன!" என்றான்.*

*அவளோ சட்டென ரோஷமுற்று, "ஐயா! பெண்ணை வேறெந்தக் கண்ணாலும் பார்க்கும் இருதயம் உங்களுக்கு இல்லை! கண்ணினால் காதல் என்னும் பொருளையே காண்கிறீர்கள். பெண்ணீர் மையினால் எய்தும் பயன் எதுவென்று உங்களுக்குத் தெரியாது!" என்று கூவிவிட்டு, மெல்ல விம்மி அழலானாள்.*

*வீரசேகரன் ஊர்மிளாவின் கையைப் பிடித்து அழைத்துப் போக முயன்றான்.*

*"தம்பி, சற்று நில்! நடுநிசியில் அழகான வாள்நுதல் வனிதையை வீதி வழியே அழைத்துச் செல்கிறாய்! விதி குறுக்கிடாமலிருக்க உன் கையில் கூர்மையான வாள் இருக்கவேண்டும்!" என்று சொல்லிவிட்டு ஜனநாதன் தன் உடைவாளைக் கழற்றிக் கொடுத்தான்.*

*"இதோ என் வைடூரிய வாள்! வாள் நிலை கண்டான் ஜனநாதன் என்ற பெயரைக் கேட்டே மயங்கிய நீ, என்னுடைய வீரவாளைப்பற்றியும் எத்தனையோ மானசீகக் கற்பனைகள் செய்திருப்பாய்! சோழ நாட்டுச் சரித்திரத்திலே தனி ஒளியுடன் ஜொலிக்கும் காடவராய வம்சத்தின் வீரவாள் இது! வாழையடி வாழையாக எத்தனையோ வாலிபர்களின் பூஜைக்கு இலக்கான வாள். இதில் பொறித்துள்ள நந்தி இலச்சினையையும், இதில் பதித்துள்ள விலைமதிப்பற்ற நவரத்தினங்களையும் புகழாதவர்கள் இந்த அவனியில் யாரும் இல்லை. இதன் கைப்பிடியிலுள்ள வைடூரியம் கோடிப் பொன் மதிப்புள்ளது; கோடிச் சூரியர்களை விடப் பிரகாசமானது! இந்த மகத்தான வீரவாளை வாங்கிக்கொள். ஆனால் இதை நான் உபயோகப்படுத்திப் பல நாளாகி விட்டபடியாலே, இதன் கூர்மை மழுங்கிப் போயிருக்கும்! போகும்போது ஏதாவது ஒரு பாறைக் கல்லில் தீட்டிக்கொள்!" என்று சிரித்தான் ஜனநாதன்.*

*அந்த வாளை வாங்கிக்கொண்ட வீரசேகரன் அதை நாலாபுறமும் சுழற்றி, காற்றைக் கிழிப்பதுபோல வீசிப்*

பார்த்தான். மெல்லிய பெண்ணின் தேகவாகுவைப் போல் அதன் வாள் பட்டை நாசூக்காகவும், நினைத்த கோணத்திலெல்லாம் வளைந்து கொடுக்கும் நுட்பம் வாய்ந்ததாகவும் இருந்தது.

வீரசேகரன் உள்ளம் பூரித்துப் போனான்.

"வீரசேகரா! உன் வீரவாள் உனக்குத் திரும்பக் கிடைக்கும் வரை எனது வைடூரிய வாளை வைத்துக் கொள்ளலாம்!" என்றான் ஜனநாதன்.

"அதுவரை உனக்கு...?" என்று கேட்டான் வீரசேகரன்.

"எனக்குப் புத்தி இருப்பதால் கத்தி தேவையில்லை!" என்று சிரித்தான் ஜனநாதன்.

பிறகு வீரசேகரனின் முகத்தைத் தன்னருகில் இழுத்து ஜனநாதன் அவன் காதுக்குள் ஏதோ ஒரு பரம ரகசியத்தை, யுவதியின் காதில் விழாதவண்ணம் சொன்னான். அருகில் நின்ற கிழவர் சம்புவராயரின் கூர்மையான காதுக்குக்கூட அந்த ரகசிய வார்த்தைகள் எட்டவில்லை. அந்தப் பெண்ணைப் போகும் வழியில் என்ன செய்யுமாறு ஜனநாதன் தன் சிஷ்யனான வீரசேகரனின் காதுக்குள் ரகசியமாய்ச் சொல்லுகிறான், என்ன புதுச் சதியாலோசனையோ என்றெல்லாம் கிழவர் சம்புவராயர் சந்தேகப்பட்டார். ஜனநாதனும் அவரது முகபாவத்தைப் புரிந்து கொண்டான். ஆனால் சமாதானமாக ஒன்றும் சொல்லவில்லை!

வீரசேகரன் முகம் வியப்பால் பிரகாசமடைந்தது. ஊர்மிளாவை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ஜனநாதன் பக்கம் திரும்பி, "அப்படியே செய்கிறேன்!" என்று வாக்களித்தான்.

அது காதில் விழுந்ததும் அழகிய யுவதி துணுக்குற்று, "என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். இனி நான் எதுவுமே பேசப் போவதில்லை. கவிகளிடமும் அரசியல்வாதிகளிடமும் பேச்சு வைத்துக் கொள்ளக் கூடாது என்பார்கள்!" என்றாள்.

"ஏன்? அவர்கள் அவ்வளவு பாபிகளா?" என்று கேட்டான் ஜனநாதன்.

"கவிகள் பிறரைப் புகழ்வதற்காக இல்லாத கற்பனைகளெல்லாம் செய்து புளுகுவார்கள்! அரசியல் வாதிகள் பிறரைத் தாழ்த்துவதற்காக இல்லாத பழிகளையெல்லாம் சுமத்துவார்கள்!" என்று சீறினாள் அவள்.

"இவள் புத்திசாலிப் பெண்ணாய் இருக்கிறாள்! வீரசேகரா, புத்திசாலிப் பெண்ணை, உன் கத்தியைவிடக் கவனமாய்க் கையாள வேண்டும். இல்லையெனில் கைநழுவி விடுவாள்!"

"இவள் இந்த உலகத்தில் மட்டுமல்ல, எந்த உலகத்திற்கும் என்னை விட்டு நழுவிப் போய்விட விடமாட்டேன்!" என்று வீரசேகரன் தன்னம்பிக்கை மிகுதியோடு சிரித்தான்.

"வீரசேகரா, ஜாக்கிரதை! என்னுடைய முக்கியமான சூழ்ச்சிக்காயான இவளை நழுவி ஓட விட்டுவிட்டால், நான் உன் பரமவிரோதியாகிவிடுவேன்!" என்று ஜனநாதன் பலத்த குரலில் கொடூரமாக எச்சரித்தான்.

வீரசேகரன் ஒருகணம் சிந்தனையில் ஆழ்ந்தான். மறுகணம் அவன், விட்ட குறையோ, தொட்ட குறையோ, மறுபடியும் அந்த அழகிய யுவதியின் கையைப் பிடித்துக்கொண்டு இருட்டில் அழைத்துச் சென்றான். அவளோ கூச்சமும், இன்னதென்று விவரிக்கமுடியாத ஏதோ சந்தோஷக் குறுகுறுப்பும் நிறைந்தவளாய் முகம் மலர்ந்து காணப்பட்டாள். மனத்திற்குள் பொங்கும் சிரிப்பையும் அடக்கிக் கொண்டாள்.

அவளது முகத்தில் சிரிப்பு பொங்குவது ஏன்? உணர்ச்சியாளனான வீரசேகரனோடு இருட்டில் தனியாகச் செல்லும்போது அவனை ஏமாற்றித் தப்பி

ஓடிவிடலாம் என்ற ஆனந்தமா அல்லது அவன்மீது அவளுக்கு உள்ளூரக் காதல் இருக்குமா என்ற சந்தேகத்தில் கிழவர் சம்புலராயர் ஆழ்ந்தார். ஆனால் மதியூகியான ஜனநாதன் ஒரு முடிவிற்கு வந்த பிறகு அதில் புதிதாக ஒரு பிரச்சனையைக் கிளப்ப அவர் விரும்பவில்லை.

வீரசேகரன் இருட்டைக் கிழித்துக் கொண்டு, அப்சரஸ் போன்றவளோடு, நட்சத்திரப் பூக்கள் மந்த ஒளியைத் தூவும் தெற்கு வெளிவீதியில் தென்திசை நோக்கி உல்லாசமாகச் சென்றான்.

அவன் பின்னாலிருந்து, "வீரசேகரா! மறந்துவிடாதே!... இந்திரன் கெட்டதும் பெண்ணாலே! சந்திரன் கெட்டதும் பெண்ணாலே!" என்று ஜனநாதன் எச்சரிக்கும் குரல், வீரசேகரன் காதுக்குள் வெகுதூரம் வரை வந்து விழுந்து கொண்டே இருந்தது.

வீரசேகரனோ மெல்லச் சிரித்துக் கொண்டே யுவதியோடு நடந்து சென்றான். ஊர்மிளாவின் இரத்தம்போல் சிவந்த உதடுகளிலும் ஒரு மாயப்புன்னகை நெளிந்து கொண்டேயிருந்தது!



# அத்தியாயம் 4

## காட்சிப் படலம்

*கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றைஒன்று*
*உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட,*
*அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்.*

**கம்ப ராமாயணம்**

மங்கிய நிலவு. ஆசையால் கண்செருகும் காமினியின் முகத்தைப்போல மந்தமாக ஒளி வீசியது. நிலாக் கன்னங்கள் கிறங்கிச் சோர்ந்து, ஒருவிதக் கருமை படர்ந்திருந்தது. கூந்தல் நிறக் கருமேகங்கள் அலங்கோலமாக அவிழ்ந்து தொங்கி, நெற்றிப் பிறை மீது சுருள் சுருளாக வந்து விழுந்தன. அஞ்சனக் கருவிழிகள் போன்ற குவளைப் பூக்களில் இரவின் பனித் திவலைகள் தேங்கி நின்றன.

பறவைகளும் பூக்களும் நீர்ச்சுனைகளும் உறங்கி விட்டன. கள்ளுண்ட விலைப்பாவையர்கூடக் கொஞ்சல் மொழிகளைக் குளறியவண்ணம் விழி சோர்ந்தனர். சுவர்ப்பன சுந்தரியின் இறுகிய அணைப்பில் ஒடுங்கி உலகமே அயர்ந்து கிடக்கும் நேரம் அது!

எங்கும் ஒரே நிச்சப்தம், சூன்யம், ஒருவித மௌனக் குறுகுறுப்பு! இடையிடையே இரண்டொரு நட்சத்திரங்கள் மினுக் மினுக்கென்று புன்னகை செய்ய முயன்றாலும், நீலவானம் ஒளியும் சலனமுமற்று மந்தமாக இருந்தது. எங்கிருந்தோ நகரக் காவலர் தூக்கக் கிறக்கத்தில் பாடும் காதல் தெம்மாங்கு பனிக்காற்றில் மிதந்து வந்தது. மதுரையின் மணிமாடங்களிலும் துவஜஸ்தம்பங்களிலும்

உள்ள சிறுசிறு மணிகள் காற்றில் அசைந்து மோதும்போது ஏற்படும் "கிளிங் கிளிங்" என்ற மெல்லிய ஒலிகள், நிசி மோகினியின் மெட்டி குலுங்குவதை நினைப்பூட்டின. இருள் நாறிப் பூக்களின் கமகமவென்ற வாசனை நெஞ்சைக் கவர்ந்தது. ஒவ்வொரு ஜாமத்திலும் ஒவ்வொரு நாயகனை வரித்துச் சரசமாடி, மூன்றாவது ஜாமத்தில் கண்விழித்து, உடலில் அசதியும் உணர்வில் ஆசைப் பெருமூச்சுமாகப் பஞ்சணையில் புரளும் காமினியின் மெல்லிய புடவைச் சலசலப்பைப் போல, ஜிலுஜிலுவென்று வீசும் வாடைக் காற்றில் ஒருவித வெக்கையும் வேட்கையும் நிறைந்திருந்தன. இயற்கை நெடுகிலுமே ஒருவிதப் போதை மூர்ச்சை கலந்திருந்தது.

ஊர்மிளாவைச் சிறைபிடித்துச் செல்லும் வீரசேகரன் தெற்கு வெளி வீதியில் மௌனமாக நடந்து வந்தான்.

"எங்கும் ஒரே சூன்யமாயிருக்கிறதே! இப்போது என்ன நேரமிருக்கும்?" என்று கேட்டாள் ஊர்மிளா.

"மூன்றாவது சாமக்கால மணி அடிக்கும் நேரமாகிவிட்டது. இன்னும் கொஞ்ச நாழிகை சென்றால் இரண்டாவது காவல் முடிந்து மூன்றாவது காவலுக்கு ஆட்கள் மாறும் சந்தடி ஆரம்பித்துவிடும்! தீப்பந்தங்களுடன் குதிரை வீரர்கள் அணிவகுத்து 'ஜாம்ஜாம்' என்று தெருவெல்லாம் சுற்றி வருவார்கள்!" என்றான் வீரசேகரன்.

"அதற்குள் நாம் போய்விடலாம்! நீ ஒருவன் என் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுப்பது போதாதென்று, அந்த முரட்டுக் காவற்காரர்கள் வேறு வந்துவிட்டால், என்னால் சமாளிக்க முடியாது!"

"கவலைப்படாதே! என் கையில் சோழ சாம்ராஜ்யத்தின் மகாவீரனான ஜனநாதனின் வைடூரிய வாள் இருக்கிறது! மதுரையை வென்ற வீரசேகரன் என்ற வீரப்பிரதாபமும் எனக்கு வெற்றிக் கேடயமாக விளங்கும்! உன்னை எவனும் தொடவிட மாட்டேன்" என்றான் வீரசேகரன், வைடூரிய வாளின் கைப்பிடியைக் குலுக்கிக் கொண்டே.

ஊர்மிளாவின் முகத்தில் மந்தஹாசம் தவழ, வீரசேகரனைத் தன் வாள்போன்ற கூர்மையான கயல்விழிகளால் ஏறிட்டுப் பார்த்தாள்.

நிசி இருட்டில், மங்கிய நிலவொளியில், ஓர் அழகிய யுவதியுடன் தனியாக விடப்பெற்ற வீரசேகரனுக்கு நெஞ்சு குழம்பியது; உணர்ச்சிகள் தடுமாறின. இளமையின் மதமதப்பு நிறைந்த ஊர்மிளாவின் தேக வனப்பும், அவள் கூந்தலிலிருந்து கமகமவென்று வரும் அகில் வாசனையும், அவள் சிவந்த உதடுகளில் நெளியும் ஒரு மாயச் சிரிப்பும், கருவிழிகளில் துள்ளும் குறும்பும், மிருதுவான மேனியின் நறுமணமும் அவன் நெஞ்சை என்னவோ செய்தன. சூன்யமான வீதிகளும், மதுரையின் மாடமாளிகைகளும் ஒரு மாயத் தீவாக மாறி, அப்சரஸ் ஒருத்தியின் சிரிப்பு முத்துக்கள் சிந்திக் கிடக்கும் நிலவுப் பாதையில் அநாதி காலந்தொட்டு ஒரு மாய மோகினியோடு தன்னந்தனியாகச் சஞ்சரிப்பது போலவும் ஒரு பிரமை தட்டியது.

இன்னதென்று விவரிக்க இயலாத ஓர் இன்ப வேதனையாலும் பயத்தாலும் அவன் உடம்பெல்லாம் நடுங்கியது. ஊர்மிளாவின் அலாதியான அழகுக் கவர்ச்சியில் ஏமாறி விடுவோமோ, அவள் தன்னை ஏமாற்றிவிடுவாளோ, அவளது வசீகர போதையால் தலைக்கிறங்கி கடமை தவறிவிடுமோ என்றெல்லாம் பயந்தான். அவன் மனச்சாட்சியில் ஏதோவொன்று உறுத்தியது; ஊர்மிளாவைப் பிடித்திருக்கும் கையின் வழியாகத் தன் நெஞ்சு நழுவி ஓடுவது போலவும் அவனுக்கு ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. சட்டென்று அவளுடைய மெல்லிய கையை விட்டுவிட்டான்.

ஊர்மிளா அவனை ஓரக்கண்ணால் பார்த்து மனசுக்குள் சிரித்துக் கொண்டாள்.

"கையை ஏன் விட்டுவிட்டாய்?" என்று ஊர்மிளா குறும்பாகக் கேட்டாள்.

"நீ தப்பியோடி விடமாட்டாய் என்ற நம்பிக்கையால் தான்!" என்றான் வீரசேகரன் கம்பீரமான குரலில்.

"பொய்! உன் மனசின்மீதே உனக்குத் தன்னம்பிக்கை யில்லை!" என்றாள் வெடுக்கென்று ஊர்மிளா.

வீரசேகரன் லஜ்ஜையுடன் தலை குனிந்தான். அவள் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே அவனுக்கு மனங்கூசியது.

ஊர்மிளாவுக்கு அவன்மீது ஒருபுறம் கோபம் இருந்தது; ஒருபுறம் சிரிப்பும் வந்தது.

அவள் தன் நெற்றியில் வந்து விழும் சுருண்ட கேசத்தைத் தன் மெல்லிய விரல் நுனியால் ஒதுக்கி விட்டுக் கொண்டு, "வாலிபனே! நிஜமாகவே என்னை நம்புகிறாயா?" என்று கேட்டாள்.

"ஆமாம்! உன்னை நம்பும்படி உள்ளூர என் மனசில் ஏதோவொன்று சொல்கிறது!"

"உன் மனசை நம்பாதே! அதைவிட என்னை நம்பாதே!" என்றாள் ஊர்மிளா சட்டென்று விஷமமான குரலில்.

"ஜனநாதனைப்போல் சொல்கிறாய். ஆனால் நம்பாதே என்று சொல்லுகிறவர்களைத்தான் நான் அதிகம் நம்புகிறேன்!"

"கடைசியில் ஏமாறத்தான் போகிறாய்!" என்று சிரித்துக் கொண்டே ஊர்மிளா, "சரி; போகலாமா?" என்று கேட்டு விட்டு, காற்றில் பறக்கும் தன் முந்தானையை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டு, பாய்ச்சல் குதிரைபோல மதமதவென்று நின்றாள்.

மனங்குழம்பியவனாய் வீரசேகரன் கிளம்பினான். இருவரும் தெற்கு வெளியிலுள்ள புத்த விஹாரத்தைக் கடந்து சென்றனர். வரிசையான மாளிகைகளின் இடைவெளிகளிலும் சந்துகளிலும் சுற்றுமுற்றும் இருளை ஊடுருவிப் பார்த்துக்கொண்டே ஊர்மிளா மௌனமாக நடந்தாள்.

"ஊர்மிளா! ஓயாமல் ஏன் பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடக்கிறாய்?"

"நம்மை யாராவது பின் தொடர்கிறார்களாவென்று பார்த்தேன்! ஏதோ பெண்ணின் காற்சிலம்பொலி கேட்டது! ஒருவேளை நீங்கள் தீ வைத்துக் கொளுத்திய மதுரையில் மறுபடியும் கண்ணகியின் ஆவி உலாவுகிறதோ என்னவோ!"

"ஊர்மிளா! உன் மனசு வேறெங்கோ அலைகிறது!... என்ன யோசிக்கிறாய்?"

"என்ன யோசிப்பேன்? உன்னை எப்படி ஏமாற்றித் தப்பியோடலாமென்று யோசிக்கிறேன்! • **கையூட்டு** கொடுக்கலாமென்றாலோ நீ • **காகப் பணத்திற்குக் கூட** ஆசைப்படுபவனாகத் தெரியவில்லை! பட்டம் பதவி கொடுக்கலாமென்றாலோ எனக்குச் சக்தியில்லை! நீயோ வேறெதிலும் மயங்கக்கூடியவனுமல்ல... ஊம்... வாலிபனே! என்ன செய்தால் நீ ஏமாறுவாய்? உன்னிடமிருந்து தப்பியோட தயவுசெய்து நீயே ஒரு சுலபமான வழி சொல்லமாட்டாயா?"

"அது மிகவும் சுலபம்! இதோ என் கையில் ஜனநாதன் தந்த வைடூரிய வாள் இருக்கிறது! இதைப் பறித்து என் நெஞ்சில் குத்திக் கொன்றுவிட்டு நீ சுலபமாய் ஓடிவிடலாம்!"

"அது அவ்வளவு சுலபமல்ல! உன் நெஞ்சோ வஜ்ஜிரக் கல்போல் திடமானது. ஜனநாதனின் வைடூரிய வாளோ, உபயோகப்படுத்திப் பல நாளாகிவிட்டபடியாலே, கூர்மை மழுங்கியிருக்கிறது! நானோ, பூவைவிட மிருதுவான பெண்!... உன் நெஞ்சில் ஒரு சாண் அளவுகூட வாளைச் செருக முடியாது!" என்றாள் ஊர்மிளா.

அவள் விளையாடுகிறாளா அல்லது வினையாகப் பேசுகிறாளா என்று வீரசேகரன் ஒருகணம் திகைத்தான்.

---

• கையூட்டு என்பது அந்தக் காலத்தில் 'லஞ்சம்' என்பதற்கு வழங்கிய சொல்.

• காகப் பணம் என்பது மதுரையில் சிறந்த நாணயமாகக் கருதப்பட்ட கழுப் பொன்னாகும்.

மறுகணம் திகைப்பை மறைத்துக்கொண்டு அவளோடு சகஜமாகப் பேசலானான்.

"இவ்வளவு புத்திசாலிப் பெண்ணான நீ யார் என்று தெரிந்து கொள்ளலாமா?"

"நான் யாராயிருந்தால் உனக்கென்ன? உன்னால் சாகப் போகிற ஒருத்தியைப்பற்றி நீயேன் தெரிந்துகொள்ள விரும்புகிறாய்?"

"நீ ஏன் சாகவேண்டும்?"

"மானம் போன பிறகு சாகத்தானே வேண்டும்?"

"உன் மானத்திற்கு என்ன நேர்ந்துவிட்டது?"

"ஒரு பருவப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டு இருட்டில் தெருத் தெருவாய் ஊர்லலம் வந்தாயே, இது ஒன்றே போதாதா? இந்தக் காட்சியைக் காண்பவர்கள் என்ன நினைப்பார்கள்?... இனிமேல் உன் அரசியல் குரு ஜனநாதன் சொற்படி என்னை உன் பாசறையில் ரகசியமாக அடைத்து வைக்கப் போகிறாய்! மறுபடி எந்த நிலையில் எப்போது வெளியே வருவேன் என்பதும் நிச்சயமில்லை! வாலிபனே, உன்னால் உலகமே என்னைப் பார்த்துச் சிரிக்கப்போகிறது!"

"ஊர்மிளா! என்மீது உனக்குக் கோபமா?"

"உன்மீது எனக்கென்ன கோபம்? உன் கடமையைத் தானே செய்கிறாய்? என் துரதிர்ஷ்டம் உன் கடமைக்கு நான் பலியாகப் போகிறேன்!"

"நீ குற்றவாளியாய் இருந்தால்தானே பலியாவாய்?"

"உன் சோழிய அரசாங்கம் பாண்டி ஜாதிப் பெண்ணான என்னை எப்படியும் குற்றவாளியெனத் தீர்ப்பளிக்குமாறு நீதிசபையை வற்புறுத்தும்!"

"ஊர்மிளா, நீ அநியாயமாகக் குற்றவாளியாக்கப் படலாம், ஆனால் நான் இல்லையா? இம்மதுரையை

வென்றதற்குப் பரிசாக அரசாங்க சபை எனக்கு வீரப்பதக்கம் அளிக்கப் போகிறது! அதற்குப் பதிலாக உன் விடுதலையைப் பரிசாகக் கேட்பேன்!"

"வேண்டாம்! உன்னால் சாக விரும்புகிறேனே தவிர, வாழ விரும்பவில்லை! சீக்கிரம் என்னைக் குற்றவாளியாக்கி என் தலையை யானைக் காலின் கீழ் வைத்து நசுக்கினால் எவ்வளவோ ஆனந்தமாயிருக்கும்! என் நெஞ்சின் பாரமெல்லாம் தீர்ந்துவிடும்!"

"நானும் அதே யானைக் காலின்கீழ்த் தலையை நசுக்கிக் கொண்டு உன்னோடு சாவேன்! என் நெஞ்சின் பாரமும் தீர்ந்து விடும்!" என்று வீரசேகரன் சிரித்தான்.

"மரணத்துக்கு அப்பால்கூட என்னை விடமாட்டாய் போலிருக்கிறதே!" என்று ஏளனமாகச் சிரித்தாள் யுவதி.

வீரசேகரன் தன் குரலில் உருக்கத்தை வரவழைத்துக்கொண்டு அவளிடம் கேட்டான்.

"ஊர்மிளா, உன்னிடம் சிலவற்றைக் கேட்கிறேன். உண்மையான பதில்களைச் சொல்லுவாயா?"

"கேட்கக் கூடியதைக் கேட்டால், நான் சொல்லக் கூடியதைச் சொல்லுகிறேன்!"

"இந்த இரவில் நீ எங்கிருந்து வந்தாய்?"

"அதுதான் சொன்னேனே! பல நாளாக முறைக் காய்ச்சலில் கிடந்த என் பாட்டியைப் பார்க்க அயலூருக்குப் போயிருந்தேன். இன்றுதான் மதுரைக்குத் திரும்பி வந்தேன்."

"மதுரையின் நான்கு கோட்டை வாசல்களும் இழுத்துச் சாத்தப்பட்டுப் பலத்த காவல் இருக்கிறதே! அரசாங்க அனுமதியில்லாமல் எமன்கூட உள்ளே நுழைய முடியாது! யாராவது உள்ளே வரவோ வெளியே போகவோ விரும்பினால், முன்கூட்டியே அரசாங்கத்தினிடமிருந்து முத்திரை பதித்த அனுமதி ஓலை பெற வேண்டும்!"

"அது இலேசான காரியமா? பலவிதமான அதிகாரிகளின் கைகளுக்கும் மாறி • ஆவணக்களரியில் பதிவாகி அனுமதி ஓலை பெறுவதற்குள் ஒரு யுகம் ஆகிவிடும்!... ஆனால்... உன்னுடைய படைத் தலைவர்கள் அவசரமாகத் தூதர்களையோ ஒற்றர்களையோ நகர்க் கோட்டைக்கு வெளியே அனுப்ப வேண்டுமென்றால் என்ன செய்வார்களோ, தெரியவில்லை!" என்று ஊர்மிளா ஆவலுடன் கேட்டாள்.

"ஜனநாதனைப் போன்ற முக்கியமான படைத் தலைவர்கள் மட்டும் அனுமதி ஓலைக்குப் பதிலாகத் தங்கள் உடைவாளைக் கழற்றிக் கொடுத்தனுப்பலாம். அது சரியான பெயரும் அடையாளங்களும் உள்ள உடைவாள்தான் என்று தெரிந்தால் வாசல் காப்போர் அதைத் தங்களிடம் ஈடாக வைத்துக்கொண்டு வாளைக் கொண்டு வந்த யாரையும் கோட்டை வாசல் வழியாக வெளியே விடுவார்கள். ஆனால் மறுநாளே அதற்குரிய அரசாங்க அங்கீகாரப் பட்டிகை வாங்கிக் கொடுத்துத் தங்கள் உடைவாளைத் திரும்பப் பெறவேண்டும்!" என்றான் வீரசேகரன்.

"உன்னுடைய வீரவாளுக்கு அந்த மகிமை உண்டா?"

"இனிமேல்தான் ஏற்படவேண்டும்! ஜனநாதனைப் போன்ற அரசியல் அந்தஸ்து உள்ளவர்கள்தான் அவ்வாறு தங்கள் உடைவாளை அனுமதி ஓலையாக உபயோகப் படுத்தலாம்!" என்றான் பெருமூச்சுடன் வீரசேகரன்.

ஊர்மிளாவின் கருவிழிகள் வீரசேகரனின் கையிலுள்ள ஜனநாதனின் வைடூரிய வாளின்மீது பதிந்தன. அவளது மெல்லிய உடலெங்கும் ஒருவித நடுக்கம் பரவியது. மறுகணம் அதை மறைத்துக்கொண்டு சிவந்த உதடுகளில் புன்முறுவலை வருவித்துக் கொண்டாள்.

---

• ஆவணக்களரி என்பது அந்தக் காலத்தில் ரிஜிஸ்ட்ரேஷன் ஆபீஸுக்கு வழங்கிய சொல்.

வீரசேகரன் அவளை நோக்கி, "ஊர்மிளா, உன்னிடம் அனுமதி ஓலை இருப்பதாகத் தெரியவில்லை! எப்படிக் கோட்டை வாசல் வழியாக மதுரை நகருக்குள் வந்தாய்? கோட்டை வாசலைப் பாதுகாக்கும் வீரர்கள் சுலபத்தில் ஏமாறக்கூடிய முட்டாள்கள் அல்லவே?" என்று கேட்டான்.

"அவர்களில் உன்னைப்போல் ஒரு வாலிபன் இருந்தான்!" என்று குறும்பாய் மெல்லச் சிரித்தாள் ஊர்மிளா.

"ஊர்மிளா, ஏன் சிரிக்கிறாய்? உனக்காக உள்ளம் உருகும் என் லட்சிய உள்ளத்தைக் கண்டா? ஏன் சிரிக்கிறாய்?"

"இடையூறுகள் அளவு மீறி வந்தால் வாய்விட்டுச் சிரி என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார்! ஒரு பருவப் பெண்ணுக்கு ஒரே இரவுக்குள் எவ்வளவு துன்பங்கள்!"

"ஊர்மிளா! இவ்வளவு துன்பங்கள் ஏற்படுமென்று தெரிந்திருந்தும் நீ ஏன் நடுநிசியில் தெருக்களில் அலைகிறாய்? யாரைச் சந்திக்கக் கிளம்பினாய்?"

"ஓ, வாலிபனே! தயை புரிந்து அதை மட்டும் கேட்காதே!..." என்று தலை குனிந்து கொண்டே கெஞ்சினாள் அவள்.

"ஒருவேளை இந்தப் பருவ மங்கை தன் காதலனைச் சந்திப்பதற்காக இருட்டில் கிளம்பியிருப்பாளோ...?" என்று வீரசேகரன் நெஞ்சில் ஒரு நினைப்பு ஓடியது. அந்தச் சந்தேகம் தட்டியதும், தன் நெஞ்சில் ஏதோவொன்று பறி போவது போலவும், அவனது இதயப்படகு அளவிலாத துயரச் சுமையால் நடுக்கடலில் முழுகுவதைப் போலவு மிருந்தது.

"ஊர்மிளா, நீ எவனையாவது காதலிக்கிறாயா?" என்று குரல் கரகரக்க வீரசேகரன் கேட்டான்.

காதல் என்ற வார்த்தை காதில் விழுந்ததும் ஊர்மிளாவின் முகம் சிவந்தது. உடம்பெல்லாம் தீப்பிடித்து எரிவது போல் பதட்டத்தால் நடுங்கியது.

"வாலிபனே! நான் யாரையும் காதலிக்கவில்லை! இனிமேல் யாரையும் காதலிக்கவும் மாட்டேன்! யாரும் என்னைக் காதலிக்கவும் விடமாட்டேன்!'' என்று கூவினாள்.

''ஏன்...?'' என்று வியப்புடன் வீரசேகரன் வினவினான்.

"அது என் இஷ்டம்!... அது என் கடமை!... வாலிபனே, நாம் காதலை விட்டுவிட்டு, நடக்கக்கூடிய காரியத்தைப்பற்றிப் பேசலாம்" என்று ஊர்மிளா, தன் கருவிழிகளில் அரும்பிய இருகண்ணீர் முத்துக்களைத் துடைத்தெறிந்துவிட்டுத் தன் சிவந்த உதடுகளில் சகஜமான புன்னகை முத்துக்களை வரவழைத்துக் கொண்டாள்.

அவள் இதுவரை யாரையும் காதலிக்கவில்லை என்றதனால் வீரசேகரனுக்கு ஆனந்தமுண்டாயிற்று. ஆனால் இனிமேல் யாரையும் காதலிக்கக்கூடாது. அது தன் கடமை என்கிறாளே? ஒருவேளை வீரபாண்டியனின் அரசியல் இலட்சியத்திற்குத் தன் காதலைப் பலியிடுவது தன் கடமை என்று நினைக்கிறாளோ? அல்லது இவள் காதலிக்காத ஒரு கணவன் இவளுக்கு வாய்த்திருப்பானோ? அதுதான் காதலை வெறுக்கிறாளா? வீரசேகரன் குழம்பினான். இவ்வளவு பசுமையான அழகுள்ளவளைப் பார்த்தால் இவள் இன்னும் கலியாணமாகாத கன்னி என்றே தோன்றுகிறதெனத் தன் மனத்திற்குள் ஓராயிரம் தடவை சொல்லிக் கொண்டான். அவளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொள்ளத் துடித்தான். ஆனால் அவள் உண்மையைச் சொல்லுவாளா? வீரசேகரன் எதையோ தீவிரமாகச் சிந்தித்துவிட்டு அவளை நோக்கிக் கேட்டான்.

"ஊர்மிளா! இப்போது உன்னை என்ன செய்யப் போகிறேன் தெரியுமா?"

"அதுதான் உன் அருமைத் தோழன் ஜனநாதன் உன் காதுக்குள் ரகசியமாய்ச் சொல்லியிருக்கிறானே!"

"ஊர்மிளா! உன்னை விட்டுவிடப் போகிறேன்!"

"நிஜமாகவா?"

"ஆமாம்!"

"நான் நம்பவில்லை! ஜனநாதன் சொல்லியிருப்பதால் இதில் ஏதோ சூது இருக்கவேண்டும்!"

"இதில் சூது ஒன்றுமில்லை! உன்னை விட்டுவிட்டால் ஜனநாதன் எனக்கு ஜன்ம சத்ரு ஆகிவிடுவான் என்றுதான் சொன்னான்! ஆனால் நான் உன்னை விட்டுவிடுவதோடல்லாமல், காவலர்கள் உன்னை வழிமறித்துப் பிடித்துக் கொள்ளாதலாறு, உன் வீடுவரை துணை வந்து உன்னைப் பத்திரமாகச் சேர்ப்பிக்கப் போகிறேன்! உன் வீடு எங்கிருக்கிறது?"

"உங்கள் சோழியப் படைகள் தீ வைத்துக் கொளுத்தி விட்டார்கள்!"

"உன் தந்தை?"

"தீயில் எரிந்து போனார்!"

"உன் தாய்?"

"அவள் போன இடம் தெரியவில்லை."

"உனக்கொரு பாட்டி இருப்பதாகச் சொன்னாயே?"

"பல நாளாகக் காய்ச்சலில் கிடந்தவள் நேற்றுக் காலமாகி விட்டாள்!"

"உனக்கு அண்ணன் தம்பி உறவினர் யாருமில்லையா?"

"இல்லை! இனி என் மானத்தைக் காப்பவன்தான் என் அண்ணன். எனக்கு உணவளிப்பவன்தான் என் தம்பி. எனக்கு அடைக்கலம் கொடுப்பவர்கள்தான் என் உறவினர்!......... வாலிபனே, நான் ஓர் அநாதைப் பெண்... இனி இந்த விசாலமான பூமிதான் என் பிறந்தகம். மேலேயுள்ள ஆகாசந்தான் என் புக்ககம்..."

"பெண்ணே! நானும் அநாதைதான். அநாதைக்கு அநாதைதான் துணை. நான் உனக்கு அடைக்கலம் தந்து ஆதரிக்கிறேன்!"

"வேண்டாம்! அதற்கு நீ அதிகமாக என்னிடம் பிரதிபிரயோஜனத்தை எதிர்பார்ப்பாய்! என்னால் அதைக் கொடுக்க முடியாது!"

"அநாதையான உன்னிடம் எதை எதிர்பார்ப்பேன்?"

"ஒரு பருவப் பெண்ணிடம் ஒரு வாலிபன் எதை எதிர்பார்ப்பான்?" என்று வெடுக்கெனக் கேட்ட ஊர்மிளாவின் முகம் நாணத்தால் சிவந்தது. புன்முறுவலுடன் தலைகுனிந்து கொண்டாள். அந்தப் புன்முறுவலில் ஏதோ ஒருவிதச் சோகமும் ததும்பி நின்றது.

"ஊர்மிளா! உன்னிடம் எந்தவிதப் பிரதி பிரயோஜனத்தையும் எதிர்பாராமல் உனக்கு உதவி செய்கிறேன்; ஆனால் ஒரு வாக்குறுதி மட்டும் கொடு!"

"என்ன வாக்குறுதி?"

"எங்களிடம் தோற்றோடிய வீரபாண்டியன் கட்சியை உதறியெறிந்துவிடு. எங்கள் சோழ அரசாங்கத்திற்கு எதிராக எந்தச் சதிவேலையிலும் ஈடுபடுவதில்லையென்றும், என் சோழ குலத்தின் புலிக்கொடி வானளாவிப் பறக்கச் சேவை செய்வதாகவும் வாக்குறுதி கொடு!"

"வாலிபனே! உங்கள் சோழ அரசாங்கம் பாண்டி நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது! நான் பாண்டி நாட்டுப் பெண்!... என் தாயின் மானத்தைப் பறித்து நெஞ்சை மிதிப்பவன் பாதங்களையா முத்தமிடச் சொல்கிறாய்?"

"பாண்டி நாடு என்று பேசுவதே வெறும் மாவட்டப் பித்து! வெறும் குறுகிய மனப்பான்மை! கன்னியாகுமரி முதல் இமயம்வரை பரந்து கிடக்கும் இந்த விசாலமான

பாரத தேசம்தான் உன் தாய் நாடு என்று நினை! அதுதான் உன்னத லட்சியம்!" என்றான் வீரசேகரன்.

ஊர்மிளா நிராசையடைந்த விழிகளால் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவனோ இலட்சிய உணர்ச்சியில் ஆழ்ந்து போனவனாய் போர்க்களத்தில் வீரமுழக்கம் செய்வதுபோல் தொடர்ந்து கூறினான்:

"இந்த அகண்ட பரத கண்டத்தின் ஆதிக்குடிகளான பரதவர் நம் தமிழரினம்! ஒரு காலத்தில் தமிழ்நாட்டின் எல்லை இமயம் வரை பரந்து கிடந்தது. உலக நாகரிகத்திற்கு அடிப்படையான தமிழ்நாடு இன்று சுருங்கிக் கிடக்கிறது. சேர சோழ பாண்டியர்களென்று நாம் பல நாடுகளாகப் பலப்பல ஜாதிகளாகப் பிரிந்து கிடக்கிறோம்! சிதறிக் கிடக்கும் இந்தச் சக்திகளையெல்லாம் ஒன்றுதிரட்டி ஒரே தமிழ்நாடாக்கி, தமிழன் குரலை இமயம்வரை எதிரொலிக்க முயல்கிறது எங்கள் சோழ அரசாங்கம்! திக்கெட்டும் • வீரச் செல்வர்களை அனுப்பி, கங்கை நதியில் ரத்த ஸ்நானமாடி, இமயத்தில் புலிக்குறி பொறித்து அகில பரதகண்டத்தையும் ஒரே குடைக்கீழ்க் கொண்டுவர முயல்கிறார்கள் சோழ குல மன்னர்கள்! வடநாடு சிறுசிறு இராஜ்யங்களாகப் பிரிந்து கிடப்பதால்தான் அடிக்கடி அந்நியப் படையெடுப்புகளுக்கு ஆளாகி, கிரேக்கர்களுக்கும், ஹூணர்களுக்கும், சோனகர்களுக்கும் புறமுதுகிட்டு இப்போது கஜனி சோனர்களுக்கு அடிமைப்பட்டு வருகிறது. இதைக் கண்ட சோழநாட்டு மதியூகிகள் தமிழ்நாடு முழுவதுக்கும் ஒரு பலம் பொருந்திய அரசாங்கத்தைச் சோழ நாட்டில் உருவாக்க முயல்கிறார்கள்! எங்கள் குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியைக் கங்கைப் படையெடுப்புக்குத் தூண்டி, வடநாட்டில் அழிந்துவரும் புராதனக் கலாசாரத்தை நிலைநிறுத்தப் பாடுபடுகிறார்கள்! தமிழன் கனவு மட்டுமல்ல, வடநாட்டின் கலாசாரமும் எங்கள் சோழ மன்னரின் கையைத்தான் எதிர்நோக்கித் தவமிருக்கிறது! சோழியரின் லட்சியம் மகத்தானது! வீரபாண்டியனின் லட்சியமோ பாண்டியநாடு என்று குறுகிய

எல்லைக்குள்ளேயே அலைகிறது! • சோனகர்களின் குதிரை வியாபாரத்தில் மயங்கி அவர்களோடு தோழமை கொள்கிறான்; இலங்கை மன்னன் பராக்கிரம பாகுலைத் தன் ஞான குருவாகக் கருதி, தன் பங்காளிச் சண்டைக்குள் அந்நியனைப் புகவிடுகிறான். கிரேக்க யவனர்களை நம்பிக்கையான கோட்டைக் காவலராக அமர்த்துகிறான். அந்நிய தேசங்களோடும் மிலேச்சர் களோடும்தான் அதிகத் தோழமை கொள்கிறான்!... வீரபாண்டியன் தன் கலாசாரத்தையும் தன் இனத்தையும் மறந்துவிட்டான். சுயநலத்தினால் சுதேசத்தையே மறந்துவிட்டான்! வீரபாண்டியன் நிர்மூலமாகும் வரை சோழ வீரர்கள் ஓயமாட்டார்கள்! என் வீரவாளும் உறங்காது!"

பஃறுளியாறு மறையும் முன்னரே வெகு காலமாகவே, கிழக்கில் சாவகம், மலையா, காழகம் (பர்மா), சீனம் முதலிய தேசங்களுடனும், மேற்கில் அராபியா பாபிலோனியா, கல்தேயா முதலிய தேசங்களுடனும் தமிழகம் வாணிபம் செய்து வந்தது. பாண்டியனின் மெய்காலற்படையில் ரோம கிரேக்கப் பொருநரும் இருந்தனர். அரச மகளிர் வசிக்கும் உவளகத்தில் சோனக (மிலேச்சப்) பேடியர் வாளேந்தி நின்று காவல் புரிவர். இவர்களை வேறு இனத்தவர் என்று கருதாமல் வீரபாண்டியன் இவர்களோடு நெருங்கிய தோழமை கொண்டிருந்தான். இதைச் சோழ நாட்டிலிருந்த சில வைதீகர்கள் விரும்பவில்லை. வடக்கே அரேபிய இஸ்லாமிய கஜனிமன்னர்களின் படையெடுப்புகளுக்கு ஆளாகி வடநாட்டிலுள்ள சிறுசிறு வைதீக ராஜ்யங்கள் சின்னா பின்னமாகிக் கொண்டிருந்த காலம் அது. அத்தகையதோர் அந்நியக் கலாசாரப் படையெடுப்பு தமிழ் நாட்டில் நுழைந்தால், அதைச் சமாளிக்க ஒரு பலம் பொருந்திய சாம்ராஜ்யம் வேண்டுமெனப் பல ராஜதந்திரிகள் கருதினர்.

---

• அந்தக் காலத்தில் குதிரைகள் கொண்டுவந்து வியாபாரம் செய்யும் அரேபிய வர்த்தகர்களுக்குச் சோனகர் என்ற பெயர் பாண்டிய நாட்டில் வழங்கி வந்தது.

குமரிமுனை முதல் இமய மலைவரை ஒரே நாடு, ஒரே கலாச்சாரம், ஒரே சாம்ராஜ்யம் என்றும் பலர் கனவு கண்டனர். அதுதான் மகத்தான இலட்சியம் எனத் தமிழகத்தில் பரப்பவும் தொடங்கினர். இந்தச் சூழ்நிலையையும் இலட்சிய உணர்ச்சியையும் சாம்ராஜ்ய வாதிகள் தங்கள் யதேச்சாதிகார ஆக்ரமிப்பு முறைகளுக்கு உபயோகப்படுத்திக் கொண்டனர். வீரசேகரனோ, குமரிமுதல் இமயம் வரை தமிழ் நாகரிகத்தின் சின்னமாகச் சோழ சாம்ராஜ்யம் ஸ்தாபிதமாகும் என்று கனவு கண்டான். அந்த இலட்சியக் கனவில் ஊர்மிளாவையும் எப்படியாவது பங்கு பெறச் செய்யவேண்டுமென்றும் விரும்பினான்.

"ஊர்மிளா! காவிரிக் கரையில் சோழியர் துவக்கிய சூரியோதயம் கங்கைக் கரையையும் தாண்டி இமயமலைக்கு அப்பாலும் ஒளிபரப்பப் போவதைக் காண்பாய்! எங்கள் லட்சியம் பூமியைவிட விசாலமானது; கடலைவிட ஆழமானது; இமயமலையைவிட உயர்ந்தது!" என்று உணர்ச்சியின் மிகுதியினால் வீரசேகரன் சொன்மாரி பெய்துகொண்டே போனான்.

இதுவரை பொறுமையாயிருந்த ஊர்மிளா, அவனை நோக்கி, "வாலிபனே, போதும்! எனக்குத் தூக்கம் வருகிறது! உன்னுடைய இமயமலை போன்ற லட்சியக் கனவுகளை ஒரு மெல்லிய அபலையிடம் சொல்வதனால் என்ன பிரயோஜனம்? என்னால் உன் உடைவாளைக் கூடத் தூக்க முடியாது!" என்று பரிகாசமாகச் சொன்னாள்.

"ஊர்மிளா, உன்னிடம் இவ்வளவையும் ஏன் சொல்லுகிறேனென்றால், நீ வீரபாண்டியனின் வேவுக்காரியாய்ச் சதிவேலைகளில் ஈடுபடக்கூடாது என்பதற்காகத்தான்!" என்றான் வீரசேகரன்.

"நான் வீரபாண்டியனின் வேவுக்காரியென்று ஏன் வீணாகச் சந்தேகப்படுகிறாய்?" என்று ஊர்மிளா குரலில் வருத்தம் தொனிக்கச் சிறிது கோபமாகவே கேட்டாள்.

*"சந்தேகப்படுவதற்குத் தகுந்த காரணமிருக்கிறது! வீரபாண்டியன் தோற்றோடியபோது அவனது மூத்த மகன் இம்மதுரைக்குள் சிக்கிக் கொண்டானென்றும், அவனை மதுரையைவிட்டு ரகசியமாக வெளியேற்ற உன்னைப் போன்ற ஒரு பெண்தான் முயல்கிறாளென்றும் சோழ ஒற்றர்கள் ஜனநாதனிடம் சொல்லியிருக்கிறார்கள்!" என்றான் வீரசேகரன்.*

*"வீரபாண்டியனின் மூத்த மகன் மட்டுமல்ல, இரண்டாவது மகன்கூட இம்மதுரைக் கோட்டைக்குள்தான் சிக்கிக்கொண்டிருக்கிறானாம்!" என்றாள் ஊர்மிளா.*

*"உனக்கு எப்படித் தெரியும்?"*

*"நான் பெண்; அதுவும் பாண்டி நாட்டுப் பெண்! உங்கள் ஒற்றர்கள் சேகரிக்க முடியாத வதந்திகளையெல்லாம் பெண்கள் சர்வசாதாரணமாகக் குளத்தங்கரையில் அலசுவார்கள்!"*

*"வீரபாண்டியனின் இரண்டாவது மகனுக்கு என்ன வயதிருக்குமாம்?" என்று வீரசேகரன் கேட்டான்.*

*ஊர்மிளா ஒரு கணம் எதையோ யோசித்துவிட்டு, "எனக்குத் தெரியாது! உன்னைவிட நான்கு வயதாவது குறைவாயிருக்குமென நினைக்கிறேன். ஏனெனில் அவன் பெண்கள் தெருக்களுக்கு அடிக்கடி உலா வருவதில்லை. புலவர்களும் அவன்மீது இன்னும் உலாப் பிரபந்தம் பாடவும் ஆரம்பிக்கவில்லை!" என்றாள்.*

*"அப்படியானால், இரண்டாவது மகனுக்குப் பதினாறு வயதிருக்கும் என்கிறாய்..."*

*ஊர்மிளா அவனை ஏறிட்டு நோக்கி, குரலில் பரிவையும் பாசத்தையும் வரவழைத்துக்கொண்டு, "வாலிபனே! ஒருவாரத் தவணை கொடு. என்னால் மூத்த மகனைப் பிடிக்க முடியாவிட்டாலும் இரண்டாவது மகன் மறைந்திருக்கும் ரகசிய இடத்தை விசாரித்து அவனை பிடித்துக் கொடுக்கிறேன். அப்போதாவது என்மீது உனக்குள்ள சந்தேகம் தீருமல்லவா?"*

வீரசேகரன் ஆனந்தத்தால் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்? என்னை நம்பவில்லையா?"

"எனக்கு ஒரு பெரிய சந்தேகம் தீர்ந்துவிட்டது! வீரபாண்டியன் என்று உன் வாயாலேயே சகஜமாகப் பெயரைச் சொல்வதால் நீ வீரபாண்டியன் மனைவியாய் இருக்கமாட்டாய்! அதுதான் என் ஆனந்தத்திற்குக் காரணம்!"

"நான் வீரபாண்டியனின் மனைவியுமல்ல; வீரபாண்டியனின் கட்சியைச் சேர்ந்தவளுமல்ல. இந்தப் பாண்டிய நாட்டை வீரபாண்டியன் ஆண்டாலும் அல்லது உங்கள் சோழ அரசாங்கம் ஆதரிக்கும் விக்ரமபாண்டியன் ஆண்டாலும் அடுப்பூதும் பெண்களுக்கு அக்கறையில்லை. ராமன் ஆண்டாலென்ன ராவணன் ஆண்டாலென்ன வென்று நினைக்கும் ஒரு சாதாரணமான குடும்பப் பெண் நான்!"

"அரசியலுக்கும் உனக்கும் சம்பந்தமில்லை என்கிறாயா?"

"அரிசி நிலை கண்டவர்கள் அரசியலைச் சீண்ட மாட்டார்கள்!" என்று வேடிக்கையாய்ச் சிரித்தாள் ஊர்மிளா.

இவ்வாறு அவர்களிருவரும் உற்சாகமாகப் பேசிக்கொண்டே, தெற்கு வெளி வீதியிலிருந்து தெற்கு மாசி வீதிக்குத் திரும்பும் திருப்பத்திலுள்ள நந்தவனத்தருகே வந்தார்கள். பூக்களின் 'கம்'மென்ற வாசனையும், அவ்வீதியிலுள்ள பெருமாள் கோயிலின் விமானத்தில் விழும் மங்கிய நிலவும் மிகவும் இரம்மியமாக இருந்தன.

நந்தவனத்தின் வாசலை அடைந்ததும் யுவதி சட்டென்று நின்று விட்டாள்.

"வாலிபனே! இந்த நந்தவனத்தின் அழகைக் கொஞ்ச நேரம் பருகிவிட்டுப் போகலாம்!" என்றாள் ஊர்மிளா.

"நந்தவனத்தின் வாசல் பூட்டிக் கிடக்கிறதே?" என்றான் வீரசேகரன்.

"அதோ, அருகில் சிற்ப மண்டபம் இருக்கிறது! அதன் உயரமான படிகளில் கொஞ்சம் சிரமப்பட்டு ஏறி அமர்ந்தால் நந்தவனத்தின் அழகு முழுதும் தெரியும்! கண்ணுக்கு எவ்வளவு குளிர்ச்சி! சிறு சிறு பூக்கள் சிந்திக் கிடப்பதையும், மணல் மேடுகளில் சங்குப் பூச்சிகள் ஒளிர்வதையும், தாமரைக்கொடிகள் படர்ந்திருக்கும் நீர்ச்சுனைகளில் அன்னங்கள் துயில்வதையும் காண்பது கண்ணுக்கு எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்!" என்று ஊர்மிளா மெய்மறந்து நின்றாள்.

"அதற்கெல்லாம் நேரமில்லை; ஊர்மிளா, வா, போகலாம்."

"நந்தவனத்தில் ஏறிக் குதித்து இரண்டொரு பூக்களாவது கொய்து கொடு. முற்றுகையின்போது உயரமான மதுரைக் கோட்டையின் மதிற்சுவரில் ஏறிக் குதித்தவனுக்கு இது சிரமமில்லையே?"

"நான் வைஷ்ணவன். இது சிவன் கோவிலுக்குரிய நந்தவனம். இங்குள்ள பூக்களைத் தொட்டால் என் கையை வெட்டி விடுவார்கள்!"

"வீரன் கை என்றாவதொரு நாள் வெட்டுப்படக் கூடியதுதானே?" என்று ஊர்மிளா மெல்லச் சிரித்தாள்.

அவளது கருவிழிகள் சிற்பமண்டபத்தின்மீதே பதிந்திருந்தன. அந்தப் பாழடைந்த மண்டபத்தில் கவிந்திருந்த இருளையும், சிற்பங்கள் கைகாலற்று உடைந்து கிடக்கும் கோரத்தையும் அவள் பொருட்படுத்தவில்லை. அங்கே சென்று அமரவே அவள் பிடிவாதமாக விரும்பினாள்.

"வாலிபனே! அந்தச் சிற்ப மண்டபத்தில் கொஞ்ச நேரம் இருந்து நந்தவனத்தின் அழகைப் பார்த்துவிட்டுப் போகலாம்! நந்தவனத்தில் நீர் வாய்க்கால் சலசலவென்று ஓடும் சப்தம் இனிமையாயிருக்கும்!"

"வேண்டாம், ஊர்மிளா! என் பாசறைச் சிறைக்கு வா; அல்லது உன் வீட்டிற்குப் போகலாம். உன்னைப்

பத்திரமாக எங்கேயாவது கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு நான் உறங்கவேண்டும். நான் உறங்கி மூன்று நாளாகிறது!"

''அதெல்லாமில்லை! அந்தப் பாழடைந்த மண்டபத்தில் பேய் வாசம் இருக்குமோ என்ற பயம் உனக்கு! உடைந்து கிடக்கும் விளக்குப் பாவைச் சிற்பத்தில் மோகினிப் பிசாசு உலாத்துமோ என்று பயப்படுகிறாய்!"

"எமனையே எதிர்கொண்டழைப்பவன், மோகினிப் பேய்க்கு அஞ்சமாட்டேன்! அந்தப் பாழடைந்த சிற்ப மண்டபத்தில் பாம்பும் பூச்சிகளும் ஊரும் என்றுதான் பயப்படுகிறேன்!"

"பகல் நேரத்தில் பிரயாணிகள் அங்கே தங்கி மண்டபத்தில் சூதாடுகிறார்கள்! பாம்பு பூச்சி இராது!"

"வேண்டாம், ஊர்மிளா! வா போகலாம்!"

"முடியாது! கொஞ்சநேரம் அங்கே இளைப்பாறி விட்டுத்தான் வருவேன்! நீ என்னை என்ன வேண்டு மானாலும் செய்துகொள்!"

"இன்னும் கொஞ்ச தூரந்தானே, ஊர்மிளா? பாசறை வந்துவிடும்..."

"முடியாது! நடந்து நடந்து என் காலெல்லாம் வலிக்கிறது! என்னால் இனி ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது!"

"வேண்டுமானால் புஷ்பக் குடலையைப் போலத் தூக்கிக் கொண்டு போகிறேன்!"

"அழகாயிருக்கிறது! வேறு வினையே வேண்டாம்! அதைவிட நீ உடைவாளை உருவி என் நெஞ்சில் செருகி என்னைக் கொன்று விடலாம்!"

வீரசேகரன் வேறு வழியின்றி ஊர்மிளாவின் கோரிக்கைக்குச் சம்மதிக்க வேண்டியதாயிற்று. ஊர்மிளா

சிற்ப மண்டபத்தை நோக்கி 'ஜம்'மென்று தாவி ஓடினாள். அதன் படிகளில் வேகமாய் ஏறினாள்.

ஒரு படியிலிருந்த பாசியில் அவளது கால்கள் வழுக்கி, சருக்கென்று வீரசேகரன் மார்பில் சரிந்து விழுந்தாள். அந்த அதிர்ச்சியில் வீரசேகரன் கழுத்தைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டாள்.

"ஊர்மிளா!" என்று கூவிய வீரசேகரனுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. அவளது யௌவன முகத்தை மிருதுவாகத் திருப்பி தன்னிரு கைகளாலும் அந்த நிலா முகத்தை அள்ளியெடுத்து அதன் பசுமையைப் பருகிக் கொண்டேயிருந்தான். ஊர்மிளா வஞ்சிக்கொடி போல வளைந்து கொடுத்துக்கொண்டே, மெல்லக் கண்ணிமைகளைத் திறந்து, அவனை மெல்ல ஏறிட்டுப் பார்த்தாள். ஆசையால் சிவப்பேறிய ஆடலனது போதை விழிகள் பெண்மையின் நாணச்சிலப்பில் லயித்திருப்பதைக் கண்டாள்.

பாச அம்புகள் பாயும் அலனது வில்விழிகளும், கூர்மையாகப் பதம் பார்க்கும் அவளது வாள் விழிகளும் சந்தித்தன. இருவரது கண்களும் ஒன்றையொன்று கவ்வி உண்பது போல் நிலை தடுமாறி உணர்வு ஒன்றி ஒருகணம் ஒன்றோடொன்று உறைந்து கிடந்தன. பாலை. உறைவிக்கும் சிறு மோர்த் துளியைப் போல, அவளது கண்களின் வழியாகப் புகுந்து ஒரு சிறு காதல் உணர்ச்சி அவள் உடலெங்கும் பரவியது.

வீரசேகரன் உணர்ச்சிகளைத் தாங்க முடியாதவனாய் பித்தனைப் போல். "ஊர்மிளா...... ஊர்மிளா!" என்று அவள் உதட்டருகில் கூறினான்.

அந்த வாலிபனின் களைசொட்டும் முகத்திலும் சிவப்பான உதடுகளிலும் பொங்கி நிற்கும் உணர்ச்சிகளைக் கண்டதும் அவளுக்கு உடம்பெல்லாம் ஏதோ ஓர் அனல் வேகத்தில் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. உள்ளங்காலில் ஏதோ தீப்பிடித்து அதன் ஜ்வாலையில் கண்ணிமைகள் எரிந்தன. அவளது

மெல்லிய மேனி வெடவெடவென்று நடுங்கியது. வாலிபன் விடும் உஷ்ணமான மூச்சுகள் அவளது கன்னக் கதுப்புகளில் வந்து விழுந்து மோதின. அந்தம் இல்லாத அழகனை அள்ளி மாந்தியவண்ணம் மூச்சுப் பேச்சற்றுச் சித்திரப் பதுமைபோல் அசைவற்றிருந்தாள். அவளது சிந்தையும் நிறையும் மேனியழகும் ஸ்தம்பித்துப் போயிருந்தன. மனமெனும் மதயானை பெண்மையெனும் அங்குசத்திற்கும் அடங்காமல் மீறிச் சென்றது. ஏதோ தன்னை மீறிய ஒரு கனவுப் போதையில் சக்தி குன்றிப் போனவளாய், வாலிபனின் முகத்தை மந்தமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அந்தப் பார்வையில் ஏக்கமும் தவிப்பும் பீதியும் கலந்திருந்தன. ஏதோ மூர்ச்சை வசப்பட்டவளாய் அந்த நிலையிலே சில கணங்கள் மெய்மறந்திருந்து விட்டு, பிறகு சுயநினைவு வந்தவளாய் வீரசேகரனின் கைகளிலிருந்து தன்னையும் தன் முகத்தையும் விடுவித்துக் கொண்டு தாவி ஓடி ஒரு படிமீது அமர்ந்தாள்.

அவளுக்கு அழவேண்டும் போலிருந்தது. ஏதோ செய்யத் தகாத செய்கையை செய்துவிட்டது போல் ஓவென அழுது துடிக்க வேண்டும் போலிருந்தது. ஆனால் அழுகையை அடக்கிக் கொண்டாள். வீரசேகரன் அவளருகில் வந்தமர்ந்ததும் கருவிழிகளில் அரும்பியிருந்த கண்ணீர்த் துளிகளைத் துடைத்தெறிந்து விட்டு முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள். வீரசேகரனை ஏறிட்டுப் பார்க்கவே அவளுக்கு வெட்கமாக இருந்தது.

சிறிது நேரம் மௌனத்தில் கழிந்தது. சூன்யமான சிற்ப மண்டபத்தில் மௌனமாய் அமர்ந்திருப்பது வீரசேகரனுக்குப் பிடிக்கவில்லை.

"உன் பெயர் ஊர்மிளா என்று பொய்தானே சொன்னாய்?" என்று வீரசேகரன் கேட்டான்.

''ஆமாம்!'' என்று பூரிப்பான கன்னங்களில் மந்தஹாசம் தவழ 'ஜம்'மென்று தலை ஆட்டினாள்

ஊர்மிளா. சகஜமான குறும்புப் புன்னகையையும் கூடவே வரவழைத்துக் கொண்டாள்.

"உன் நிஜமான பெயரென்ன?" என்று அவன் விடாமல் கேட்டான்.

''ஏன், ஊர்மிளா என்ற பெயர் அழகாயில்லையா?"

''உன்னால் அந்தப் பெயரும் ஓர் அழகு பெறுகிறது!"

''வாலிபனே! நான் அவ்வளவு தூரம் அழகானவளில்லை!"

"உன்னையா அழகில்லையென்று சொல்லுகிறாய்? ஊர்மிளா! ஆயிரம் வருஷங்களுக்கு ஒருமுறை தோன்றும் ஓர் அழகுத் திரட்சி நீ! இதயக் கூண்டில் ஓயாமல் ஆத்மமொழிகள் பேசும் பசுங்கிளி நீ! உன் மாயச் சிரிப்பு, மகரயாழில் மகரந்தப் பூக்கள் மீட்டும் இன்னிசை! உன் குரலினிமை, பாற்கடலில் திரளும் தேவ அமுது! உன் கருங்கூந்தல் காவிரியாற்றின் வளமான கருமணல்!... ஊர்மிளா, நீ எவருக்கும் எட்டாத வானக்கொம்பிலுள்ள பசுந்தேன்!" என்று உணர்ச்சி மிகுதியால் வீரசேகரன் வர்ணித்துக் கொண்டே போனான்.

ஊர்மிளா அவனை நோக்கி விளையாட்டாய்ச் சிரித்துக்கொண்டே, "வீணாக என் அழகை வர்ணிக்க வேண்டாம்! என்னை என் வழியே போகவிட்டால் போதும்!" என்றாள். அவளது வேலாயுதம் போன்ற கூர்மையான பார்வை அவனது வலிமையான தோள்கள் மீதே ஆழ்ந்திருந்தன.

"ஊர்மிளா! உன்னை விட்டுவிட்டால் ஜனநாதன் என் ஜன்ம விரோதியாகி விடுவான்! அரசாங்கம் எனக்கு என்ன தண்டனை விதிக்குமோ தெரியாது! உனக்காக என் தலையையும் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்! ஆனால் இவ்வளவு ஒத்தாசையையும் யாருக்காகச் செய்கிறேன் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்!"

“வாலிபனே! இவ்வளவு தியாகங்களுக்கும் நான் ஏற்றவளல்ல. நான் சாதாரணமான ஒரு வேலைக் காரி!”

“நான் நம்பவில்லை!”

“ஏன்? வேலைக்காரி இவ்வளவு அழகாயிருக்க மாட்டாளென்று நினைக்கிறாயா? வாலிபனே! பாண்டிய நாட்டில் வேலைக்காரிகள்தான் நல்ல உடல் வளத்தோடு அழகாயிருப்பார்கள்! எஜமானிகளின் கழுத்தில் ஏராளமான நகை இருக்குமே தவிர முகத்தில் களை இருக்காது!”

“உன்னைப் பார்த்தால் கலையரசியாய்த் தென்படுகிறாய்! கம்பராமாயணத்தில் நன்கு தேர்ச்சிபெற்றுப் பாலைவிட இனிப்பான குரலில் கவிதை பாடுகிறாய்!”

“நான் கம்பன் வீட்டு வேலைக்காரி! கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடுமென்று கேள்விப்பட்டிருப்பாயே?”

“உன் உண்மையான பெயரென்ன?”

“மின்மினி!” என்று ஊர்மிளா குறும்புச் சிரிப்புடன் பதிலளித்தாள்.

“மின்மினியே! உன் இஷ்டப்படியே எங்கு வேண்டுமானாலும் போகலாம்...ஊர்மிளா, போ!...”

“மாட்டேன்! என்னையறியாமல் என்னைப் பின்தொடர்ந்து என் வீட்டைத் தெரிந்துகொள்வாய்! என்னை அடிக்கடி சந்திக்க முயல்வாய். என் வீட்டுக்காரர்களுக்குத் தெரிந்தால் உன் கழுத்துக்கும் ஆபத்து! என் கழுத்துக்கும் ஆபத்து! இந்த வினையே வேண்டாமென்றுதான் என்னைப் பற்றிய மர்மங்களைச் சொல்லாமல் மறைக்கிறேன்!”

“கடைசியில் நீ என்னதான் செய்யப் போகிறாய்?”

"உன்னை எப்படியாவது ஏமாற்றி உனக்குத் தெரியாமல் நழுவி ஓடிவிடுவேன்..." என்று ஊர்மிளா சிரித்தாள்.

இவ்வளவு சம்பாஷணைகளுக்கிடையிலும் அவளது கருவிழிகள், நந்தவனத்தின் புதர்களையும் சிற்ப மண்டபத்தின் இருளையும், தெருவின் சூன்யத்தையுமே ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்தன. அவள் யாரையோ எதிர்பார்ப்பது போலிருந்தது.

'இன்னும் ஏன் மூன்றாவது சாமக்கால மணி அடிக்கவில்லை?' என்று அவள் நெஞ்சில் ஒரு நினைப்பு ஓடியபோது, 'பிணம் தின்னி' வெளவால் ஒன்று சிற்ப மண்டபத்தில் கிரீச்சென்று பறக்கும் சப்தத்தோடு, தூரத்தில் மூன்றாவது சாமக்கால மணி அடிக்கும் ஓசை, இரவின் நிச்சப்தத்தில் கடூரமாகக் கேட்டது!

வாழ்ச்சியுற்ற செந்தாமரைபோல ஊர்மிளாவின் முகம் மலர்ந்தது. வீதியை உற்றுப் பார்த்த வண்ணமிருந்தாள்.

வீதியின் திருப்பத்தில் தெற்கு வெளி வீதியில் யாரோ நாலைந்து ஆட்கள் தடதடவென்று நடந்துவரும் காலடியோசைகள் இருளின் நிச்சப்தத்தில் பயங்கரமாய்க் கேட்டன!



# அத்தியாயம் 5

## குகப்படலம்

*பொருப்பு ஏந்திய தோளானொடு*
*விளையாடினள்; போனாள்.*

கம்ப ராமாயணம்

மங்களமான சங்கநாதம் இரவின் நிச்சப்தத்தில் கணீரென்று ஒலித்தது! அதைத் தொடர்ந்து தெருவின் திருப்பத்தில் கேட்ட காலடி ஓசைகளும் நின்றுவிட்டன!

சிற்ப மண்டபத்தில் வீரசேகரன் அருகில் அமர்ந்திருந்த ஊர்மிளா, சங்கு ஒலி கேட்டதும் வான் ஒலி கேட்டவள்போல், தேகம் புல்லரிக்க ஆவலுடன் முகம் மலர்ந்து காணப்பட்டாள். வீரசேகரன் தன் இடுப்பில் தொங்கும் வைடூரிய வாளின் கைப்பிடி மீது கை வைத்தான். தான் சிறைப்பிடித்த ஊர்மிளாவைத் தன்னிடமிருந்து காப்பாற்றிப் போக அடுத்த தெருவின் திருப்பத்தில் யாரோ நாலைந்து ஆட்கள் மறைந்திருக்கிறார்களென்றும், சங்கு ஒலி அவர்களின் சங்கேத ஒலியாக இருக்கலாம் என்றும் சந்தேகித்தான்.

அதற்கேற்றாற்போல் மறுபடியும் சங்கு அசாதாரணமான முறையில் பூம்பூம் என்று இடையிடையே விட்டுவிட்டு, குறிப்பாக மூன்று முறை முழங்கியது.

உடனே சிற்ப மண்டபத்திலிருந்த ஊர்மிளா, "ஓம், திருச்சிற்றம்பலம்! நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!" என்று உரக்கக் கூவினாள்.

சட்டென்று வீரசேகரன், "ஊர்மிளா! ஏன் இப்படிக் கூவுகிறாய்?" என்று கேட்டான்.

"நான் சிவமதம்! சங்கு ஒலி கேட்டதும் சிவமந்திரத்தை உச்சரிப்பது என் வழக்கம்!" என்றாள் ஊர்மிளா.

"அதற்காக அடுத்த தெருவிலுள்ளவர்களின் காதில் விழும்படியாக ஏன் இப்படி உரக்கக் கூவுகிறாய்?"

"ஆண்டவன் காதில் விழவேண்டும் என்பதற்காகத் தான்! பெரிய மனிதர்கள் போல மற்றவர்கள் காதில் விழாதபடி சிவநாமத்தை வாய்க்குள் முணுமுணுக்கும் வழக்கம் என்னிடமில்லை!" என்றாள் ஊர்மிளா வெடுக்கென்று.

"ஊர்மிளா, அடுத்த தெருவில் காலடி ஓசைகள் கேட்டன. இப்போது அவை நின்றுவிட்டன. அங்கு மறைந்திருக்கும் முரடர்கள் உன் குரலைக் கேட்டு ஓடி வந்து என்னோடு சண்டையிட்டு உன்னைக் காப்பாற்றுவார்கள் என்று எதிர்பார்க்கிறாய்!"

"உன்னிடந்தான் ஜனநாதன் தந்த வைடூரிய வாள் இருக்கிறதே! அந்த வாளோ சோழ சாம்ராஜ்யத்தின் மகத்தான வெற்றி வாள். நீயோ எங்கள் மதுரைக் கோட்டையைச் சுலபமாய்க் கைப்பற்றிய சூராதிசூரன்! இனி இந்தச் சூரனை வெல்ல ஒரு குகப்பெருமானும் அவதரிக்க மாட்டார்!" என்று சிரித்தாள் ஊர்மிளா.

"ஊர்மிளா, ஏளனம் செய்கிறாய்! என் முன்னால் பத்து முரடர்கள் ஒரே சமயத்தில் ஒன்றாக ஓடிவந்து எதிர்த்தாலும், என் கையில் ஒரு வாள் இருக்கும்வரை வெற்றி என் பக்கந்தான்!"

"வாலிபனே! உன்னை நானாக ஏமாற்றி ஓடுவேனே தவிர, இந்த அற்ப விஷயத்திற்காகப் பிறர் உதவியை எதிர்பார்க்கவில்லை!" என்றாள் அலட்சியமாக ஊர்மிளா.

"எங்கே ஓடுவாய்?"

"கோட்டைக்கு வெளியே என் வீடு இருக்கிறது!"

"அப்படி ஏன் என்னை ஏமாற்றி ஓட விரும்புகிறாய்?"

"அதுதான் சொன்னேனே! நான் பெண்! உன் சம்பந்தம் இருப்பது தெரிந்தால் என் வீட்டுக்காரர்கள் சந்தேகிப்பார்கள்! என் புருஷன் முரடன். என்னையும் உன்னையும் உடனே கொன்று விடுவான்!"

"நீ எவனுக்கும் மனைவியல்ல என்று என் இருதயம் சொல்லுகிறது!"

"இருதயம் சொல்லுவதை நம்பக்கூடாது என்று தத்துவஞானிகள் சொல்லுகிறார்களே!"

"ஊர்மிளா! உன் கழுத்தில் தாலி இல்லை!"

"வாலிபனே! கழுத்தில் தாலி இல்லை என்றால் கன்னிப்பெண் என்று அர்த்தமல்ல! ஒரு முரடனின் ஆசைநாயகியாக இருப்பதற்குத் தாலி அவசியமல்ல! தாலி கட்டாவிட்டாலும் அவன் என் புருஷன்தான்!"

"உன் முகத்தில் பசுமை இருக்கிறது. நீ முரடனின் ஆசை நாயகியாக இருக்கமாட்டாய்! ஊர்மிளா, உன் வீட்டில் பெற்றோர்கள் உன்னை அநாவசியமாகச் சந்தேகிப்பார்கள் என்பதற்காக உனக்கொரு புருஷன் இருப்பதாக என்னிடம் நீ பொய் சொல்லவேண்டாம்!" என்றான் வீரசேகரன், சிறிது வருத்தம் கலந்த குரலில்.

ஊர்மிளா ஏதோ சிந்தனையில் ஒருகணம் ஆழ்ந்திருந்துவிட்டு, "வீரசேகரா! முரடர்கள் யாராவது வந்து நம்மை வளைத்துக் கொண்டால் என்ன செய்வது? உன் கையில் வீரவாள் இருப்பதால் முரடர்களிடமிருந்து உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளலாம். ஆனால் நான் அழகாயிருப்பதால் அந்த முரடர்களிடமிருந்து என் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது!" என்றாள்.

"மலையையும் ஏந்தக்கூடிய என் தோள் வலிமைமீது உனக்கு நம்பிக்கை இல்லையா? இந்த மாபெரும் மதுரைக்

கோட்டையை ஒரே நாளில் சுலபமாய்க் கைப்பற்றிய மகாவீரன் நான்!" என்றான் வீரசேகரன்.

"தூங்குகிற மனிதனின் தலையை வெட்டுவதுபோல் எதிர்பாராத சமயத்தில் உங்கள் சோழப்படை முற்றுகையிட்டதால்தான் எங்கள் தலைநகர்க் கோட்டையை நீ சுலபமாகக் கைப்பற்ற முடிந்தது!" என்று ஊர்மிளா பரிகாசம் செய்தாள்.

மதுரைக் கோட்டையைச் சோழர்கள் எவ்வாறு கைப்பற்றினார்கள் என்று ஊர்மிளா நிறையக் கேள்விப்பட்டிருந்தாள். அவையெல்லாம் அவள் நினைவில் வந்து நின்றன.

சிறிதும் எதிர்பாராத சமயத்தில் சோழ நாட்டுப் படை மதுரைக் கோட்டையின் நான்கு புறமும் வளைத்துக் கொண்டு முற்றுகையிட்டதனால்தான் வீரபாண்டியன் படுதோல்வியடைந்து தன் தலைநகரைப் பறிகொடுக்க நேர்ந்தது. அவனுடைய பாண்டிய சிம்மாசனத்தைப் பறித்து அவனுடைய பங்காளியான விக்கிரம பாண்டியனுக்குத் தானம் கொடுக்க மூன்றாவது குலோத்துங்க சோழமன்னன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வருவான் என்பதும், நாடு இரண்டு கட்சிகளாகப் பிளவுண்டு கிடக்கிறதென்பதும் வீரபாண்டியனுக்குத் தெரிந்ததுதான்! ஆனால் சோழர் படை பாண்டிய நாட்டின் பல பகுதிகளையும் சுற்றுப்புறமுள்ள கோட்டைகளையும் படிப்படியாகத் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டு கடைசியில்தான் தலைநகரான மதுரைக் கோட்டையைத் தாக்கும் என்று வீரபாண்டியன் கருதியிருந்ததால், தன்னுடைய ஏழகப்படை, மறவப்படை, முனையெதிர் 'மோகர்'படை அனைத்தையும் பாண்டிய நாட்டின் பல கோட்டைகளுக்கும் அனுப்பி அவற்றைப் பலப்படுத்தி யிருந்தான். தலைநகர்க் கோட்டைக்குள் அவனது மெய்காவற் படையினரும், 'தென்னவன் ஆபத்துதவிகளும்' இலங்கைப் படையில் ஒரு பகுதியினரும் மட்டுமே இருந்தனர். சேர ராஜன் உதவியைப் பெறுவதற்காக வீரபாண்டியன் சேரராஜன் மகளை மணந்து அவளது

பிறந்ததின விழாவை மதுரையில் உற்சாகமாகக் கொண்டாட வேண்டிய அலசியமும் நேரிட்டது. இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சோழநாட்டுப் படை, யுத்த தர்மத்தையும் அநுசரிக்காமல், முன்னறிவிப்பின்றிப் படையெடுத்து வந்து, இரகசியமாய்ப் பாண்டியநாட்டிற்குள் புகுந்து திடுமென்று தலைநகரான மதுரையை வளைத்துக் கொள்ளவே, வீரபாண்டியன் ஸ்தம்பித்துப் போனான்! தலைநகர்க் கோட்டையின் நான்கு கோட்டை வாசல்களையும் இழுத்து மூடிவிட்டு உள்ளே நாற்படைகளையும் திரட்டி நிறுத்தி, முற்றுகையில் தலைநகர் எதிரிகளின் கையில் விழுந்துவிடாமல் சமாளிக்க முயன்றான். ஆனால் சோழ ஏகாதிபத்தியத்தின் ஆக்ரமிப்புத் திட்டங்களில் நன்கு ஊறி, நாடுகள் பிடிப்பதில் நன்கு அநுபவம் பெற்றிருந்த சோழப் படையினர் எவ்வளவு பெரிய கோட்டையையும் எளிதில் கைப்பற்றும் சூரர்களாயும் மதியூகிகளாயும் இருந்தனர். மதுரைக் கோட்டையைச் சுற்றிலும் ஒரு பெரிய நீர் அகழியும், அதனுள் பெரிய பெரிய முதலைகள் பசியோடு வாயைப் பிளந்துகொண்டு கிடப்பதையும் கண்ட சோழ வீரர்கள், சுற்றுப் புறங்களிலுள்ள பாண்டிய நாட்டு ஏழை ஜனங்களைப் பிடித்து வந்து அகழிக்குள் தள்ளி அதைத் தூர்த்துவிட்டு, நான்கு புறமும் கோட்டையின் மதிற்சுவர்களை இடிக்கத் தலைப்பட்டனர். கோட்டைக்குள்ளோ வீரபாண்டியன் கைவசம் போதியளவு போர்வீரர்களோ யுத்த தளவாடங்களோ உணவுச் சேமிப்போ இல்லை...

சுற்றுப்புறமுள்ள பாண்டியநாட்டுப் பிரதேசங்களைப் பாதுகாக்க ஏராளமான படைகளை அனுப்பிவிட்டதால் கையில் எஞ்சியுள்ள தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நான்குவிதப் படைகளையும் நான்கு கோட்டை வாசல்களில் நிறுத்தினால் மட்டும் போதாது! கோட்டைக்குள்ளிருக்கும் பாமர ஜனங்கள் அனைவரும் சோர்வுறாமல் உயிரைத் திரணமாய் மதித்து ஒருமுகமாய்த் திரண்டெழுந்து போரிட்டால்தான் கோட்டையைப் பாதுகாக்க முடியும்! சோழர்களின் பயங்கரமான முற்றுகையைக் கண்டு பயந்து

நடுங்கும் பாண்டிய பாமர ஜனங்களின் நெஞ்சில் எவ்வாறு வீர உணர்ச்சியை எழுப்புவது? நான்கு கோட்டை வாசல்களிலும் நான்குவிதப் படைகளை நிறுத்தி அதற்கு யார் யாரை படைத்தலைமை பூண்டு நிற்கச்செய்வது? சோழர்களுக்குச் சாதகமாகக் கோட்டையை வீழ்த்துவதற்குக் கோட்டைக்குள்ளேயே விக்கிரமபாண்டியனின் கட்சி வீரபாண்டியனுக்கு எதிராகத் துரோகிகளைச் சிருஷ்டிப்பதில் மும்முரமாயிருக்கிறதே? கைலசம் நம்பிக்கையான படைத்தலைவர்கள் யார் இருக்கிறார்கள்? அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒருவன், ஈழவராயன் ஒருவன் ஆக இவ்விருவர்களைத் தவிர மற்ற நம்பிக்கையான படையதிகாரிகளெல்லாம் சுற்றுப்புறமுள்ள ஊர்களுக்குத் தங்கள் படைகளுடன் போயிருக்கிறார்களே? இந்த நிலையில் என்ன செய்வது? இவ்வாறெல்லாம் சிந்தித்த வீரபாண்டியன், தானும் தன் மனைவி மக்களும் போர்க்கோலம் பூண்டு நின்றால் என்ன என்று யோசித்தான்.

அவன் பேரழகி என்று கருதிப் புதிதாகத் திருமணம் புரிந்து கொண்ட சேரராஜன் மகள் அவன் அருகில் வீரமரணத்திற்குத் தயாராக இருந்தாள்! அவனுக்கு வேறு இராணிகளின் மூலம் பிறந்த இருகுமாரர்களும் இருந்தார்கள். அவர்களில் இளையவன் மலையரசன் மகள்மூலம் பிறந்தவன்; ஆறு வயதுகூட நிரம்பப்பெறாத பாலகன்... ஆனால் என்ன?... வீரபாண்டியனும், அவனது புது மனைவியும், அவனது மூத்த குமாரனும், ஆறு வயதுள்ள பச்சிளம் மகனும் ஆக நால்வரும் நாற்படைகளுக்குத் தலைமை பூண்டு, கோட்டையின் நான்கு வாசல்களிலும் வீரமரணத்தை எதிர்நோக்கி நின்றால், அதைக் கண்டு பாமரஜனங்கள் உள்ளம் உருகி உணர்ச்சிவசப்பட்டுப் போரிடுவார்களென்று வீரபாண்டியன் நினைத்தான். அதன் பிரகாரம் மேற்குக் கோட்டை வ்ாசலைப் பாதுகாக்க, அம்மதிற்சுவரின் உட்புறம் யானைப்படையை நிறுத்தி அதற்கு வீரபாண்டியன் தலைமை பூண்டு நின்றான். இந்த முற்றுகைக்கு மூல காரணமான விக்கிரமபாண்டியன்

என்ற பங்காளி, சோழியப்படை வீரர்களுடன் மேற்குக் கோட்டை வாசலைத் தாக்குகிறான் என்பது தெரிந்ததனால் அந்த வாசலில் தானே தலைமை பூண்டு எதிர்த்து நிற்பதுதான் தகுதியானது என்று கருதினான்.

கிழக்குக் கோட்டை வாசலிலோ, அதன் உட்புறம் பிரம்மாண்டமான தேர்ப்படையை நிறுத்தி அதற்கு அவன் புது மனைவியான சேரராஜன் மகள் தலைமை பூண்டு நின்றாள்.

வடக்குக் கோட்டை வாசலின் உட்புறம், குதிரைப் படையை நிறுத்தி அதற்கு வீரபாண்டியனின் மூத்த குமாரனான பராக்கிரமன் தலைமை பூண்டு நின்றான். அவனுக்கு உதவியாக அஞ்சுகோட்டை நாடாள்வான் என்ற குறுநில மன்னன் தன் பெரும்படையுடன் நின்றான்.

தெற்குக் கோட்டை வாசலின் உட்புறம் காலாட் படையை நிறுத்தி அதற்கு ஆறு வயது பாண்டியகுமாரன் தலைமை பூண்டு, ஈழவராயன் உதவியுடன் நின்றான். காலாட்படை என்பது பெரும்பாலும் வேற்படைதான். பெருவாரியான குதிரைப் படைகளும், யானைப் படைகளும் பாண்டிய நாட்டின் மற்றப் பகுதிகளுக்குச் சென்றுவிட்டதால், தலைநகரான மதுரையில் காலாட்படைதான் அதிகமாயிருந்தது. ஆகவே காலாட் படையும், தெற்குக் கோட்டை வாசலும் எதிரிகளினால் உடைபட்டுப் போனால் மூல பலமே சிதைந்து போன மாதிரியாகும். அப்படையைத் தெற்குக் கோட்டை வாசலில் அணிவகுத்து நிறுத்திய ஈழவராயன் என்ற இலங்கை நாட்டவன் அதிசாமர்த்தியசாலி. வீரபாண்டியனின் நம்பிக்கைக்குப் பாத்திரமான நண்பன். தன் வேற்படையையும் அதற்கு பாலமுருகக் கடவுள் போல் தலைமை பூண்ட பாண்டிய பாலகுமாரனையும் கடந்து எமன் கூடத் தெற்குக் கோட்டை வாசல் வழியாக நகருக்குள் நுழைய முடியாது என்று இறுமாந்திருந்தான் ஈழவராயன்.

தெற்கு மதிற்சுவரைச் சிதைக்கும் சோழப் படைக்குத் தலைமை பூண்ட வீரசேகரனோ, எமனையும் ஏவல்

செய்யக்கூடிய எமகாதகனாயிருந்தான்! இந்திரஜித்தைப் போல மாயாவியாய் மறைந்து நின்று கோட்டையைத் தாக்குவதில் வல்லவனாயும் இருந்தான்!

உயரமான கல்லெறி யந்திரங்களின்மூலம் ஆகாசத்திலிருந்து கல்மாரி பொழிவதுபோல பாறாங்கற்களைக் கோட்டைக்குள் வீசி, ஈழவராயனின் வேல் படையினரை அவன் நசுக்கினான். அதோடு நாகபாசம் போன்ற விசித்திரமான விஷ அம்புகளையும் சரமாரியாகக் கோட்டைக்குள் தொடுத்தான். நெருப்பில் வாட்டினால் மயக்கவாசனையையும் புகையையும் எழுப்பக்கூடிய விஷப் பூண்டுகளைத் துணியில் வைத்து மூடிப் பந்தங்களாக்கி, அவற்றை அம்புகளில் கட்டி வைத்திருந்தான். அம்புகளை எண்ணெயில் நனைத்து, ஒரு முனையில் இலேசாகத் தீயைப் பொருத்தி, அக்னியாஸ்திரங்களைப் போலக் கோட்டைக்குள் பிரயோகித்தான். அம்புகள் நெருப்புப் பொறிகளுடன் கோட்டைக்குள் விழுந்து, தீ கொழுந்துவிட்டு எரிந்து நெருப்பு அணைந்ததும், உள்ளே பந்தங்களிலுள்ள விஷப் பூண்டுகள் வெந்து கருகி, மயக்க வாசனையோடு கூடிய விஷவாயுப் புகை குப்பென்று கிளம்பி நாலாபுறமும் பரவி, கோட்டைக்குள்ளிருந்த வேற்படையினரை மூர்ச்சிக்கச் செய்தது. மயக்கப் புகையைச் சமாளிக்க முடியாமல் கோட்டைக்குள்ளிருந்த வேல் வீரர்களும் ஈழவராயனும் பிரக்ஞை தடுமாறிச் சுருண்டு வீழ்ந்தனர். சோழப் பெருவீரனான வீரசேகரனின் இந்தப் பிரம்மாஸ்திரம் போன்ற விசித்திரமான மயக்க வாசனை அம்புகளால் கோட்டைக்குள்ளிருந்த ஈழவராயனின் மாபெரும் வேற்படை கதிகலங்கி விட்டது. அதோடு வீரபாண்டியனின் மூலபலப் படையே சிதைந்து விட்டது.

இந்த நிலையில் வீரசேகரன் துணிச்சலுடன் மதிற்சுவரின் மீதேறி மாயாவிபோல் உள்ளே குதித்துத் தெற்குக் கோட்டை வாசலைத் திறந்துவிட்டான்; அவனது சோழியப்படை மடை திறந்த வெள்ளம் போல் தெற்குக் கோட்டை வாசலுக்குள் பாய்ந்து வேற்படையினரைச் சின்னாபின்னமாக்கி இரத்த வெள்ளத்தில் மிதக்கச்

செய்தது. வேற்படைத் தலைவனான ஈழவராயன் மூர்ச்சை தெளிந்து பார்க்கும்போது தன்னருகிலிருந்த ஆறு வயது பாண்டிய குமாரன் என்ன கதியானான் என்று தெரியவில்லை!

அதே சமயம் வடக்குக் கோட்டை வாசலில் இளவரசனுக்கு உதவியாய்த் துணைப்படையுடன் நின்ற அஞ்சுகோட்டை நாடாள்வான் முற்றுகையின் நெருக்கடியான கட்டத்தில் எதிரிகளின் கையாளாக மாறி, கோட்டைக்குள்ளேயே கலகத்தை மூட்டி, இளவரசனின் குதிரைப் படையினரைக் கொன்று குவிக்கத் தொடங்கினான்; வடக்குக் கோட்டை வாசலையும் எதிரிகளுக்குத் திறந்துவிட்டு மகத்தான துரோகம் இழைத்தான். அந்த மதிற்சுவரை மோதி உடைத்துக் கொண்டிருந்த சோழர்களின் மாபெரும் யானைப்படை எளிதில் கோட்டைக்குள் நுழைந்துவிட்டது! அவ்வடக்கு வாயிலில் எஞ்சியிருந்த பாண்டிய இளவரசனின் குதிரைப்படையும் சோழர்களின் மதயானைகளைக் கண்டு மருண்டு ஓடி, மிதியுண்டு துவையுண்டு போயின! பாண்டிய இளவரசன் என்ன கதியானான் என்று தெரியவில்லை!

கிழக்குக் கோட்டை வாசலில் பிரம்மாண்டமான தேர்ப்படைகளுடன் அணிவகுத்து நின்ற வீர பாண்டியனின் புது மனைவியோ, சோழியர்கள் எறியும் அக்னியாஸ்திரங்களைக் கண்டு திடுக்கிட்டாள். சோழிய வீரர்கள் கோட்டைக்கு வெளியே வெகு தொலைவில் அணிவகுத்து நின்று தங்கள் நெருப்பெறி யந்திரங்கள்மூலம் தீப்பந்தங்களை அக்கினிமாரியாகக் கோட்டைக்குள் எறிந்தனர். அவர்கள் அருகில் வந்தால் அவர்கள் தலையில் எண்ணெய் ஸ்நானம் செய்விப்பதற்காகக் கோட்டை மதிற்சுவர் மீது எண்ணெய்க் கொப்பரைகள் கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சி வைக்கப்பட்டிருந்தன. சோழிய வீரர்கள் தங்கள் கல்லெறி யந்திரங்களின் மூலம் பாறாங்கற்களை வீசி அந்த எண்ணெய்க் கொப்பரைகளையெல்லாம் கோட்டைக் குள்ளேயே கவிழ்ந்து விழும்படிச் செய்து விட்டனர். உள்ளேயிருந்த தேர்ப்படை வீரர்களெல்லாம் சுட்டுப்

பொசுக்கும் எண்ணெயில் குளித்தெழுந்து உடலில் கொப்புளங்கள் கிளம்ப அலறித் துடித்தனர். அங்கிருந்த பிரம்மாண்டமான மரத்தேர்களெல்லாம் ஒரே எண்ணெய்க் காப்புப் பூசப்பட்டு, அதே சமயம் தீப்பந்தங்கள் சரமாரியாக வந்து விழவே பிரம்மாண்டமாகத் தீப்பிடித்து எரிந்து போயின! அக்குழப்பத்தில் வீரபாண்டியன் மனைவி என்ன கதியானாள் என்று தெரியவில்லை!

மேற்குக் கோட்டை வாசலில் சிறு யானைப் படையுடன் அணிவகுத்து நின்ற வீரபாண்டியனோ, போரின் நடுவில் தன் படை யானைகள் திடுமென மதம் பிடித்து ஓடுவதையும் மயங்கிச் சுருண்டு இறந்து விழுவதையும் கண்டு திடுக்கிட்டான். அவனது யானைப் படையைக் கண்காணித்து வந்த அதிகாரி, அணிவகுப்பிற்கு யானைகளைத் திரட்டும்போது அவற்றிற்கு இரகசியமாகத் தீனியும் தண்ணீரும் கொடுத்தான்; அந்தத் தீனியில் மத நீரையும் வெறியையும் ஊட்டக்கூடிய விஷ மூலிகைகளைக் கலந்திருந்தான். இவ்வாறு அந்த யானைப் படை அதிகாரி, நெருக்கடியான கட்டத்தில் சோழியர்களின் கையாளாக மாறி மகத்தான துரோகம் புரிந்துவிட்டான். சோழ வீரர்கள் மேற்குக் கோட்டை வாசலை உடைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தனர். அக்குழப்பத்தில் வீரபாண்டியன் என்ன கதியானான் என்று தெரியவில்லை!

"ஊர்மிளா! என்ன ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறாய்?" என்று வீரசேகரன் அவளை உற்றுப் பார்த்தான்.

"ஒன்றுமில்லை! அடுத்த தெருவில் மறைந்துள்ள முரடர்கள் என்னைப் பார்த்துவிட்டால் என்ன செய்வது என்றுதான் சிந்திக்கிறேன்!"

"ஊர்மிளா! நான் மதுரையின் முரடான தெற்குக் கோட்டை வாசலையும் அங்கிருந்த பிரசித்தி பெற்ற ஈழவராயனின் முரட்டு வேற்படையையும் கதிகலங்கச் செய்தவன்! உன் மீதோ என் மீதோ எந்த முரடர்களும் கை வைக்க விடமாட்டேன்!"

"ஈழவராயன் பயங்கரமான மனிதராம்; நான் பார்த்ததில்லை! நீ பார்த்திருக்கிறாயா?"

"இல்லை! தெற்குக் கோட்டை வாசலை உடைத்ததும் முதலில் அந்த ஈழவராயன் மீது பாய்ந்து அவன் கழுத்தை என் கைகளால் நெறிக்க வேண்டுமெனத் துடித்தேன். ஆனால் அந்தக் கோழை என் கைக்குச் சிக்காமல் எங்கோ ஓடி ஒளிந்துகொண்டான். எனக்குச் சமதையான வீரன் எனப் பேசப்பட்ட அந்த இலங்கைப்புலி ஈழவராயனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றுதான் ஓயாமல் தேடி அலைகிறேன்!"

"உன் சோழ அரசாங்கம், வீரபாண்டியனின் வம்சத்தை நிர்மூலமாக்க அவனது இரு குமாரர்களையும் தேடி அலைகிறது! நீயோ உனக்குச் சமதையான ஒரு மாவீரனை நிர்மூலமாக்க ஈழவராயனைத் தேடி அலைகிறாய்! வீரபாண்டியனின் கட்சிகூட இம்மூவரும் எங்கு மறைந்திருக்கிறார்களோ, என்ன கதியானார்களோ, உங்கள் கையில் அகப்பட்டு விடுவார்களோ, என்று மதுரையெங்கும் இரகசியமாகத் தேடி அலைகிறது! வாலிபனே! கோட்டைவிட்ட ஈழவராயனை வீர சுவர்க்கத்தில்தான் நீ தேடிப் பார்க்க வேண்டும்!"

"இதெல்லாம் உனக்கெப்படித் தெரியும், ஊர்மிளா?"

"அதுதான் சொன்னேனே, உங்கள் ஒற்றர்கள் சேகரிக்க முடியாத விஷயங்களையெல்லாம் பெண்கள் குளத்தங்கரையில் சர்வசாதாரணமாக அலசுவார்கள் என்று!...... வாலிபனே, வீரபாண்டியனின் எவனாவது ஒரு குமாரனைப் பிடிப்பதற்கு ஒரு வழி சொல்லுகிறேன்... அரசாங்க விசாரணையென்று என்னை அநாவசியமாகச் சந்திக்கு இழுக்காமல் நீ விட்டுவிடுகிறாயா?" என்று கேட்டாள் ஊர்மிளா.

வீரசேகரன் மௌனமாயிருந்தான். அந்தச் சமயம் சிற்ப மண்டபத்தின் பின்புறமோ, பின்புறத் தெருவி லிருந்தோ ஒரு கொம்பு ஊதும் சப்தம் கேட்டது. அதோடு

யாரோ ஒருவன், 'ஓம் சக்திமாதா!' என்று கூவும் சப்தமும் இரவின் நிச்சப்தத்தில் தெளிவாய்க் கேட்டது.

ஊர்மிளா உடனே, ''ஓம்! திருச்சிற்றம்பலம்! நமச்சிவாயா போற்றி! நாதன் தாள் போற்றி!'' என்று மெய்ம்மறந்து கூவினாள்.

அடுத்த கணம் தெருவின் திருப்பத்தில் சங்கநாதமும், யாரோ நாலைந்து ஆட்கள் நடந்து வரும் காலடி ஓசைகளும் கேட்டன. அதோடு மெல்லிய தேவாரப் பஜனையும் வலம்புரிச் சங்கொலியும் இரவின் நிச்சப்தத்தில் கணீரென்று ஒலித்தன.

*நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான் நடுவே*
*வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்*
*ஆடகச் சீர் மணிக்குன்றே!*

இந்த தெய்வீகத் திருவாசக அடிகளைப் பாடிக்கொண்டே சிவயோகி போலத் திருமேனியின் பதினாறு இடங்களிலும் விபூதி தரித்த ஒரு படகோட்டி, கையில் வேல் ஏந்தியவண்ணம் சிற்ப மண்டபத்தை நோக்கி நடந்து வந்தார். அவர் பின்னால் இரண்டு செம்படவர்கள் ஒரு சிறு பல்லக்கைத் தங்கள் தோள்களில் சுமந்தவண்ணம், 'முருகா போற்றி! கந்தா போற்றி! குகா போற்றி!' என்று போற்றித் திருவகவல் பாடிக்கொண்டு வந்தனர். மற்ற இருவர் பூப்பல்லக்கின் இருபுறமும் வந்தனர். ஒருவன் வலம்புரிச் சங்கும் தப்பட்டமும் ஏந்தியிருந்தான். இன்னொருவன் தீவட்டி பிடித்துக் கொண்டு வந்தான். நான்கு செம்படவர்களும் திருநீறு அணிந்து பரிபூரணப் பக்தர்களாய் விளங்கினார்கள்.

அச் செம்படவர்களுக்கும் பூப்பல்லக்கிற்கும் முன்னால், பஜனைக் கோஷ்டியின் தலைவரைப் போலப் படகோட்டிச் சாமியார் தேவாரம் பாடிக்கொண்டே நடந்து வந்தார். அவரைக் கண்டதும், காணாமற் போன மைந்தனைக் கண்ட தாயின் முகம் ஆனந்தத்தால் மலர்வது போல, ஊர்மிளாவின் செந்தாமரை முகம் மலர்ந்தது.

படகோட்டிச் சாமியார் அவள் இருந்த திசையை நோக்கிக் கொண்டே அப்பர் தேவாரத்திலிருந்து ஒரு பாசுரத்தைப் பாடலானார்:

தேடிக் கண்டு கொண்டேன்!
திருமாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை, என்உளே
தேடிக் கண்டுகொண்டேன்!

அதைக் கேட்டு ஊர்மிளாவும் பக்தி பரவசமாகித் தேவாரப் பஜனை செய்ய ஆரம்பித்து விட்டாள்:

தேடிச் சென்று திருந்துஅடி ஏத்துமின்!
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வார்
ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப்போம் நமது உள்ள வினைகளே!

இவ்வாறு ஊர்மிளா பாடிக்கொண்டே படகோட்டியை நோக்கி ஓடினாள்.

அவள் பின்னால் ஓடிவந்த வீரசேகரன், அவளைத் தடுத்து நிறுத்தி, "ஊர்மிளா, நீ ஏன் பாடுகிறாய்?" என்று கேட்டான்.

"அப்பர் தேவாரத்தில் கலந்து கொள்கிறேன், வைணவனுக்கு விரிந்த மனப்பான்மை இருக்குமென்றால் நீயும் கலந்து கொள்ளலாம்!" என்றாள் ஊர்மிளா வெடுக்கென்று.

இதற்குள் படகோட்டியின் சாம்பல் உருவமும் விபூதி பூசிய மூடுபல்லக்கும் அவர்களருகில் வந்து விட்டன.

வீரசேகரன் அந்தப் பஜனைக் கோஷ்டித் தலைவரை நோக்கி, "ஏ பண்டாரம், நில்! உன் அன்னப் பல்லக்கையும் நிறுத்து! பெருமாள் கோவில் வீதியில் சிவபஜனையா?" என்று அதட்டினான்.

பஜனை கோஷ்டி நின்றுவிட்டது!

வீரசேகரனும் ஊர்மிளாவும் ஒன்றாக நெருங்கி நிற்பதைக் கண்ட படகோட்டிச் சாமியார், "சிவா, சிவா!" என்று காதுகளைப் பொத்திக் கொண்டு, "பாவம்! பாவம்! பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசமும், ஆணாகி வந்ததொரு வைணவப் பிசாசமும் ஒன்றாகி நிற்பதைக் கண்டுவிட்டேன்! மகா பாவம்! மகா பாவம்!" என்று கொடூரமாகக் கத்தினார்.

ஊர்மிளாவின் முகத்தாமரை ஒருவித கலக்கத்தாலும் கோபத்தாலும் கனன்று கூம்பியது. மனஸ்தாபத்தோடு வீரசேகரனை விட்டுச் சிறிது விலகி நின்றாள். படகோட்டியை முறைத்துப் பார்த்தாள். அவர்மீது கோபம் கொண்டவள் போல் நடித்தாளா, உண்மையில் உள்ளூரக் கோபந்தானா என்பது அவளுக்கே தெரியாது!

கருவிழிகளில் நீர் அருவி சோர, 'மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே...' என்ற சுந்தரர் தேவாரப் பாசுரத்தை உருக்கமாகப் பாடியவண்ணம் துயர ஓவியமாய் நின்றாள். படகோட்டியை ஏறிட்டுப் பார்க்கவே அவள் மனம் கூசியது.

அந்தப் படகோட்டி, இருளை வளைத்துக் கட்டியது போன்ற கூந்தல் முடியில் நெற்கதிர் ஒன்றைச் செருகியிருந்தார். இடையிலிருந்து துடைவரை சல்லட வகையைச் சேர்ந்த ஒரு குறுங்காற் சட்டை அணிந்து, அதன்மேல் ஒரு செந்நிறத் தோலைத் தொங்கவிட்டுப் புலியின் வாலை அரைக்கச்சாகச் சுற்றிக் கட்டியிருந்தார். அரைக்கச்சிலே இரத்தக்கறையுடன் பிரகாசிக்கும் வாள் ஒன்று தொங்கியது! பழுக்கக் காய்ச்சிப் பதமான அம்புகளுடன் வில் ஒன்றும் வைத்திருந்தார். அவருடைய சகாக்களான செம்படவர்களின் அரைக்கச்சுகளிலும் மீன் அறுக்கும் கட்டாரிகள் இருளில் மின்னின.

"ஏய், பண்டாரம், நீ படகோட்டிதானே?" என்று கேட்டான் வீரசேகரன்.

"ஆஹா! ஓம் குகா!... நான் துன்ப நதியைக் கடக்க உதவும் படகோட்டி! பால முருகன் அருளுக்கு வழிகாட்டி!"

"ஏய்! சங்கநாதம் புரிந்துகொண்டு பஜனைக் கோஷ்டியுடன் தெருவின் திருப்பத்தில் தடதடலென்று வேகமாய் வந்தவன் நீதானே? ஏன் சட்டென்று நின்று தெருவின் திருப்பத்திலேயே இவ்வளவு நேரமாய் மௌனமாகத் தங்கியிருந்தாய்? உடனே இவ்வீதியில் திரும்பி வருவதற்கென்ன?" என்று வீரசேகரன் அதட்டிக் கேட்டான்.

ஊர்மிளா குறுக்கிட்டு, "பல்லக்குச் சுமப்பவர்கள் இளைப்பாறியிருப்பார்கள். ஆட்கள் தோள்மாற்றிக் கொள்ளும் அவசியமும் ஏற்பட்டிருக்கும்!" என்றாள்.

வீரசேகரன் படகோட்டிச் சாமியாரை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டே, "ஏய் படகோட்டிப் பண்டாரம்! உன் மூடு பல்லக்கில் எந்த மூர்த்தியை வைத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

"பல்லக்கில் பால முருகக் கடவுள் இருக்கிறான்! அம்மையப்பன் கோவிலுக்குப் போகிறேன்; அவன் கையால் விபூதிப் பிரசாதம் வாங்கிக்கொள்! வைணவனே! நீ பிறவித் தொடர் அறுந்து கைலாசப் பதவி அடைவாய்!" என்றார் படகோட்டிச் சாமியார்.

பூப்பல்லக்கின் அருகில் நின்ற ஊர்மிளா, அப் பல்லக்கின் திரைக்குள் பால வடிவமுள்ள ஒரு சிறுவனின் உருவம் அசைவது போலவும், பல்லக்கின் உள்ளேயிருந்து இலேசாகக் குறட்டை விடும் சப்தம் வருவதையும் உணர்ந்தாள். ஆனால் சற்றுத் தள்ளி நின்ற வீரசேகரன் அதைக் கவனிக்கவில்லை.

"ஏய், பண்டாரம்! உன் பெயரென்ன?"

"என் பெயர் குகன்! அந்தப் பல்லக்கில் இருக்கும் மூர்த்தியும் குகன்! பல்லக்குச் சுமப்பவனும் குகன்! நீயும் குகன்! அவனும் குகன்! உலகமே குகன் மயம்!... ஓம் குகசரவணபவா!........" என்று அந்தப் படகோட்டிச் சாமியார் பல்லக்கிருந்த திசையில் திரும்பித் தரையில் சாஷ்டாங்கமாய் விழுந்து. "கந்தா! குகனே! கதிர்வேல்

முருகா! சிங்காரவேலா! சூரர்கள் பாலா! கங்காதரன் பாலா!.....முருகனே! மாயோன் மருகனே! ஈசன் மகனே! தும்பிக்கை முகன் தம்பியே! நின்னுடைய தண்டைக் காலெப்பொழுதும் நம்பியே கைதொழுவேன் நானே!" என்று தோத்தரித்துப் பக்திப் பரவசத்தில் மூழ்கியவாறு எழுந்து நின்றார்.

பல்லக்குச் சுமந்த செம்படவர்களும் அந்தப் பக்திப் பெருக்கில் உணர்ச்சி கொண்டு, "தேவர்கள் தேவே ஓலம்! சிறந்த சிற்பரனே ஓலம்! மேலவர்க்கு இடியே ஓலம்! வேற்படை விமல ஓலம்!" என்று ஓலமிட்டனர்.

வீரசேகரன் அப் படகோட்டியை நோக்கி, "நீ யார்?" என்று கோபமான குரலில் கேட்டான்.

படகோட்டி, ''ஹா...ஹா...ஹா'' என்று ஆங்காரத்துடன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு பஜனை பாடலானார்:

"ஒரு முருகா என்று என் உள்ளங் குளிர உவந்து உடனே
வரு முருகா என்று வாய் வெருவாநிற்ப கையிங்ஙனே
தரு முருகா என்று தான் புலம்பாநிற்ப, தையல் முன்னே
திரு முருகாற்றுப் படையுடனே வரும் சேவகனே!"

படகோட்டியின் பஜனைப் பாடல்களில் ஏதோ உள்ளர்த்தம் இருக்குமென்பதை நன்கு உணர்ந்திருந்த ஊர்மிளா, ''திருமுருகாற்றுப் படை என்ற சொற்றொடரைப் படகோட்டி அழுத்திப் பாடியதால், "திரு-முருகு-ஆற்று-படை" என்ற சொற்களாகப் பதம் பிரித்து, செல்வக் குமரனை-வையை-ஆற்று வழியாகக் கொண்டு போக முயலும்-படை" என்று மனதுக்குள் அர்த்தம் செய்து கொண்டாள். அந்தச் செல்வக் குமரன் மூடுபல்லக்குள் மறைந்திருக்கும் பால மூர்த்திதான் என்றும் நிச்சயித்துக்கொண்டாள்.

பித்தன் போலப் பேசும் படகோட்டியை வீரசேகரன் திவட்டி வெளிச்சத்தில் ஏற இறங்கப் பார்த்தான்.

மலைபோல் திரண்ட தோள்கள்; மதயானைபோல் உருவம்; சிரிப்பே இல்லாத முகம்; கூற்றமும் அஞ்சும் குரல்; எண்ணெய் உண்ட இருள் மேனி; நெல்லைத் தொடுத்ததுபோல் ஏறிச் சாய்ந்துள்ள அடர்த்தியான புருவம்; விஷ சர்ப்பத்தைப்போல் நடுக்க மூட்டும் பார்வை; வஜ்ஜிராயுதம்போல் இடை; கல்போல் விசாலமான மார்பு; பனைமரச் சிறாம்புபோல் முன்னங் கைகளில் அடர்த்தியான ரோமம்; செருப்புக்கள் அணிந்த பெரிய கால்கள்; அக்கால்களில் வீரத் தண்டைகள்.

இவ்வளவு கொடூரத் தோற்றமுள்ளவரும் செம்படவர்களும் நிஜமான சிவனடியார்களாக இருப்பார்களாவென வீரசேகரனால் சந்தேகிக்க முடியவில்லை. கடவுள் தாசராகத் தொண்டு புரியவோ, கடவுள் தூதராக உபதேசம் செய்யவோ இன்னின்ன ஜாதிதான் என்ற ஒரு நிர்ணயம் பாண்டிய நாட்டில் கிடையாது. சாணார் ஏனாதிநாயனாரும், பறையர் நந்தனாரும், வேடர் கண்ணப்பரும், செம்படவர் அதிபத்தரும், வண்ணார் திருக்குறிப்புத் தொண்ட நாயனாரும் கடவுளின் அவதார புருஷர்களாய்த் தமிழ் நாடெங்கும் பக்தி உபதேசம் செய்த பெரிய புராணப் பொன்யுகம் அது! மேலும் இரவின் மூன்றாவது ஜாமத்தில் பஜனைக் கோஷ்டி கிளம்புவதையும் சந்தேகிக்க இடமில்லை. திருப்பரங்குன்றத்தில் நடக்கும் முருகன் திருவிழாவுக்கு ஏற்பாடுகள் செய்யப் பகல் நேரத்திலேயே பரபரப்பாய் அலையும் மெய்யடியார்கள் இரவு நேரத்தில் அதிக மும்முரமாயிருப்பார்களென்றும் வீரசேகரன் சகஜமாய் நினைத்தான்.

"ஏய் படகோட்டி! உன் பெயர் குகன் என்கிறாய்! ராமாயணத்தில் வருவதுபோல் படகோட்டியாயு மிருக்கிறாய். குகன் எனும் நாமமுடையவன் வைஷ்ணவ ஆழ்வாராய் இராமல் சிவனடியாராய் இருக்கிறாயே?" என்று கேட்டான் வீரசேகரன் பரிகாசமாக.

"நான் கம்பராமாயணத்தில் வரும் அந்த நாவாயன் குக ஆழ்வான் அல்ல! குக சரவணபவனான பால முருகனின் பெருமையைக் குன்றேறிக் கூற வந்த

சிவனடியான்! எங்கள் சிவ மதத்திலுள்ள குகப் பெருமானின் பெருமையைக் கண்டு பொறாமைப்பட்டு உங்கள் வைணவ மதம் குகன் என்ற பெயரால் ஒரு படகோட்டியை ஆழ்வாராகச் சிருஷ்டித்துக்கொண்டது!" என்று பதிலளித்தார் படகோட்டிச் சாமியார்.

"எங்கள் வைணவ மதத்தில் பாலகிருஷ்ணனுக்கு மக்களிடமுள்ள செல்வாக்கைக் கண்டு உங்கள் சிவமதம் பாலமுருகன் என்ற ஒரு கடவுளையே சிருஷ்டித்துக் கொண்டது!"

"எங்கள் பால முருகன்தான் முழுமுதற் கடவுள்!"

"ஏய், அன்னக்காவடி! வாயை மூடு!" என்று வீரசேகரன் அதட்டிக்கொண்டே மூடு பல்லக்கின் அருகில் சென்றான்.

படகோட்டி கோபங் கொண்டவராய், "இந்த அமுதுபடியின் வாயைக் கிழியுமையா! எங்களை விக்கினமின்றிக் காருமையா!" என்று எம்பி நின்றார்.

ஊர்மிளா அவரை நோக்கி, "குகச் சாமியாரே! விக்கினமின்றிக் காப்பாற்றுலதற்கு ஏற்றவர் விக்கினேசுவரர்தான். அதிலும் எங்கள் தெருவிலுள்ள முக்குறுணிப் பிள்ளையார்தான் அதிசக்தி லாய்ந்த தெய்வம்! அவரை நாடினால்தான் குறைகளெல்லாம் தீரும்!" என்று ஏதோ ஒரு குறிப்பை உணர்த்துபவள் போலப் படகோட்டியைப் பார்த்தாள். அவர், "குகனைப் பாடிய வாயால் இந்த நாயேன் வேறொருவனைப் பாடேன்! இவனையல்லால் எனக்கு வேறோர் தெய்வமில்லை!" என்று கூவினார்.

"சாமியாரே! முன்னவனை விட்டுப் பின்னவனைப் பாடுவீரோ? மூத்தவனை விட்டுவிட்டு இளையவனை நாடினால் அம்மையப்பனுக்குக் கோபம் வரும்! பிள்ளையாரும் எல்லோரையும் சபித்து விடுவார்!"

"அடி பேதாய்! மாயப் பிசாசமே! என் குகனை என்னடி சொன்னாய்? என் குகன் அப்பனுக்கும்

அருள்போதம் தரும் சாமியப்பனடி! அம்பலத்தரசனையும் ஆட்கொள்ளும் அவதாரப் பாலனடி! மூத்தவனோ வயிறுதாரி! வாகனம் பெருச்சாளி!"

ஊர்மிளா தன் குலதெய்வமான பிள்ளையாரைப் படகோட்டி பிரி ஏளனம் செய்வதைப் பொறுக்காதவள் போலக் கோபம் கொண்டவளாய் நடித்தாள். அந்தக் காலத்தில் மத உணர்ச்சி மிகுந்து மதச் சண்டைகளும் சைவ வைஷ்ணவப் போராட்டமும் அதிகரித்திருந்தது போலவே, சைவ சமயத்திலும் ஆதி சைவம், ஸ்மார்த்தம், காளமுக சமயம், கபாலிக சமயம் என்பன போன்ற பல உட்பிரிவுகள் ஏற்பட்டுத் தங்கள் குலதெய்வந்தான் உயர்ந்ததென்று வாதப் பிரதிவாதம் செய்யும் குறுகிய மனப்பான்மையும் அதிகமாயிருந்தது. சிவனைப் பாடிய வாயால் அவன் மகன் ஆண்டிச் சுப்பனைப் பாடமாட்டேன் என்று செ்சால்லுபவர்களும், முருகனைக் கும்பிடும் கைகளால் பிள்ளையாரைக் கும்பிடமாட்டேன் என்று சொல்லுபவர்களுங்கூட அந்தக் காலத்தில் இருந்தார்கள்!

ஊர்மிளா வீரசேகரனை நோக்கி, "வாலிபனே! இந்தச் சாமியார் என் குலதெய்வமான பிள்ளையாரைத் தூஷிக்கிறார்! இவர் மெய்யான சிவனடியாராய் இருப்பாரென்று கருதி, இவரது சிவபஜனையில் கலந்து கொண்டேன்! அந்தப் பூப்பல்லக்குத் திருப்பரங்குன்றம் கோயிலுக்கு உரியது. இந்த வேடதாரி பல்லக்கில் ஏதாவது கோயில் சொத்தைத் திருடி மறைத்து வைத்திருப்பார்! பல்லக்கினுள் என்ன இருக்கிறதெனப் பார்!" என்று கத்தினாள்.

வீரசேகரன் பல்லக்கினருகில் விரைந்து சென்று அதைச் சுற்றி மூடு திரையோடு தொங்கும் பூச்சரங்களை நீக்கிக்கொண்டே உள்ளே ஊடுருவிப் பார்த்தான்.

அந்தப் பல்லக்குக்குள் எந்த உற்சவமூர்த்தியும் இல்லை. தத்ரூபமான பாலதண்டாயுதமே இருந்தது! ஆறு வயது நிரம்பப் பெறாத பாலகனொருவன், கோவண ஆண்டியாய் உடலெல்லாம் விபூதி பூசிக் கையில் வேலும்

சேவற்கொடியும் தாங்கி, மயில் தோகைக்கருகில் தூங்கி வழிந்தவாறு உட்கார்ந்திருந்தான். பால்மணம் மாறாப் பச்சிளம் வடிவம்; குனித்த புருவம்; கொவ்வைச் செவ்வாயில் குமிழ் சிரிப்பு; பவள மேனியில் பால் வெண்ணீறு. அசல் பாலமுருகக் கடவுள் போலவே இருக்கும் அந்தப் பாலகனிடம் ஏதாவது விசாரிக்கலாமென்று வீரசேகரன் நினைத்தான். ஆனால் அந்தப் பாலமுருகன் வாய் திறந்து பேச முடியாதபடி லாய்க்கு வெளியே நாக்கு இழுக்கப்பட்டு அதில் சிறு வேலொன்று செருகப்பட்டிருந்தது. மேலும் அந்தப் பையன் தூங்கியவாறு அமர்ந்திருந்தான்.

''என்ன குகப் பெருமான் சமாதியில் ஆழ்ந்திருக்கிறாரோ?" என்றான் வீரசேகரன். படகோட்டி கலகலவென்று மணியடிக்கவே, தூங்கி வழிந்து கொண்டிருந்த அந்தப் பையன் திடுக்கிட்டு விழித்து, கொஞ்சம் விபூதியை வேகமாக அள்ளி வீரசேகரன் கையில் கொடுத்தான்.

அந்த விபூதியை வீரசேகரன் வாங்கிக் கொள்ளாமலே, முகத்தைச் சுளுக்கிக் கொண்டான்.

அந்தப் பல்லக்கைச் சோதித்துப் பார்க்கும்படி ஊர்மிளா சொன்னதனாலும், வீரபாண்டியனின் இரண்டாவது குமாரனுக்குப் பதினாறு வயதாவது இருக்கும் என்று அலள் சொன்னதனாலும், பல்லக்கில் இருக்கும் ஆறுவயதுப் பாலகன் வீரபாண்டியனின் இரண்டாவது குமாரனாய் இருப்பானோ என்ற சந்தேகமே வீரசேகரனுக்கு உண்டாகவில்லை!

“படகோட்டியே! இந்தப் பாலதண்டாயுதம் எங்கிருந்து வருகிறது, எங்கே போகிறது?" என்று அவன் ஏளனமாய்க் கேட்டான்.

“என் குகப் பெருமான் திருப்பரங்குன்றத்திலிருந்து வருகிறான்! அம்மையப்பன் கோயிலுக்குப் போகிறான்! இடையில் மேலைமாசி வீதியிலுள்ள நக்கீரர் கோயிலுக்குப் போலான். பொற்றாமரைக் குளத்தில்

நீராடுவான். வைகை ஆற்றில் இறங்கி அக்கரை வழியாகவே வண்டியூர் சென்று வாழ்த்துக் கூறுவான். சிவகங்கையில் தீர்த்தமாடுவான்! பழனி மலையில் பாலன்னம் அருந்துவான்! ஆறுபடை வீடுகளுக்கும் ஆறுமுகம் பேசுவான். குன்றைக்குடியில் குகனருள் காட்டுவான்! கதிர்காமத்தில் காட்சியளிப்பான். கடைசியில் மாயோன் மலையில் சேயோன் மலையேறுவான்!"

"போதும், நிறுத்து! நகர்க் கோட்டை வாசலைத் தாண்டி எந்தப் பாலதண்டாயுதமும் போக முடியாது!" என்று வீரசேகரன் ஏளனமாய்ச் சிரித்தான். ஊர்மிளா வீரசேகரனுக்குத் தெரியாமல் அவனது உடைவாளைக் கண்ணால் சுட்டிக் காட்டி, "காக்கும் தெய்வம்!" என்று கும்பிட்டுப் படகோட்டியை நோக்கிப் புன்முறுவல் செய்தாள்.

வீரசேகரன் அவளை நோக்கி, "ஊர்மிளா! ஏன் புன்னகை செய்கிறாய்?" என்று கேட்டான்.

"பாவம்! அந்தப் படகோட்டிச் சாமியார் பல்லக்கி லிருக்கும் பாலமுருகனை எப்படிக் கோட்டையைவிட்டு வெளியே கொண்டுபோவது. கோட்டைக் காவலர் விடமாட்டார்களே என்று மருகினார்! எனக்குச் சிரிப்பு வந்தது!"

"ஏதோ காக்கும் தெய்வம் என்றாயே? எது காக்கும் தெய்வம்?"

"உன் இடுப்பில் தொங்குவதுதான் காக்கும் தெய்வம்! உன் இடுப்பில் தொங்கும் வைடூரிய வாளைக் கோட்டை காவலரிடம் கொண்டு போய்க் கொடுத்தால் வெளியே போக அனுமதிப்பார்கள் என்று பரிகாசமாய்ச் சொன்னேன்!"

அப்போது படகோட்டிச் சாமியாரோ தன்னோடுள்ள நான்கு செம்படவர்களையும் ஊர்மிளாவையும் குறிப்பாகப் பார்த்துவிட்டு, 'ஆறிரு தடந்தோள் வாழ்க! ஆறுமுகம் வாழ்க! வெற்பைக் கூறுசெய் தனிவேல் வாழ்க!' என்று

பாடிக்கொண்டே தம் கையிலுள்ள கூர்மையான வேலை ஓங்கினார்; ஊர்மிளா ஏதோ கண் ஜாடை செய்யவே, ஓங்கிய வேலை அமர்த்திக்கொண்டு, தீப்பொறி பறக்கும் விழிகளால் ஊர்மிளாவை நோக்கினார்.

ஊர்மிளாவின் முகபாவம் சட்டென்று மாறியது; கோபத்தால் சிவந்தது. ஊர்மிளா வீரசேகரனை நோக்கி, "இந்தக் கொடூரமான படகோட்டிச் சாமியார் அன்பே சிவம் என்னும் நிஜமான சிவனடியாராக இருக்க மாட்டார்! மக்களைக் காளி மாதாவுக்கு நரபலி கொடுக்கும் கபாலிக மதத்தைச் சேர்ந்தவராக இருப்பார்! இப்போது தான் இவரது கபட வேஷத்தையும் தந்திரத்தையும் புரிந்து கொண்டேன்! இவர் அசல் கபால பைரவர்! பல்லக்கில் இருக்கும் பாலகன் பாலமுருகக் கடவுளல்ல! அந்தச் சிறு பையனை எங்கிருந்தோ திருடிக் கொண்டு வந்து காளி மாதாவுக்கு நரபலி கொடுக்கப் போகிறார்! பாலமுருகன் உருவத்தில் அச்சிறு பையனைத் தந்திரமாகக் கோட்டையைவிட்டுக் கடத்திக்கொண்டு போய், அமாவாசை நடுநிசியில் காளி மாதாவுக்குப் பூஜை நடக்கும்போது அந்தப் பையனின் தலையைப் பலி பீடத்தில் வைத்து வெட்டிவிடுவார்! கடவுளின் பெயரால் நடக்கும் இந்த அக்கிரமத்தை நாம் அனுமதிக்கக் கூடாது!" என்று கூவினாள்.

எமனே எதிரில் நின்றாலும் அஞ்சாத வீரசேகரன் தன் எதிரில் நிற்பது கபால பைரவர் என்றதும் கலவரமடைந்தான். அவ்வளவு தூரம் காளிமாதாவின் பெயரால் கபாலிக மதத்தினர் பயங்கரமான காரியங்களைச் செய்து வந்தனர்., காளி மாதா கபால மாலை அணிகிறாள், ருத்திரமூர்த்தி கையில் மண்டையோடு ஏந்துகிறார். 'பிள்ளைக் கனி அமுது' கேட்கிறார் என்றெல்லாம் தத்துவங்களை ஆதாரம் காட்டி, பாலர்களையும் யுவர்களையும் தூக்கிக்கொண்டு போய்க் காளி மாதாவுக்குப் பலி கொடுத்தனர்.

அந்தக காலத்தில் எதையும் மிகைபடச் சொல்வது இலக்கியத்தில் மட்டுமல்ல, தெய்வீகப் பிரசாரங்களில்கூட இருந்தது! 'காளியின் பலிபீடத்தின் முன்னால் ஒரு பக்தன்

தன் கையாலேயே தன் தலையை வெட்டிப் பலி கொடுக்க வேண்டும். அவ்வாறு செய்தால் சுலபத்தில் மோக்ஷ பதவி கிடைக்கும். நினைத்த காரியமெல்லாம் கைகூடும்' என்றெல்லாம் கபாலிக மதத்தினர் பிரசாரம் செய்து, வறுமையாலும் அறியாமையாலும் பஞ்சத்தாலும் வாடும் பாமர ஜனங்களைச் சுலபமாக நம்பச் செய்தனர். தெய்வ நம்பிக்கை மதப் பிரசாரங்களினால் பயப்பிராந்தியான மூடபக்தியாக மாறும்போது கபாலிகர்களின் பயங்கரமான தத்துவ வியாக்கியானங்களைப் பாமர ஜனங்கள் நம்பியதில் வியப்பில்லை. இந்தக் கொடூரமான கபாலிக மதம் வடநாட்டில் தோன்றி, பிறகு வடநாட்டுக் கலாசாரத்தைப் பின்பற்ற முயலும் சோழ நாட்டில் சுலபமாகக் குடியேறி, பாண்டிய நாட்டில் பரவித் தமிழ் நாடெங்கும் வியாபித்தது. இவ்வாறு தலையையும் உயிரையும் நரபலி கொடுக்கும் வழக்கம் இப்போது 'வேண்டுதலுக்காகத் திருப்பதி மொட்டையடிக்கும்' வழக்கமாகவும், 'அலகு குத்திக் கொள்ளும்' வழக்கமாகவும், 'ஆடு கோழிகளைப் பலி கொடுக்கும்' வழக்கமாகவும் மாறி இன்றளவும் கபாலிக மதத்தின் சின்னங்களாய் இருந்து வருகின்றன போலும்!

வீரசேகரன் எதிரே ருத்திரமூர்த்தி போல் நின்ற படகோட்டிச் சாமியார் தீப்பொறி பறக்கும் தம் விழிகளை உருட்டி நோக்கி ஊர்மிளாவை எரித்து விடுபவர்போல் பார்த்தார்.

அடுத்த கணம் அவர் தம் கையிலிருந்த வேலைத் தூக்கி, தெய்வ ஆவேசம் வந்தவர்போல் மெய் சிலிர்க்க உடம்பைக் குலுக்கி, "ஓம் நமப் பார்வதி பதயே! ஓம் சக்தி மாதா!" என்று உரத்த குரலில் கூவினார்.

அவர் எதிரொலி அடங்குவதற்குள் சிற்ப மண்டபத்திலிருந்தோ அல்லது வேறு எங்கிருந்தோ ஒரு பயங்கரமான உருவம் தடதடவென்று இருட்டில் ஓடி வந்தது!

'ஹா...ஹா...ஹா...' என்று பயங்கரச் சிரிப்புடன் கபாலிகன் ஒருவன்தான் அவர்களை நோக்கி ஓடி வந்து நின்றான்.

மண்டையோடுகளை மாலையாக அணிந்து, நெற்றியில் சந்தனத்தை அப்பி, இரத்தம்போல் சிவந்த குங்குமத்தைப் பூசிக் கதாயுதத்துடன் பயங்கரமாய்த் தோன்றிய அந்தக் கபாலிக உருவத்தைக் கண்டதும் ஊர்மிளா நடுநடுங்கியவளாய் வீரசேகரனின் முதுகுப்புறம் ஓடி அவன் பின்னால் மறைந்துகொண்டாள்.

கபாலிகனோ தன் பெரிய விழிகளை உருட்டி ஊர்மிளாவை ஊடுருவிப் பார்த்தான். "ஓம், சக்தி மாதா! மகாகாளீ!... பெண்ணே, என்னை ஏமாற்றி ஓடிவந்து விட்டாய்! இந்தக் கபால பைரவன் வலையிலிருந்து எவளும் தப்ப முடியாது! உன்னை என் சக்தி மாதாவுக்கு நரபலி கொடுக்காமல் விட மாட்டேன்! ஓம் மகாகாளி..." என்று கனல் கக்கும் குரலில் கூறிக்கொண்டே, தன் கதாயுதத்தை ஓங்கியவண்ணம் அவள்மீது பாய்ந்தான்.

ஊர்மிளாவின் தலையில் அடி விழுந்ததா இல்லையா என்று வீரசேகரன் திரும்பிப் பார்ப்பதற்குள் அவள் கீழே மூர்ச்சித்துக் கிடந்தாள்.

வீரசேகரன் கடுங்கோபமுற்றவனாய்த் தன் உடைவாளை உருவியவண்ணம் கபாலிகனை நோக்கித் திரும்பினான். அதற்குள் அவன் தலையில் யாரோ பலமாக மரக்கழியால் அடிக்கும் உணர்ச்சி உண்டாயிற்று.

அடுத்த கணம் வீரசேகரன் பிரக்ஞை தடுமாறித் தரையில் மூர்ச்சித்து விழுந்தான்!

மறுபடி வீரசேகரனுக்குச் சுயநினைவு வந்தபோது பொழுது விடிந்திருந்தது! வைகறையின் சிவந்த புன்னகை குருவிகளின் கலகல ஒலியோடு நந்தவனமெங்கும் தவழ்ந்தது. சேற்றில் தோன்றிய செந்தாமரைகள் செங்கிரணத் தேரேறி வரும் சூரியனின் வெப்பமான மேனி மண்டலத்தை நோக்கிச் செவ்விதழ்கள் மலர்ந்திருந்தன.

சிற்ப மண்டபத்தின் ஒரு மூலையில், மோகினிச் சிலையின் மடியில், வீரசேகரன் சோர்ந்து கிடந்தான்.

அங்கு எவ்வாறு வந்தான் என்ற நினைவு தட்டவே வீரசேகரன் திடுக்கிட்டெழுந்தான். எதிரே படகோட்டிச் சாமியாரையும், பாலமுருகக் கடவுளையும், பஜனைக் கோஷ்டியையும் காணோம்! ஜனநாதன் தந்த வைடூரிய வாளையும் இடுப்பில் காணோம்! உல்லாச மோகினியான ஊர்மிளாவையும் காணோம்!

அதற்குப் பதில் சோழர் வாட்படைத் தலைவன் ஜனநாதன், ''ஏன் பள்ளிகொண்டீரய்யா, ஸ்ரீரங்கநாதரே...!" என்று ஒரு தண்ணீர் ஜாடியுடன் பாடிக் கொண்டு நின்றான்!

''ஆ! ஜனநாதனா...?'' என்று வீரசேகரன் ஆச்சரியத்தோடு கூவினான்.

"நானேதான்! உன்னை எங்கெல்லாமோ தேடிக் கடைசியில் இந்திரஜித் இங்கே மோகினிச் சிலையின் மடிமீது நாகபாசத்தால் கட்டுண்டு கிடப்பதைக் கண்டேன்; சஞ்சீவியைப் போல் கொஞ்சம் தண்ணீரை உன் முகத்தில் தெளித்து மூர்ச்சை தெளிவித்தேன்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

அவனிடம் வீரசேகரன் கடந்த இரவில் நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் சொல்லிவிட்டு, "எல்லாம் ஒரு மாயச் சொப்பனமாக இருக்கிறது! நடுநடுவே பிரக்ஞை வரும்போதெல்லாம் யாரோ என் மூக்கருகில் மயக்க வாசனையை ஊட்டியது நினைவு வருகிறது!" என்றான்.

"கடைசியில் கங்கையைப் பறிகொடுத்து விட்டாய்!" என்று ஜனநாதன் சிரித்தான்.

"அந்த ஊர்மிளாவின் உண்மையான பெயர் கங்காவா?" என்று வீரசேகரன் வியப்புடன் கேட்டான்.

"சந்தனு மகாராஜன் கையிலிருந்து நழுவியோடிய கங்கையைச் சொல்லவில்லை! கங்கைப் படையெடுப்பிற்காக வாழையடி வாழையாக எங்கள் வம்சம் வைத்திருந்த என் வீரவாளைப் பறிகொடுத்து விட்டாயே? என் வைடூரிய வாளுக்குத்தான் கங்கை என்று பெயர்!"

வீரசேகரன் அளவிறந்த வருத்தத்தோடு, "படகோட்டிச் சாமியார்தான் அந்த வாளைத் திருடிக் கொண்டு போயிருக்க வேண்டும். குகன் பல்லக்கையும் பஜனைக் கோஷ்டியையும் கண்டுபிடித்து எப்படியும் உன் வாளை மீட்டுத் தருகிறேன்!" என்றான்.

"இந்நேரம் படகோட்டிச் சாமியார் வையை ஆற்றைக் கடந்து அம்பலத்தரசன் ஜோதியில் கலந்திருப்பார். உன்னை ஏமாற்றி என் வாளைத் திருடிக் கொண்டுபோய்க் கோட்டை வாசல் காவலரிடம் அதை ஈடு வைத்துவிட்டு, பல்லக்கிலிருந்த குகப் பெருமானைத் தந்திரமாகக் கோட்டையை விட்டுக் கடத்திவிட்டார்கள்! பாலமுருகக் கடவுளோடு துணை போனவள் ஒரு ஔவையார்!"

"யார் அந்த ஔவையார்? ஊர்மிளாவா?"

"ஔவையார் ஒரு கனிந்த கிழவி! கனியாத குமரியல்ல!"

"அப்படியானால் ஊர்மிளாவின் கதி?"

"கபாலிகன் அவளைச் சக்திமாதாவிற்கு நரபலி கொடுப்பான்! எவருக்கும் கிடைக்காத சக்தியருளும் சுவர்க்க பதவியும் உன் ஊர்மிளாவுக்குச் சீக்கிரம் சித்திக்கும். கபாலிகனை எங்கேயாவது கண்டால் அவனுக்குப் பரிசு கொடு!"

"ஊர்மிளா, காளிக்குப் பலியாவதைப் பற்றிக் கொஞ்சமாவது கவலையில்லையா?" என்றான் வருத்தத்துடன் வீரசேகரன்.

"உன்னைவிட எனக்குத்தான் அவளைப் பற்றிய கவலை அதிகம்" என்றான் ஜனநாதன். அதைச் சொன்ன அவன் குரலிலிருந்த பரிவும், முகபாவமும், ஊர்மிளாவின் அலாதியான அழகும் அவளை ஜனநாதன் அடைய விரும்புகிறானோ என்ற சந்தேகத்தை உண்டாக்கின.

வீரசேகரன் சந்தேகத்தோடு ஜனநாதனை ஏறிட்டுப் பார்த்தான்.

"சந்தேகப்படாதே, தம்பி! அவள் அழகைக் கண்டு ஆசைப்படக் கூடிய முட்டாள் நானல்ல! இன்னொரு முட்டாள் அவளுக்காக ஆசைப்பட்டு நேற்றிரவு என்னிடம் ஆயிரம் ஈழப்பொன் கொடுப்பதாக அவளை விலைக்குக் கேட்டான்! உன்னால் அனைத இழந்து விட்டேன்!... ஆனாலும் என்ன? அவள் இறந்துவிட்டால் எனக்கு ஆயிரம் பொற்காசு கொடுப்பதாக இன்னொருத்தி பேரம் பேசினாள்! 'யானை இருந்தாலும் ஆயிரம் பொன், செத்தாலும் ஆயிரம் பொன்' என்ற பழமொழி ஊர்மிளா விஷயத்தில் எவ்வளவு கனகச்சிதமாயிருக்கிறது, ஆகா!"

"ஊர்மிளாவைக் கொல்லச் சொன்னவள் யார்? சிவகாமசுந்தரியா? நான் ஓர் இளம் பெண்ணோடு கொஞ்ச நேரம் தனித்துப் பேசினாலே அவளுக்கு உடனே சந்தேகம் கிளம்பிவிடும். அவளை வீட்டில் நிர்க்கதியாய் விட்டுவிட்டு நான் கண்ட பெண்ணோடெல்லாம் ஓடிவிடுவேனோ என்று அலறுவாள்; வீட்டில் நிம்மதியில்லாமல் நான் வெளியே கிளம்பினால் அவள் நிழல்போல் என்னையறியாமல் என்னைப் பின்தொடர்ந்து வருவாள்!" என்றான் வீரசேகரன் எரிச்சலோடு.

ஜனநாதனோ அதற்கு எந்தவிதப் பதிலும் சொல்லாமல் மௌனமாகச் சிரித்தான்.

"என்னிடமிருந்து ஊர்மிளாவை விடுதலை செய்தால் உனக்கு ஆயிரம் ஈழப்பொன் கொடுப்பதாக ஒருவன் சொன்னானா?... அவன் யாராக இருப்பான்?" என்று கேட்டான் வீரசேகரன்.

"கேவலம் ஒரு பெண்ணுக்காக ஆயிரம் பொன் கொடுப்பதாகச் சொல்பவன் அவளுடைய புருஷனாகக் கூட இருக்க மாட்டான்! அவளுடைய காதலனாகத்தான் இருப்பான்!" என்று ஜனநாதன் பரிகாசம் செய்துகொண்டே வீரசேகரனோடு சிற்ப மண்டபத்தை விட்டு வெளியே வந்தான். வெளியே கட்டப்பட்டிருந்த ஜனநாதனின் வெள்ளைக் குதிரை, ஜனநாதனைக் கண்டதும் மெல்லக் கனைத்தது!

"அதோ என் குதிரை! இந்த உலகில் என்னிடம் உண்மையான நன்றி விசுவாசமுள்ள ஒரே ஜீவன்!" என்று ஜனநாதன் சொல்லி விட்டு, பலவிதச் சந்தேகங்களாலும் குழம்பியவனாய் நிற்கும் வீரசேகரனை நோக்கி, "தம்பி! அதன்மீது எவ்வளவு பாரத்தை வேண்டுமானாலும் சுமத்தலாம்! வா, நாமிருவருமே அந்தக் குதிரை மீதேறி, பவனி செல்வோம்!" என்றான்.

வீரசேகரனோ துயரத்தால் முகம் வாடியவனாய், "என் ஊர்மிளாவைக் கபாலிகன் கொண்டு போய் விட்டான்! பஜனைக் கோஷ்டியோடு போகவில்லையாதவால் ஊர்மிளா இங்கே நகர் கோட்டைக்குள்தான் எங்கேயோ இருக்கிறாள்! கபாலிகன் அமாவாசை நடுநிசியன்று தான் பூஜையின்போது ஊர்மிளாவைக் காளி மாதாவுக்குப் பலி கொடுக்க முயல்வான். அதற்குள் அவளை எப்படியும் அந்த முரட்டுக் கபாலிகனிடமிருந்து காப்பாற்றி விடுவேன்!" என்றான்.

"அந்த முரட்டுக் கபாலிகனை அவ்வாறு தூண்டிவிட்டவன் யார் தெரியுமா? நான்தான்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

வீரசேகரன் திடுக்கிட்டான்.

"வீரசேகரா! தீவிரமாகச் சிந்தித்துப் பார்! நீ சிறைபிடித்துப் போன ஊர்மிளாவை உன்னிடமிருந்து விடுதலை செய்தால் ஒருவன் ஆயிரம் பொன் தருவதாகவும், அவளை உன்னிடமிருந்து பிரித்துக் கொன்றால் ஒருத்தி எனக்கு ஆயிரம் பொன் தருவதாகவும் என்னிடம் ஒரே சமயத்தில் இருவர் பேரம் பேசியிருக்கிறார்கள்! அவளை விட்டு விடும்படி என் வாயாலேயே சொன்னால் அது அரசாங்கக் குற்றமாகும்! அதனால் போலிக் கபாலிகன் ஒருவனை இரகசியமாக அனுப்பி ஊர்மிளாவை உன்னிடமிருந்து கொள்ளையடித்தேன்!..."

"நீயா? நிஜமாகவா சொல்கிறாய்...?"

"நான் சொல்லவில்லை! நம் இருவருக்குள்ளும் சண்டை மூட்டிவிட நம் அரசியல் தோழர்கள் அவ்வாறு

உன்னிடம் சொல்லுவார்கள்!'' என்று சிரித்தான் ஜனநாதன்.

"எவ்வளவு நேர்மையாகப் பேசும் நண்பன் நீ! என்னால் உன் வைடூரிய வாள் பஜனைக் கோஷ்டியால் திருடப்பட்டுக் கோட்டை வாசல் காவலரிடம் அடைமானம் வைக்கப்பட்டிருக்கிறதே, அது சோழ அரசர் குலம் தலைமுறை தலைமுறையாக உங்கள் காடவராயர் வம்சத்திற்கு அளித்துலந்த வெற்றி வாளல்லவா? அதைத் திரும்பப் பெற வேண்டாமா?'' என்று கேட்டான் வீரசேகரன்.

"துரதிர்ஷ்டலசமாக இன்று மாலைக்குள் என் வீரலாள் என் கையில் இருந்தாக வேண்டும். ஏனெனில், வாட் படைத் தலைவனான நான் அவ்வாளைத் தூக்கிப் பிடித்து, 'சோழ சக்ரவர்த்திகள் வாழ்க!' என்று சொன்ன பிறகுதான் வாட்படை வீரர்கள் சோழ சாம்ராஜ்யத்தின் புலிக்கொடிக்கு மாலை வணக்கம் செலுத்தவோ, இரவில் தூங்குவதற்காக அணி லகுப்புக் கலைந்து செல்லவோ முடியும்!'' என்றான் ஜனநாதன்.

"அப்படியானால் உன் வாளை அதற்குள் எப்படித் திரும்பப் பெறுவாய்? காவற்படை அதிகாரி ஏகவாசகன் வாணகோவரசரிடம் சென்று உன் வாளைக் கேட்பாயா?"

"நானா? தனக்குச் சமதையான அந்தஸ்துள்ள ஒரு அதிகாரியிடம் இந்த ஜனநாதனா போய்க் கேட்பான்? ஒரு நாளுமில்லை! நான் வாய் திறந்து என் வாளைக் கேட்கவே மாட்டேன். அது தானாகலே என்னிடம் வலிய வந்து சேரும்! ஏனெனில் மாலை நேரம் வரை என் வாளைத் திரும்பிக் கேட்காதிருந்தால் இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கும் என்று சந்தேகித்து, காவற்படை அதிகாரியே அந்த வாளை என்னிடம் கொண்டுவந்து கொடுத்து விடுவார்!'' என்று சிரித்தான் ஜனநாதன்.

"கோட்டையை விட்டு வெளியேறிய அந்த பஜனைக் கோஷ்டியைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன?'' என்று வீரசேகரன் கேட்டான்.

"இதிலென்ன சந்தேகம்? அந்தப் படகோட்டிச் சாமியார் வீரபாண்டியன்! பல்லக்கில் இருந்த பாலமுருகன் அவனுடைய இரண்டாவது குமாரன்! உன்னோடு இருந்த ஊர்மிளா அவனது புது மனைவி! ஆக, இம்மூவரையும் ஏககாலத்தில் உன் கண் முன்னாலேயே தப்பியோடவிட்டு நீ மகத்தான தேசத் துரோகியாகி விட்டாய்!"

வீரசேகரன் பீதியுடன், "நிஜமாகவா சொல்லுகிறாய்?" என்றான்.

"நான் சொல்லவில்லை! உன் முன்னேற்றத்தைக் கண்டு மனம் புழுங்கும் நம் அரசியல் கிழவர்கள் அவ்வாறு திரித்துச் சொல்லுவார்கள்! ஆனால்..."

"ஆனால் என்ன?"

"நான்தான் வீரபாண்டியன் கட்சியிடம் கைக்கூலி பெற்று அந்தப் பஜனைக் கோஷ்டி கோட்டையை விட்டு வெளியேற வழி வகுத்துக் கொடுத்தேன்! யோசித்துப் பார்! நானாக வலிய வந்து உன் கையில் என் வைடூரிய வாளைக் கொடுத்து அந்த வாளின்மூலம் பஜனைக் கோஷ்டி கோட்டை வாசல் வழியாக லெளியேறவும், எனக்குப் போட்டியாக முளைக்கும் உன்மீது அந்தப் பழியைச் சுமத்தவும் இவ்வாறு நான் சூது செய்தேன்!" என்றான் ஜனநாதன்.

"நிஜமாகவா சொல்லுகிறாய்?"

"நான் சொல்லவில்லை! என் செல்வாக்கைச் சீர்குலைத்து என்னை எப்படியும் ராஜத் துரோகியாக்க முயலும் என் அரசியல் கூட்டாளிகள் சொல்லுவார்கள்! ஆனால் அரசாங்கத்தின் அஸ்திவாரம் அசைந்தாலுங்கூட அதை விட்டு என்னை அரசர்பிரான்கூட அசைக்க முடியாது!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"என் சிறு அஜாக்கிரதை இவ்வளவு பெரிய அனர்த்தங்களுக்கும் இடங்கொடுத்து விட்டது!" என்று வருந்தினான் வீரசேகரன்.

*"அர்த்தத்தை அனர்த்தமாக்குவதுதான் அரசியல்! சரி; வா, போகலாம்; ஆனால்... உன்னால் சோழர்களின் கங்கைப்படலம் மாறிப் போய்ப் பாண்டியரின் குகப் படலம் வெற்றிகரமாக அரங்கேறியிருக்கிறது என்பதை மட்டும் மறந்துவிடாதே!" என்று சிரித்துக் கொண்டே எச்சரித்தான் ஜனநாதன்.*

*வீரசேகரனோ பலவித சந்தேகங்களால் இன்னும் அதிகமாய் மனம் குழம்பியவனாய் ஜனநாதனைப் பின் தொடர்ந்தான்.*

## அத்தியாயம் 6

### மந்திரப் படலம்

*இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆவென இருந்தார்!*

**கம்ப ராமாயணம்**

*மலை நாட்டு மங்கையின் முகத்தைப் போல, மாலை நேரத்து மஞ்சள் வெயில் நெட்டூர்க் கோட்டையின் கருமையில் கலந்து மருவியது.*

*அந்தக் காலத்தில் பாண்டி மண்டலத்தின் பெரிய கோட்டைகளில் ஒன்றாக நெட்டூர்க் கோட்டை சிறந்து விளங்கியது. நெட்டூர் என்பது இராமநாதபுர வளநாட்டில் சிவகங்கைக் கூற்றத்தில் இளையான்குடிக்கு அருகிலுள்ள ஒரு சிறு கிராமமாகும். நெட்டூர்வாசிகள் அனைவரும்*

சுத்த வீரர்களாகையால் யுத்தங்களில் வீரமரணமடைந்து விட்டார்கள். பல தலைமுறைகளாக ஓயாமல் போர்களினால் பெரிதும் பாதிக்கப்பட்டு அந்தக் கிராமம் ஜனசஞ்சாரமற்று, சூன்யமாகி விட்டது. அங்குள்ள பெரிய கோட்டையும் தேடுவாரற்று உயரமான மதிற் சுவர்களில் பாசி பிடித்துக் கருமை படர்ந்து, கோட்டைக்குள் புல் புதர்கள் வளர்ந்தும் பாம்புகள் நெளிந்தும் பாழடைந்த கோட்டையாகக் காட்சியளித்தது.

முன் தலைமுறையில் வீரபாண்டியனின் தந்தை பராக்கிரம பாண்டியனுக்கும் விக்கிரம பாண்டியனின் தந்தை குலசேகர பாண்டியனுக்கும் நடந்த பயங்கரமான போராட்டத்தில் இதே நெட்டூர்க் கோட்டை சரித்திரப் பிரசித்தி பெற்று விளங்கியது. சோழர்களால் தூண்டி விடப்பட்ட குலசேகர பாண்டியன் மதுரைமீது படையெடுத்து வந்து அதை ஆண்ட பராக்கிரம பாண்டியனையும் அவன் மனைவி மக்களையும் வஞ்சகமாய்ப் படுகொலை செய்தான். அந்தப் படுகொலையில் தலைதப்பி ஓடியவன் அப்போது இளவரசனாயிருந்த வீரபாண்டியன் ஒருவன்தான்! அதற்குப் பழிவாங்கத் துடித்த இலங்கை மன்னன் பராக்கிரமபாகு இலங்காபுரியின் தலைமையில் ஒரு மாபெரும் படையைப் பாண்டி நாட்டிற்கு அனுப்பினான்.

அப்போது அந்த மாபெரும் படைத்தலைவனான இலங்காபுரி இந்த நெட்டூர்க் கோட்டையையே தன் யுத்த நடவடிக்கைகளின் தலைமை ஸ்தானமாகக் கொண்டு தங்கியிருந்து, பாண்டி நாட்டின் பல பகுதிகளையும் கைப்பற்றிக் குலசேகரப் பாண்டியனைச் சிம்மாசனத்தி லிருந்து விரட்டியடித்து, கொலையுண்ட பராக்கிரமனின் மகன் வீரபாண்டியனுக்கு மதுரையில் முடி சூட்டினான். அந்தத் தலைமுறையில் வீரவாலிபர்களுடன் எந்நேரமும் 'ஜே ஜே' என்றிருக்கும் நெட்டூர்க்கோட்டைக்குள் எந்தக் கோழையொருவன் நுழைந்தாலும் 'வெற்றி அல்லது வீரமரணம்!' என்ற இலட்சியக் குரலோடுதான் மறுபடி வெளியே வருவான்! ஆனால் இப்போதோ, பாழடைந்து கிடக்கும் அதே நெட்டூர்க் கோட்டைக்குள் எவனும்

போவதில்லை. அதற்குள் போனவனும் மறுபடி திரும்பி வருவதுமில்லை!

முன்பு இலங்கைப் படைத் தலைவன் இலங்காபுரி தங்கியிருந்ததால் இப்போது அங்கே ஒரு இலங்கைப் பூதம் தங்கியிருக்கிறதென்றும் கோட்டைக்குள் எவன் நுழைந்தாலும் பூதம் விழுங்கி விடும் என்றும் பாமர ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். கோட்டையைச் சுற்றி மண்டையோடுகளும் மாட்டுக் கொம்புகளும் குவிந்து கிடக்கின்றனவெனவும், அப்பாழடைந்த கோட்டைக்குள் பயங்கரமான கபாலிக மதத்தினர் உலாவுகிறார்களெனவும் காளிமாதாவுக்கு நரபலி கொடுப்பதற்காக நாடு நகரங்களிலிருந்து பாலர்களையும் யுவர்களையும் தந்திரமாகத் தூக்கிவந்து அந்த நெட்டூர்க் கோட்டைக்குள்தான் சேர்ப்பிக்கிறார்களெனவும், வேறு சிலர் சொன்னார்கள். இத்தகைய வதந்திகளினால், திசை தப்பி வரும் வழிப்போக்கரும் பகல் நேரத்திலுங்கூடக் கோட்டையிருக்கும் திசைப் பக்கமே தலைவைத்தும் படுப்பதில்லை!

மாலை மயங்கும் நேரத்தில் பாழடைந்த கோட்டை பயங்கர அமைதியுடன் தோன்றியது. அக்கோட்டையை நோக்கி ஒரு பஜனைக் கோஷ்டி வேகமாக வந்தது. பூப்பல்லக்கு ஒன்றை இரண்டு செம்படவர்கள் தூக்கி வந்தனர். மற்றுமிரு செம்படவர்கள் வலம்புரிச்சங்கும் தம்பட்டமும் ஏந்தி வந்தனர். தலைவனைப் போல ஒரு படகோட்டிச் சாமியார் கையில் வேலுடன் முன்னால் நடந்து வந்தார். அவர் குகன் என்னும் நாமம் படைத்த படகோட்டிச் சாமியார் என்றும், பூப்பல்லக்கில் இருக்கும் ஆறு வயதுப் பாலகன் மதுரைக் கோட்டையிலிருந்து இரகசியமாகக் கடத்தி வரப்பட்ட பால முருகக் கடவுள் என்றும் சொல்லத் தேவையில்லை!

பஜனைக் கோஷ்டி கோட்டையை நெருங்கியதும் படகோட்டிச் சாமியார் அதன் பின்புறம் சென்று, வெளி மதிற்சுவரில் செடிகொடி புதர்களுக்கு மத்தியில் தொங்கிய ஒரு மல்லிகைக் கொடியைப் பிடித்து மெல்ல மும்முறை இழுத்தார். மதிலின் உட்புறம் மும்முறை மணியோசை

கேட்டது. அடுத்த கணம் மதிற்சுவரிலுள்ள ஒரு சிறு இரகசியப் பாதை திறந்து கொண்டது. சுரங்க வழியினுள்ளே மண்டையோடு தீச்சட்டியாக நடப்பட்டு இலேசாக வெளிச்சம் வந்துகொண்டிருந்தது. அதன் வழியாக இரண்டு கபாலிகர்கள், மண்டையோடுகளை மாலைகளாய் தரித்துப் பயங்கரமான தோற்றத்துடன் மெல்லத் தலையை நீட்டி வெளியே எட்டிப் பார்த்தனர். ஒருவன் பெரிய மீசையுடன் பயங்கரமாய் இருந்தான். இன்னொருவன் மீசை இல்லாமலே அதிபயங்கரமாய்ப் பெரிய விழிகளை உருட்டிப் பார்த்தான். இருவரும் ஏககாலத்தில் "யாரது...?" என்று கேட்டனர்.

"நான் கபால பைரவன்! சக்தி மாதாவின் பலி பீடத்தையும் பலி பூஜையையும் அலங்கரிக்க வந்திருக்கிறேன்! தாரணியில் சக்தி மாதா ஜகஜோதியாய் விளங்க இந்நாட்டில் ஆயிரக்கணக்கானவர் தாரக மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே உயிர்ப்பலி தர முன் வருவார்கள்!" என்று போலிச் சாமியார் சொல்லிவிட்டுப் புதர் செடிகொடிகளை நீக்கிக்கொண்டு கபாலிகர்முன் வந்து நின்றார். அவரைக் கண்டதும் கபாலிகரிருவரும் அதிவியப்படைந்தவர்களாகி, "யார் ஈழவராயரா?" என்று ஏக காலத்தில் கூவினார்கள்.

"ஆமாம்; நான்தான்! அந்த மூடு பல்லக்கில் பால முருகக் கடவுள் இருக்கிறான்! சக்தி மாதாவின் சந்நிதானத் திற்கு வந்திருக்கிறான். அந்தப் பாலகன் யார் தெரியுமா?" மூடு பல்லக்கின் திரையைத் திறந்து காட்டினார்.

"யார்! திரிபுவன சக்கரவர்த்திகள் வீரபாண்டிய தேவரின் இரண்டாவது குமாரனையா கொண்டு வந்திருக்கிறீர்?" என்று கபாலிகர் இருவரும் ஏககாலத்தில் கண்விழி பிதுங்க ஆவலுடன் கேட்டனர்.

"ஆமாம்! அதே திருக்குமாரன் வீரகேரளன்தான்! ஆனால் திரிபுவன சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவர்தான் இப்போது ஒரு புவனமும் இல்லாமல் நாடிழந்து நகரிழந்து மக்களை இழந்து நாடோடியாகி விட்டார்!" என்றான் போலிச் சாமியாரான ஈழவராயன்.

"ஈழவராயரே! எங்களால் நம்ப முடியவில்லை! மதுரைச் சண்டையில் நீர் வீர மரணமடைந்துவிட்டதாகச் சொன்னார்கள்! நீர் தெற்குக் கோட்டை வாசலில் பிரேதமாகக் கிடந்ததை நம் ரணபத்திரன் தன் கண்ணாலேயே கண்டதாகக் கூடச் சொன்னான்!" என்றான் கபாலிகன் வீரபத்திரன்.

"சக்திமாதாவின் கடாக்ஷத்திற்காகத் தவம் கிடக்கும் நான் அவ்வளவு சீக்கிரத்தில் சாவேனா...? சோழர்கள் மதுரையை முற்றுகையிட்ட சமயம், சோழப் பெருவீரன் வீரசேகரன் தெற்குக் கோட்டை வாசலைப் பலமாகத் தாக்குகிறான் என்றதும், வீரபாண்டியத்தேவர் என் வேற்படையை அங்கு நிறுத்தினார். அதற்குத் தலைமை பூணத் தன் இளைய குமாரனான இந்தச் சிறுவனையும் என்னோடு அனுப்பினார். சண்டையின் நடுவே, என்ன மந்திரமாயமோ அந்தச் சோழிய வீரன் மூர்ச்சைப் புகையை உண்டாக்கக்கூடிய பிரமாஸ்திரங்களைக் கோட்டைக்குள் பிரயோகித்தான். அந்தப் புகை நெடியில் நான் சிறிது நேரம் பிரேதம்போல் மூர்ச்சித்துக் கிடந்தேனே தவிர வேறில்லை!" என்றான் ஈழவராயன்.

"இந்தப் பாண்டிய குமாரன்?"

"மறுபடி நான் மூர்ச்சை தெளிந்து எழுந்தபோது இந்தப் பாலகனை என்னருகில் காணோம்! பாண்டிக் குடியானவனொருவன் இந்தப் பாலகனைக் கொண்டுபோய் இரகசியமாய் ஒரு குடிசையில் மறைத்து வைத்திருந்தான். அந்தக் குடியானவன் என்னிடம் இந்தப் பாலகனை ஒப்படைக்கச் சாமானியத்தில் என்னை நம்பவில்லை. ஏன் தெரியுமா?" என்று கேட்டான் ஈழவராயன்.

"தெரியும், ஈழவராயரே! நீர் இலங்கை நாட்டவர்! மூத்த குமாரன்தான் வீரபாண்டிய சக்கரவர்த்திக்கு இலங்கை ராணிமூலம் பிறந்தவன்! இந்த இளைய குமாரனோ சேர வமிசப் பெண்ணின் மூலம் பிறந்தவன். இளவரசுப் பட்டத்திற்கு மூத்தவனுக்குப் போட்டியாக இளையவன் முளைத்துவிடுவானோ என்று நீர் இவனைத் தந்திரமாகக் கொன்றாலும் கொன்றுவிடுவீர் என அந்தக்

குடியானவன் சந்தேகித்திருப்பான்!" என்றான் கபாலிகன் வீரபத்திரன்.

வீரபாண்டியனின் இரு குமாரர்களில் இளையவனான இந்தப் பாலகன் சேரகுலப் பெண்ணின் மூலம் பிறந்தவன். தற்போதுள்ள வீரபாண்டியன் மனைவிக்குத் தமக்கை மகன். மலையாளம் எனப்படும் சேரநாட்டை அரசாளும் கேரள மன்னனின் மகளை வீரபாண்டியன் மணம் புரிந்து, இந்தப் பாலகனைப் பெற்று இவனுக்கு வீரகேரளன் என்று பெயரிட்டான். இவனுக்கு ஆறு வயதாகும்போது இவனைப் பெற்றவள் உயிர் துறக்கவே, வீரபாண்டியன் தன் மனைவியின் தங்கையை மணம் புரிந்து கொண்டான். அதனால் இப்பாலகனைக் கருத்தோடு வளர்க்க ஒரு தாய் கிடைப்பதோடு சேரராஜனின் உறவும் விட்டுப் போகாது என்று நினைத்தான். இளைய மைந்தனின் இரத்தத்தில் வீரபாண்டியனின் தமிழ் இரத்தமும் சேரநாட்டு இரத்தமும் கலந்திருந்தன.

வீரபாண்டியனின் மூத்த குமாரனான பராக்கிரமனோ, இலங்கை இராஜகுலப் பெண்ணின் மூலம் பிறந்தவன்; அவன் உடலில் வீரபாண்டியனின் தமிழ் இரத்தமும் இலங்கை இரத்தமும் கலந்திருந்தன; அவனுக்கு வீரபாண்டியன் தன் தந்தையின் நினைவாகவும் இலங்கை மன்னன் பராக்கிரமபாகுவின் நினைவாகவும் பராக்கிரமன் என்று பெயரிட்டிருந்தான். வீரபாண்டிய னுக்கு அவன் மூத்த மைந்தனாகப் பிறந்தபடியால் அவனே இளவரசுப் பட்டத்திற்கு உரியவன்! வீரபாண்டிய னுக்குப் பின் பாண்டி நாட்டை அரசாளவும் உரிமை யுள்ளவன்; ஆனால் பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர் பலர் அதை விரும்பவில்லை. இலங்கை ராணிமூலம் பிறந்தவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டக்கூடாது. இலங்கை இரத்தமுள்ள ஒருவனுக்குப் பாண்டிய அரசுரிமை கொடுக்கக் கூடாது என்று சமயம் நேரும்போதெல்லாம் வாதித்து வந்தனர்.

படகோட்டிச் சாமியார் வேஷத்தில் நிற்கும் ஈழவராயனை நோக்கிக் கபாலிகன் வீரபத்திரன்.

"ஊர்மிளா எங்கே? அவள் உம்மோடு வரவில்லையா?" என்று கேட்டான்.

"வரவில்லை! என்னோடு வர அவள் இஷ்டப்பட வில்லை. அவளால் எனக்குத் துன்பமும் துயரங்களுந்தான் அதிகமாகும்!" என்று ஈழவராயன் துயரம் நிறைந்த ஒரு பெருமூச்சுடன் தொடர்ந்து சொன்னான்; "நான் மதுரைக் கோட்டையில் இந்த இளையகுமாரன் மறைந்திருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காகத் தெற்குப்புறம் சென்றேன். அவள் மூத்த குமாரனின் மறைவிடத்தைக் கண்டுபிடிப்பதாகச் சொல்லி வடக்குப்புறம் பிரிந்து சென்றாள். மறுபடி நாங்களிருவரும் மூன்றாவது சாமக்கால மணியடிக்கும்போது தெற்கு மாசி வீதியிலுள்ள சிற்ப மண்டபத்தில் சந்திப்பதாகப் பேசிக்கொண்டோம். அதன் பிரகாரமே சந்தித்தோம். மதுரையைக் கைப்பற்றிய மகாசூரனான வீரசேகரனால் அவள் சிறைபிடிக்கப்பட்டு சிற்ப மண்டபத்தருகில் நின்றாள். நான் வீரசேகரனைக் கொல்ல விரும்பினேன். ஆனால் அவள் அதை விரும்பவில்லை. கபாலிகனொருவன் அவளைத் தப்புவித்து விடுவதாக நாடகம் நடிக்கும்படி குறிப்புக் காட்டினாள். நான் அதை அடுத்த தெருவிலுள்ள நம் கபாலிகனொருவனுக்கு உணர்த்துவதற்காக 'சக்திமாதா' என்று கூவி அழைத்தேன். கபாலிகனொருவன் ஓடிவந்து ஊர்மிளாவைப் பிடித்துக் கொண்டு போனான். ஆனால் அவன் நம்மவனல்ல! நமக்குத் தெரியாத வேறொரு கபாலிகன்!"

"யார் அந்தக் கபாலிகன்?"

"சரியாகத் தெரியவில்லை! வழியில் நம் ஊர்மிளா சோழியன் வீரசேகரன் கையில் சிறையான செய்தியைக் கேள்விப்பட்ட போது அவளைத் தந்திரமாக விடுவித்தால் ஆயிரம் ஈழப்பொன் கொடுப்பதாக என் கண்முன் எதிர்ப்பட்ட ஒரு சோழ அதிகாரியிடம் சொன்னேன்! அந்தச் சோழிய அதிகாரியின் முகத் தோற்றத்தைப் பார்க்கும்போது அவன் சுயநல ஆசையுள்ளவன் என்றும், கையூட்டு (இலஞ்சம்) வாங்கக்கூடியவன் என்றும் தெரிந்தது. ஒருவேளை ஊர்மிளாவை வீரசேகரனிடமிருந்து

தப்புவித்துச் சென்றவன் அந்தச் சோழ அதிகாரியால் அனுப்பப்பட்ட கபாலிகனாயிருக்கலாம்!'' இவ்வாறு சொல்லிவிட்டு ஈழவராயன் பூப்பல்லக்கினருகில் சென்று அதிலிருந்த ஆறு வயதுப் பாலமுருகனைத் தூக்கித் தன் தோள்மீது வைத்துக்கொண்டு, மதிற்சுவரின் இரகசியப் பாதை வழியாக நுழைந்தான்.

கபாலிகர் இருவரும் அந்தப் போலிச் சாமியாரையும் பாலமுருகக் கடவுளையும் அழைத்துக் கொண்டு மூன்று மதிற் சுவர்களையும் நீர் அகழிகளையும் கடந்து மூன்றாவது உள் கோட்டைக்குள் கொண்டு வந்துவிட்டனர்!

கோட்டைக்குள், வெளியே உள்ளவர் சந்தேகிக்கும்படி, கபாலிகக் கூட்டம் எதுவும் இல்லை! அதற்குப் பதில் பல பாண்டிய வீரர்கள் கோட்டையைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தனர் குதிரைகளுடன் சோனக வியாபாரிகளும், கைகளில் ஈட்டியேந்திய கிரேக்க யவனப் பரிவாரப் படையினரும், படைக் காப்பாளரும், யானை மறவர்களும், இவுளி மறலர்களும் அங்கும் இங்கும் அலைந்தனர். பல விஸ்தாரமான மண்டபங்களையும், பாசறைகளையும், நிலவறைகளையும், சுரங்கக் கூடங்களையும் உடைய அந்தக் கோட்டையெங்குமே யுத்தத்திற்கு வேண்டிய நானாவிதப் போர்க்கருவிகளும் உணவுச் சேமிப்பும் குவிந்திருந்தன. முன்பு இலங்காபுரி தங்கியிருந்ததால், கௌதம புத்தரின் உருவச் சிலையுள்ள ஒரு பெரிய பௌத்த விஹாரமும் அக்கோட்டைக்குள் இருந்தது. உறுதியான கல் தூண்களிலும் மண்டபச் சுவர்களிலும் புத்தர் உருவங்களும் அஜந்தா ஓவியங்கள் போன்ற அமைப்புள்ள சித்திரங்களும், பார்வதி பரமேசுவரன் படிமங்களும் நிறைந்திருந்து, எம்மதமும் சம்மதம் என்பதை நிலைநாட்டுவது போலிருந்தது.

பாலகனைத் தோளில் சுமந்தவண்ணம் ஒதுப்புறமாக நின்ற போலிப் படகோட்டிச் சாமியாரை நோக்கி வீரபத்திரன், "நான் சக்திமாதாவின் சந்நிதானத்துக்குச் சென்று நம் பால முருகப் பெருமானின் திருவருகையைத் தெரிவிக்கட்டுமா?" என்று கேட்டான்.

"வேண்டாம்! எதிர்பாராத விருந்தில்தான் சுவை இருக்கும். நானே சக்தி மாதாவின் சந்நிதானத்துக்குச் செல்லுகிறேன்!" என்று சொல்லிவிட்டு, "பார்வதிப் பிராட்டியார் எங்கிருக்கிறார்?" என்று வேடிக்கையாகக் கேட்டான் ஈழவராயன். ஆனால் அப்போதும் அவன் முகத்தில் சிறிதுகூடச் சிரிப்பு இல்லை.

"பார்வதிப் பிராட்டியார் பரமேசுவரருடன் அந்த இராஜ மாளிகையின் இரண்டாவது உப்பரிகையில் தனியாகச் சல்லாபித்துக் கொண்டிருக்கிறார்!" என்றான் கபாலிக வேஷத்திலிருந்த வீரபத்திரன், மலர்ந்த முகத்துடன்.

கருங்கல் மாடமான இரண்டாவது உப்பரிகையின் கருணமயில் மாலை நேரத்து மஞ்சள் வெயில் ஆழ்ந்து தவழ்ந்தது. அம்மாடத்தின் உள்கூடம் மணித்திரி விளக்குகளாலும், சித்திரம் திட்டிய விதானங்களாலும், சுவர்களாலும் சிறுசிறு மீனத்துவஜங்களாலும் கவின் பெறக் காட்சியளித்தது.

அந்தக் கூடத்தை முற்காலத்தில் போர்த் தலைவர்கள் தங்கள் பள்ளியறையாக உபயோகித்து வந்தனர். அங்கு ஒரு மூலையில் உள்ள ஒரு மரக்கட்டிலின் மீது வீரபாண்டியனும், அவனது இளமனைவியும், பார்வதியும் பரமசிவனும்போல் அமர்ந்திருந்தனர். வீரபாண்டியனின் இளம் மனைவி மலைநாட்டு மங்கையாதலின் தகதகவென்று பொன்னிற அழகு வாய்ந்தவளாயிருந்தாள். வீரபாண்டியனின் கட்டமைந்த கருமையான மார்பில் அவள் தலை வைத்துச் சாய்ந்திருப்பது, மாலை நேரத்து மஞ்சள் வெயில் மலை முகட்டின் கருமையில் கலந்து மருவுவது போலவும், இருளும் ஒளியும் ஒன்றாய் லயித்திருக்கும் அந்தி நேரம் போலவும் இருந்தது.

அந்த இராஜ மாளிகைக்கு வெளியே நூறு போர் வீரர்கள் வீரக் கவசங்கள் அணிந்து கைகளில் வாள்களை உருவி வரிசையாக அணி வகுத்து நின்றனர். அவர்களின் நடுவே ஒரு போர்வீரன் பாண்டிய நாட்டின் மீன் கொடி ஏந்தி நின்றான். அவர்களனைவரும் இரண்டாவது உப்பரிகையை நோக்கி வீரகோஷமிட்டனர்.

"திரிபுவன சக்கரவர்த்திகள் வீரபாண்டியத் தேவர் வாழ்க! பாண்டிமாதேவி திரைலோக்கியம் முழுதுடையாள் வாழ்க!" என்று வீரர்கள் உற்சாகமாகக் கோஷமிடுவது இரண்டாவது உப்பரிகையை எட்டியது.

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த வீரபாண்டியன் தன் மார்பின்மீது பொன்மாலை போல் துவளும் தேவியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அவள் தன் கருவிழிகளில் பெருகியிருந்த நீரைத் துடைத்துக் கொண்டு புன்னகை புரிந்தாள்.

வீரபாண்டியன் தன் இளம் மனைவியை அப்படியே வாரியணைத்துக் கொண்டு இலட்சியக் குரலில் உணர்ச்சிகள் பீறிட, "தேவி! நான் தலைநகரை இழந்தேன்! பாண்டிய நாட்டின் வீரமுடியை இழந்தேன்! என் கௌரவத்தை இழந்தேன்! என் இரு செல்வங்களான இரு குமாரர்களையும் நான் இழந்துவிடலாம்! என்னுள் ஓடும் வீரமறவ ரத்தத்தின் கடைசித் துளியையும் என் தேகம் இழந்து விடலாம்! ஆனால் நான் சகலத்தையும் இழந்து விட்டாலுங்கூட, உன் புன்னகை ஒன்று இருந்தால் அதுவே போதும்! என் தளர்ந்த நெஞ்சுக்கு அது ஒன்றுதான் புது சக்தி தரும்!" என்றான்.

அவனது அணைப்பில் அசைவற்று அவள் சித்திரப்பாவை போல் இருந்தாள். சோகத்தின் பனித்திவலைகள் ததும்பி நின்ற அவளது செந்தாமரை முகத்தில் சூரிய இரேகைபோல இலேசாக ஒரு புன்னகை மட்டும் அரும்பியது.

அவளை அணைத்தவாறே வீரபாண்டியன், "தேவி! நான் மதுரையில் நான்கு முறை முடி சூடப்பட்டு நான்கு முறையும் முடி இழந்து மறைந்து திரிந்தேன். உன் புன்னகை முகம் இருக்கும் வரை நான் எத்தனை முறை முடி இழந்தாலும் சோர்வுறேன்! தேவி, உண்மையில் உன்னை எப்போது இழக்கிறேனோ, அப்போதுதான் நான் சகலத்னதயும் இழந்து சரித்திரத்தையும் விட்டே மறைந்து போவேன்! அதுவரை என்னை என் இலட்சியப் பாதையிலிருந்து யாரும் அகற்றவே முடியாது!" என்றான்.

அவள் தன் நாதனைப் பரிவோடு நோக்கி, "உங்கள் இலட்சியப் பாதைக்கு என்றாவது நான் இடையூறாக நேர்ந்தால் அன்றே நான் மாய்ந்து போவேன்!" என்று சொன்னவள் மேலே எதுவும் சொல்லமுடியாமல், வீரபாண்டியனின் விசாலமான மார்புக்குள் தன் மலர் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

இலட்சிய ஒளி வீசும் வீரபாண்டியனின் கண்களில் இரண்டு நீர்த்துளிகள் அரும்பின.

மாலை நேரத்து மஞ்சள் வானம் மெல்ல மெல்லக் கருமை படர்ந்து, கருமை மேகங்கள் சூழ்ந்தன. திசைகளெல்லாம் இருளத் தொடங்கின.

வீரபாண்டியனுக்கு வயது அதிகமாகிவிட்டாலும் அவனுடைய இலட்சிய உணர்ச்சிகளினால் இருபது வயது வாலிபனைப் போலவே தோன்றினான். இடையில் வீரவாளும், திடமான நெஞ்சும், கரிய மீசையும் கணீரென்ற வீரக்குரலும் நேர்மையான உள்ளமும் வாய்ந்தவனாயிருந்தான். இலங்கை மன்னன் பராக்கிரமபாகு தன் நட்பிற்கு அறிகுறியாகப் பரிசளித்த விலை மதிப்பற்ற வைரத்தோடுகள் வீரபாண்டியன் காதுகளில் தகதகவென்று ஜ்வலித்தன. அவன் இளம் மனைவியோ அழகையெல்லாம் ஒருங்கே திரட்டி உலகச் சிற்பி செதுக்கிய தந்தப்பதுமையாக இருந்தாள். அன்றலர்ந்த தாமரை முகம்; பூங்கொடியின் சாயல்; பஞ்சினும் மிருதுவான தளிர்ப் பாதங்கள்; மை தீட்டிய கரு விழிகள்... இவளுடைய ஒவ்வொரு அங்கமுமே அவாதியான கவர்ச்சி வாய்ந்ததாக இருந்தது. ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு விதத்தில் அழகாயிருப்பாள். ஆனால் அவ்வளவு பெண்களின் பலவிதமான அழகும் இவள் ஒருத்தியிடமே திரண்டிருந்தது!

வீரபாண்டியனின் மார்பின் மீது இரண்டு உஷ்ணமான கண்ணீர்த் துளிகள் விழவே, தன் தேவியின் முகத்தைப் பூவைவிட மிருதுவாகத் தூக்கி, "தேவி உன் கண்களில் ஏன் கண்ணீர்?" என்று கேட்டான்.

''ஒன்றுமில்லை! தங்கள் அன்பை நினைத்துக் கொண்டேன்... இந்த அன்பு தங்கள் குமாரர்கள்மீதும் இருக்க வேண்டுமென்று தான்...'' என்று அவள் மேலும் எதுவும் சொல்ல முடியாதவளாய்க் குரல் அடைத்துக் கொள்ள அப்படியே வீரபாண்டியனின் விசாலமான மார்பினுக்குள் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு மின்னலைப் போலத் துவண்டவண்ணம் இலேசாக விம்மினாள்.

"தேவி, என் குமாரர்கள் உன் வயிற்றில் பிறக்கா விட்டாலும் அவர்கள்மீது அளவிலாத பாசம் வைத்திருக்கிறாய்! ஒரு புது மனைவியின் இருதயத்தைப் போல் சாமானியமானதல்ல உன் இருதயம்!"

"உங்கள் குமாரர்கள் என் குமாரர்கள் இல்லையா? அவர்கள் மீது என் அன்பு குறையாமல் இருக்க வேண்டு மென்பதற்காக நான் கன்னியாகக் கூட இருந்துவிடுவேன்!" என்றாள் தேவி.

வீரபாண்டியனுக்கு மெய் சிலிர்த்தது! நெய்யில் நெருப்புப் பட்டதுபோல் நெஞ்சழிந்து உருகினான்.

"தேவி! என்னால் உனக்கு எவ்வளவு துன்பம்? வசந்த இரவில் உன் பிறந்த தின வைபவத்தில் மூழ்கிக் கிடந்தபோது எதிரிகள் மதுரையைச் சூழ்ந்து கொண்டார்கள்! புது மனைவியின் இன்பக் கனவுகளில் லயிக்கவேண்டிய உன்னைப் பயங்கரமான போர் முனையில் இறக்கினேன்! கிழக்குக் கோட்டை வாசலில் தேர்ப்படையை நிறுத்தி, அதற்குப் பூங்கொடி போன்ற உன்னைத் தலைமை பூணச் செய்தேன்!... நான் எவ்வளவு கல் நெஞ்சன்!"

''அவ்வாறெல்லாம் சொல்லாதீர்கள்! அதனால் எனக்கு எவ்வளவோ பெருமையைத்தான் தந்திருக்கிறீர்கள்!" என்று சொன்ன தேவியின் தேகம் நடுங்கியது. அவளை அணைத்திருந்த வீரபாண்டியனின் தேகமும் நடுங்கியது.

"தேவி! முற்றுகையில் நம் மதுரைக் கோட்டை திரிகளின் கையில் சிக்கும்போது எவ்வளவு

பயங்கரமான நிலையில் நீயும் நானும் தப்பி ஓடிவந்தோம்? கிழக்குக் கோட்டை வாசலில் உன் தேர்ப்படை தீயில் எரிந்துபோனதும், நீ நிலைகுலைந்து என்னை நோக்கி ஓடி வந்தாய். மேற்குக் கோட்டை வாசலில் என்னுடைய யானைப் படை சீர்குலைந்து எதிரிகள் கோட்டைக் கதவை உடைத்ததும், 'தேவி' என்று நான் கதறிக்கொண்டு உன்னை நோக்கி ஓடிவந்தேன். கிடைத்தற்கரிய செல்வமான நீ எதிரிகளின் கையில் சிக்கிவிடுவாயோ என்று கதி கலங்கித்தான். தலைநகர் வீழ்வதையும்பற்றிக் கவலைப்படாமல் என் குமாரர்களின் கதியையும் பற்றிச் சிந்திக்காமல், உன்னோடு கோட்டையைவிட்டுத் தப்பியோட வழிதேடித் திண்டாடினேன். எண்ணெய்க் கொப்பரைகள் கவிழ்ந்து எங்கும் தீப்பிடித்து எரிந்தது. எண்ணற்ற நம்முடைய பிரம்மாண்டமான தேர்களெல்லாம் தீயில் கருகி ஒவ்வொன்றாய் உடைந்து சிதறிக் கொண்டிருந்தன. எதிரிகளின் வேல்களை ஏந்தவேண்டிய நம் வீரர்களின் மார்பு, எரியும் தீயில் கருகிக்கொண்டிருந்தன. எங்கும் தீயின் ஒரே புகைமண்டலம்! நீ திக்குமுக்காடி புகையுண்ட ஓவியம்போல் என் மார்பில் சோர்ந்து விழுந்தாய்! மிரண்டோடும் ஒரு மதயானையின் காலில் ஆணும் பெண்ணுமான இருவர் மிதிபடுவதைக் கண்டு அது நானும் நீயுந்தானோ என்று பிரமை பிடித்து நின்றாய். கோட்டையின் மூன்று வாசல்களிலுமோ எதிரிகள் திமுதிமுவென்று உள்ளே நுழைந்து நம்மை நோக்கி எமகிங்கரர்கள் போல் ஓடிவந்தார்கள். நாம் நின்ற கிழக்குக் கோட்டை வாசலின் கதவோ தீ மயமாகக் காட்சியளித்தது. வாசலின் வெளியிலோ, தீ அடங்கியதும் உள்ளே பாய்ந்து வர எதிரிகள் இராட்சஸர்கள் போல் உறுமிக் கொண்டிருந்தார்கள். தப்ப வழியில்லாத இந்த நெருக்கடியான நிலையில், உன் நல்ல காலந்தான் நம்மருகே நம்மீது அபிமானமுள்ள தோட்டி ஒருவன் தன் தண்ணீர் வண்டியுடன் நின்றான். அவன் வண்டியில் இருந்த தண்ணீர்க் கொப்பரையில் என்னையும் உன்னையும் அமரவைத்து, வண்டியைச் சுற்றிலும் தீ மூட்டி, கண்மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் கோட்டையைவிட்டுக் காததூரம் தாண்டி, நாம் எதிரிகளின்

கையில் சிக்காதபடி நம்மைப் பத்திரமாகக் கொண்டுவந்து சேர்த்தான். நம்மைக் காப்பாற்ற வேண்டுமென்ற இராஜ விசுவாசத்தினால் அந்தத் தோட்டி தன் தேகம் கொப்புளிப்பதையும் பொருட்படுத்தவில்லை! தேவி! அந்தப் பயங்கரமான சம்பவத்தை நினைத்துக் கொள்வதனால் உன் மெல்லிய தேகம் இப்போதும் நடுநடுங்குகிறது!"

"நான் அதற்காக நடுங்கவில்லை! கோட்டைக்குள் சிக்கிக் கொண்ட நம் குமாரர்கள் இருவரும் என்ன ஆவார்களோ என்று நினைத்துத்தான் ஒவ்வொரு கணமும் நான் நடுங்குகிறேன்!"

"தேவி, கவலை வேண்டாம்! நம் வேற்படை மல்லன் ஈழவராயன் நம் நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். மிகவும் சாமர்த்தியசாலி. அவனை நம்பித்தான், ஆறு வயதுகூட நிரம்பப் பெறாத நம் இளையகுமாரனை வேற்படைக்குத் தலைமை பூணச்செய்து தெற்குக் கோட்டை வாசலில் நிறுத்தினோம். அவன் எப்படியும் நம் இளையகுமாரன் வீரகேரளனை நம்மிடம் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்ப்பான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் வடக்குக் கோட்டை வாசலில் குதிரைப் படைக்குத் தலைமை பூண்டு நின்ற நம் மூத்த குமாரன் பராக்கிரமன் என்ன கதியானான் என்பதுதான் தெரியவில்லை. அவனுக்கு உதவியாக நாம் நிறுத்திய அஞ்சு கோட்டை நாடாள்வான் எதிரிகளின் கையாளாக மாறி மகத்தான துரோகம் புரிந்தபோது நம் மூத்த குமாரன் அத் துரோகியின் கையில் சிக்காதபடி எவனோ காப்பாற்றிக் கொண்டுபோய் அவனை இரகசியமாய் மறைத்து வைத்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். மூத்தவன் இருக்குமிடத்தை ஆராய்ந்து அவனைக் கோட்டையிலிருந்து நம்மிடம் கொண்டு வந்து சேர்ப்பதற்குரிய வழிகளைப் பற்றி ஊர்மிளா நமக்குத் தகவல் அனுப்புவாள்! கவலைப்படாதே! நம் குலதெய்வம் கன்னி பகவதி நம் குமாரர்களைக் காப்பாற்றுவாள்!'' என்றான் வீரபாண்டியன். ஆனால் தேவி தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாலும் சமாதானமடைந்தவளாய்த் தெரியவில்லை.

அவள் வீரபாண்டியனின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அவனது பூரித்த தோளில் தன் உணர்ச்சி பொங்கும் முகத்தைப் புதைத்துக் கொண்டு அளப்பரும் உணர்ச்சியில் மூழ்கியிருந்தாள்.

அவர்களுக்குப் பின்னால் பூரண சந்திரிகை உதயமாகி வட்ட வடிவமான மதுக்கிண்ணமாகக் காட்சியளித்தது. அதைச் சுற்றிலும் நீல வர்ணத் தோப்பில் எண்ணற்ற மல்லிகை மொட்டுகள் பூத்துச் சிதறிக் கிடப்பது போல நட்சத்திரங்கள் மின்னின. அந்தச் சூழ்நிலையின் போதையில் இருவரும் உணர்ச்சி மயமாகி மௌனமாக மெய் மறந்திருந்தார்கள்.

அம்மௌனத்தைக் கலைப்பதுபோல, "திரிபுவனச் சக்கரவர்த்திகள் வீரபாண்டியத் தேவர் வாழ்க! பாண்டிமாதேவி திரைலோக்ய முழுதுடையாள் வாழ்க!" என்று வெளியிலிருந்து வீர கோஷங்கள் கேட்டன.

பாண்டிமா தேவியின் தேகம் புல்லரித்தது. தன்னை அணைத்திருந்த கணவனின் கைகளை மிருதுவாக எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

"புறப்படுங்கள்! வீரர்கள் தங்களைக் காண கோஷமிடுகிறார்கள். மந்திராலோசனை சபையும் தங்களுக்காகக் காத்திருக்கும்!" என்று சொல்லிவிட்டுப் பதுமைபோல் எழுந்து சென்று அக்கூடத்திலிருந்த தந்தப் பெட்டகத்தைத் திறந்தாள். அதில் நவரத்தினங்கள் இழைத்த பாண்டிய வம்சத்தின் இராஜமுடி தகதகவென்று மின்னியது. முற்றுகையில் மதுரைக் கோட்டை எதிரிகள் கையில் விழுந்த சமயத்தில், வீரபாண்டியன் தலையிலிருந்து, அம்முடி கீழே போர்க்களத்தில் விழுந்து கிடந்தது. இராஜ விசுவாசமுள்ள குடியானவன் ஒருவன் அவ்வீர முடியை எடுத்து வைத்திருந்து, எதிரிகளுக்குத் தெரியாமல் வீரபாண்டியனிடம் அதைச் சேர்ப்பிக்கச் சமயம் பார்த்திருந்தான். மதுரைக் கோட்டையிலிருந்து பக்கத்து ஊரிலுள்ள சிவன் கோவிலுக்கு வெண் பொங்கல் பிரசாதத்திற்காக ஒரு வண்டி நிறைய நெல் மூட்டைகளை அக்குடியானவன் காணிக்கை அனுப்பினான்.

தலைநகருக்கும் வெளியூர்களுக்கும் எந்தவிதமான போக்குவரத்துமில்லாமல் தடுத்து நிறுத்தும் கோட்டைக் காவலர், கோயில் காரியங்களை மட்டும் தடுப்பதில்லை. அவ்வாறு கோட்டையை விட்டுத் தந்திரமாக வெளிவந்த நெல் வண்டியில், ஒரு நெல் மூட்டைக்குள் பாண்டிய வம்சத்தின் இராஜமுடி மறைத்து வைக்கப்பட்டிருந்தது! அவ்வளவு பிரயாசையுடன் சற்று முன்தான் இராஜமுடி நெட்டூர்க் கோட்டைக்குள் வந்து சேர்ந்திருந்தது.

அந்த மாபெரும் இராஜமுடியைப் பாண்டிமாதேவி தன் பூங்கரங்களால் எடுத்து வந்து வீரபாண்டியனிடம் நீட்டினாள்.

"வேண்டாம்! தலைநகரை இழந்தவன் தன் தலையில் வீரமுடி சூடுவதா? தலைநகரை மீட்கும் வரையில் வெறுந்தலையனாகவே இருப்பேன்! வாழையடி வாழையாகப் பாண்டிய மன்னர்கள் சூடி வந்த இந்தப் பொன்முடியை மதுரை அத்தாணி மண்டபத்திலுள்ள மழவராயன் சிம்மாசனத்தில் நான் அமரும்போது தான் மறுபடி என் தலையில் சூடுவேன்!'' என்று வீரபாண்டியன் உணர்ச்சி பீறிடும் இலட்சியக் குரலில் சொல்லிவிட்டு, இரண்டாவது மாடத்திலிருந்து கீழே இறங்கிச் சென்றான்.

வெளி மண்டபத்தில் வாளையுருவி வரிசையாக அணிவகுத்து நிற்கும் வீரர்கள் முன் வீரபாண்டியன் வீரசிங்கம்போல் வந்து நின்றான். பிறகு மந்திரத் தலைவர்கள் சூழ்ந்துள்ள மண்டபத்தில் இலட்சிய வீரனைப்போல் வந்து அமர்ந்தான்.

ஐம்பெருங் குழுவினரும், அறையர் எனப்படும் நாட்டதிகாரிகளும், அரசியற் பொறுப்புச் சுற்றத்தினரும், பொக்கிஷசாலை அதிகாரிகளான கனகச் சுற்றத்தினரும், அரசனது நன்மையைக் கவனிக்கும் உறுதிச் சுற்றத்தினரும் யானை மறவர் இவுளி மறவர்களும், படைத் தலைவர்களும், விடையதிகாரிகளும், மாளிகை நாயகமும் அம் மந்திராலோசனை சபையில் குழுமியிருந்தார்கள். சட்டையும் தலைப்பாகையும் அணிந்த கஞ்சுகமாக்கள்

எனப்படும் அரச தூதர்களும் கம்பீரமாக வீற்றிருந்தனர். அரசனுக்கருகில் அணுக்கச் சேவகர் நின்றனர். அரசன் அவ்வப்போது திருவாய் மலர்ந்தருளும் ஆணைகளை நேரில் கேட்கும் திருவாய்கேள்வியினரும் திருமுகம் எழுதுபவரும் தயாராக இருந்தனர். நாள்தோறும் அரசியல் நிகழ்ச்சிகளை ஓலைகளில் எழுதிவைக்கும் அதிகாரியான பட்டோலைப் பெருமானும் தயாராக இருந்தான்.

வீரபாண்டியன் அம் மாபெரும் மந்திராலோசனை சபையில் வந்தமர்ந்ததும், "திரிபுவனச் சக்கரவர்த்திகள் வீரபாண்டியத் தேவர் வாழ்க!" என்று வீரர்கள் கோஷமிட்டனர்.

"இதற்குப் பதில் 'தமிழ் வாழ்க' என்று கூறுங்கள்! நானும் இந்தப் பாண்டிய நாடும், நம் சந்திர குலமும் சரித்திரத்தை விட்டு மறைந்து போகலாம். ஆனால் தமிழும் தமிழர் நாகரிகமும் என்றென்றும் வாழவேண்டும். அதற்காகவே நீங்களும் நானும் வாழவேண்டும். நம் குலதெய்வம் கன்னிபகவதி நம் இலட்சியத்தைக் காப்பாளாக!" என்று வீரபாண்டியன் வெகு தொலைவில் கீழ்த்திசை வானத்தில் இளம்பும் சந்திரோதயத்தை ஊடுருவிப் பார்த்துக் கொண்டே ஓர் இலட்சியப் பெருமூச்சுடன் சொன்னான்.

"ஆம்! படுதோல்வியடைந்து சிதைந்து கிடக்கும் நம்மை இனித் தமிழ் என்ற தாரக மந்திரந்தான் ஒன்றுசேர்க்க வேண்டும்!" என்றார், வீரபாண்டியன் அருகிலிருந்த உத்திர மந்திரி வீரகேரள பாண்டியக் கோனார். வயதின் அநுபவங்கள் நிறைந்த அவர் முகத்தில் நிதானமும் ஆழ்ந்த சிந்தனையின் கோடுகளும் நிரம்பியிருந்தன.

வீரபாண்டியன் பெருமூச்சுடன், "பாண்டிய நாட்டின் தோல்வி தமிழ் நாகரிகத்தின் தோல்வி! தென்திசைச் சமதர்மத்தின் தோல்வி! சோழியர்களின் வெற்றி வடதிசை ஜாதியக் கலாசாரத்தின் வெற்றி!" என்று வீராவேசத்தோடு குமுறினான்.

மந்திரத் தலைவர்களில் ஒருவரான நரதுங்கப் பிரம்மராயர் தம் முகத்தைச் சுளித்தார். வீரபாண்டியன்

அருகில் திருமந்திரவோலை நாயகமாக வீற்றிருந்த முரப்பு நாட்டு மறவனூரம்பலவன் வேளான் ஆன நித்தவிநோத மூவேந்த வேளான் அரசரின் திருவாய் மொழிகளை வேகமாக ஓலையில் எழுதிக் கொண்டிருந்தான்.

"நாம் படுதோல்வியடைந்து திராப் பழியில் மூழ்கிக் கிடக்கிறோம்! வீரசேகரன் தயாரித்துக் கொடுத்த புதுமுறையான வியூகத்தினால் சோழர்கள் நம் மதுரைக் கோட்டையை எளிதாகக் கைப்பற்றிக் கொண்டார்கள்!" என்று வாலிபத் .தலைவர்கள் ஆவேசமாகக் கூவினார்கள்.

"முற்றுகையின்போது அஞ்சு கோட்டை நாடாள்வான் துரோகியாக மாறாதிருந்தால் நாம் படுதோல்வி அடைந்திருக்க மாட்டோம்! தெற்குக் கோட்டை வாசலில் நம் வேற்படை அதிகாரி ஈழவராயன் மூர்ச்சித்து விழுந்தவனைப் போல நடித்திராவிட்டால் நாம் படுதோல்வியடைந்திருக்க மாட்டோம். யானைப் படைக் காவலன் யானைகளுக்கு விஷ நீர் வைக்காதிருந்தால் நாம் படுதோல்வி அடைந்திருக்க மாட்டோம்! சோழர்கள் அதர்மமான முறையில் முன்னறிவிப்பின்றிப் படையெடுக்காதிருந்தால் நாம் படுதோல்வி அடைந்திருக்க மாட்டோம்!" என்று கூவினான் பாண்டிய சேனாதிபதியான வெண்பைக் குடி நாட்டு இளவெண்பைச் சந்திரசேகரன், தன் கால்களில் அணிந்திருந்த வீரக் கழல்கள் குலுங்க.

உத்திர மந்திரி பாண்டியக் கோனார் நிதானத்துடன் சபையை நோக்கிச் சொன்னார்; "சோழர்களிடம் புதுவிதமான யுத்தக் கருவிகள் மட்டுமல்ல; வீரசேகரனைப் போன்ற காரிய வீரர்களும், மதியூகிகளும் அதிகமிருந்தனர். நம்மிடமோ கோட்டைக்குள் துரோகிகள் தான் அதிகமிருந்தனர். எதிரிகளிடம் கட்டுப்பாடும், ராஜதந்திரமும், அறிவும், அதர்மமும் அதிகமிருந்தன. நம்மிடமோ உணர்ச்சிகளும் தர்மத்தைப்பற்றிய பேச்சுக்களுந்தான் அதிகமிருந்தன. இது தான் நாம் படுதோல்வி அடைந்ததற்குக் காரணம்!"

வீரபாண்டியன் உணர்ச்சிகளால் சூழப்பட்டவனாய். "நான் தோல்வியடைந்ததற்கோ, தலைநகர்

பறிபோனதற்கோ துயர்ப்படவில்லை! நமது பொன்னகரான மதுரையைச் சோழர்கள் தீ வைத்துக் கொளுத்தி நாசமாக்கி விட்டனர். நம்முடைய அழகிய தலைநகர் புகையுண்ட ஓவியமாக மங்கிவிட்டது. நம் பாண்டிய நாட்டுப் பெண்களின் அகில் வாசனை வீசும் கூந்தல்களிலே புகை நாற்றம் நாறுகின்றது. நம் பொன்னகரின் கிணறுகளிலே உதிரம் ஊறுகின்றது! நம் அருந்துணைவர்களான இலங்கையரோ எதிரிகளின் கையில் சிக்கி மூக்கறுப்புண்டு ஓடுகின்றனர். இவ்வாறெல்லாம் கேள்விப்படும் போதுதான் என் நெஞ்சில் நெருப்பு எரிமலையாகக் கொந்தளிக்கிறது!" என்றான் தன் புஜங்கள் குலுங்க, சூழ்ச்சியின் கிழவரை நோக்கி.

"சோழநாட்டு வாட்படைத் தலைவன் ஜனநாதன்தான் அத்தகைய நாசவேலைகளைப் புரிகிறான்! அவன் குரங்குபோன்ற குறும்பன். விஷமமே உருவானவன். சோழர்கள் படையெடுத்து வந்து கோட்டைகளைக் கைப்பற்றியதும், ஜனநாதன் தன் வாலிப வானர சேனைகளுடன் நகர்க்குள் புகுவான். நகர் முழுவதையும் தீ வைத்துக் கொளுத்திச் செல்வங்களைச் சூறையாடுவான். இவ்வாறு கொள்ளையடித்துத் தன் சொந்தப் பொக்கிஷத்தைப் பெருக்கிக் கொள்வான். இது அவன் வழக்கம்!" என்றான் சேனாதிபதி சந்திரசேகரன்.

"அந்த வானர சேனைத் தலைவன் மூட்டிய தீயில் நம் மதுரையிலிருந்த மீனக் கொடி எரிந்துவிட்டது. நம் கொடிநகர் கெட்டது. நம் கௌரவம் பட்டுப் போயிற்று. என்னுடன் தோளோடு தோள் நின்ற பல தோழர்களும் இளையினரும் மடிந்து விட்டனர். எங்ஙனும் துயரமும் சோர்வும் பரவிக் கிடக்கின்றன. நாமே தீராப் பழியில் மூழ்கிக் கிடக்கிறோம்!" என்று வீரபாண்டியன் துயரமும் ஏனமும் நிறைந்த குரலில் சொல்லிக் கைகளைப் பிசைந்து உதட்டைக் கடித்துக் கொண்டான்.

உத்திர மந்திரி பாண்டியக் கோனார் மெல்ல எழுந்து நின்று நிதானமான குரலில் கூறினார். "சென்றதை நினைத்து நாம் மனமும் உடலும் நொந்து

கொள்வதில் பயனில்லை; அதனால் நம் முயற்சிகள் தான் குன்றும்! தோல்வியை வெற்றிப் பாதையில் திருப்புவதைப் பற்றிச் சிந்திப்பதுதான் சரியான வழியாகும்!"

"இனிச் செய்வதென்ன? இலங்கை வீரர்களின் மூக்கையறுத்துப் பரிபவம் செய்த பகைவரைப் பழிவாங்காமல் விடமாட்டோம்! அரசியல் அழிந்ததென அயரமாட்டோம். படை திரட்டுவோம். தலைநகரை மீட்போம். மதுரையைக் கவர்ந்த பகைவரின் இரத்தத்தால் நம் மறவகுல வீரத்தின் மாசைக் கழுவுவோம்! நாசத் தீயில் மண்ணாகும் மதுரையை மறுபடி மயனும் நிர்மாணிக்காத மதுராபுரியாக்குவோம்! பழிக்குப் பழியாகச் சோழர்களின் தலைநகரில் தீ வைப்போம்!" என்று வாலிப வீரர்கள் உணர்ச்சி வசமாகிக் கூவினார்கள்.

வீரபாண்டியன் குரலில் உணர்ச்சி பீறிட, "இந்த நெட்டூர்க் கோட்டையில் ஒரு மாபெரும் படை தயாரிப்போம். பகைவரின் கையிலிருந்து நம் பொன்னகரான மதுரையை மறுபடி கைப்பற்றுவோம்! இதே நெட்டூர்க் கோட்டையில் முன் தலைமுறையில் இலங்கைப் படைத் தலைவன் இலங்காபுரி தங்கியிருந்தான். இங்கிருந்தே ஐம்பத்து மூன்று முறை யுத்தம் புரிந்து, கிராதகன் குலசேகரனிடமிருந்து பாண்டி நாட்டின் பல பகுதிகளையும் மீட்டு, என் தலையில் வீரமுடி சூட்டினான்! இந்தக் கோட்டையில் துவங்கும் நம் பாண்டிய நாட்டுச் சுதந்திரக் கிளர்ச்சி வெற்றி பெறுவது நிச்சயம்!" என்றான்.

"வெறும் நம்பிக்கை மட்டும் போதாது. நமக்குப் படைப்பலம் வேண்டும். நம் பாண்டிய நாடு இரண்டு கட்சிகளாகப் பிரிந்து கிடக்கிறதென்பதையும் மறந்துவிடக் கூடாது. நமக்கு எதிராக விக்கிரமபாண்டியனின் கட்சியை ஆதரிக்கும் பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்களையும் சிற்றரசர்களையும் உடனே நம் பக்கம் சேர்க்க வேண்டும்" என்றார் உத்திரமந்திரி பாண்டியக் கோனார்.

சேனாதிபதி சந்திரசேகரன் மந்திராலோசனை சபையைச் சுற்றிலும் பார்த்துக்கொண்டே, "செம்பொன்னேரிக் கோட்டைத் தலைவன் நரசிங்கத்தேவன் நம் கட்சியில் சேர்ந்து உதவி செய்தால், பல கோட்டைத் தலைவர்கள் நம் பக்கம் சேர்வார்கள். இந்த நெட்டூர்க் கோட்டையை ஒரு யுத்த முனையாகவும் நரசிங்கத் தேவனின் செம்பொன்னேரிக் கோட்டையை இரண்டாவது யுத்த முனையாகவும் கொண்டு போரிட்டால், நம் தலைநகரான மதுரையை மீட்பது மிகவும் சுலபம்!" என்றான்.

"அதற்குப் பிரதிபலனாக அவன் என்ன பரிசு கேட்கிறான் தெரியுமா? பொன்னோ புன்செய் நிலங்களோ, புதிய ஊர்களோ பட்டம் பதவிகளோ அவன் கேட்கவில்லை! தீராப் பழியைக் கேட்கிறான்! மதுரையில் நான் மறுபடி மணிமுடி சூட அவன் உதவியை நாடினால், பாண்டி நாட்டில் நான் சைவ சமயத்தை ஒழித்துவிட்டு புத்த விஹாரங்களையும் சமணப் பள்ளிகளையும் இடித்தெறிந்துவிட்டு, வைஷ்ணவ மதத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று வாக்குறுதி கேட்கிறான்! முன்பு சோழ நாட்டில் சைவர்கள் வைணவர்களை வதைத்தார்கள் என்பதையும், கிருமி கண்ட சோழன் தில்லை நடராஜரின் ஆலயத்தின் திருமுற்றத்திலிருந்த திருமாலின் விக்ரஹத்தைப் பெயர்த்தெடுத்து அலைகடலில் வீசியெறிந்தான் என்பதையும் கேள்விப்பட்டு, வைஷ்ணவனான நரசிங்கத்தேவன், அதற்குப் பாண்டி நாட்டில் பழி தீர்த்துக் கொள்ள விரும்புகிறான். ஆனால் நான் இதை மதப் போராட்டமாக்க விரும்பவில்லை!" என்று வீரபாண்டியன் சொல்லிவிட்டு, "ஆகவே, நரசிங்கத் தேவனுக்கு நாம் அவ்வாறு வாக்குறுதி கொடுக்கலாமா?" என்று சபையை நோக்கிக் கேட்டான்.

"வாக்குறுதி கொடுப்போம்! அவனுடைய உதவியினால் மதுரைக் கோட்டையை நாம் சுலபமாகக் கைப்பற்றிக் கொண்டதும் நம்முடைய வாக்குறுதிகளையும் சுலபமாக மறந்து விடலாம்!" என்றான் மந்திரத் தலைவர்களில் ஒருவனான பட்டிராயன்.

"நம்முடைய வெற்றிக்காக அவனிடம் அவ்வாறு பொய்யாக வாக்குறுதி கொடுக்கிறோம் என்றால் அவனது பல்லாயிரக்கணக்கான வீரர்களின் இரத்ததானத்தைக் கேட்கிறோம் என்றுதான் அர்த்தம். அத்தகைய இரத்த தானத்தால் .என் லட்சிய உள்ளம் கறையாகி விடும்!" என்று சொல்லிவிட்டு வீரபாண்டியன், ''அது நேர்மையான வழியல்ல. நான் அரசியலை ஒரு சூதாட்டமாக்க விரும்பவில்லை!" என்றான் தீர்மானமான குரலில்.

"நேர்மையாலும் உணர்ச்சிகளினாலும் தாழ்ந்து போனவர்கள் தமிழர்கள். நமக்குரிய அரசியலைக் கைப்பற்ற நாம் சூதும் சூழ்ச்சியும் செய்தால்தான் நாம் விரைவில் வெற்றி பெற முடியும்!"

"எனக்கு வெற்றி முக்கியமல்ல! அதை அடைய முயலும் வழிதான் முக்கியம்! எனக்குக் காரியம் முக்கியமல்ல! நேர்மைதான் முக்கியம்! என் இரு குமாரர்களும் மதுரைக் கோட்டைக்குள் சிக்கிக்கொண்டு கிடக்கிறார்கள். எனக்கு உதவியாக நின்ற இலங்கைப் படையோ, மூக்கறுப்புண்டு ஓடிவிட்டது! நான் துணைவர்கள் என்று நம்பியவர்களெல்லாம் துரோகிகளாக மாறி வருகிறார்கள்! மகளை மணம் செய்து கொடுத்த கேரள மகராஜனோ, மருமகனுக்கு ஒரு உதவிப் படையும் அனுப்பவில்லை! இந்த நிர்க்கதியான நிலையிலும் நான் நேர்மையைத்தான் கடைப்பிடிக்க விரும்புகிறேன்!" என்றான் வீரபாண்டியன் திடமான குரலில்.

சேனாதிபதி சந்திரசேகரன் எதையோ தீவிரமாகச் சிந்தித்த வண்ணம் வீரபாண்டியனை நோக்கி, "இந்த நிலையில் கேரளராஜரின் படை உதவி கிடைத்தால், நேர்மையான வழியிலேயே நம்முடைய இலட்சியத்தில் கலபமாக வெற்றி பெற முடியும்! கேரளராஜரின் செல்வக் குமாரியைத் தாங்கள் மணம் புரிந்திருக்கிறீர்கள். தேவியாரின் மூலம் கோரிக்கை அனுப்பினால் கேரளராஜர் தம்முடைய சகலவிதமான படை உதவிகளையும் அனுப்புவார்!" என்றான்.

"அதற்குப் பிரதியாகக் கேரள ராஜன் மூன்று நிபந்தனைகள் விதிக்கிறான்!" என்று சொல்லிவிட்டு வீரபாண்டியன் துயரம் நிறைந்த குரலில், "நான் இலங்கை உதவியை அறவே நிராகரிக்க வேண்டுமென்பது முதல் நிபந்தனை..." என்றான்.

"அந்த நிபந்தனைக்கு நாம் ஒப்புக்கொள்ளலாம்! நம்மிடமிருந்த சிறு இலங்கைப் படையும் படுதோல்வி யடைந்து மூக்கறுப்புண்டு இலங்கைக்கு ஓடிவிட்டது! இலங்கையிலோ இப்போது உள்நாட்டுக் கலகம்! இலங்கை மன்னர் பராக்கிரமபாகுவோ தம்முடைய இறுதிக் காலத்தில் மதச் சீர்திருத்தங்களிலும் இலங்கை நீர்ப்பாசனத் திட்டங்களிலும் மூழ்கியிருக்கிறார்! இனி இலங்கையிலிருந்து நாம் படை உதவி எதிர்பார்க்க முடியாது! இந்த நிலையில் நமக்குக் கேரள ராஜரின் படை உதவியைத் தவிர வேறு வழியில்லை! அருமையான புது நண்பனுக்காக அசக்தனான பழைய மித்திரனை இழந்து விடுவதுதான் சரியான ராஜதந்திரமாகும்!" என்றார் உத்திர மந்திரி பாண்டியக் கோனார்.

"கேரள ராஜனின் முதலாவது நிபந்தனை மித்திரபேதம் செய்வது! மற்றிரு நிபந்தனைகளோ புத்திர பேதம் செய்பவை!" என்று வீரபாண்டியன் சொல்லி விட்டு, "இலங்கை ராணிமூலம் பிறந்த என் மூத்த மகனுக்கு இளவரசுப் பட்டம் இல்லையென்று நான் பிரகடனம் செய்யவேண்டுமென்பது இரண்டாவது நிபந்தனை. என் இளைய குமாரன் வீரகேரளனுக்கு உடனே இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்பது மூன்றாவது நிபந்தனை! அது ஏன் என்பது உங்களுக்கே புரியும்! என் இளையகுமாரன், கேரள ராஜனின் மூத்த குமாரி மூலம் பிறந்தவன்! கேரளராஜன் தன் பேரனுக்குப் பாண்டிநாட்டு இளவரசுப் பட்டம் சூட்ட நம்முடைய இந்தப் பலஹீனமான நிலையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறான்!"

"அதனாலென்ன? தங்கள் இளையகுமாரன் வீரகேரளன் யார்? தங்கள் இருதய தேவியான திரைலோக்கிய முழுதுடையாளின் சொந்தத் தமக்கையார் மைந்தனல்லவா? இவன் ஆறு வயதில் அறியாப்

பிராயத்தில் தன் தாயை இழந்ததும் தாங்கள் மைத்துனியை மணம் புரிந்தது ஏன்? கேரள ராஜரின் உறவு விட்டுப் போகக் கூடாது என்பதற்காகவன்றோ தாங்கள் கேரள ராஜரின் இரண்டாவது குமாரியையும் மணம் புரிந்தீர்கள்?" என்றான் மந்திரத் தலைவர்களில் ஒருவனான பட்டிராயன்.

உத்திரமந்திரி வீரகேரளப் பாண்டியக் கோனார் சபையைச் சுற்றிலும் கண்ணோட்டம் செலுத்திக்கொண்டே, "கேரள ராஜரின் நிபந்தனைகளையெல்லாம் நிறைவேற்றி அவரது முழு உதவியையும் பெறுவோம்! இந்த மந்திராலோசனை சபையிலுள்ள பல கோட்டைத் தலைவர்களும் அவ்வாறே எண்ணமுள்ளவர்களா யிருக்கிறார்கள். கேரள ராஜரைப் போலவே நம் கட்சியில் பலரும் தங்கள் இலங்கை ராணிமூலம் பிறந்த தங்கள் மூத்த குமாரனை விரும்பவில்லை! இலங்கை இரத்தம் கலந்துள்ள தங்கள் மூத்த குமாரன் தங்களுக்குப் பின் பாண்டிய நாட்டை அரசாள்வதை இங்குள்ளோர் பொறுக்க மாட்டார்கள்! மூத்தவனுக்குப் பதில் இளைய குமாரனுக்கே இளவரசுப் பட்டம் கட்டவேண்டும் என்று நம் கட்சியில் பலர் வெகு காலமாக வாதாடி வந்ததும், தாங்கள் இந்தப் பிரச்சனையைத் தள்ளி வைத்து வந்ததும் தங்களுக்கு ஞாபகமிருக்கலாம்!" என்றார்.

வீரபாண்டியனுக்குத் தலை சுற்றியது! நெற்றியைக் கெட்டியாகப் பிசைந்துகொண்டே சபையை நோக்கி மெல்லிய குரலில் பேசலானான்:

"நாம் எந்த ஜாதியினரையும் எந்த தேசத்தினரையும் எந்த மதத்தினரையும் துவேஷிக்கக் கூடாது! துவேஷம் சரியான இலட்சியமல்ல!... கேரள மன்னன் இலங்கையரை வெறுப்பதற்கு ஓரளவு காரணமிருக்கலாம்! முன்பு இலங்கையில் சிம்மாசனப் போர் நடந்த போது மலைவள நாட்டிலிருந்து சென்ற கேரள வீரர்கள் இரண்டு கட்சிகளிலும் மாறி மாறிச் சேர்ந்து, போரை முடியவிடாமல் நீடித்துக் கொண்டே இலங்கையிலுள்ள ஊர்களைச் சூறையாடித் திரிந்தார்கள். அதனால் இலங்கையில் குடியேறிய கேரளர்களை இலங்கை வெறுத்து

விரட்டியடித்தது. அந்த ஆத்திரம் கேரள ராஜனுக்கு இருக்கலாம்! ஆனால் நம் பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் இலங்கையரை வெறுப்பதற்குக் காரணமென்ன? ஆதிகாலம் தொட்டு இலங்கையர் நம் பாண்டி நாட்டுக்கு அரும் துணைவர்கள் இல்லையா? சோழ ஆக்கிரமிப்பு நேர்ந்தபோதெல்லாம் பாண்டி நாட்டு சுதந்திரத்தை நமக்கு மீட்டுத் தந்தவர்கள் இல்லையா?" என்று சொல்லிவந்த வீரபாண்டியன், மிதியுண்ட பாம்புபோல் ஏதோ பழைய நினைவால் ஆக்ரோஷம் கொண்டு கூவினான்; "முன் தலைமுறையில் என் தந்தையும் தாயும், எங்கள் குடும்பம் அனைத்துமே சோழர்களின் சூழ்ச்சிக்கு இரையாகி, கிராதகன் குலசேகர பாண்டியனால் படுகொலை செய்யப்பட்டார்கள்! அதில் நான் ஒருவன் மட்டும் தப்பியோடி மலைநாட்டில் ஒளிந்துகொண்டேன்! அப்போது அப்பழிக்குப் பழிவாங்க, பரிகாரம் தேட, இலங்கையிலிருந்து தான் இலங்காபுரியின் தலைமையில் ஒரு மாபெரும் படை வந்தது! சோழ ஆக்ரமிப்பிலிருந்து பாண்டிய நாட்டையும், கிராதகன் குலசேகரனிடமிருந்து மதுரைச் சிம்மாசனத்தையும் மீட்டு, இளவரசனாய் ஒடிப் பதுங்கிய என் தலையில் ராஜமுடி சூட்டியது! அத்தகைய இலங்கைப்படையினர் நம்மால் என்ன கதியானார்கள்? அவர்கள் ஓய்ந்திருந்த போது நம்முள் பல கோட்டைத் தலைவர்கள் துரோகிகளானார்கள்! சோழர்கள் மறுபடி குலசேகர பாண்டியனைத் தூண்டிவிட்டு, பாண்டிய அரசியலில் புகுந்து, படையெடுத்து வந்தார்கள்! நமக்குத் துணை வந்த இலங்கைத் தலைவர்களின் தலைகளை வெட்டி மதுரைக் கோட்டை வாசலில் தொங்கவிட்டார்கள்! இலங்கையர் வடித்த ரத்தத்திற்கு, அவர்களது நேர்மையான தியாகத்திற்கு, நாம் பரிசளிப்பது மறைமுகமான வெறுப்பா...?" என்று கேட்டான் வீரபாண்டியன்.

அச்சபையிலிருந்த தொண்டித் தலைவன் எழுந்திருந்து, "சைவர்களான நாம் அநாவசியமாக அந்நியர்களை வெறுப்பதில்லை! பௌத்தர்களான இலங்கைப் படையினரின் மதத்துவேஷமும் மத வெறியுமே எங்கள் வெறுப்பிற்குக் காரணம்! தங்கள் தந்தையின்

பொருட்டுப் போராட வந்ததாகச் சொல்லிக் கொண்டே இலங்கைப் படை மறைமுகமாக நம்முடைய இராமேசுவரம் கோவிலைப் பாழாக்கியது! அந்த சரித்திரத்தைச் சக்கரவர்த்திகள் கேள்விப்பட்டிருக்கலாம்!" என்றான்.

இதுவரை சபையில் கண்மூடிப் பரத்தியானத்தில் ஆழ்ந்திருப்பவர் போல் தோன்றிய நரதுங்கப் பிரம்மராயர் கண்விழித்துச் சபையினரை நோக்கி, "இராமேசுவரம் கோயிலை இடித்ததோடு இலங்கைப் படை நிற்கவில்லை! சோழ நாடுவரை புகுந்து எண்ணற்ற நம் மதக் கோயில்களை இடித்தது!" என்று சொல்லிவிட்டு முன் தலைமுறையில் நடந்த ஒரு சரித்திர நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு விலரிக்கலானார்:

சோழ நாட்டின் சைவாசாரியாரான ஸ்ரீ சுவாமி தேவர்கூட இலங்கைப் படையினரைப் பாப கர்மாக்கள் என்று கூறி, அவர்களால் ஸ்ரீமகாதேவர் கோவில் உட்பட சகல தேவாலயங்களுக்கும் வைதீக ராஷ்டிரத்துக்கும் விரோதமுண்டாகுமென்று துக்கித்தார். சோழநாட்டுச் சிற்றரசன் எதிரிலி சோழ சாம்புலராயனுக்கும் அதே விசாரந் தோன்றி ஸ்ரீ சுவாமி தேவரின் பாதத்தில் விழுந்தான். "ஈழப் பனட விரைவில் அழியும்; கவலைப்படாதே!" என்று அருளி ஸ்ரீசுவாமிதேவர் இருபத்தெட்டு நாள் அகோர பூஜை செய்தார். அந்தப் பூஜையின் பலனாய் ஈழப்படை தோற்றோடியது; நம்முடைய கோயில்கள் காப்பாற்றப்பட்டன. உடனே எதிரிலி சோழ சாம்புவராயன் உள்ளம் மகிழ்ந்து அந்த மகான் சுவாமி தேவருக்குக் காஞ்சியை அடுத்த ஆர்ப்பாக்கம் என்னும் சிற்றூரை திருப்பாத பூஜையாக அளித்தான்... இவற்றையெல்லாம் நான் கற்பனை செய்து சொல்லவில்லை! கோயிற் கல்வெட்டுகளில் இவை பொறிக்கப்பட்டிருப்பதை இன்றளவும் படித்தறியலாம்!"

"இலங்கையர்மீது நம்முடைய பின் சந்ததியினருக்கு வெறுப்பேற்பட வேண்டுமென்பதற்காகவே சோழியர்கள் அவ்வாறு கோயிற் கல்வெட்டுகளில் பொறித்து வைத்திருக்கிறார்கள்!" என்று வாலிபத் தலைவனான

முத்தையன் எழுந்து நின்று சொல்லிவிட்டுத் தன் கருத்தைச் சபையில் விளக்கத் தொடங்கினான்: "புகழ் பெற்ற இராஜராஜ சோழன் காலத்திற்குப் பிறகு சோழர்களின் கப்பற்படை அடிக்கடி இலங்கைக்குச் சென்று அங்குள்ள பௌத்தக் கோவில்களையும் பௌத்த மதத்தையும் நாசமாக்கி அங்கு வைதிக மதத்தை ஸ்தாபிக்க முயன்று வந்தது. அதனால் சோழர்களுக்குக் கெட்ட பெயர் உண்டாயிற்று. அந்தக் கெட்ட பெயர் இலங்கையர்களுக்கும் ஏற்பட வேண்டுமென்பதற்காகவே சோழியர்கள் செய்த சூழ்ச்சிதான் இது! தோற்றோடிக் கோவில்களுக்குள் பதுங்கிக்கொண்ட சோழர்கள், கோவில்களுக்குள்ளேயே சதியாலோசனைகள் நடத்தினார்கள். போர்க் கருவிகளை மறைமுகமாகக் குவித்தார்கள். பொதுக் கோவில்களையே சொந்தக் கோட்டைகளாக உபயோகப்படுத்தினார்கள். அதனால் இலங்கைப் படை அக்கோவில்களையும் போரில் கைப்பற்றும் அவசியம் ஏற்பட்டது. சுற்றிலும் இலங்கைப் படை வளைத்துக் கொள்ளவே, தங்கள் சொந்தக் கோவில்களையே சோழர்கள் இடித்தெறிந்துவிட்டு ஓடினார்கள். இலங்கையர்மீது அந்தப் பழியைச் சுமத்துவதற்காக! நம் ஜனங்களுக்கு அருவருப்பை உண்டாக்குவதற்காக! பாண்டி நாட்டுக்கும் இலங்கைக்குமுள்ள நட்பை நிரந்தரமாக உடைப்பதற்காக!... நம் பாண்டிய நாட்டில், சமணர்களைக் கழுவேற்றிய படலம் நடந்திருக்கிறதே தவிர, பௌத்தர்களின் மதவெறியாட்டம் நடந்ததில்லை! ஏனெனில் பௌத்தம் ஓர் மதமல்ல. எம்மதத்தவரையும் அரவணைக்கும் ஓர் அன்புப் பிரசாரம்!"

இவ்வாறு முத்தையன் பேசி முடித்ததும் பிரம்மராயர் விநயமாகப் புன்முறுவல் செய்துகொண்டே பதிலளித்தார்:

"முத்தையன் சுத்த சைவனாய்ப் பிறந்தும் பௌத்த மதத்தின் சமதர்மக் கொள்கைகளைப் புகழ்பவனாதலால் ஒரு சரித்திர நிகழ்ச்சியை மாற்றிக் கூற முயலுகிறான். ஆனால் ஜனங்களும் இங்குள்ள கோட்டைத் தலைவர்களும் அதை நம்பமாட்டார்கள். ஏனெனில் கோயில்

கல்வெட்டுகளை மாற்ற முடியாது! சுவாமி தேவரின் அகோர பூஜையை மறுக்க முடியாது! இடிந்துபோன கோயில்களை மறைக்க முடியாது!"

உத்திரமந்திரி கோனார் ஒருகணம் தீவிரமாகச் சிந்தித்துப் பின்னர் வீரபாண்டியனை நோக்கிச் சொன்னார்:

"முன் தலைமுறையில் நடந்து போன ஒரு சரித்திர நிகழ்ச்சியில் எது நிஜம், எது பொய் என்று நிர்ணயிப்பது சுலபமல்ல! பலரின் நினைவில் வேரூன்றி விட்ட ஒரு அபிப்பிராயத்தை மாற்றியமைப்பதற்கு நமக்குப் போதிய அவகாசமும் இல்லை. நமக்குப் பாதகமாக உள்ள சூழ்நிலையை நமக்குச் சாதகமாக்கிக் கொள்ள. நம் மனச்சாட்சியையும் மறந்து சில காரியங்களைச் செய்துதான் ஆகவேண்டும்! அதுதான் சரியான ராஜதந்திரமாகும்!"

"ராஜ தந்திரத்திற்காக என் மூத்த மகனின் உரிமையைப் பலியிடச் சொல்லுகிறீர்களா?" என்று வீரபாண்டியன் சற்றுக் கோபமாகவே கேட்டான்.

"உரிமையைப் பற்றிப் பேசவோ உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்கவோ இது நேரமல்ல! நாம் ஈடுபட்டிருப்பது அரசியல் துறை! வீழ்ச்சி முனையில் இருக்கும் நாம் வெற்றிப் பாதையில் ஏறக் கூடிய வழியைப் பற்றி நிதானமாகச் சிந்திப்பதுதான் உத்திர மந்திரியின் கடமையாகும்!" என்றார் பிரதம மந்திரி கோனார்.

நரதுங்கப் பிரம்மராயர் கோபமுற்றவராய் எழுந்து நின்று, "பட்ட உரிமை யாருக்கு? மூத்தவனுக்கா? இளையவனுக்கா? இலங்கையருக்கு விரோதமாக நான் வாதித்தாலும் இலங்கை ராணி மூலம் பிறந்த மூத்த குமாரனுக்கு இளவரசுப் பட்டம் கூடாது என்று சொல்ல என் நா கூசுகிறது! வெற்றி வழியைச் சிந்திப்பது உத்திரமந்திரி கோனாரின் கடமையாக இருக்கலாம்! ஆனால் புராதன தர்மத்தைப் பாதுகாப்பதுதான் இந்தப் பிரம்மராயரின் கடமையாகும்!" என்றார். இலங்கையருக்கு

விரோதமாக அவர் வாதித்த போது அதை ஆமோதித்த கோட்டைத் தலைவர்கள் பிரம்மராயரின் இந்த வாதத்தை மட்டும் ஏற்றுக்கொள்ளவில்லை.

அங்கிருந்த கோட்டைத் தலைவர்களில் பலர், மூத்தவனை நீக்கிவிட்டு இளையவனுக்கே இளவரசுப் பட்டம் கட்டவேண்டுமெனப் பிடிவாதமாக விரும்பினார்கள். வீரபாண்டியனின் நிலையோ தர்மசங்கடமாயிற்று. உரிமையுள்ள மூத்தவனுக்குப் பட்டம் இல்லையென்றால் உலகம் பரிகசிப்பதோடு, இலங்கையரும் மனக் கசப்படைவார்கள். மூத்தவனுக்குத்தான் பட்டமென்றாலோ, பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் மனக் கசப்படைவதோடு, கேரளராஜனும் ஜன்ம விரோதியாகி விடுவான். இலங்கைமீது தீராப் பகைமை பூண்ட கேரளராஜன், பாண்டிய நாட்டில் இலங்கையின் உதவிப் படை இருக்கும்வரை வீரபாண்டியனுக்கு எந்தவிதப் படையுதவியும் செய்ய முடியாது என்று செய்தி அனுப்பியவனாயிற்றே...? மூத்த குமாரனா? இளைய குமாரனா...? எந்தக் கன்றுக்கு முதலில் பால் கொடுப்பது என்று இரண்டு பசுங் கன்றுகளையும் நினைத்து இரங்கும் ஒரு தாய்ப் பசுவைப்போல் வீரபாண்டியன் மௌனமாகச் சபையில் இருந்தான்.

பிரம்மராயர் கடைசியாகச் சபையை நோக்கி, "மூத்தவன் இருக்க இளையவனுக்குப் பட்டம் கட்ட முயன்ற வினைதான் சம்பூர்ண ராமாயணத்துக்கே ஆதி காரணம் என்பதை நாம் முதலில் புரிந்துகொள்ள வேண்டும்!" என்று எச்சரித்தார்.

உத்திர மந்திரி கோனார் சட்டென்று எழுந்து நின்று, "இதில் புரிந்து கொள்வதற்கு ஒன்றுமில்லை! பிறப்பை ஒட்டியே ஜாதிகளையும் கர்மாதத்துவங்களையும் வகுக்கும் புராதனக் கலாசாரம், அரசியல் பதவிக்கும் பிறப்பையே முக்கியமாக வலியுறுத்துகிறது! பிறப்பில் மூத்தவனுக்குத் தான் அரசியல் பட்டம் என்பது வடநாட்டுச் சம்பிரதாயம்! வளர்ச்சியில் தகுதியானவனுக்குத்தான் அரசாட்சி என்பது தமிழ் நாட்டுப் பண்பு, சம்பிரதாயம், புராதனக் கலாசாரம் என்ற கால் விலங்குகளை முதலில் நாம்

உடைத்தெறிந்தால்தான் நாம் முன்னேற முடியும்!" என்று சொல்லிவிட்டு வீரபாண்டியனை நோக்கி, "சக்கரவர்த்திகள் தம் மூத்த குமாரருக்கு இளவரசுப் பட்டம் இல்லை என்பதைத் தீர்மானமாக இந்த மந்திர சபைக்கு அறிவிக்க வேண்டும்! அதை உறுதி செய்ய உடனே இளையவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதும் நல்லது! அப்போதுதான் இங்குள்ள நம் கோட்டைத் தலைவர்களில் பலர் மனப்பூர்வமாகப் போரில் ஈடுபடுவதென்று முடிவு செய்திருக்கிறார்கள். சம்பிரதாயத்தை ஒட்டி மூத்தவனுக்குத்தான் இளவரசுப் பட்டம் என்று அரசர் தீர்மானித்தால் நம்மிடையே துரோகிகள் ஏற்படும் சூழ்நிலை அதிகரித்து விடும். நம் கட்சியிலிருந்து பெருவாரியானவர் வெளியேறுவார்கள்! வீரபாண்டியத் தேவரின் இலட்சிய வெற்றிக்குரிய வழியே நிரந்தரமாக அடைபட்டுப் போகும்!" என்றார்.

அங்குள்ள அனைவரும் வீரபாண்டியன் என்ன முடிவு சொல்லப் போகிறானோ என்று ஆவலோடு அசைவற்றுக் கவனித்தனர்.

வீரபாண்டியன் தன் சபையைச் சுற்றிலும் கண்ணோட்டம் செலுத்திவிட்டு, "என் இரு கண்களையும் எப்படிச் சமதையாகப் பாவிக்கிறேனோ, ஒரு பசு தன் இரு கன்றுகளுக்கும். எப்படி ஒரேவிதமாக இரங்குமோ அதைப்போல என் இரு குமாரர்களிடையே நான் எந்தவிதப் பேதமும் காணவில்லை! எனக்காக இரத்த தானம் கொடுக்க முன் வந்துள்ள உங்களில் பலரின் அபிப்பிராயத்தையும் புறக்கணிக்க விரும்பவில்லை! இதுபற்றி அந்தப்புர மகளிரிடமும் கலந்தாலோசித்து நாளை மந்திரி சபையில் உங்கள் எண்ணப்படியே முடிவு சொல்ல முயல்கிறேன்!" என்று சபையை விட்டு எழுந்து சென்றான்.

அப்போது ஒரு யவன வீரன் ஓடிவந்து, ஈழவராயன் மேன்மாடத்தில் பாண்டிமாதேவியாரோடு பேசிக் கொண்டிருப்பதாக வீரபாண்டியனிடம் தகவல் சொன்னான். வீரபாண்டியன் அதே கணம் உத்திரமந்திரி பின்தொடர ஆவலோடு மேன்மாடத்தை நோக்கி விரைந்து சென்றான்.

# அத்தியாயம் 7

## சூழ்வினைப் படலம்

*'தாழ்வு இல்லாய்! தந்த வரத்தைத் தவிர்க என்றல்*
*உரந்தான் இல்லால், நல் அறம் ஆமோ? உரை!' என்றாள்.*

**கம்ப ராமாயணம்**

மலர்க் குலம் வாய் விரித்து மந்தமாருதம் வாசனை வீசும் மேன்மாடத்தில், மணிச்சுடர் விளக்கு பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தது.

அதைவிடப் பிரகாசமான அழகுடன் பாலமுருகக் கடவுள் போல் மேனியெங்கும் விபூதி பூசி, கையில் வேல் ஏந்தி, இளையகுமாரனான வீரகேரளன் புன்சிரிப்புடன் நின்றான். அவனை வாரியணைத்துக் கொண்டு மலைமங்கையான பாண்டிமாதேவி மெய்மறந்து நின்றாள்.

கற்சிலையான விளக்குப் பாவையருகில் பொற்சிலைபோல் நிற்கும் பாண்டிமா தேவியைப் பார்த்தவண்ணம் பக்திப் பரவசனாகிப் படகோட்டிச் சாமியாரின் உருவத்தில் ஈழவராயன் நின்றான்.

இம்மூவரையும் ஒருங்கே மேன் மாடத்தில் கண்ட வீரபாண்டியன், "எனக்கு நல்ல காலம் பிறந்துவிட்டது!" என்று உற்சாகமாய்க் கூவினான்.

மாளிகை எங்கும் அழகிய பருவ யுவதிகள் புன்சிரிப்புடன் தலைகளில் அகல் விளக்கு ஏந்தி

நிற்பதுபோல் விளக்குப் பாவை சிலைகள் கண்கவர் வனப்புடன் விளங்கின. அந்த வெளிச்சத்தில் பிரம்மாண்டமான சுவர்களெங்கும் இராமாயணக் காவியத்திலுள்ள காட்சிகள் அழகிய ஓவியங்களாய்த் தீட்டப்பட்டிருப்பது தென்பட்டது.

வீரபாண்டியன் பக்கம் ஈழவராயன் திரும்பி, "பாலமுருகக் கடவுளைப் பார்வதிப் பிராட்டியாரிடம் கொண்டுவந்து சேர்த்துவிட்டேன்! ஆனால் குமாரன், 'அம்மா! அம்மா!' என்று ஓயாமல் புலம்பிக் கொண்டிருந்தபடியாலும், கோட்டையை விட்டுக் கடத்தி வரும்போது வழியில் எதிரிகள் ஏதாவது கேள்வி கேட்டால் விவரம் தெரியாத வயசாகையால் எதையாவது உளறிவிடக் கூடுமென்றும் கருதி, தங்கள் இளைய குமாரனின் நாக்கில் ஒரு சிறு வேலொன்று குத்த நேர்ந்தது. மன்னிக்க வேண்டுகிறேன்!" என்று கூறிவிட்டுத் தலைகுனிந்து நின்றான்.

"மன்னிப்பதா? ஈழவராயா, உனக்கு நான் மகத்தான கடமைப்பட்டிருக்கிறேன்" என்று சொன்ன வீரபாண்டியன் ஆனந்த மிகுதியினால் ஈழவராயனின் சேவையை எவ்வாறு புகழ்வது என்று தெரியாமல் திணறினான். தந்தப் பதுமைபோல் நிற்கும் தன் தேவியையும் அவளது அணைப்பில் சிட்டுப் பறவைபோல் நிற்கும் தன் தனயனையும் மாறி மாறிப் பார்த்தான். உணர்ச்சிகளின் மிகுதியினால் நெஞ்சில் ஓடிய எண்ணங்களையெல்லாம் கொட்டினான்.

"ஈழவராயா! எவ்வளவு பெரிய பொக்கிஷத்தை என்னிடம் கொண்டுவந்து சேர்த்திருக்கிறாய் என்பது உனக்குத் தெரியாது! இந்த இளைய குமாரன் பாண்டிமாதேவியின் பிரீதிக்குப் பாத்திரமானவன். இவன் அழகைப் பார். தேவியின் பிரதிபிம்பம் போலிருக்கிறான். அதே புன்சிரிப்பு! அதே வாஞ்சை தோய்ந்த கண்கள்! அதே மென்மையான மலர் முகம்! ஏனெனில் இவனைப் பெற்ற தாயும் இப் பாண்டிமா தேவியும் உடன் பிறந்த சகோதரிகளல்லவா? ஈழவராயா! தேவியின் முகம் அல்லது இந்தப் பாலகனின் முகம் அருகிலிருந்தால்தான்

வீரபாண்டியன் ஜீவனுடன் விளங்குவான்! தாயற்ற இந்தப் பாலகன் மீதுள்ள பாசத்தாலும். இவனைப் பெற்ற தமக்கை மீதுள்ள பிரியத்தினாலுந்தான் தேவி என்னை மணம் புரிந்து கொண்டாளோ என்று கூடப் பல சமயங்களில் எனக்குத் தோன்றும்!'' என்று வீரபாண்டியன் சொன்னதும் தேவி நாணப் பதுமையாய் முகம் கவிழ்ந்து நின்றாள். அவளது பவள உதடுகளில் மென்மையான ஒரு புன்சிரிப்பு தவழ்ந்தது.

"என் தமக்கை தங்களைவிட்டு மறைந்ததும் அவளை மறக்க எவ்வளவோ முயன்றீர்கள்! இந்தப் பாலகனின் முகம் அவளை ஓயாமல் நினைவூட்டி வந்தது. அதனால்தான் என்னை மணந்து கொண்டீர்களெனவும் சொல்லலாமல்லவா?" என்றாள் தேவி.

ஈழவராயன் சிறிது ஒதுங்கித் தலைகுனிந்து நின்றான். தம்பதிகளின் இந்த அந்நியோன்ய வேளையில் தான் அங்கிருப்பது உசிதமாகுமா அங்கிருந்து போய்விடலாமா என்றெல்லாம் குழம்பினான்.

அவன் பக்கம் வீரபாண்டியன் சட்டென்று திரும்பி, "ஈழவராயா! எவ்வாறிருந்தாலும் தேவிக்கும் எனக்கும் இந்தப் பாலகன் இணையற்ற சங்கிலியாக விளங்குகிறான்! இவனை எதிரிகளின் கையிலிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்தாய். தேவியாரின் உயிரை மட்டுமல்ல, என் வெற்றிக்குரிய அரசியல் பகடையையும் கொண்டு வந்து விட்டாய்! இனி எனக்குக் கேரளராஜனின் படை உதவி கிடைக்கும்" என்றான் உற்சாகத்தோடு.

நாணப் பதுமையாய் ஒருபுறம் ஒதுங்கி நின்ற பாண்டிமாதேவி, ஈழவராயன் பக்கம் திரும்பிக் கேட்டாள்: ''மூத்த குமாரன் எங்கே? அவன் மறைவிடத்தை விசாரித்தறிந்து ஊர்மிளா எந்தத் தகவலும் சொல்லவில்லையா?"

"சொன்னாள்! மதுரைக் கோட்டைக்குள் சிக்கிக் கொண்ட மூத்த குமாரரை நம் முகவெட்டி நாயகமான பொன்னன் இரகசியமாக இன்ன தெருவில் மறைத்து

வைத்திருக்கிறான் என்ற விவரத்தையும் தெரிந்து கொண்டேன்! ஆனால் திருப்பரங்குன்றத்துப் பூப்பல்லக்குச் சிறிதானபடியாலும் மூத்த குமாரரைப் பாலமுருகக் கடவுள் வேஷத்தில் கடத்திக் கொண்டு வருவது இயலாது ஆகையாலும் இளைய குமாரனை மட்டும் கொண்டு வந்தேன். மேலும்...'' என்று சொல்லி நிறுத்திய ஈழவராயன் மெல்ல தேவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான். தேவியின் உயிருக்குயிராய் விளங்கிய சகோதரியின் மைந்தன் இளையவனான வீரகேரளன். மூத்த குமாரனோ இலங்கை ராணியின் மூலம் பிறந்தவன். இந்தக் கருத்தை மனத்தில் வைத்துக் கொண்டு ஈழவராயன் மெல்ல தேவியாரின் முகம் நோக்கி. "மேலும், இளையவனை முதலில் கொண்டு வந்தால் தேவியாருக்கு அதிக ஆனந்தம் உண்டாகும் என்று நினைத்தேன்!" என்றான்.

பாண்டிமாதேவியின் பொன்னிற முகம் சட்டென்று கோபத்தால் சிவந்தது.

"ஈழவராயரே! ஒரு தாய் இரண்டு குமாரர்களில் ஒருவன்மீது குறைவான அன்பும் இன்னொருவன் மீது அதிக அன்பும் செலுத்துவாள் என்று எதிர்பார்க்காதீர்!" என்றாள். நீர் கொண்ட மேகம் போன்ற அவளது நெடுங் கண்களில் நீர்த் துளிகள் திரண்டு அவளது விம்மும் நெஞ்சில் சிந்தின.

ஈழவராயன் தலை குனிந்தான். வீரபாண்டியனுக்கு வியப்பால் மெய் சிலிர்த்தது: தன் தேவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

வீரபாண்டியன் அவளை நோக்கி. "தேவி! ஒரு தேசத் தாயின் இருதயத்தைப்போல ஒரு ராஜவம்சப் பெண்ணின் உள்ளம் விசாலமாயிருப்பதைக் கண்டு நான் அதிசயப்படவில்லை! அம்மா அம்மா என்று உன்னோடு ஒட்டி உறவாடும் என் இளையகுமாரன் உன் இருதயத்தைக் கவர்ந்ததைக் கண்டு நான் அதிசயப்படவில்லை! உன் சகோதரி மைந்தனை உன் குமாரனாகப் பாவிப்பதைக் கண்டு நான் அதிசயப்பட மாட்டேன்! ஆனால்

உன்னை நான் மணந்த செய்தியறிந்ததும் உன்னை வாயாரச் சபித்துக்கொண்டே உயிர் துறந்தாள் என் இலங்கை ராணி. அவள் வயிற்றில் பிறந்தவன் என் மூத்த குமாரன் காலமான தன் தாயின் துர்ப்போதனையால் அவன் உன்னைக் கண்டு முணுமுணுத்து ஒதுங்கி வாழ முயன்றவன். அணைக்க வரும் உன் கையை உதறித் தள்ளியவன்! அவன்மீதும் நீ ஒரே மாதிரியான அன்பு வைத்திருப்பதைக் கண்டுதான் நான் அதிசயப்படுகிறேன்!" என்றான்.

பாண்டிமாதேவி தன் பிராணகாந்தனைக் கம்பீரமாக ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தாள்.

"இதில் அதிசயம் ஒன்றுமில்லை! நன்றாக யோசித்துப் பாருங்கள்" என்று சொன்ன அவள் நிலா மாடத்தை நோக்கி ஓடி அங்கிருந்த மலர் மஞ்சத்தின் மீது கவிழ்ந்து விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

வான நிலவும் வாடைக் காற்றும் மேனியை அரவும் நிலா மாடத்திற்கு வீரபாண்டியன் தன் தேவியைப் பின்தொடர்ந்து வந்தான். அவன் நெஞ்சில் பல நினைவுகள் சுழன்றன.

வீரபாண்டியனின் இலங்கை மனைவி, தன் வயிற்றில் பிறந்த மூத்த குமாரனுக்கே இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமெனத் தன் கடைசி மூச்சு வரை போராடி வந்தாள். கேரள வம்சப் பெண்ணின் மூலம் பிறந்த இளைய குமாரனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி விடுவார்களோ என்ற கலலையும் ஆத்திரமும் அவளுக்கு இருந்தன. இளைய குமாரன் ஆறுவயதுப் பாலகனாக இருக்கும்போது அவனைப் பெற்றவள் உயிர் துறக்கவே, வீரபாண்டியன் தன் மனைவியின் தங்கையான இந்தத் தேவியை மணம் புரிந்துகொண்டான். கேரள ராஜனின் இரண்டாவது குமாரியையும் வீரபாண்டியன் மறுபடி மணந்துகொண்டது மூத்த குமாரனுக்குப் பட்டமில்லாமல் செய்யவே நடந்த சூழ்ச்சி என்று வீரபாண்டியனின் இலங்கை மனைவி நினைத்தாள். அந்த நினைப்பால் உள்ளம் ஒடிந்துபோய், வீரபாண்டியனின் புது

மனைவியைச் சபித்துக் கொண்டே உயிர் நீத்தாள். அவளுடைய மரணத் தறுவாயில் பாண்டிமாதேவி திரைலோக்கிய முழுதுடையாள் அவளிடம் சென்று, "என்னைச் சக்களத்தி என்று தவறாக நினையாதே! என்னதான் என் உயிருக்குயிரான என் தமக்கையின் மைந்தன் எனினும், வீரகேரளன் இளையவன்! மூத்த குமாரனான உன் மகனுக்கே இளவரசுப் பட்டம் உரியது! மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டம் கட்ட என் உயிருள்ளவரை நான் சம்மதிக்கமாட்டேன்! என் தாலிக் கயிற்றின்மீது ஆணை!" என்று வாக்குறுதி கொடுத்தாள்.

இவ்வளவு நினைவும் வீரபாண்டியன் நெஞ்சில் வந்து மோதவே கரைகாணாத் துயரக் கடலில் அழுந்தினான். கட்டிலில் பனிப் பூவைப் போலத் துவளும் பாண்டிமா தேவியைக் கண்டு நெய்யில் பட்ட நெருப்புப் போல நெஞ்சு உருகினான்.

பெண் மானைத் தன் துதிக்கையால் தூக்கும் ஆண் யானையைப் போல, அவளைத் தன் பெரிய கைகளால் தூக்கித் தன் மார்போடு இறுக அணைத்துக் கொண்டான். பாண்டிமாதேவி அவன் மார்பில் மின்னலைப் போலத் துவண்டாள். வீரபாண்டியன் அவளை அணைத்துக் கொண்டே, "தேவி! இவ்வளவு சுமையை ஒரு இளம் பெண்ணின் நெஞ்சு தாங்கக்கூடியதா? நீ ஒரு சுமையுமில்லாத கேரள ராஜனின் செல்வக் குமாரியாய்ப் பிறந்து, துன்பமே என்னவென்பதே தெரியாமல் வளர்ந்தாய்! மாளாத ஆசையுடன் என் மனைவியானதும், என்னைச் சூழ்ந்திருந்த என் சூழ்வினை உன்னையும் சூழ்ந்து கொண்டது!'' என்று துயரக் கடலுக்குக் கரைகாணாதவனாய்த் தத்தளித்தான்.

தேவி மேகலை நெகிழ நெஞ்சு புழுங்கியவளாய்க் கணவனின் பரந்த மார்பில் நினைவழிந்து தேம்பிக் கொண்டிருந்தாள்.

"தேவி! கவலைப்படாதே! என் சூழ்வினை என் குமாரர்களையும் சூழ்ந்து கொண்டாலும், தாய்களற்ற அந்த அநாதைக் குழந்தைகள் மீது நீ வைத்திருக்கும் தாயன்பு

நிச்சயம் அவர்களைக் காப்பாற்றும்!" என்று தன் இளம் மனைவியைப் பூப்போல தழுவிக் கொண்டு அவளது தேன் மணம் கமழும் கூந்தலை வாஞ்சையுடன் வருடினான்.

ஈழவராயனும் இளையகுமாரனும், உத்திர மந்திரியும், வெளியே காத்திருப்பது நினைவு வரவே, இருவரும் நிலா மாடத்தை விட்டு மெல்ல வந்தார்கள்.

அவர்களைக் கண்டதும் உத்திர மந்திரி பாண்டியக் கோனார் உற்சாகமாகக் கூவினார்:

"இளைய குமாரரைக் கொண்டு வந்தாயிற்று! இனியும் இளவரசுப் பட்டம் கட்டுவதில் சுணக்கம் கூடாது! நாளையே முடிசூட்டு மண்டபத்தில் இளவரசராக வீரகேரளத் தேவருக்குப் பட்டம் சூட்டிவிடலாம்!"

பாண்டிமாதேவி சர்ப்பத்தைத் தீண்டியவள்போல் சட்டென்று நின்றாள். அவளது மிருதுவான பாதங்களி லிருந்த பொற் சிலம்புகள் கணீரென்று ஒலித்தன.

"இதென்ன அதிசயம்? மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டம் கட்டுவதா?" என்று கேட்டுவிட்டுத் தேவி தன் பிராணகாந்தரின் முகத்தையும் உத்திர மந்திரி கோனாரின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

வீரபாண்டியன் தலை குனிந்து நின்றான்.

உத்திர மந்திரிக் கோனார் தீர்மானமான குரலில் தேவியை நோக்கி, "நாம் வெற்றி பெற வேண்டுமானால் ஏதாவதொரு அதிசயம் நடந்துதான் தீரவேண்டும்! பாண்டிய நாட்டுப் பல கோட்டைத் தலைவர்களின் உதவியைப் பெற உடனடியாக இளையகுமாரருக்கு இளவரசுப் பட்டம் சூட்டும் அவசியம் சக்கரவர்த்திகளுக்கு ஏற்படுகிறது!" என்றார்.

அவரைப் பாண்டிமாதேவி ஏறிட்டு நோக்கினாள். அப்பூங்கொடி உத்திர மந்திரியைக் கோபமாய்ப் பார்த்துக் கொண்டே, "பாண்டி நாட்டுப் பேரமைச்சரே! இதைப்

போல ஒரு அதிசயம் எங்கள் சேர வமிசச் சரித்திரத்தில் தோன்றியபோது என்னவாக முடிந்தது என்ற கதை உமக்குத் தெரியுமா? மூத்தவனான சேரன் செங்குட்டுவனுக்குரிய பட்டத்தை இளையவன் இளங்கோவிற்குச் சூட்ட வேண்டுமென்று நிமித்தர்கள் அனைவரும் சொன்னார்கள். அப்போது இளையவன் என்ன செய்தான் தெரியுமா? முடி தரிக்கவில்லை; மூத்தவன் காடாள இளையவன் நாடாளவில்லை! அரசியலை விட்டே விலகிச் சென்றான்! வனவாசம் செய்து வாழ்வைத் துறந்து தவயோகியாகிச் சிலப்பதிகாரமெழுதிய இளங்கோவடிகள் ஆனான்!" என்று சொன்ன தேவி, எதிரே சுவரில் தீட்டப்பட்டிருக்கும் கைகேயி தசரதச் சக்கரவர்த்தியிடம் வரம் பெறும் இராமாயண ஓவியக் காட்சியை ஏறிட்டு நோக்கினாள்.

இளையவன் வீரகேரளனுக்கு நீங்கள் இளவரசுப் பட்டம் கட்ட முயன்றால் இந்தப் பாலகனும் ஒரு இளங்கோவடிகள் ஆவானே தவிர, ஒருபோதும் சக்கரவர்த்தி பரதனாக மாட்டான்!" என்றாள் ஏளனமும் துயரமும் கொந்தளிக்க.

வாய் பேசாப் பதுமை போன்ற பாண்டிமா தேவி இவ்வளவு தூரம் கொந்தளித்துப் பேசுவதைக் கண்டிராத உத்திர மந்திரி திகைத்து அசைவற்று நின்றுவிட்டார்.

பாண்டிமாதேவி தன் நாதன் பக்கம் திரும்பி, "இளையவன் வீரகேரளனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதை எந்தச் சந்தர்ப்பத்திலும் எந்தக் காலத்திலும் என் உடலில் உயிருள்ளவரை அநுமதிக்க மாட்டேன்! பாண்டிமா தேவி தன் சக்களத்திக்குத் தன் தாலிக் கயிற்றின்மீது செய்து கொடுத்த வாக்குறுதியை ஒருபோதும் மறக்க மாட்டாள்! என் சகோதரி மைந்தன் என்பதற்காகச் சக்களத்தி மைந்தனின் உரிமையை மறுக்க மாட்டாள்! என் ஈமக்கிரியைக்குப் பிறகு தான் இவன் தலையில் இளவரசுக் கிரீடம் சூட்டலாம்!" என்றாள் தீர்மானமான குரலில்.

அதைக் கேட்டதும் வீரபாண்டியனுக்கு மெய் சிலிர்த்தது; நா உலர்ந்தது; உயிர் ஒடுலுற்றது: உள்ளம்

புலர்ந்தது; கண்கள் சிவந்தன; செய்வது இன்னதெனத் தெரியாமல் சஞ்சலத்தில் ஆழ்ந்தான். பாண்டிமா தேவியின் வாக்குறுதி தன் சூழ்வினையோ என்று நெஞ்சழிந்தான். வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன் உலைக்களத்தில் ஊதும் கனல்போல் பெருமூச்சு விட்டான்.

பாண்டிமா தேவியோ ஈழவராயனை நோக்கி, "ஈழவராயரே! மூத்த குமாரனை முதலில் காப்பாற்றாமல் இளையவனை ஏன் காப்பாற்றிக் கொண்டு வந்தீர்! உலகம் இவனைப் பரதன் என்று பரிகசிக்கவா? பெண்குலம் என்னைக் கைகேயியெனப் பழி தூற்றவா? அல்லது நான் உயிரிழந்து போகவா?" என்று ஆறாத் துயருடனும் கோபத்துடனும் கேட்டாள்.

ஈழவராயனோ பிரமித்து நின்றான்! எதிரே சுவரில் விளக்கு வெளிச்சத்தில் தெரியும் ராமாயண ஓவியங்களின்மீது ஈழவராயனின் கண்கள் பதிந்தன. கைகேயியின் வரத்தை எண்ணி, தசரத சக்கரவர்த்தி நெஞ்சழிந்து உருகும் ஓவியம் அற்புதமாகத் தீட்டப்பட்டிருந்தது. 'மூத்தவன் காடாள என் வயிற்றில் பிறந்த இளையவன் நாடாள வேண்டுமென வரங்கேட்ட கைகேயி போன்ற சிற்றன்னைகளை வாழ்க்கையில் காண்பது சுலபம். ஆனால் பாண்டிமாதேவி போன்ற குணநலப் பாவையரைக் காவியங்களில் சித்தரிப்பது கூடக் கடினம்" என்று ஈழவராயன் மெய்சிலிர்த்து நின்றான்!

பாண்டிமாதேவி தன் கணவரின் முகத்தைத் தன் துயரம் நிறைந்த விழிகளால் ஏறிட்டு நோக்கினாள். "கோட்டைக்குள் சிக்கிக் கொண்டிருக்கும் நம் மூத்த குமாரனை எவரும் காப்பாற்ற விரும்பவில்லை. தாங்களுமா பெற்ற மகனைவிடப் பெறப் போகும் அரசியல் முக்கியமென்று கருதுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

மனம் ஒரு நிலைக்கு வந்திருந்த வீரபாண்டியன் தன் தேவியை நோக்கி, "கவலைப்படாதே! மதுரைக் கோட்டைக்குச் சென்று மூத்தவன் பராக்கிரமனைக்

காப்பாற்ற முயல்வதுதான் என் முதல் கடமை! பிறகுதான் என்னுடைய மற்ற இலட்சியங்கள்! நானே விடியற் சாமத்தில் மதுரைக் கோட்டைக்குப் புறப்படுகிறேன். அப்போதுதான் தேவி திருப்தியடைவாள்!" என்றான்.

அவனை நோக்கி ஈழலராயன், "தாங்களே நேரில் சென்றால் தான் மூத்த குமாரரைக் காப்பாற்றும் முயற்சி கைகூடும்! ஏனெனில் மூத்த குமாரரை ஒழித்து விடப் பாண்டி நாடு முழுதும் நம்முடைய கட்சியில் பலர் இரகசியமாகச் சதியாலோசனை நடத்துவதாகக் கேள்விப்படுகிறேன்! ஆதலின் மதுரைக் கோட்டையில் இரகசியமாய் மறைத்து வைத்திருக்கும் மூத்த குமாரனை வேறு யாரிடமும் பொன்னன் கொடுக்க மாட்டான். தாங்கள் கோட்டை வாசலின் வெளியே வந்து காத்திருப்பதாக அவனுக்கு இரகசியமாக ஸ்ரீமுகம் அனுப்பினால் அவனே தந்திரமாக மூத்த குமாரரைக் கொண்டு வந்து கோட்டைக்கு வெளியே தங்கள் கையில் ஒப்படைப்பான்! தாங்களே அழைத்து வந்தால் வழியில் நம் கட்சியினர் எவரும் மூத்த குமாரருக்கு எந்தவிதக் கேடும் செய்ய முயலமாட்டார்கள்!" என்றான்.

"மூத்த குமாரரைக் காப்பாற்ற பயங்கரமான எதிரிகளின் கோட்டைக்குச் சக்கரவர்த்திகள் செல்வதா? போர் முரசம் கொட்டி ரத கஜ துரக பதாதிகளுடன் அக் கோட்டைக்குப் புறப்படும் நாள் ஒன்று வரும்! அதற்குள் சக்கரவர்த்திகள் மரணாபாயமான நிலையில் மதுரைக் கோட்டைக்குச் செல்வதா?" என்று உத்திர மந்திரி கோனார் திகைப்புடன் கேட்டார்.

வீரபாண்டியன் தன் தேவியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அவ்ள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. உள்ளே போய் விட்டாள்.

வீரபாண்டியன் கம்பீரமான குரலில் உத்திர மந்திரியை நோக்கி, "வீரபாண்டியன் சொன்ன வார்த்தை தவறுவதில்லை! தேவியிடம் வாக்குக் கொடுத்தபடி இன்று விடியற் சமயத்தில் மதுரைக் கோட்டைக்குப் புறப்படுகிறேன். தேவி அதைத்தான் விரும்புகிறாள்!" என்றான்.

"தேவியார் ஒரு கண ஆவேசத்தில் அவ்வாறு விரும்பியிருக்கலாம். மதுரைக் கோட்டைக்குள் நீங்கள் போவது எவ்வளவு பிராணாபத்தான முயற்சியென்று தேவியார் சிறிது நேரம் கழித்துச் சிந்தித்துப் பார்த்தால் அவ்வாறு விரும்பமாட்டார்கள்!"

''ஒருவேளை தேவி விரும்பாமலிருக்கலாம்! ஒருவேளை மதுரைக் கோட்டைக்குள் மூத்த குமாரனுக்கு ஏதாவது மரணாபாயம் நேரிடலாம்! அப்போது தேவி மனமுடைந்து போவாள். மரணத்துக்கு துணிந்து மகனைக் காப்பாற்ற முயன்றேன் என்றால், தேவி அப்போது சமாதானமடைவாள்!" என்றான் வீரபாண்டியன்.

"அவ்வாறானால் தாங்கள் இளைய குமாரனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவது?"

"மூத்தவன் இருக்கும்போது இளையவனுக்குப் பட்டம் இல்லை! தன் தேவியின் வாக்கைக் காப்பாற்றுவதும் வீரபாண்டியனின் கடமைகளில் ஒன்றுதான்!"

"அதனால் கேரள ராஜனின் படை உதவி நமக்குக் கிடைக்காமல் போகும்!"

"மனித இருதயத்தைப் பலியிட வேண்டுமென்றால் எனக்கு அந்த அரசியலே தேவையில்லை!"

"தங்கள் இளைய குமாரனுக்கு இளவரசுப் பட்டம் கட்டாமல் போனாலும், அதனால் கேரள ராஜனின் உதவி கிடைக்காமல் போனாலும் பாதகமில்லை. ஆனால் மூத்தவனுக்கு அரசுரிமை இல்லை என்பதைத் தாங்கள் பகிரங்கமாக மந்திராலோசனை சபையில் சொல்லியாக வேண்டும். இல்லையெனில், நாம் நம்முடைய கோட்டைத் தலைவர்களையும் இழந்துவிட நேரிடும்! இடது கையை நாம் இழந்து விடலாம்; ஆனால் வலது கையையும் இழந்துவிட்டு நாம் இலட்சியப் போரில் இறங்கிச் சண்டையிட முடியாது!"

''அமைச்சரே! மூத்த குமாரன் மதுரைக் கோட்டைக்குள்ளேயே எதிரிகளின் கையில் சிக்கி மடிந்து

விட்டாலும் நல்லது என்று நீர் நினைப்பீர்! வெற்றியைப் பற்றிச் சிந்திக்கும் மதியாலோசனை மட்டும் போதாது! மனித இருதயமும் வேண்டும்!"

"தங்கள் குமாரர் என்று நினைக்கும்போது எனக்கும் மனித இருதயம் இருக்கிறது! ஆனால் சக்கரவர்த்திகளின் மதியமைச்சர் என்ற முறையில் சிந்திக்கும்போது நான் மனித இருதயத்தையும் இழந்து விடுவது அவசியமாகிறது!" என்று சொன்ன உத்திர மந்திரி கோனார் வேறுபுறம் திரும்பித் தம் கண்களில் அரும்பியிருந்த இரு துளிக் கண்ணீர்த் துளிகளைத் துடைத்தெறிந்தார்.

"அமைச்சரே! இது என் முடிவு! மூத்தவனுக்குரிய அரசுரிமையை நான் ஒருபோதும் மறுக்கமாட்டேன்! தேவியின் லாக்குத் தத்தம் சரியானதே!"

"அவ்வாறானால் நம் லட்சிய யாத்திரைக்குரிய வழி அடைபட்டுப் போகும்! நம் கட்சியிலிருந்து பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் வெளியேறி விடுவார்கள்!"

"எவர் வேண்டுமானாலும் வெளியேறட்டும். எல்லோருமே என்னைக் கைவிட்டுப் போகட்டும். என் தேவியின் துணைமட்டும் எனக்கு இருந்தால், நான் தனியொருவனாகவே என் கடைசி மூச்சு வரை நம் இலட்சியத்திற்காகப் போராடுவேன்!" என்று தீர்மானமான குரலில் வீரபாண்டியன் சொன்னான்.

"இதற்கு மேல் நான் எதுவும் சொல்வதற்கில்லை! விதியின் பிரகாரமே எதுவும் நடக்கட்டும் என்று நம்புவதைத் தவிர என் மதியை நம்புவதில் பலனில்லை!" என்றார் உத்திர மந்திரிக் கோனார்.

பிறகு வீரபாண்டியன் தன் சூழ்வினை அமைச்சர்களை அவசரமாக வரவழைத்து, தான் அதிகாலையில் மதுரைக் கோட்டைக்கு மூத்த குமாரனைக் காப்பாற்றப் போவது சம்பந்தமாக வெகுநேரம் ஆலோசித்து விட்டு துயிலச் சென்றான்.

*இரவு கழியத் தொடங்கியது. கடைசிச் சாமக்கோழி அஞ்சிறகுகளை விரித்து 'கொக்கரக்கோ...' என்று கூவியது.*

*வைகறையில் அரசன் பள்ளியறை முன் அகவரும் சூதரும் நின்று, பாண்டியரின் சந்திரகுலப் பெருமையைப் புகழ்ந்து பாடும் பண் கனிந்தெழு பாடல் மந்தமாருதத்தில் மென்மையாக மிதந்து வந்தது.*

*வீரபாண்டியன் மதுரைக் கோட்டைக்குப் புறப்பட ஆயத்தமாகி வெளியே வந்து நின்றான்.*

*வானத்தில் சந்திரவட்டக் குடை நிலை சரிந்து மங்கியது. வானவீதியில் விரித்திருந்த முத்துப் பந்தலைப் பிரிப்பது போல் நட்சத்திரங்கள் மெல்ல மெல்ல மறைந்தன. குமரிகளின் உதடுகள் குவிவது போல் குமுத மலர்கள் குவிந்தன. பாண்டிமா தேவியின் முகத்தில் மிளிரும் புன்முறுவலைக் கண்டு நாணினாள் என நளிர் கங்குல் ஆகிய நங்கை ஏகினாள்.*

*பட்டுத்துணியில் பொன் ஜரிகையால் மீன் உருவம் புனையப் பட்ட பாண்டியரின் கொடி வைகறையின் மெல்லிய ஒளி ரேகையில் மங்கலாகத் தெரிந்தது.*

*ஈழவராயன் உத்திர மந்திரிக் கோனார் பின்தொடர அணுக்கச் சேவகர்களுடன் வீரபாண்டியனிடம் வந்து, "எல்லாம் சித்தமாகி விட்டது! நாம் மதுரைக் கோட்டைக்குப் புறப்படலாம்! இங்கிருந்து நாமிருவர் மட்டும் மாறுவேஷத்தில் இரகசியமாகப் போனால் போதும்! கோட்டை வாசலில் தேவைப்பட்டால் அங்கே என் ஆட்கள் இருக்கிறார்கள்!" என்றான்.*

*வீரபாண்டியனோடு ஈழவராயனும் போகிறான் என்றதும் உத்திர மந்திரிக் கோனாருக்கு என்னவோ சந்தேகம் உண்டாயிற்று.*

*அவர் வீரபாண்டியன் காதருகில் இரகசியமாக, "சின்ன மீனைக் காட்டிப் பெரிய மீனைப் பிடிக்கும் சூழ்ச்சியாகவும் இருக்கலாம்!" என்றார்.*

"அந்தச் சிறுமையால் மீனக்கொடி வமிசம் சாசுவதமாய் அழிந்துவிடாது!" என்று சிரித்தான் வீரபாண்டியன்.

"மதுரைக் கோட்டை மீது எதிரிகளின் புலிக்கொடி வானளாவிப் பறக்கிறது! சோழ வீரர்கள் தங்கள் சூரிய குலம் தழைப்பதற்காகப் பாண்டிய வமிசத்தை நிர்மூலமாக்க எந்த அதர்மமான வழியையும் பின்பற்றுவார்கள்! உங்களைச் சிறைபிடிக்க மதுரையைச் சுற்றிலும் வலை விரித்திருக்கிறார்கள்! உங்கள் தலைக்கு நூறாயிரம் பொன் பரிசளிப்பதாக ஆசை காட்டியிருக்கிறார்கள். ஒவ்வொருவனும் உங்களைத் தேடி எமகிங்கரனாய் அலைவான். ஆதலின் நீங்கள் மதுரைக்குப் போவது புலியின் குகைக்குள் நுழைவதைப் போன்றது!" என்று எச்சரித்தார் உத்திர மந்திரி.

"அது புலியின் குகையாக இருக்கலாம்! ஆனால் வீரபாண்டியன் செம்மறியாடல்ல!" என்று வீரபாண்டியன் சொல்லிவிட்டுப் புறப்பட்டான். போகும்போது தன் பிரிய நாயகியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அவளது கருவிழிகளில் இரு துளி கண்ணீர் முத்துக்கள் உதிர்ந்தனவே தவிர, அவள் ஒன்றும் பேசவில்லை.

வீரபாண்டியன் வெடுக்கென்று திரும்பி ஈழவராயனுடன் மாறுவேஷங்கள் அணிந்து கொண்டு கிளம்பினான்.

மாளிகையில் எரிந்து கொண்டிருந்த தீபங்களெல்லாம் நீர்த்து அணைந்தன. அவற்றின் புகைபோல் காரிருட் பகை துள்ளி ஓடிட, கிழக்கே சினத்தீப் போல இரத்தமயமான சூரியோதயம் கிளம்பியது.

அவற்றைக் கண்டதும், பாண்டியரின் குலதீபம் அணைவது போலவும், சோழர்களின் சூரிய குலம் இரத்தச் சிவப்புடன் உதயமாவது போலவும் வீரபாண்டியனுக்கு ஒரு பிரமை உண்டாயிற்று!

# அத்தியாயம் 8

## பிணிவிடு படலம்

*யாரை நீ? என்னை இங்கு எய்து காரணம்?*
*யார் உனை விடுத்தவர்?*

**கம்ப ராமாயணம்**

மதுரையின் மயானக்கரை அருகில் ஒரு பாழடைந்த காளி கோயில் இருந்தது. அந்தி இருளில் இன்னும் ஊரடங்கவில்லையென்றாலும், சுடுகாட்டருகில் இருந்த அக்காளி கோயில் இரவின் நிச்சப்தத்தில் அதிபயங்கரமாகக் காட்சியளித்தது. கோயிலின் கதவு சாத்தப்பட்டு உள்ளே தாழிடப்பட்டிருந்தது. உள்ளே எந்தவிதத் தீப ஒளியும் இல்லை. வெகுகாலமாகவே பூஜைகள் நிறுத்தப்பட்டு விட்டது போலத் தோன்றியது. கோயிலின் உள்ளே இருட்டு அப்பியிருந்தது. சிலந்தி வலைகளும் பிணந்தின்னி வெளவால்களும் அடைந்திருந்தன. காளியின் கோரமான சிலையும், அதற்கு முன்னால் இரத்தம் உறைந்த ஒரு சிறு பலிபீடமும், அதனருகில் கூர்மை மழுங்கிய ஒரு சூலாயுதமும் இருந்தன. பிணி வீடுபோலவே மந்தமாகவும் மர்மமாகவும் ஒருவித நாற்றமுள்ளதாகவும் அந்தப் பாழடைந்த காளிகோயில் காட்சியளித்தது.

காளியின் முன்னுள்ள பலிபீடத்தின் மீது தலைவைத்து ஊர்மிளா சாய்ந்து படுத்திருந்தாள். எதிரே உருவிய கத்தியுடன் நிற்கும் முரட்டுக் கபாலிகனையே அவளது கருவிழிகள் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தன. அவளது யௌவன முகத்தில் மரண பீதியோ நடுக்கமோ சிறிதும் இல்லை. அவளது கண்

இமைகள் கனத்து, விழி ஓரங்களில் கண்ணீர்த் துளிகள் உலர்ந்து சுலடு கட்டியிருந்தன. அவளது நெஞ்சு எங்கோ ஒரு சூன்ய உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

பாழடைந்த கோவிலினுள்ளே பிணி வீடுபோலக் குமைந்திருக்கும் ஒருவித நாற்றத்தையும் புழுக்கத்தையும் ஊர்மிளாவால் சகிக்க முடியவில்லை. வியர்வை பெருகி அவளது ஆடைகளெல்லாம் நீர்த்துப் போயின. பலி பீடத்திலிருந்து ஊர்மிளா தலையை லெடுக்கென்று தூக்கினாள்.

"கபாலிகனே! என்னைக் கொல்ல மாட்டாயா?" என்று அவள் ஏளனமும் கோபமும் கலந்த குரலில் கேட்டாள்.

முரட்டுக் கபாலிகன் அவளை லெறித்துப் பார்த்தானே தவிர, ஒரு பதிலும் சொல்லவில்லை.

"பின்னே எதற்காக இந்தப் பாழடைந்த கோயிலுக்கு என்னைக் கொண்டுவந்து இத்தனை நாளாக அடைத்து வைத்திருக்கிறாய்? அரசாங்க விசாரணைக்காக என்னைச் சோழியவீரன் வீரசேகரன் சிறைப் பிடித்துப் போனான். அவனிடமிருந்து எதற்காக என்னைக் காப்பாற்றிக் கொண்டு லந்தாய்? நீ சோழ அரசாங்கத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் என்னை வீரசேகரனிடமிருந்து தூக்கி வந்திருக்க மாட்டாய்! நீ நிஜக் கபாலிகன்தான்! இந்தக் காளி மாதாவுக்கு நரபலி கொடுக்கலே என்னைக் கொண்டு வந்திருக்கிறாய்!" என்று கூவினாள் ஊர்மிளா.

முரட்டுக். க்பாலிகன் வெறும் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். ஊர்மிளாவின் அழகிய முகம் வாடியது.

"வீரசேகரன் கையிலிருந்து எனக்குத் தெரிந்தவன் எவனாவது கபாலிக வேஷத்தில் வந்து காப்பாற்றுவான் என்று எதிர்பார்த்தேனே! கிராதகன் நீ எங்கிருந்து முளைத்தாய்? நீயும் போலிக் கபாலிகன்தானா...? எதற்கும் பதில் சொல்லாமலிருக்கிறாயே! நீயென்ன ஊமையா, செவிடா?" என்று ஏளனமாய்ச் சிரித்தாள் ஊர்மிளா.

கபாலிகன் தன் தலையைச் சொறிந்தான்.

"முரட்டுக் கபாலிகனே! நீ இதற்குப் பதில் சொல்லா விட்டால் உன் முகத்தில் காறி உமிழ்வேன்! எதற்காக இந்தப் பாழுங்கோயிலில் என்னை அடைத்து வைத்திருக்கிறாய்?" என்று ஊர்மிளா ஆத்திரத்துடன் கூவினாள்.

"இதே கேள்வியை நீ நூற்றேழாவது தடவையாகக் கேட்கிறாய்! நான் பதில் சொல்லமாட்டேன்!" என்று கபாலிகன் தடித்த குரலில் கத்தினான்.

ஊர்மிளா உர்ரென்று முகத்தை வைத்துக் கொண்டு கீழே உட்கார்ந்துவிட்டாள். பாழடைந்த காளி கோயிலில் ஒரு கணம் பிணவீடுபோல் நிச்சப்தமும் பிணி வீடுபோல் மெல்லிய பெருமூச்சுகளின் இரைச்சல்களும் கேட்டன. கோயிலின் வெளியிலிருந்து இருளின் புலம்பலும் சுவர்க் கோழிகளின் 'கிர் கிர்' என்ற சப்தமும், எங்கோ சோழிய வீரர்கள் அணிவகுத்துச் செல்லும் குதிரைப் படை யானைப் படைகளின் 'ஜம் ஜம்' என்ற கம்பீர ஓசைகளும் கேட்டன. வெகு தொலைவில் பேரிகை அடிக்கும் முழக்கமும் காளி கோயிலின் முன்னாலுள்ள கொடி ஸ்தம்பத்தில் சிறு சிறு மணிகள் குலுங்கும் ஒலிகளுங்கூடத் தெளிவாக வாடைக் காற்றில் மிதந்து வந்தன.

கோயிலின் வெளியே 'டங்டங்'கென்ற கத்திகளின் ஒலிகளோடு ஊர்க் காவலர் நடந்து செல்லும் ஓசை கேட்டது. அது வெகு தூரம் போய் மறைந்த பிறகு தெருவில் நிச்சப்தமும் சூன்யமும் நிலவியிருப்பதாகத் தோன்றியதும், ஊர்மிளா மறுபடி வாயைத் திறந்தாள்.

"கபாலிகனே, நீ நல்லவன்! அந்தச் சோழிய வீரன் கையிலிருந்து என்னைக் காப்பாற்றினாய்! உனக்கு நன்றி செலுத்துகிறேன். இப்போது என்னை விட்டுவிடு. உனக்கு இரண்டு மடங்கு நன்றியுள்ளவளாயிருப்பேன்! எனக்கு வேண்டியவரான ஒரு படகோட்டிச் சாமியார் இருக்கிறார். நீ எது கேட்டாலும் தரச் செய்கிறேன்!"

"உன்னை விடமுடியாது!"

"நான் இந்தக் கோயிலுக்குள்ளிருந்து கூச்சல் போட்டால் வெளியே நடமாடும் ஜனங்களோ, காவற்காரர்களோ கோயில் கதவை உடைத்துக் கொண்டு வந்து என்னைக் காப்பாற்றுவார்கள்... வீணாக மறுபடியும் சோழ வீரர்களின் கையிலோ, வீரசேகரன் கையிலோ நான் சிக்கிக்கொண்டு அரசாங்க விசாரணைக்கு ஆளாகி அவமானப்பட நேரிடும். அதைவிட உன் கையால் கொலையுண்டு இந்தக் காளி மாதாவுக்குப் பலியாவது எவ்வளவோ மேல்!... கபாலிகனே, என்னை விடாவிட்டால் இப்போதே என்னைக் கொன்றுவிடு!"

"எதற்காக உன்னைக் கொல்லச் சொல்லுகிறாய்?"

"என்னால் ,இனி ஒரு கணமும் இந்தப் பாழடைந்த கோயிலில் இருக்க முடியாது. இங்கே பல பிணங்களும், நோயாளிகளும் கிடக்கும் பிணி வீடுபோல் ஒரே நாற்றம் வீசுகிறது! என்னால் சகிக்க முடியவில்லை; என்னைக் கொன்றுவிடு!"

"மாட்டேன்!"

"பின்னே என்னை என்னதான் செய்யப் போகிறாய்?"

"அதைச் சொல்லமாட்டேன்!"

"ஏன்?"

"அப்படி எனக்கு உத்தரவு! உன் கேள்வி எதற்கும் பதில் சொல்லக் கூடாது. உன்னை ஒன்றும் செய்யக் கூடாது என்று மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருக்கிறது!"

"உனக்கு அப்படி உத்தரவிட்ட கல்நெஞ்சன் யார்? நீயும் ஒரு ஒற்றனா? யாருடைய கட்சியைச் சேர்ந்த ஒற்றன்?"

"தெரியாது!"

"கபாலிகனே, ஒரு பேதைப் பெண்ணிடம் சொன்னால் உன் உடல் சதையில் ஏதாவது குறைந்து விடுமா? நீ யார்? இங்கு ஏன் வந்து என்னை அவஸ்தைப் படுத்துகிறாய்? உன்னை அனுப்பியது யார்? ஒன்றையும் மறைக்காமல் சொல்!"

"உன்னிடம் ஒன்றைக் கூடச் சொல்லமாட்டேன்!"

ஊர்மிளா கோயிலின் குறுக்கும் நெடுக்கும் நடந்தாள். அவளுடைய ஒவ்வொரு அசைவையும் கபாலிகன் தன் பெரிய விழிகளை உருட்டி நோக்கிக் கொண்டே, தூண் போல் அசையாமல் நின்றான்.

"நான் இப்போது ஏதாவது செய்தாக வேண்டும்!" என்று ஊர்மிளா தன் கைகளைப் பிசைந்தாள்.

அவள் நினைவில் ஏனோ வீரசேகரனின் முகம் வந்து நின்றது. அவள் விரும்பாவிட்டாலும், நினைவை அடக்க எவ்வளவு முயன்றாலும், வீரசேகரனின் முகம் அவள் கண்முன் சதா வந்துகொண்டேயிருந்தது. கனிவு ததும்பும் அவனது களையான முகமும், கட்டமைந்த வாலிபப் பருவமும், கடமை தவறாத உள்ளமும் வாஞ்சை ஊட்டும் பேச்சும் அவளை என்னவோ செய்தன. ஊர்மிளா பெருமூச்சு விட்டாள். அவள் மேனி ஒரு கணம் 'வெட வெட'வென்று நடுங்கியது. மறுகணம் பல்லைக் கடித்து, பொங்கி வரும் அழுகையை அடக்கிக் கொண்டாள். நெஞ்சின் ஓவியமாகப் பதிந்துவிட்ட வீரசேகரனின் உருவத்தைத் தன் நினைவிலிருந்து அகற்றிவிட எவ்வளவோ பிரயாசைப்பட்டாள். ஆனால் அடக்க அடக்க முற்றிவரும் தீராப் பிணிபோல் அவன் நினைவு அவள் நெஞ்சைப் பிணைத்திருந்தது. செத்தால்தான் அந்தப் பிணியிலிருந்து விடுபட முடியுமோ என்ற பிரமையும் தட்டியது. ஊர்மிளா தன் கைகளைப் பிசைந்தாள்.

கபாலிகன் அவளையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஊர்மிளா வெடுக்கென எழுந்து வந்து தன் மெல்லிய கைகளால் கபாலிகனைப் பிடித்து வேகமாக உலுக்கினாள்.

"முரடனே! இங்கே பார்! என்னைக் கொன்றுவிடு! சாவதென்றால் எனக்கு ரொம்ப ஆசை! நான் சாவதுதான் எனக்கு நல்லது; எல்லோருக்கும் நிம்மதி; என்னைப் பிடித்திருக்கும் பிணியும் என்னை விட்டுத் தொலையும்!"

"பாவம், அதுக்கு இப்போது உனக்குச் சந்தர்ப்பம் இல்லை!" என்று கபாலிகன் ஏளனமாய்ச் சிரித்தான்.

"என்னை விடவும் மாட்டாய்! என்னைக் கொல்லவும் மாட்டாயா? அப்படியானால் உன் முகத்தில் காறி உமிழ்வேன்! வைத்திய சாஸ்திரத்திலுள்ள ஆயிரத்தெட்டு வியாதிகளும் வந்து நீ திராப்பிணியால் சாகவேண்டும் என்று என் வாயாரச் சபிப்பேன்! கைகளால் அடிப்பேன்! காலால் எட்டி உதைப்பேன்! இங்கே கிடக்கும சிறுசிறு கற்களைப் பொறுக்கி உன் முகத்தில் வீசுவேன். அப்போதாவது உனக்கு ரோஷம் வந்து என்னைக் கொல்ல மாட்டாயா?" என்று கூவினாள் ஊர்மிளா.

"மாட்டேன்! உன் கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டுப் பேசாமலிருப்பேன்!"

"முரடனே! கிராதகனே! பூதமே! அவலட்சணமே! ஈரேழு ஜன்மத்துக்கும் நீ இப்படிக் குரூர ஜன்மமாகப் பிறக்க வேண்டுமென்று சபிப்பேன்... என் வாயால் திட்டிக்கொண்டேயிருப்பேன்!"

"உன் வாயையும் துணியால் கட்டிப் போட்டு விடுவேன்! 'தொண தொண'வெனப் பேசாமலிரு!" என்று அதட்டினான் கபாலிகன்.

மிஞ்சினால் காரியம் கனியாது என்று கண்ட ஊர்மிளா அந்த முரடனின் காலைப் பிடித்துக் கெஞ்சினாள்.

"என்னை விட்டுவிடு! உனக்கு இரண்டாயிரம் பொன் தருகிறேன். படக்கோட்டிச் சாமியார் என்னைத்

தேடிக் கண்டுபிடித்து என்னை விடுவித்து விடுவார். அப்புறம் உனக்கு இரண்டாயிரம் பொன் நஷ்டமாகி விடும்!"

"எனக்கெதற்குப் பொன்?"

"இங்கே பார்! என்னைப்போல் ஒரு அழகான மகள் உனக்கிருந்தால் எப்படிக் கஷ்டப்படுவாள் என்று யோசித்துப் பார்! அப்போதாவது உனக்குக் கருணை பிறக்காதா?"

"எனக்கு மனைவியே கிடையாது; மகள் எங்கிருந்து முளைப்பாள்?"

"ஆமாம். உன்னைப்போல ஒரு அவலட்சணத்தை எந்தப் பெண்ணும் கலியாணம் செய்து கொள்ள சம்மதிக்க மாட்டாள். என்னை விட்டுவிடு. உனக்கு என்னைப்போல் ஆறு அழகான பெண்களைக் கலியாணம் செய்து வைக்கிறேன்!"

"உன்னை விட்டுவிட்டால் என் தலையை வெட்டி விடுவார்கள்!"

"என்னை விடவும் மாட்டாய்! கொல்லவும் மாட்டாய்! பின்னே என்னதான் செய்யப்போகிறாய்?"

"உன்னை மேற்கொண்டு என்ன செய்வது என்பதுபற்றி இன்றிரவு நடுச்சாமத்திற்குள் எனக்கு உத்தரவு வரும்! அதுவரை உன் உயிரைப் பிடித்துக் கொண்டு, உன் துறுதுறுத்த வாயை மூடிக் கொண்டு மூலையில் கிட!"

"என்னை எதற்காக இந்தப் பாழுங் கோயிலில் அடைத்து வைத்திருக்கிறார்கள் என்றுகூடச் சொல்ல மாட்டாயா?"

"உண்மையிலே அது எனக்குத் தெரியாது!"

"ஆனால் அது எனக்குத் தெரியும். சோழநாட்டு வாட்படைத் தலைவன் ஜனநாதனின் கையாள் நீ! மதுரையின் வெற்றிக்குக் காரணமான வீரசேகரன்மீது

ஜனநாதனுக்குப் பொறாமை! அந்த வாலிபனை எப்படியும் அரசியலிலிருந்து ஒழித்துவிட விரும்புகிறான்! அரசாங்க விசாரணைக்காக என்னைச் சிறைபிடித்துச் சென்ற வீரசேகரனிடமிருந்து என்னைத் தந்திரமாகப் பறித்து வந்து என்னைக் கொன்றுவிட்டு, வீரசேகரன்மீது பழி சுமத்தப் போகிறான் ஜனநாதன். அதற்காகவே உன்னைக் கபாலிகன் வேஷத்தில் அனுப்பினான்; என்னை இந்தப் பாழுங்கோயிலிலேயே கொன்று இரகசியமாகப் புதைத்து விடுவீர்கள். வீரசேகரன் என்னை ஊரெங்கும் தேடி அலைவான். கடைசியில் என் அழகில் மயங்கி என்னைத் தப்பியோட விட்டுவிட்டான் என்று அரசாங்கம் அவனைத் தண்டிக்கும். இதுதான் ஜனநாதனின் சூழ்ச்சி!" என்று அழுகையும் கோபமுமாய்க் கத்தினாள்.

ஏதோ சாக்குருவி கூவுவதுபோல் வெளியே இருட் படலத்திலிருந்து விசித்திரமான ஒரு சப்தம் வந்தது.

கபாலிகன் புருவத்தை நெறித்துக் கொண்டே, "உஷ், பேசாதே; குதிரைகள் வேகமாய் வரும் குளம்படி ஓசைகள் கேட்கின்றன... ஒருவேளை என் ஆட்களாயிருப்பார்கள். அல்லது..." என்று தாழ்ந்த குரலில் சொன்னான்.

"அல்லது... ஒருவேளை என்னைத் தேடியலையும் ஆட்களாகவும் இருப்பார்கள்! கோயிலின் வாசல் கதவை யாரோ தட்டிப் பார்க்கும் சப்தம் கேட்கிறது..." என்று ஊர்மிளா மிகவும் மெல்லிய குரலில் சொல்லிவிட்டு, மெல்லிய தளிர்ப் பாதங்களின் ஓசைகூடக் கேட்காத வண்ணம் வாசல் கதவை நோக்கி நடந்து, தாழிடப்பட்ட உட்புறக் கதவின் சாவித் துவாரத்தின் வழியாக, வெளியே இருளை ஊடுருவிப் பார்த்தாள்.

காளி கோயிலின் வெளியே, இருட்டில் ஒரு வாலிபன் கதவைத் திறக்க முயன்று கொண்டிருந்தான். அப்போது இரண்டு குதிரைகள் தூசிப் படலத்தோடு வேகமாக வந்து அவன்முன் நின்றன.

"யாரங்கே? இருட்டு நேரத்தில் இங்கே ஏன் வந்தாய்? பாழடைந்த காளி கோயிலின்முன் என்ன வேலை?" என்று ஒரு குதிரை வீரன் அதட்டினான்.

"நான் வீரசேகரன்! என்னை அதட்டிக் கேட்கும் நீ யார்?" என்று பதில் வந்தது.

"உன் ஆருயிர் நண்பன் ஜனநாதன்! இதோ இன்னொரு குதிரை மீது இருப்பவர் நம் அரசியல் கிழவர் சம்புவராயர்!" என்று கூறிய ஜனநாதன், குதிரையை விட்டு இறங்கிக் கிழவர் சம்புவராயர் சகிதம் வீரசேகரன் முன் வந்து நின்றான்.

"ஜனநாதனா?" என்று வியப்புடன் வீரசேகரன் விழித்தான்.

"எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஜனநாதன்தான்!... ம், வீரசேகரா, இதற்குள் நீ ஏன் சுடுகாட்டிற்கு வந்தாய்?"

"ஊர்மிளா விஷயமாகத்தான் வந்தேன்! நான் சிறைப்பிடித்துச் சென்ற ஊர்மிளாவை எவனோ ஒரு கபாலிகன் என்னிடமிருந்து தூக்கிக் கொண்டு போய் விட்டான். அவளை ஊர் முழுவதும் தேடி அலைந்தேன். இந்தப் பாழடைந்த கோயிலையும் சோதித்துப் பார்க்க விரும்பினேன். இதோ பிணி வீடுபோல் ஒரே நாற்றம் வீசுகிறது; பார்ப்பதற்கு ஒரே மர்மமாகவும் இருக்கிறது."

"தம்பி, ஊர்மிளாவுக்காக நீ ஊர் தேடு படலம் நடத்தி முடித்துவிட்டாய். இப்போது பிணி வீட்டுப் படலத்தை ஆரம்பித்திருக்கிறாயா?"

"ஆமாம்; இந்தப் பாழடைந்த காளி கோயிலினுள்ளே தேடிப் பார்க்கப் போகிறேன்!"

"கபாலிகன் கொண்டுபோன ஊர்மிளாவை எந்தக் காளிக்குப் பலியிட்டு விடுவானோ என்று ஒவ்வொரு காளி கோயிலாகத் தேடிப் பார்க்கிறாயா?"

"மதுரையிலுள்ள அத்தனை காளிகோயில்களையும் சோதித்துப் பார்த்துவிட்டேன்; சுடுகாட்டருகிலுள்ள இந்தப் பாழடைந்த கோயில் ஒன்றுதான் பாக்கி... சில சமயங்களில் இந்தப் பாழுங்கோயிலிலிருந்து யாரோ ஒரு இளம் பெண் சிரிப்பது போலவும் அழுவது போலவும்

விசித்திரமான ஒலி உண்டாகிறதாம்; சுடுகாட்டுப் பேய் ஒன்று இந்தக் காளியைப் பிடித்திருப்பதாக ஜனங்கள் பேசிக் கொள்ளுகிறார்கள். ஆனால்..."

"ஆனால் அதை நீ நம்பவில்லையா? தம்பி, நீ நம்பாவிட்டாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாதே. இல்லையென்றால் உன்னை நாஸ்திகன் என்பார்கள். நீ உண்மையான ஆஸ்திகனாயிருந்தால் என்ன செய்ய வேண்டும், தெரியுமா? பேய் பிடித்துக் காளி ஆடுவதை உன் கண் முன்னாலேயே கண்டதாகச் சொல்லி, நூறு ஆடுகளைப் பலியிடும் யாகம் நடத்த வேண்டும்!"

"இது விளையாட நேரமல்ல! ஊர்மிளா பலி ஆவதற்கு முன் அவளைக் காப்பாற்ற வேண்டும்."

"அவள் உயிரைப் பற்றி உனக்கு ஏன் இவ்வளவு கவலை!"

"அவளை அரசாங்க விசாரணைக்கு ஆளாக்கும் கடமை எனக்கு இருக்கிறது!"

"நல்ல வேளை! காதல் நோய் என்று திருவள்ளுவர் சொல்லுகிறாரே, அதைப் போல உனக்கு ஒரு தீராப் பிணி பிடித்திருக்கிறதோ என்று நினைத்தேன். நீ ஊர்மிளாவைத் தேடியலையும் வேகத்தைப் பார்த்தால் அவளை நீ சந்தித்த நாள் முதலாய் உனக்கு அவளிட மிருந்து அந்தப் பிணி தொத்திக் கொண்டிருக்குமோ என்று சந்தேகித்தேன். தம்பி, உண்மையில் அப்படி யிருந்தால், நீ கூடிய சீக்கிரம் அந்தப் பிணியிலிருந்து விடுபடுவதுதான் உனக்கும் நல்லது; நம் சோழ சாம்ராஜ்யத்துக்கும் நல்லது. ஏனெனில் பிணமாகும் வரை விடாத பொல்லாப் பிணி அது; சுற்றியுள்ளவர்களையுங்கூட அது சீரழித்துவிடும்!"

"நான் பிணியாளனுமல்ல; பரிகாசத்துக்கு இது நேரமுமல்ல! இந்தக் காளி கோயிலில் ஊர்மிளா இருப்பாளா என்பதுதான் என் நோக்கம்!"

"தம்பி, நரபலி கொடுக்கும் கபாலிகர்களுக்கும் தமிழ் நாட்டிலுள்ள காளி கோயில்களுக்கும் சம்பந்தமில்லை.

ஆதி காலத்தில் கண்ணகி கோயில்களாக இருந்தவைதான் இப்போது காளி கோயில்களாக மாறியிருக்கின்றன!"

"நிஜமாகவா?"

"சந்தேகமே இல்லை! அழகிய மனித ரூபத்திலிருந்த கற்புக்கரசி கண்ணகியின் சிலை இப்போது மகா கோரமான காளி விக்ரகமாக மாறியிருக்கிறது. தம்பி! கண்ணகி கோயில்களாகவே நாம் வழிபட்டு வந்தால் நம் நாட்டில் பெண்களின் கற்பாவது பெருகியிருக்கும். கோரமான காளி கோயில்களாக மாற்றி வழிபட்டு வருவதால் ஆடுகளையும் மனிதர்களையும் பலியிடும் கோரந்தான் பெருகியிருக்கிறது! அன்பே உருவான பெண் தெய்வத்தை மனிதனால் எவ்வளவு கோரமாக்க முடியும் என்பதற்குக் காளி ஒரு எடுத்துக் காட்டு!" என்று சிரித்தான் ஜனநாதன்.

சிவப்பழமான கிழவர் சம்புவராயரின் முகம் கோபத்தால் சிவந்தது. "ஜனநாதா, நீ எதையும் தலை கீழாகப் புரட்டுபவன். அந்த வாலிபனின் பால்போன்ற நெஞ்சை ஏன் பாழடிக்கிறாய்?" என்றார் கிழவர் சம்புவராயர்.

"இந்தக் காளி கோயில் ஏன் உட்புறம் தாழிடப் பட்டிருக்கிறது?" என்று வீரசேகரன் சந்தேகத்தோடு கேட்டான்.

"தம்பி, வெகு காலத்திற்குமுன் ஒரு காளி பக்தர் இருந்தார். அவர் இந்தக் காளிகோயிலைக் கட்டி முடித்ததும் அவரது ஏழு பிள்ளைகளும் ஆறு மனைவிகளும் ஒரே நாளில் இறந்து போனார்கள். காளி பக்தர் பைத்தியம் பிடித்தவராய், இக்காளி கோயிலின் உட்புறம் கதவைத் தாழிட்டுக் கொண்டு, காளியை நூறு முறை சபித்துக் கொண்டே தம் தலையை வெட்டிக் கொண்டாராம். அவர் கதவைத் தாழிட்டுக்கொண்டு தற்கொலை செய்துகொண்ட பிறகு இவ்வளவு காலமாக மறுபடி கதவு திறக்கப்படாமலே இருக்கிறது! காளிக்குரிய பூஜைகளும் பல தலைமுறைகளுக்கு முன்பாகவே

நிறுத்தப்பட்டுவிட்டன" என்று சிரித்துக் கொண்டே விளக்கினான் ஜனநாதன்.

''இப்போது வீரசேகரன் இப்பாழடைந்த கோயிலினுள் நுழைந்து ஊர்மிளா இருக்கிறாளாவெனச் சோதிப்பது அவசியமா, இல்லையா?'' என்று கேட்டார் கிழவர் சம்புவராயர்.

"ஊர்மிளா தப்பி ஓடின நாள் முதலாய் வீரசேகரன் அவள் நினைவாகவே இருக்கிறான்! இவனைச் சதா அவள் நினைவு தீராப்பிணிபோல் பிடித்துக் கொண்டு ஆட்டுகிறது! பிணியால் அவஸ்தைப்படும் நோயாளிக்கு எவனைக் கண்டாலும் எமனாகவோ வைத்தியனாகவோ தெரிவதுபோல் இவனுக்குக் காளியைப் பார்த்தாலும் கோட்டானின் குரலைக் கேட்டாலும் ஊர்மிளாவோ என்று பிரமை தட்டுவது சகஜம். ஆனால் அதற்காக இப்பாழடைந்த கோயிலைச் சோதிக்க வேண்டாம் என்றும் சொல்லவில்லை. இந்த இருட்டு நேரத்தில் கோயிலின் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தால் உள்ளே நீண்ட காலமாகக் குடியிருக்கும் பாம்பும் தேளும் நம்மைப் பெரிய மனிதர்கள் என்று மதிக்காமல் கடித்துவிடும்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"ஆகையால் விடியும் மட்டும் இக்கோயிலைச் சுற்றிக் காவல் போடலாம் என்கிறாயா?" என்று வீரசேகரன் சொல்லிக்கொண்டே காளி கோயில் வாசல் கதவின் முன்புள்ள வெளி மண்டபத் திண்ணையில் உட்கார்ந்தான். ஜனநாதனும் கிழவர் சம்புவராயரும் தங்கள் குதிரைகளை ஒருபுறம் நிறுத்திவிட்டு, இளைப்பாறுவதற்காகத் திண்ணைமீது உட்கார்ந்தார்கள்.

"இப்பாழடைந்த கோயிலினுள் இப்போது ஊர்மிளா பதுங்கியிருப்பாளோவென்று எனக்குச் சந்தேகம் தட்டுகிறது" என்றான் வெளிமண்டபத் திண்ணை மீதிருந்த வீரசேகரன்.

''அநாவசியச் சந்தேகம், இருக்கும் கொஞ்சம் அறிவையும் அழித்துவிடும், தம்பி!'' என்று ஜனநாதன்

சிரித்துக்கொண்டே சொல்லலானான். "தம்பி, ஊர்மிளா இப்போது உள்ளேயிருந்தால் இந்நேரம் புழுக்கத்தால் மூச்சுத் திணறிப் பிணமாகத்தான் இருப்பாள். ஆனால் நமக்கு பிணவாடை தட்டவில்லை. ஒருவேளை உயிரோடிருந்தால் மல்லிகைப்பூ வாசனையாவது வந்திருக்க வேண்டும். இரவு நேரத்தில் எந்தப் பூவையும் கூந்தலில் சூடாமல் விதவையைத் தவிர எந்தப் பெண்ணும் உயிரோடிருக்க மாட்டாள் என்பது உனக்குத் தெரியும். அவள் உயிரோடு விதவையாக இருந்தால் உனக்குப் பிரயோஜனமில்லை. பிணமாகிக் கிடந்தால் அரசாங்க விசாரணைக்கும் பிரயோஜனமில்லை. ஆகையால் சிறிதும் கவலைப்படாமலிரு! உள்ளே காளியைத் தவிர எந்தக் காரிகையும் இல்லை!"

"ஊர்மிளாவை எவ்வளவு விரைவில் தேடிப் பிடித்து ராஜாங்க விசாரணைக்கு ஆளாக்குகிறேனோ அவ்வளவுக்கு நல்லது! ஏனெனில், அப்பொழுதுதான் என் பொறுப்புந்தீரும். அடைமானமாகக் காவற்காரர்களிடம் கொடுத்துவிட்டு வந்த என் வீரவாளையும் திருப்பிப் பெறலாம்" என்றான் வீரசேகரன்.

"தம்பி, நான் உன் ஸ்தானத்திலிருந்தால் என்ன செய்வேன் தெரியுமா? தெருவில் போகிற ஊமையாகவும் செவிடாகவும் உள்ள எவளையாவது ஒரு பெண்ணைப் பிடித்து இவள்தான் ஊர்மிளா என்று அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிட்டு என் பொறுப்பைக் கழித்துக் கொள்வேன்! நிஜ ஊர்மிளாவை என் கையில் இரகசியமாக வைத்துக் கொண்டு அவளை வீர பாண்டியன் கட்சியிடம் திருப்பிக் கொடுத்து விடுவதாகப் பணம் பறித்துக்கொண்டேயிருப்பேன்! தம்பி, இது தான் அரசியல்வாதிகளின் அலாதியான புத்தி சாதுரியம்!" என்றான் ஜனநாதன் விஷமப் புன்னகையுடன்.

அவனருகிலிருந்த கிழவர் சம்புவராயர் சிறிது கோபமுற்றவராய், "ஜனநாதா! வீரசேகரன் பால் போன்ற வெள்ளையுள்ளம் படைத்தவன்! உன் அரசியல் போதனைகள் சிறந்த ராஜ விசுவாசியையும் சிறந்த ராஜத் துரோகியாக்கிவிடும்!" என்றார்.

அவரைப் பொருட்படுத்தாதவன்போல் ஜனநாதன் அலட்சியமாய்ச் சிரித்துக்கொண்டே வீரசேகரனை நோக்கி, "தம்பி! நான் ராஜவிசுவாசியா அல்லது ராஜத் துரோகியா என்று ராஜாங்கம் நிச்சயிக்க முடியாதபடி நான் வெகு சாதுரியமாய் நடந்துகொண்டு வருகிறேன். அதனால், ராஜாங்கத்தில் எனக்கு மதிப்பும் சலுகைகளுந்தான் அதிகம் பெருகிக்கொண்டு வருகின்றன!. உன்னை அரசாங்கம் அலட்சியப்படுத்தினால் நீ எந்த க்ஷணமும் ராஜத் துரோகியாக முடியும் என்று இடையிடையே பயமுறுத்திக் கொண்டிருப்பதுதான் அரசியல் செல்வாக்குப் பெருகுவதற்குச் சரியான வழியாகும்" என்றான்.

கோயிலின் உள்ளேயே பதுங்கி நின்ற ஊர்மிளாவிற்கு முகமெல்லாம் வியர்த்துக் கொட்டியது. சாவித் துவாரத்தின் வழியாக வெளியே வீரசேகரனையோ அவனோடு அமர்ந்திருக்கும் ஜனநாதனையோ கிழவர் சம்புவராயரையோ அவளால் சிறிதும் பார்க்க முடியாவிட்டாலும், அம்மூவரும் பேசிக் கொள்வது அவளுக்கு மிகத் தெளிவாய்க் கேட்டது.

கோயிலின் உள்ளேயோ, அவளோடு மலைப் பூதம் போல் முரட்டுக் கபாலிகன் இருந்தான். வெளியிலோ, சோழ நாட்டின் மகாவீரர்களான பிரசித்தி பெற்ற மூன்று புலிகள் இருந்தன.

மான்போல் மருண்டு ஊர்மிளா சித்திரப் பாவைபோல அசைவற்று நின்றுவிட்டாள்!



# அத்தியாயம் 9

## ஒற்றுக் கேள்விப் படலம்

*ஒற்றரை உணர்ந்துகொண்டான் சேர்வுறு பாலின் வேலைச்*
*சிறுதுளி தெறித்த தேனும் நீரினை வேறு செய்யும்*
*அன்னத்தின் நீரனானான்.*

**கம்ப ராமாயணம்**

மந்திகள் வால் நீட்டி உட்கார்ந்து கவனிப்பதுபோல் இரு குரங்குகளின் வடிவங்கள் செதுக்கப்பட்ட ஒரு மரக் கதவு பாழடைந்த காளிகோயிலுக்கு வாசல் கதவாக அமைந்திருந்தது.

யாரோ தலைசிறந்த காளி பக்தன் ஒருவன் எங்கோ ஒரு அநுமார் கோயிலிலிருந்து அந்த மரக் கதவைப் பெயர்த்து வந்து இக்காளி கோயிலுக்கு வாசல் கதவாக அமைத்திருக்க வேண்டுமென சரித்திர ஆராய்ச்சியாளர்கள் சொல்லுவார்கள்! ஒதுப்புறமான இக்காளி கோயிலைச் சுற்றிக் குரங்குகளின் நடமாட்டம் அதிகமானகயால் யாரோ தலைசிறந்த இளம் மரச்சிற்பியொருவன் இக் கதவின் மீது குரங்குகளைச் செதுக்கிவிட்டுப் போயிருப்பான் எனவும் ஊகிக்கலாம்!

இப்போது நன்கு சாத்தி உள் தாழ்ப்பாளிடப்பட்ட அக்கதவின் சாவித் துவாரத்து வழியாகக் கண்ணீர் தோய்ந்த இரு கருநீல விழிகள் வெளி இருளை ஊடுருவிக் கவனித்துக் கொண்டிருந்தன.

காளி கோயிலின் வெளியேயுள்ள பாழ்மண்டபத் திண்ணைமீது சோழியப் போர் வீரன் வீரசேகரனும்,

வாட்படைத் தலைவன் ஜனநாதனும், யானைப் படைத்தலைவர் கிழவர் சம்புவராயரும் உட்கார்ந்து சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

கோயிலின் உள்ளே பதுங்கி நின்ற ஊர்மிளா வெடுக்கென்று பின்னால் திரும்பிப் பார்த்தாள். அவளை அப்பாழ் கோயிலில் சிறை வைத்த கபாலிகன் இப்போது பலிபீடத்தின் மீதமர்ந்து தன் ஆந்தை விழிகளால் அவளையே கண்கொட்டாமல் கவனித்துக் கொண் டிருந்தான்.

ஊர்மிளா மெல்லத் திரும்பி, கதவின் உட்புறச் சாவித் துவாரத்தில் காதை வைத்து, வெளியே உள்ளவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று ஒரு வார்த்தைகூட விடாமல் மிகவும் கவனமாக ஒற்றுக் கேட்க ஆரம்பித்தாள். அவள் பெண் பிறவியாதலால் ஒற்றுக் கேட்பது அவளுக்கு மிகவும் சுலபமாக இருந்தது.

"வீரசேகரா, என்ன தீவிரமான சிந்தனை? இப்பாழடைந்த கோயிலுக்குள் ஊர்மிளா பதுங்கியிருப்பாள் என்ற சந்தேகந்தானே?"

"ஆமாம்! மரணத்திற்கும் துணிந்து இந்த இருட்டு நேரத்திலே கதவை உடைத்துக் கொண்டு உள்ளே போய்ச் சோதித்துப் பார்க்க வேண்டும்! ஊர்மிளாவைச் சிறை பிடித்து நம் சோழ அரசாங்கத்தின் விசாரணைக்கு ஆளாக்க வேண்டும் என்று என் தேச பக்தி தூண்டுகிறது!"

"தம்பி! அவ்வளவு தூரம் தேசபக்தி உனக்கும் நல்லதல்ல; தேசத்திற்கும் நல்லதல்ல! அவ்வளவு கண்மூடித்தனமான தேசபக்தி இருந்தால், நீ ஸ்ரீராமானுஜருக்கு மட்டுமல்ல, அரசாங்கத்திற்கும் தாஸனாகி விடுவாய்! அரசாங்கம் செய்யும் எந்தத் தவற்றையும் கண்டிக்காமல் அநுமதித்துக் கொண்டே போவாய்! ஒரு தேசத்தில் எவ்வளவு கண்மூடித்தனமான தேசபக்தர்கள் இருக்கிறார்களோ, அவ்வளவு முட்டாள்களும் ஊமைகளும் அடிமைகளும் இருப்பதாக அரசாங்கம் கருதிவிடும்! கண்டித்துப் பேச எதிர்க் கட்சிக்காரர்கள்

இல்லாவிட்டால் அரசாங்கம் யதேச்சாதிகாரமாக மாறி, பெருவாரியான மக்களுக்குத் தீமைகளைப் பெருக்கிக் கொண்டே போகும். கூடிய சீக்கிரம் தேசம் சர்வ நாசமடைந்து அந்நியருக்கு அடிமைப்பட்டுப் போகும். தம்பி, அளவு மீறிய தேசபக்தியால் ஒரு தேசத்துக்கு ஆபத்து ஏற்படும் என்ற அரசியல் தத்துவம் உனக்குப் புரியாது. நீ அரசியலுக்குப் புதிதாகையால்!... தம்பி, அளவு மீறினால் அமிருதமும் நஞ்சு என்பதை உன் காதல் விஷயத்தில் மட்டுமல்ல, அரசியல் விஷயத்திலும் உபயோகப்படுத்து!" என்றான் ஜனநாதன் கலகலவென்று விளையாட்டாய்ச் சிரித்துக்கொண்டே.

வீரசேகரன் வருத்தமும் கோபமும் கலந்த குரலில், "ஜனநாதா! அரசியலையும் தேசபக்தியையும் விளையாட்டாகப் பரிகாசம் செய்வதைக் கூட நான் விரும்பவில்லை! இதென்ன சிறு குழந்தைகள் போல் விளையாட்டு?" என்றான்.

ஜனநாதனோ வழக்கம்போல் விஷமச் சிரிப்புடன், "தம்பி! சிறு குழந்தைகள் தங்கள் சுய திருப்திக்காக மண் பொம்மைகளை வைத்து விளையாடுகிறார்கள்! அரசியல் வாதிகள் தங்கள் சுயதிருப்திக்காக தேசிய இலட்சியங்களைச் சூதாட்டக் காய்களாக வைத்து விளையாடுகிறார்கள்! ஆத்மவாதிகளோ தங்கள் ஆத்ம திருப்திக்காகத் தத்துவ சாஸ்திரங்களை வைத்துக்கொண்டு கண்கட்டு விளையாட்டு விளையாடுகிறார்கள்! இம்மூன்றும் ஒன்றுதானே? இன்னும் சொல்லப்போனால் சிறு குழந்தைகளின் விளையாட்டினால் பிறருக்கோ மனித ஜாதிக்கோ அதிகத் தீங்கு விளைவதில்லை!"

வீரசேகரன் இலட்சிய உணர்ச்சியினால் ஆவேசம் கொண்டவன் போல் கூவினான்; "சோழ சாம்ராஜ்யத்தின் இணையற்ற அரசியல் புருஷனான ஜனநாதக் கச்சிராயன் இவ்வாறு அரசியலைப் பரிகாசம் செய்வதைக் கண்டு நான் ஆச்சரியப்படுகிறேன்! நம் சோழ சாம்ராஜ்யம் கங்கையும் கடாரமும் தாண்டி, அடி வானத்திற்கு அப்பாலும் தமிழரின் புலிக்கொடியை வானளாவப் பறக்கவிடப் போகிறது! ஒரு காலத்தில் உலகம் முழுதும்

வியாபித்திருந்த தமிழர் நாகரிகத்தை மறுபடி உலகம் முழுதும் வியாபிக்கச் செய்ய முயல்கிறது. சோழநாட்டின் காவிரிக் கரையில் அகில உலகையும் கட்டித்தழுவும் ஒரு இலட்சியக் கனவு உருவாகும்போது, திக்கெட்டும் திக்விஜயம் செய்ய ஆயிரக்கணக்கான சோழிய வீரர்கள் திரண்டு வரும்போது, சோழ சாம்ராஜ்யத்தின் வாட்படைத் தலைவன் ஜனநாதனா இப்படிப் பேசுவது? சாமானியப் போர் வீரனான எனக்கே இந்த மாபெரும் இலட்சியக் கனவு இருக்கும்போது, மகாவீரனான ஜனநாதன் இன்னும் எவ்வளவு பெரிய கனவெல்லாம் காண வேண்டியவன்?"

"தம்பி! எனக்கு நிம்மதியாகக் குறட்டை விட்டுத் தூங்கத் தெரியுமே தவிர, அநாவசியமான கனவுகளையெல்லாம் கண்டு தூக்கத்தைக் கெடுத்துக் கொள்ளும் வழக்கம் என்னிடம் இல்லை! உருக்காட்டுப் படலத்தை ஆரம்பிக்கும் சந்தர்ப்பம் ஒன்று வரும். அப்போது என்னைப்பற்றி நீ நன்றாகப் புரிந்து கொள்வாய்!" என்றான் ஜனநாதன் அலட்சியமாக.

அவனை நோக்கிக் கிழவர் சம்புவராயர், "ஜனநாதா! நீ இவ்வாறு பேசுவதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது! உன் காடவராய வம்சமே சதா முணுமுணுப்பது! நூறு வருஷங்களுக்குமுன் உங்கள் காடவராய வம்சத்தின் இனமான பல்லவ சாம்ராஜ்யத்தை ஆதிகாலச் சோழ மன்னர்கள் அழித்துவிட்டார்கள் என்ற ஆத்திரம் உனக்கு! சோழ சாம்ராஜ்யமும் அதைப்போல் அழிவதைக் கூட உன் உள்ளம் உன்னையறியாமல் விரும்பும்!" என்றார்.

"சம்புவராயரே! எனக்கு உள்ளம் என்றே ஒன்று இல்லை என்பது உமக்கு நன்றாகத் தெரியும்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"ஜனநாதா! உன் கனவு, சோழ சாம்ராஜ்யம் உருவாகும் சோழ நாட்டின் காவேரிக் கரையிலோ, இப்பாண்டி நாட்டின் வைகைக் கரையிலோ இல்லை! தொண்டை நாட்டில் நூறு வருஷங்களுக்கு முன்பு அழிந்துபோன பல்லவ சாம்ராஜ்யத்தில் இருக்கிறது!"

"சம்புவராயரே! நூறு வருஷங்களுக்குமுன் அழிந்து பூண்டு முளைத்துப் போன பல்லவ சாம்ராஜ்யத்தைப் பற்றி நினைக்க நான் அவ்வளவு தூரம் முட்டாளல்ல. நேற்று என்ன காய்கறி சாப்பிட்டேன் என்பதைக்கூட மறந்துவிடக் கூடியவன் நான்! ஒருவேளை சோழ சாம்ராஜ்யத்தின் அழிவைக் காண விரும்புகிறேன் என்று நீர் நினைத்தால், அதோடு சேர்த்துப் பாண்டிய சாம்ராஜ்யத்தின் அழிவையும் காண விரும்புவேன் என்பதையும் உம் மனத்தில் பதித்துக் கொள்ளும்; ஏனெனில், நூறு வருஷங்களுக்கு முன் பல்லவ சாம்ராஜ்யத்தை அழித்தவர்கள் சோழர்கள் மட்டுமல்ல, பாண்டியர்களுந்தான்!" என்றான் ஜனநாதன்.

பேச்சை வேறு திசையில் திருப்ப விரும்பிய வீரசேகரன், கிழவர் சம்புவராயரைச் சுட்டிக் காட்டிக் கேட்டான்; "ஜனநாதா! இந்தப் பெரியவர் எப்போதும் ஏன் உன்னுடனே இருக்கிறார்?"

"இன்னும் இவர் என்னிடமிருந்து எந்தப் பலனும் அடையவில்லை! எனக்கோ இந்தப் பரமபக்தரை என் அருகில் வைத்திருப்பதால் ஏராளமான புண்ணியங்கள் கிடைக்குமே என்று ஆசைப்படுகிறேன்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

கிழவர் சம்புவராயர் சட்டென்று, "ஜனநாதா, நம் வீரசேகரன் அரசியலைப் பெரிய லட்சியமாக நினைத்துக் கொண்டு வந்திருக்கிறான்! நீயோ, ஆடுகளையும் பிணங்களையும் அறுத்து விற்கும் வியாபாரிகளை விட அரசியல்வாதிகளை மோசமாக்கி விடுவாய் போல் இருக்கிறது!" என்றார்.

அப்போது தொம்பைக் கூத்தாடிகள் போல மாறுவேடமணிந்த இரு சோழிய ஒற்றர்கள் வேகமாய் ஓடிவந்து, காளி கோயிலின் வெளி மண்டபத் திண்ணையிலுள்ள கிழவர் சம்புவராயரிடம் ஏதோ ஓர் அவசரமான தகவலைச் சொல்ல விரும்பினார்கள். அவ்விரு ஒற்றர்களும் நீள முகம் உள்ளவர்களாயும் முகவாய் உப்பிக் குரங்கு போன்ற முகமுள்ளவர்களாயு

மிருந்தார்கள். ஏதோ தாங்கள் கண்டுபிடித்த ஓர் உளவைச் சம்புவராயரிடம் தனிமையில் சொல்ல ஏக காலத்தில் துடித்தவர்களாய்த் தவித்து நின்றார்கள்.

அதைப் புரிந்து கொண்ட ஜனநாதக் கச்சிராயன் விஷமமாகச் சிரித்துக் கொண்டே, "சம்புவராயரே, இந்தச் சுகன், சாரணன் என்ற இரு வானரங்களும் உம்முடைய ஒற்றுக் கேள்விப் படலத்தில் தலைசிறந்த ஒற்றர்கள், இல்லையா?" என்று கேட்டான்.

"ஆமாம்!... என்ன ஒற்றர்களே, ஏதாவது துப்புக் கிடைத்ததா?" என்றார் சம்புவராயர்.

''கிடைத்துவிட்டது! வீரபாண்டியரும் அவர் மனைவியும் இந்த மதுரைக் கோட்டைக்குள்தான் தலை மறைவாய் இருக்கிறார்கள்!" என்று இரண்டு ஒற்றர்களும் ஏககாலத்தில் கூவினார்கள்.

''இரண்டு முட்டாள்கள்!'' என்று சிரித்தான் ஜனநாதன்.

ஒற்றர்கள் இருவரும் திடுக்கிட்டார்கள். இரண்டு முட்டாள்கள் என்று தங்களைத்தான் சொல்கிறானா, அல்லது வீரபாண்டியனையும் அவன் மனைவியையும் சொல்கிறானா என்று தவித்த ஒற்றர்கள் இருவரும் ஏககாலத்தில் ஜனநாதனைக் கூர்ந்து பார்த்தார்கள். பிறகு சற்றுப் பெரிய தோற்றமுள்ள சாரண தேவன் என்ற ஒற்றன் கிழவர் சம்புவராயரை நோக்கிச் சொல்லலானான்:

"நாங்கள் இப்படிச் சந்தேகிப்பதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது. முற்றுகையில் மதுரைக் கோட்டை நம் கைக்குள் சிக்கும்போது வீரபாண்டியரும் அவர் மனைவியும் என்ன காரணத்தாலோ கோட்டைக்குள்ளேயே சிக்கிக்கொண்டு விட்டார்கள். கோட்டையின் நான்கு வாசல்களிலும் மதில்புறத்தைச் சுற்றிலும் நம்முடைய வாள் வீரர்களும் குதிரைச் சேவகர்களும் யானையாட்களும் இவ்வளவு பலமாகக் காவல் புரிவார்கள் என்று வீரபாண்டியர் எதிர்பார்த்திருக்க மாட்டார்!... அவரையும்

அவர் மனைவியையும் நமக்குத் தெரியாமல் கோட்டையை விட்டு இரகசியமாக வெளியேற்ற இன்று நடுநிசியில் ஒரு பெரிய முயற்சி நடக்கப் போகிறது!... நாம் சிறிது ஏமாந்தாலும் வீரபாண்டியரும் அவர் மனைவியும் நம் வலையிலிருந்து தப்பி இம் மதுரை நகரைவிட்டு நீங்கிவிடுவார்கள்!"

ஜனநாதன் பரிகாசமாய்ச் சிரித்துக்கொண்டே, "வீரபாண்டியன் தன் தலைநகரைக் கைநழுவ விட்டபிறகு இத்தனை நாள் கழித்தா இப்போது நகர் நீங்கு படலம் நடக்கும்? ஒற்றர்களே, நீங்கள் கம்பனைப் போல அபாரமாகக் கற்பனை செய்கிறீர்கள்!" என்றான்.

"இல்லை; நாங்கள் அவ்வாறு அநுமானிப்பதற்குத் தகுந்த அத்தாட்சி இருக்கிறது. கோட்டைக்கு வெளியே வையை ஆற்றில் இரண்டு படகுகள் கட்டப்பட்டு மிதக்கின்றன. அவற்றில் ஆட்களோ, விளக்கு வெளிச்சமோ, சுற்றிலும் எந்தவித அரவமோ இல்லை. படகுகளுக்குள் துடுப்புகளும் ஒரு சாத மூட்டையும் தயாராக வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு படகுக்குள் ஒரு ஈழக் காசு தவறி விழுந்து கிடந்தது. விடியற்சாம நேரத்திலிருந்து அங்கேயே அந்த இரண்டு படகுகளும் இருக்கின்றனவாம். நாங்கள் சந்தேகப்பட்டு, அவற்றின் சொந்தக்காரர்கள் வருகிறார்களாவென்று இரகசியமாகக் கவனித்தோம். இருட்டி இவ்வளவு நாழிகையாகியும் ஒரு ஆளாவது கண்ணில் படவில்லை. உடனே நாங்கள் நம்முடைய காவல் வீரர்களில் சிலரைப் படகுகளின் அருகில் இரகசியமாக நிறுத்தி வைத்து விட்டு நகர்க் கோட்டைக்குள் வந்தோம். சித்திரை வீதி, ஆவணி மேல் மாசி ஆடி வீதிகளில் எல்லாம் அலைந்த பிறகு, கிழக்குக் கோபுர வாசலில் எங்கள் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்வதுபோல் இரண்டு குடியானவர்கள் சந்தித்து இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிய பேச்சு இரண்டு புலவர்களின் பேச்சைப் போலிருந்ததால் எங்களுக்குச் சந்தேகம் தட்டியது..." என்று ஒற்றன் சாரணன் மூச்சுவிடச் சற்று நிறுத்தினான்.

ஜனநாதன் சிரித்துக்கொண்டே, "பாண்டியநாட்டுக் குடியானவர்கள் நம்முடைய சோழ நாட்டுப் புலவர்களைவிட நல்ல புலமைத் தமிழில் பேசுவார்கள்! இந்த மதுரை, முத்தமிழ்ச் சங்கம் இருந்த இடமப்பா... சரி! மேலே சொல். அந்த இரண்டு குடியானவர்கள் என்ன பேசினார்கள் என்பதை ஒன்றுவிடாமல் அப்படியே சொல். அவர்கள் என்மீது வசை பொழிந்திருந்தாலும் அதையும் ஒரு வசவு விடாமல் சொல்!" என்றான்.

ஒற்றன் சாரணன் நடந்ததைச் சொல்ல ஆரம்பித்தான்:

"நாங்கள் ஒளிந்து நின்று அந்தக் குடியானவர்களின் பேச்சை ஒட்டுக் கேட்டோம். அவர்களில் குள்ளமாயிருந்த குடியானவன் தடியாக இருந்தவனைப் பார்த்து, 'அண்ணே, பெரிய புராணக் கதையை நேற்றுப் பாதியிலேயே நிறுத்திவிட்டாயே?' என்று சொன்னான்..."

"சம்புவராயரே, பார்த்திரா? நம்முடைய சோழ நாட்டில் ராமாயணம் ஆரம்பமாகும்போது இங்கே பாண்டிய நாட்டில் ரகசியமாகப் பெரிய புராணம் நடத்துகிறார்கள்... சரி; சாரணா! மேலே அந்தக் குடியானவர்கள் பேசிக் கொண்டதைச் சொல்."

"அதற்குத் தடியாயிருந்த குடியானவன், 'இன்றைக்கு திருஞானசம்பந்தர் கதை தம்பி!' என்றான்..." என்று ஒற்றன் சொல்லி நிறுத்தினான்.

"சம்புவராயரே, இந்தத் திருஞானசம்பந்தர் புராணத்தின் உள்ளர்த்தம் உமக்குப் புரிகிறதா?" என்று ஜனநாதன் சிரித்துக் கொண்டே கேட்டான்.

"இல்லை" என்பதற்கு அறிகுறியாகக் கிழவர் சம்புவராயர் மௌனம் சாதித்தார்.

"சம்புவராயரே! நீர் திருஞானசம்பந்தர் புராணத்தைப் பாராயணம் செய்வீரே தவிர, அதன் உள்ளர்த்தம் உமக்குப் புரியாது! இங்கே கவனியும்; திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருக்கு இன்னொரு பெயர்

*ஆளுடைய பிள்ளையார். அதாவது, ஆளக்கூடிய பிள்ளை, அதாவது வீரபாண்டியனுக்குப் பின் பட்டத்தை ஆளக்கூடிய மூத்த பிள்ளை. அந்தக் குடியானவர்கள் இருவரும் தங்களுடைய இளவரசனைப் பற்றிப் பேசுகிறார்கள்... சரி ஒற்றனே, மேலே தொடர்ந்து அவர்கள் பேசிக் கொண்டதைச் சொல்..."*

*"அதற்குக் குள்ளமான குடியானவன் சொன்னான்: 'இனித் திருஞானசம்பந்தர் கதை ஒன்றுதான் அண்ணே பாக்கி...' ......"*

*"பாக்கி என்றதனால் வீரபாண்டியனும் அவனது குடும்பமும் ஏற்கெனவே மதுரையை விட்டுத் தப்பி ஓடிவிட்டார்கள். இனி அவனுடைய இளவரசனான இந்தத் திருஞானசம்பந்தர் ஒருவர்தான் பாக்கி என்று அர்த்தம். சரி, மேலே சொல்."*

*"அதற்குத் தடியன் சொன்னான்: 'இன்று இரவுக்குள்ளே அந்தக் கதையையும் முடித்துவிடலாம்' என்றான்."*

*"அதாவது, அவர்களது நம்பிக்கைப்படி திருஞான சம்பந்தர் இன்றிரவுக்குள் மதுரையை விட்டு வெளியேறி விடுவார். நம்முடைய நம்பிக்கைப்படி திருஞானசம்பந்தர் நம் கையில் சிக்கி இந்த மதுரை ஸ்தலத்திலேயே நம் வாளால் முக்திப் பேறு அடைந்துவிடுவார்!... சரி; மேலே சொல்."*

*"அதற்குக் குள்ளமானவன், 'நான் திருஞான சம்பந்தரைப் பார்த்ததில்லை' என்று கேட்க, அதற்குத் தடியானவன், 'கோயில் பிரகாரத்தில் அறுபத்து மூன்று நாயனார் வரிசையில் திருஞானசம்பந்தரைப் பார்க்கலாம், தம்பி' என்றான்..."*

*"அதாவது வீரபாண்டியன் மகன், மீனாட்சியம்மன் கோயிலில் சிவனடியார் கோலத்தில் எண்சாண் உடம்பையும் திருநீற்றால் மறைத்துக் கொண்டு பிரகார மண்டபங்களில் நடமாடுகிறான்!... சரி, மேலே சொல்...!"*

''அதற்குக் குள்ளன், 'கதையை எப்போது ஆரம்பிப்பாய்?' என்று கேட்க, 'எல்லாம் கும்பகர்ணப் படலத்துக்கப்புறம் அந்தக் கதையைப் படித்தால்தான் புண்ணியம், தம்பி' என்றான் தடியன்..."

"அதாலது, நம்முடைய காவல் வீரர்களெல்லாம் நன்றாகத் தூங்கிய பிறகு நடுச்சாமத்தில் இளவரசனைக் கோயிலை விட்டுக் கிளப்பி மதுரைக் கோட்டையை விட்டு வெளியேற்ற முயல்கிறார்கள்!.. சரி, அப்புறம்?"

''அப்புறம் குள்ளன் எதையோ யோசித்துவிட்டு, 'அண்ணே, ஒன்று கேட்க மறந்து போய்விட்டேன்!... உன் வயலில் எத்தனை கலம் நெல் அறுவடைக்குத் தயாராக இருக்கும்?' என்று கேட்க, அதற்குத் தடியன், 'என் வயலில் எண்பது கலம் நெல் இருக்கிறது. உன் கையில் அறுபது கலம் நெல்லாவது அறுவடைக்குத் தயாராயிருக்கும். இரண்டையும் சேர்த்தால் நம்முடைய பழைய கடனை அடைத்துவிடலாம்' என்றான்..."

''அதாவது, நம்முடைய சோழ வீரர்களின் தலைகளை அறுவடை செய்ய அந்தத் தடியன் கையில் எண்பது ஆட்களும், குள்ளன் னகயில் அறுபது ஆட்களும் இருக்கிறார்கள். இரண்டும் சேர்ந்தால், இளவரசனை மதுரையைவிட்டு வெளியேற்றி, பாண்டிய மன்னருக்கு வாழையடி வாழையாகப் பட்டிருக்கும் நன்றிக் கடனைச் செலுத்திவிடுவார்கள்... சரி; மேலே சொல்..."

''உடனே குள்ளன், 'துவார பாலகர்களைத் தரிசிக்காமல் திருஞானசம்பந்தரைக் கும்பிடுவதால் புண்ணியம் கிடைக்காது, இல்லையா?' என்று கேட்டான்..."

"அதாவது, கோயில் வாசலில் காவல் புரியும் நம் சோழ வீரர்களின் தலைகளை வெட்டிவிட வேண்டுமென்று அந்தக் குள்ளன் விரும்புகிறான்... சரி; அதற்கு அந்தத் தடியன் என்ன பதில் சொன்னான்?..."

"உள்ளேயிருக்கிற நந்தியையும் மறந்துவிடாதே" என்று பதில் சொன்னான்...!"

"சம்புவராயரே, உள்ளே இருக்கும் நந்தி யார் தெரியுமா...? நந்தி என்பது ஒரு உயர்தரமான பக்திமாடு. அதாவது நம்முடைய உயர்தரமான ஒரு சோழ நாட்டு கிழட்டு மாடு! இங்கே நன்றாக யோசித்துப் பாரும்... இப்போது சொக்கலிங்கப் பெருமான் சந்நிதியில் இரவு முழுதும் பதிகம் பாடப் போயிருக்கும் நம் காவல் படைத் தலைவர் ஏகவாசகன் வாண கோவரையரைத் தவிர வேறு யார் அந்தக் கிழட்டு மாடாக இருக்க முடியும்? – சரி, ஒற்றனே, மேலே சொல்!"

"பிறகு தடியனானவன், 'அதோடு தம்பி, அரிபத்திர நாயனாரையும், தண்டேசுவரரையும் மறந்து விடக்கூடாது' என்றான்."

"அரிவாளையும் தடியையும் மறந்து விடாமல் எடுத்துக்கொண்டு சிவனடியார்கள் கோலத்தில் காரியத்தைச் சாதிக்கப் போகிறார்கள்! சரி; அதற்குப் பிறகு?"

"அப்புறம் குள்ளமானவன், 'அண்ணே, திருஞானசம்பந்தமூர்த்தி, கோயிலிலிருந்து எங்கே போய்த் தங்குவார்?' என்று கேட்க, தடியனானவன், 'அப்பர் மடத்திற்கு முத்துச்சிவிகையில் போவார்' என்று பதில் சொன்னான்..."

"இவ்வாறு கோயிலிலிலுள்ள சோழியக் காவற்காரர்களைக் கொன்றுவிட்டுத் திருஞான சம்பந்தர், கோட்டை வாசலுக்குச் சென்று தம் அடியார்களை ஏவி அங்குள்ள காவற்காரர்களையும் கொன்றுவிட்டு, முத்துச்சிவிகையில் அப்பர் மடத்துக்குப் போவார்! அதாவது, பிள்ளையாரின் அப்பாவான வீரபாண்டிய னிடம் கடைசியாகப் போய்ச் சேர்வார்... சரி; மேலே?"

"...உடனே குள்ளன், 'அண்ணே, ஞானசம்பந்தர் தலயாத்திரை செய்யும்போது வழியில் பிற சமயச் சழக்கரான பகைவர் பயம் இராதா?' என்று கேட்க, 'அதற்குத்தான் மருள் நீக்கியார் இருக்கிறாரே' என்றான் தடியன்..."

"இலங்கை ராணிமூலம் பிறந்த மூத்த பிள்ளையைப் பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் விரும்பவில்லை. இந்த ஆளுடைய பிள்ளையார் கோட்டையைவிட்டுத் தாண்டிப் பல ஊர்களின் வழியாகப் போகும்போது பலர் மருண்டு வாதப் பிரதிவாதம் நிகழுமா என்று கேட்கிறான். அதற்குத்தான் மருள்நீக்கி போல் சொல் சாதுரியமுள்ள ஒருவனும் கூடவே போவான் என்று தடியன் சமாதானப்படுத்துகிறான்...... சரி, மேலே......"

"பிறகு குள்ளன், 'அண்ணே, திருஞானசம்பந்தர் திருமறைக்காட்டுக் கோயிலுக்கு எந்த வழியாகப் போவார்?' என்று கேட்க, 'ஏன் நேரான தலைவாசல் வழியாகத்தான்' என்றான் தடியன்..."

"அதாவது, நம் கோட்டையைவிட்டு நேரான வாசல் வழியாகவே காட்டுப்புறம் செல்லத் திருஞானசம்பந்தர் முயல்வார் என்று பேசிக்கொள்ளுகிறார்கள். ஆக, ஆளுடைய பிள்ளையுடன் போகும் அடியார் படை, கோட்டையின் உட்புறமுள்ள நம் சோழிய வீரர்களைக் கொன்றுவிட்டு உட்புறத் தாழ்ப்பாளைத் திறந்துகொண்டு போகத் தயாராகிவிட்டது... ஆனால் துரதிர்ஷ்டவசமாகக் கோட்டைக் கதவைத் திறக்க வெளிப்புறமுள்ள பூட்டையும் நம் சோழியக் காலற்காரர்களின் மண்டையையும் பிளக்க வேண்டுமென்பதை மறந்துவிட்டார்கள்... சரி; மேலே..."

"உடனே குள்ளனானவன், 'ஏன் அண்ணே, திருஞானசம்பந்தர் மீது திருநாவுக்கரசருக்கு நிறைய அன்புண்டல்லவா?' என்று கேட்க, 'அதிலென்ன சந்தேகம். ஞானப்பிள்ளையாரை எதிர்கொண்டழைக்கத் திருநாவுக்கரசர் தம் உழவாரப்படையுடன் காத்திருப்பாரே' என்றான் தடியன்."

"அதாவது திருநாவுக்கரசர் என்ற சொல்லரசர், அதாவது செல்லாக்குள்ள ஒரு தலைவன், தன் உழவாரப் படையுடன் கோட்டைக்கு வெளியே தயாராய்க் காத்திருப்பான்! உழவாரப் படை என்பது நிலத்தில் பாய்ச்சிப் புற்களைச் செதுக்கித் தரையைத் துப்புரவு

செய்தல். திருநாவுக்கரசரின் ஆட்கள் கோட்டைக்கு வெளியே புல்வெட்டித் தோட்டிகளின் வேடத்தில் வந்து கூடுவார்கள் என்பதையும், கோட்டைக்கு வெளியே நிற்கும் நம் சோழியக் காவற்காரர்களின் தலைகள்தான் புற்கள் என்பதையும், அப்புற்களை வெட்டி, திருஞானசம்பந்தர் உவாக் கிளம்புவதற்குத் தோதாக தரையைத் துப்புரவு செய்து வைப்பார்கள் என்பதையும் நான் சொல்லாமலே நீங்கள் புரிந்து கொள்ளலாம்! சரி; ஒற்றர்களே, அதற்கு மேலே அந்தக் குடியானவர்கள் என்ன பேசிக் கொண்டார்கள்?"

''அதற்குப் பிறகு குள்ளன், 'அண்ணே, திருமறைக்காட்டுக் கோயிலில் கதவை யார் திறக்கப் பாடுவது? ஞானசம்பந்தரா? திருநாவுக்கரசரா?' என்று கேட்க, 'நாவுக்கரசர் திறக்கப் பாடுவார்; ஞானசம்பந்தர் சாத்தப் பாடுவார்!' என்றான் தடியன்!..."

''அதாவது, கோட்டைக்கு வெளியேயுள்ள திருநாவுக்கரசர் முதலில் கோட்டைக் கதவு திறக்கும்படி பதிகம் பாடுவார்! அந்தக் குறிப்பைத் தெரிந்துகொண்டதும் உட்புறமுள்ள ஞானப்பிள்ளையார் கதவு சாத்தும்படி பதிகம் பாடித் தன்னிலையைத் தெரிவிப்பார். பிறகு கோட்டைக்கு வெளியேயுள்ள நாவுக்கரசரின் படையினர் நம் சோழியக் காவற்காரர்களைக் கொன்றுவிட்டுக் கதவைத் திறந்துவிடுவார்கள். உள்ளே உள்ள வீரர்களைக் கொன்றுவிட்டு ஞானப்பிள்ளையின் படையினர் கதவைச் சாத்திவிட்டுக் கம்பிநீட்டி விடுவார்கள்! சரி, ஒற்றர்களே, அப்புறம் அவர்கள் பேசிக் கொண்டதைச் சொல்லுங்கள்!"

"உடனே தடியன் 'திருஞானசம்பந்தர் புராணத்தை நாலு பேரறிய வாசித்தாலும், வாசிக்கும் பக்கம் நின்று கேட்டாலும் கைலாய பதவி கிடைக்கும், தம்பி' என்று சொல்லிவிட்டு இருளில் மறைந்துவிட்டான்..."

"இந்த இரகசியம் நாலு பேருக்குத் தெரிந்தால் அதில் ஈடுபட்ட எல்லோருக்கும் நம் வாள் முனையில் கைலாச பதவி கிடைக்கும் என்று அந்தத் தடியன் எச்சரித்துப் போயிருக்கிறான். வேறு ஒன்றுமில்லை...!'' என்று சிரித்தான் ஜனநாதன்.

"அப்புறம்..." என்று ஒற்றன் ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

"அப்புறம் நடந்தது நீ சொல்லாமலே தெரியும்... அந்தத் தடியன் இருளில் ஓடி மறைந்துவிட்டான். குள்ளனையாவது பின்பற்றி ஓடிப் பிடிக்கலாம் என்று நீங்கள் முயன்றீர்கள். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவன் ஓடிப்போன அடிச்சுவடுகள்கூட உங்கள் கண்ணில் தட்டுப்படவில்லை. அதனால் இந்தத் தகலலை எங்களிடம் சொல்ல அலசரமாக ஓடிலந்தீர்கள்... இப்போது உங்கள் அதிகாரி செங்கேணி அத்திமல்லர் சம்புவராயர், பெரும் படைவீரர்களுடன் மீனாட்சியம்மன் கோயில்மீது படையெடுத்து வீரபாண்டியன் மகளைச் சிறைபிடிக்கப் போகிறார்...! இல்லையா. சம்புவராயரே?" என்று ஜனநாதன் விஷமமாகக் கிழவரை ஏறிட்டுப் பார்த்தான்.

"ஏன், நீயும் உன் வீரர்களுடன் வரவில்லையா. ஜனநாதா?" என்று கேட்டார் கிழவர் சம்புவராயர்.

"ஒரு சிறுபயலைப் பிடிப்பதற்கு அநாவசியமாக என்னுடைய வானர சைனியம் எதற்கு? வேண்டாம், சம்புவராயரே! நம் சோழ மன்னர் ஆவலோடு எதிர் நோக்கும் பாண்டிய இளவரசனை, வீரபாண்டியனின் வம்ச விளக்கான அந்தக் குட்டி மீனைச் சிறைபிடித்த வீரப் புகழ் உம் ஒருவருக்கே சேரட்டும்! நமக்குள் போட்டி வேண்டாம். உம் நட்பிற்காக இந்த ஒரு முறையாவது என் சுயநலத்தை மறந்துவிடுகிறேன்!" என்றான் ஜனநாதன் உருக்கமான குரலில்.

கிழவர் சம்புலராயர் உற்சாகமடைந்து, ஜனநாதனை மனத்திற்குள் வாழ்த்திக்கொண்டே, ஒற்றர்கள் பின்தொடர உருவிய வாளுடன் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டார்.

இதுவரை ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவனைப் போல வாயடைத்துப்போய் ஒரு விநோதமான உலகில் மெய்மறந்திருந்த வீரசேகரன், சிறிது சுயநினைவு பெற்று இப்பூலோகத்திற்கு வந்தான். எதிரே விஷமச் சிரிப்புடன் காட்சியளிக்கும் ஜனநாதக் கச்சிராயனின் புத்தி

சாதுரியத்தையும் பெரிய புராண ஆராய்ச்சி அறிவையும் எண்ணி எண்ணி அதிகம் வியப்புற்றான்.

"என்ன வீரசேகரா, என் அறிவு, செய்கை, என் போக்கு எல்லாமுமே உனக்கு விசித்திரமாக இருக்கிறது, இல்லையா?" என்று கேட்டான் ஜனநாதன்.

"ஆமாம்!" என்றான் வீரசேகரன்.

"பாண்டிய இளவரசன் கோயிலில் பதுங்கியிருக்கிறான் என்று என் புத்திக் கூர்மையால் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டு, நானே நேரில் போய்ப் பாண்டிய குமாரனைச் சிறைபிடித்து ஏன் வீரப் புகழ் அடைந்திருக்கக் கூடாது என்று நினைக்கிறாய், இல்லையா? அந்தப் பெருமையைக் கிழவர் சம்புவராயருக்கு விட்டுக் கொடுப்போம் என்ற தாராள மனப்பான்மை என்னிடம் இராதென்றும் உனக்குத் தெரியும். இல்லையா?"

"ஆமாம்! யோசனை சொல்லிவிட்டு அதன் பலனை இன்னொருவனுக்கு விட்டுக் கொடுக்கும் தியாகியை நான் என் ஜன்மத்தில் பார்த்ததில்லை! பகவத் கீதையைப் பாராயணம் செய்பவனால்கூட அப்படித் தன்னலம் மறந்தவனாக இருக்க முடியாது!" என்றான் வீரசேகரன் வியப்புடன்.

"தம்பி! அது என் தியாகமல்ல; அதுவும் என் சுயநலந்தான்! ஏதோ இரண்டு அசட்டுக் குடியானவர்கள் பேசிய பெரிய புராணப் பரிபாஷையை வைத்துக் கொண்டு பாண்டிய இளவரசன், மீனாட்சியம்மன் கோயிலில் பதுங்கியிருக்கிறான் என்று பெரிய புராணத்திற்குப் புது அர்த்தம் சொல்லிவிட்டேன். ஒருவேளை அந்த அர்த்தம் தவறாக இருந்தால் நான் என் மாபெரும் படை வீரர்களோடு போய்க் கோயிலை முற்றுகையிடும் போது அங்கே பாண்டிய இளவரசனின் வாடையே இல்லாதிருந்தால், அந்த அவமானத்தை என்னால் சகிக்க முடியுமா? கிழவர் சம்புவராயர் அந்த அவமானத்தை அனுபவித்தால் நான் இரட்டிப்புச் சந்தோஷமடைவேன்!"

''இல்லை. பாண்டிய இளவரசன் நிச்சயம் கோயிலில்தான் பதுங்கியிருப்பான். பெரிய புராண பரிபாஷையில் அந்த இரண்டு குடியானவர்களும் பேசியபடியே, இளவரசனைக் கோட்டையை விட்டு வெளியேற்றி அனுப்பிவிட இன்றிரவு ஓர் இரகசிய முயற்சி நடக்கிறது என்பதிலும் சந்தேகமில்லை. நேற்று நான் குசவப்பாளையம் தெரு வழியாக நடந்து வந்தபோது இரு பாண்டிய நாட்டுச் செம்படவப் பெண்கள், 'சின்னமீன் சிக்கிக் கொண்டு விட்டதடி; ஆனால் கொஞ்சம் ஏமாந்தாலும் கையைவிட்டு நழுவி விடும்' என்று சிலேடையாகப் பேசிக்கொண்டு போனார்கள். அதன் அர்த்தம் இப்போதுதான் எனக்குப் புரிகிறது. அதனால் பாண்டிய இளவரசன் கோயிலில் இருக்கிறான். படை வீரர்களோடு போனால் அவன் சம்புவராயரின் கையில் சிக்கிக்கொண்டு விடுவான்."

"வீரசேகரா, இங்கே கொஞ்சம் உன் புத்தியை உபயோகி!... பாண்டிய இளவரசன் கோயிலில்தான் பதுங்கியிருப்பான் என்று வைத்துக் கொண்டாலும் நான் என் வாள் வீரர்களைத் திரட்டிக் கொண்டு கோயிலை அடைவதற்குள், திருஞானசம்பந்தர் உருவத்தில் பதுங்கியிருக்கும் பாண்டிய இளவரசன் வேறு அவதாரம் எடுத்து இந்த மதுரையை விட்டே மாயமாய் மறைந்து போயிருந்தால் என் நிலை என்னவாகும்? இந்த ஜனநாதன் ஒரு காரியத்தைச் சாதிக்க நினைத்து வெறுங்கையாகத் திரும்பிய கதை எங்கள் காடவராய சரித்திரத்திலேயே கிடையாது. அதனால் நிச்சயமாகப் பலன் கிடைக்குமென்று சந்தேகமறத் தெரிந்தால்தான் நான் நேரில் போவேன். இல்லாவிட்டால் அதன் பலாபலன்களை அனுபவிக்கும் பெருமையை இன்னொருவனுக்கு விட்டுவிடுவேன். இப்போது பார்... பாண்டிய இளவரசனைப் பிடிக்கப் போய், பிடிக்க முடியாமல் கிழவர் சம்புவராயர் அசட்டுப் பட்டம் கட்டிக் கொண்டாரானால் அவருடைய அந்தஸ்து என்னைவிட ஒரு படி கீழே இறங்கிவிடும்!"

''ஒருவேளை அவர் பாண்டிய இளவரசனைப் பிடித்து விட்டால்...?"

"அவர் என் அறிவுக்கு என்றென்றும் அடிமையாகி விடுவார். கிழவர் சம்புவராயர் என் அறிவைக் கண்டு மயங்கி என் இஷ்டம் போல் உபயோகப்படுத்தும் என் கூர்மையான ஆயுதங்களில் ஒன்றாக மாறிவிடுவார்!"

"அந்தக் கிழவரின் சிநேகம் உன்னைப் போன்ற மகாசூரனுக்கு அவ்வளவு அவசியமானதா?"

"என் சுயநலத்திற்கு அக்கிழவரின் சிநேகம் அவசியம் தேவைப்படுகிறது! வீரசேகரா, இப்போது சோழநாட்டை அரசாளும் நம் குலோத்துங்கச் சோழச் சக்கரவர்த்தி துரதிர்ஷ்டவசமாக நம்மைப் போல் ஒரு வாலிபனாக இருந்தாலும், அரச சபையைக் கிழவர்கள் தான் அதிகம் ஆக்கிரமித்துக் கொண்டு அட்டகாசம் செய்கிறார்கள். இனம் இனத்தோடுதான் சேரும் என்பது போலக் கிழடுகள் கிழடோடுதான் சேரும். சம்புவராயரை என் கைக்குள் போட்டுக் கொண்டு, இந்த ஒரு கிழட்டை ஆட்டினால் மற்றக் கிழடுகளும் சேர்ந்து கொண்டு, தாளம் போடும். மேலும் சம்புவராயர் வம்சமே அரச பரம்பரையோடு அதிகத் தொடர்பும் செல்வாக்கும் உள்ளது. இந்தக் கிழவர் சம்புவராயர் இருக்கிறாரே, இவர் அத்திமல்லர் என்ற பட்டம் பெற்ற யானைப் படைத் தலைவர். சீயமங்கலத்தி லுள்ள கோயிலுக்கு ஏராளமான நிலங்களை இறையிலி யாகத் தானங் கொடுத்துப் பரமபக்தர் என்ற வேஷமும் தரித்திருக்கிறார். ஆக இவர் கையில் ஏராளமான யானைகளும் அடியார் படைகளும் இருக்கின்றன. இவருடைய சிநேகத்தை அடைவதற்காகப் பாண்டிய இளவரசனைப் பிடிக்கும் பெருமையை நான் இவருக்கு லஞ்சம் கொடுக்கிறேன்! சின்ன மீனை இரை கொடுத்துத்தான் பெரிய மீனை நம் வலையில் சிக்க வைக்க வேண்டும்!... இல்லையா, தம்பி?"

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த வீரசேகரன் சட்டென்று, "நாம் சின்ன மீனை மட்டுமல்ல; பெரிய மீனையும் பிடித்துவிடலாம். மீனக் கொடியோனான வீரபாண்டியனைத்தான் இன்றே பிடித்துவிடலாம் என்று சொல்லுகிறேன். அவன் கோட்டை வாசலின் வெளியே தன் மூத்த மகனுக்காக இன்றிரவு காத்திருப்பான்!" என்றான்.

அவனை ஜனநாதன் கூர்ந்து பார்த்தான்.

"இந்த அதிசயத்தை எப்படித் தம்பி கண்டு பிடித்தாய்?" என்று ஜனநாதன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"அதே பெரிய புராணப் பரிபாஷையைக் கொண்டு தான்! கோட்டைக்கு வெளியே திருஞானசம்பந்தரின் இரகசிய வருகையை எதிர்நோக்கித் திருநாவுக்கரசு சுவாமிகள் தம் உழவாரப் படையுடன் காத்திருப்பார் என்று குடியானவர்கள் பேசிக்கொண்டார்களே; திருநாவுக்கரசு சுவாமிகள் வேறு யாருமல்ல. திரிபுவன சக்கரவர்த்திகள் வீரபாண்டியத் தேவர்தான்! செவ்வாக்குள்ள சொல்லரசரான திருநாவுக்கரசருக்கு அப்பர் சுவாமிகள் என்று மற்றொரு பெயருமுண்டு. ஆளுடைய பிள்ளையாரின் அப்பாவான வீரபாண்டியனைத் தான் அவ்வாறு குடியானவன் இரகசியமாகக் குறிப்பிட்டிருக்கிறான். தலயாத்திரையின் போது மருள்நீக்கியார் கூடப் போவார் என்பது அப்பருக்கு மருள்நீக்கி என்ற மற்றொரு பெயரும் இருப்பதால்தான்" என்றான் வீரசேகரன் தன் அறிவின் திறமையைத் தானே வியந்துகொண்டு.

ஜனநாதன் அவனை நோக்கி, "தம்பி! பூவோடு சேர்ந்த நாரும் மணக்கும் என்பதுபோல் நீயும் என்னோடு சேர்ந்து புத்திசாலியாகி விட்டாய்! ஆனால் வீர வைணவனான உனக்குச் சைவர்களின் பெரிய புராணத்தில் இவ்வளவு பரிச்சயம் இருக்கக்கூடாது!" என்று சிரித்தான்.

வீரசேகரனோ மேலும் தன் புத்தி சாதுரியத்தைக் காட்டத் தொடங்கினான்:

"வீரபாண்டியன் தன் ஆட்களுடன் கோட்டையின் வெளியே எந்த வாசற்புறம் காத்திருக்கிறான் என்பதையும் கண்டுபிடித்து விடலாம்! படகோட்டிச் சாமியாரும் பாலமுருகக் கடவுள் வேஷத்தில் ஒரு சிறு பையனும் இம் மதுரைக் கோட்டையை விட்டுத்

தந்திரமாக வெளியேறிய நாள்முதலாக, எந்தப் பஜனைக் கோஷ்டியையும் எந்தவித முகாந்தரத்தைக் கொண்டும் கோட்டைக்கு வெளியேயோ உள்ளேயோ விடக்கூடாது என்று வாசற் காவலருக்கு நாம் கடும் கட்டளை பிறப்பித்திருக்கிறோம். இதனால் பாண்டிய இளவரசன் திருஞானசம்பந்தர் வேஷத்தில் கோட்டையைவிட்டுப் போவதென்றால் உள்ளேயும் வெளியேயும் உள்ள அத்தனை காவற்காரர்களையும் இரகசியமாகக் கொன்று விட்டுக் கதவைத் திறந்து கொண்டுதான் போகமுடியும்! நாமோ இந்த மதுரைக் கோட்டையின் நான்கு வாசற் புறங்களிலும் பெரும் முற்றுகை நடந்தாலும் சமாளிப்பதற்குத் தயாராய்ப் பலத்த காவல் வைத்திருக் கிறோம். இந்த நான்கு வாசல்களின் வழியாகவும் திருஞானசம்பந்தர் வெளியேற முடியாது! ஆனால் வடக்கு மதிற்சுவரின் தலைவாசலுக்கு அறுநூறு அடி தள்ளி ஒரு சிறு இடுக்குக் கதவு இருக்கிறது. நம்முடைய தூதர்களோ ஒற்றர்களோ வேலையாட்களோ, ஓரிரு ஜனங்களோ அடிக்கடி வெளியே போய் வருவதற்குச் சௌகரியமாக அந்தச் சிறு வாசலை உபயோகப்படுத்தி வருகிறோம். அது ஒரே சமயத்தில் இருவருக்கு மேல் நுழைய முடியாதபடி மிகவும் குறுகிய வாசலை உடையதால், அங்கே நாம் அதிகமாகக் காவல் வைக்க வில்லை. ஆக, அந்தச் சிறு வாசலின் வழியேதான் திருஞானசம்பந்தர் வெளியேறச் சிந்திப்பாராகையால் அதன் வெளிப்புறம் திருநாவுக்கரசர் தம் உழவாரப் படையுடன் காத்திருப்பார் என்பது நிச்சயம். நாம் இப்போது நம் படைகளைத் திரட்டிக்கொண்டு போனால் வெளியே நிற்கும் வீரபாண்டியனைப் பிடித்து விடலாம்" என்றான் வீரசேகரன் தானும் வேடிக்கையாகவும் திறமையாகவும் பேசிவிட்ட பெருமையோடு.

ஜனநாதன் அவனை நோக்கி, "தம்பி! நீ மிகவும் அவசரப்படுகிறாய்! பெரும்படை திரட்டி நீ ஆரவாரச் சப்தத்துடன் போகும் வரை வீரபாண்டியன் வெளியே காத்திருப்பானா? அவ்வளவு தூரம் அவன் முட்டாளுமல்ல; உன்னோடு போரிட வந்தவனுமல்ல!" என்றான்.

"அப்படியானால் வீரபாண்டியனை இன்றிரவு நம் வலையில் சிக்கவைக்க வழி?"

"அது மிகவும் சுலபம், நீ புத்திசாலியாகவும் பொறுமைசாலியாகவும் இருந்தால்! இங்கே கவனி: கோயிலுக்குள்ளிருக்கும் பாண்டிய இளவரசனை, அதாவது திருஞானசம்பந்தரை இந்நேரம் நம் கிழவர் சம்புவராயர் எப்படியும் பிடித்துவிடுவார்! ஆனால் இளவரசன் அகப்பட்டுவிட்டான் என்ற செய்தி வெளியே ஒரு ஈ காக்கைக்குக் கூடத் தெரியாதபடி மிகவும் இரகசியமாக வைத்திருப்போம். இளவரசனைத் திருஞானசம்பந்தர் வேஷத்தில் ஒரு சிறு கோஷ்டியுடன் மூன்றாவது சாமத்துக்குப் பிறகுதான் கோட்டையை விட்டுக் கடத்த வேண்டுமென்பது எதிரிகளின் சதித் திட்டம். ஏனெனில், உள்ளிருந்து வரும் திருஞானசம்பந்தர் கோஷ்டியும் வெளியே காத்திருக்கும் திருநாவுக்கரசர் கோஷ்டியும் எண்ணிக்கையில் குறைவாக இருந்தால்தான் நமக்குச் சந்தேகம் ஏற்படாமலிருக்கும். அப்போது அச்சிறு வாசலிலுள்ள நம் காவற்காரர்களின் எண்ணிக்கையும் அவர்களைவிடக் குறைவாயிருக்க வேண்டும்! அதற்கு எதிரிகளுக்குச் சௌகரியமான நேரம், மூன்றாவது சாமந்தான். அது போக்குவரவு அதிகமில்லாத நேரமாகையால் சிறு வாசலில் உள்ளும் புறமும் நம்முடைய காவற்காரர்கள் மிகவும் குறைவாகத் தானிருப்பார்கள். அதிலும், உள்ளேயிருக்கும் நம் காவற்காரர்கள் மூன்றாவது சாமத்தில் நன்றாகத் தூங்கி வழிவார்கள்; வெளியிலுள்ள காவற்காரர்களோ வயல்காட்டின் புறம் புதுக்காதலிகளோடு இரகசியமாகப் பொழுது போக்கிக்கொண்டிருப்பார்கள்!... ஆகவே, திருஞானசம்பந்தரை எப்படிக் கடத்த எதிரிகள் திட்டமிட்டிருக்கிறார்களோ, அதன் பிரகாரமே அணுவளவும் பிசகாதபடி, நாம் வேறொரு சிறுபயலைத் திருஞானசம்பந்தர் வேஷத்தில் முத்துப் பல்லக்கில் உட்கார வைத்து மூன்றாவது சாமத்தில் கொண்டுபோய்க் கோட்டை வாசலின் உட்புறம் நிறுத்துவோம். வெளியே நிற்கும் அப்பர் சுவாமிகள் கதவு திறக்கப் பாடுவார். அந்தத் தேவாரக் குறிப்பு கேட்டதும் நாமும் நம்

திருஞானசம்பந்தரைக் கொண்டு கதவு சாத்தப் பாடும்படி சங்கேத ஒலிகளைக் கிளப்புவோம். உடனே வெளியே நிற்கும் அப்பர் சுவாமிகள் நம் காவற்காரர்களைக் கொன்றுவிட்டுக் கதவைத் திறப்பார். உடனே நீ உன் பெரும் படையோடு வீரபாண்டியனின் கோஷ்டியைச் சுற்றி வளைத்துக் கொண்டு சுலபமாகப் பிடித்துவிடலாம்! அந்த எதிர்பாராத நிலையில்தான் வீரபாண்டியன் உன் கையில் சிக்குவான்! ஆனால் படை திரட்டும்போது எதற்கு என்று சொல்லாதே! வெளியே ஏதோ ஓர் அயலூர் முற்றுகைக்குப் படை கிளம்புகிறது என்று பொய் வதந்தியைக் கிளப்பிவிடு. வெளியே நிற்கும் வீரபாண்டியனைப் பிடிப்பதற்காகத்தான் இவ்வளவு மும்முரமும் என்பது என்னையும் உன்னையும் தவிர வேறு எந்தப் பிராணிக்கும் தெரியக்கூடாது! தெரிந்தால் வீரபாண்டியனுக்கு எச்சரித்து விடுவார்கள்! நீ படை திரட்டுவதற்குள் அவன் ஓடிப் போய்விடுவான்! கோட்டைக்குள் மூத்த மகன் சிக்கிக்கொண்டதையும் பொருட்படுத்தாமல் ஓடியே போய்விடுவான்!" என்றான் ஜனநாதன்.

வீரசேகரன் வியப்பும் நன்றியும் பொங்க ஜனநாதனின் சூழ்ச்சித் திறமையை வெகுவாகப் புகழ்ந்தான்.

"தம்பி! சுயநலவாதிக்குச் சூழ்ச்சித் திறமை இருப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை! ஆத்மவாதிபோல் உணர்ச்சிகளைக் கொன்று இருதயத்தைத் துண்டாக அறுத்து வைத்து விட்டால், அறிவு வெகு கூர்மையாக வேலை செய்யும்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"ஜனநாதா! உன் அறிவின் திறமையால் வீரபாண்டியனின் மூத்த மகனை நம் கிழவர் சம்புவராயர் இந்த முதற் சாமத்தில் இந்நேரம் சிறை பிடித்து விடுவார். நான் மூன்றாவது சாமத்தில் வீர பாண்டியனைச் சிறைபிடித்து விடுவேன்! இன்றிரவுக்குள் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் எங்கள் கையில் சிக்கிக்கொண்டு விடுவார்கள்!" என்றான் வீரசேகரன் அளப்பரும் ஆனந்தத்துடன்.

இவ்வளவையும் பாழடைந்த காளி கோயிலின் உள்ளிருந்து ஒற்றுக் கேட்டுக் கொண்டிருந்த ஊர்மிளாவுக்குப் பிரக்ஞை தடுமாறியது!

## அத்தியாயம் 10

### சம்புமாலி வதைப்படலம்

*'நன்று நன்று உன் கருணை!' என்னா*
*நெருப்பு நகை நக்கான்.*

**கம்ப ராமாயணம்**



றுபடி ஊர்மிளாவுக்குச் சுயநினைவு வந்தபோது, காளி கோயிலின் உட்புறம் மூடிய கதவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தான் பதுமைபோல் நிற்பதையும், தன் பின்னால் முரட்டுக் கபாலிகளின் ஆந்தை விழிகள் இருட்டில் பயங்கரமாக மின்னுவதையும் அவள் உணர்ந்தாள்.

காளி கோயிலின் வெளிப்புறமிருந்து, மூடப்பட்ட கதவருகில் ஜனநாதனும் வீரசேகரனும் இன்னும் பேசிக் கொண்டிருக்கும் குரல்கள் கேட்டன. ஊர்மிளா தனக்கு ஒரு கணந்தான் பிரக்ஞை தடுமாறியிருக்குமென்றும், அவர்களது சம்பாஷணையை ஒற்றுக்கேட்டு வந்ததில் அதிகம் விட்டுப்போயிருக்காதென்றும் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். மறுபடி சாவித்

துவாரத்தின்மீது காதை வைத்து வெளியே நடக்கும் உரையாடல்களை உற்றுக் கவனிக்கத் தொடங்கினாள்.

வெளியே நின்ற ஜனநாதன் ஒரு சிறு சிரிப்புடன், "தம்பி! இப்போது நாம் பேசிக்கொண்டிருப்பது யார் காதில் விழுந்தாலும் காரியம் கெட்டுவிடும்!" என்றான்.

"ஆமாம், ஆமாம்! நாம் பேசிக்கொண்டிருப்பதை ஒற்றுக் கேட்பவர்கள் உடனே ஓடிப்போய்க் கோட்டைக்கு வெளியே திருநாவுக்கரசர் கோலத்தில் வரப்போகும் வீரபாண்டியனுக்கு எச்சரித்து விடுவார்கள். மீனாட்சியம்மன் கோயிலுக்கும் ஓடித் திருஞானசம்பந்தர் கோலத்திலிருக்கும் இளவரசனையும் காப்பாற்றி விடுவார்கள்! வீரபாண்டியனைப் பிடிக்கும் என் முயற்சி மட்டுமல்ல, இளவரசனைப் பிடிக்கும் கிழவர் சம்புவராயரின் காரியமும் கெட்டுப் போகும்!" என்றான் வீரசேகரன்.

"இல்லை, தம்பி! உன் காரியம்தான் கெடுமே தவிர, சம்புவராயரின் கைங்கரியத்துக்கு எந்தவிதப் பழுதும் ஏற்படாது! ஏனெனில் இந்நேரம் கிழவர் சம்புவராயர் மீனாட்சியம்மன் கோயிலை அடைந்து அந்த வீரபாண்டியனின் மூத்த குமாரனைப் பிடித்திருப்பார். இனி யாரும் அவனைக் காப்பாற்றவே முடியாது! ஆனால் நீ வீரபாண்டியனைப் பிடிக்கப் போவதோ மூன்றாம் சாமத்தில்! இப்போதோ முதற்சாமந்தான் ஆகிறது! இதற்கு மத்தியில் ஒருமுறை நன்றாகத் தூங்கியெழுந்த பிறகுகூட வீரபாண்டியனை எச்சரிப்பதற்குப் போதுமான அவகாசம் இருக்கிறது!" என்றான் ஜனநாதன் சிரித்துக்கொண்டே.

"ஆமாம்! நாம் பேசிக்கொண்டிருப்பதை யாராவது ஒற்றுக் கேட்டால் என் காரியம் மட்டும்தான் கெடும்! முதற் சாமததிலே ஓடிப்போகும் வீரபாண்டியனைப் பிடிக்க மூன்றாவது சாமத்தில் பெரும்படை திரட்டிப் போய் வெறுங் கையனாகத் திரும்பி வந்தால் அதைவிட எனக்குப் பெரும் இகழ்ச்சி வேறெதுவுமில்லை! ஆகையால் தயவுசெய்து இரைந்து பேசாதே, ஜனநாதா! மெல்லவே பேசு, ஒருவேளை இந்தக் காளி கோயிலுக்குள்

ஊர்மிளாவோ அல்லது வேறு யாராவதோ நாம் பேசுவது அனைத்தையும் ஒற்றுக் கேட்டுக்கொண்டிருக்கலாம்'' என்றான் வீரசேகரன் இரகசியமான குரலில்.

"வீரசேகரா! இந்தப் பாழடைந்த காளி கோயிலுக்குள் காளி விக்ரஹத்தையும் புழு பூச்சிகளையும் தவிர வேறு எந்த ஜந்துவும் தங்கியிருக்க முடியாது! புழு பூச்சிகளுக்கோ நம்முடைய மனித பாஷை புரியாது! தெய்வ விக்ரஹங்களுக்கோ, அர்ச்சனையில் தேவ பாஷை ஒன்றுமட்டும் புரியுமே தவிர, நம்முடைய தமிழ் பாஷை புரியாது! இங்கு வெகு காலமாக அர்ச்சனையும் பூஜையுமில்லாமலிருக்கும் மஹா காளிக்கோ நம் தமிழ் பாஷை மட்டுமல்ல, தேவ பாஷைகூட மறந்து போயிருக்கும்!'' என்று ஜனநாதன் கலகலவென்று சிரித்தான்.

"அப்படியானால்...?"

"தம்பி! நாம் பேசிக்கொண்டிருப்பதை யாராவது ஒற்றுக் கேட்டுக்கொண்டிருப்பார்களென்று கடுகளவும் சந்தேகப்படாதே! நான் ராஜசபைகளில் இரைந்து கத்திப் பழக்கப்பட்டவனாகையால் எனக்கு மெல்லப் பேச வராது!" என்று ஜனநாதன் விளையாட்டாய் இரைந்து பேசத் தொடங்கினான்.

வீரசேகரன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''தம்பி! என்ன தீவிரமாகச் சிந்திக்கிறாய்? கோட்டைக்குள்ளிருந்து ஒரு நபர் யாருக்கும் சந்தேகம் எழாதவண்ணம் வெளியே நிற்கும் வீரபாண்டியனை எப்படி எச்சரிக்க முடியும் என்று சந்தேகிக்கிறாயல்லவா? எப்படி எச்சரிக்க முடியும் என்பதற்கு வழி சொல்லுகிறேன், கேள்!... நீ குறிப்பிட்ட வடக்கு மதிற்சுவர் சிறு வாசலின் அருகே ஒரு பிள்ளையார் கோயிலும் ஒரு பெரிய அரச மரமும் இருக்கின்றன. அந்த அரச மரத்தின் மீதேறித் தீப்பந்த வெளிச்சத்தை ஆட்டினால் வெளியே இருக்கும் எதிரிகள் கோட்டைக்குள்ளிருந்து அபாயச் செய்தி வருகிறதென்பதைத் தெரிந்துகொள்வார்கள். தமிழ்

பாஷையின் உயிர்மெய் எழுத்துக்கள் முப்பதையும் தீப்பந்த வெளிச்சத்தை முப்பது விதங்களாக ஆட்டிக் காண்பிப்பதன்மூலம் சகலவிதமான செய்திகளையும் பரிமாறிக் கொள்ளலாம். இவ்வாறு எழுத்தாணியும் ஏடும் இல்லாமல் தீவட்டி வெளிச்சத்தை ஆட்டிக் காண்பிக்கும் விதங்களினாலே ஒரு செய்தியை உணர்த்திவிடும் பாஷா ஞானமும் சங்கேதக் குறிகளும் வீரபாண்டியனின் கட்சியைச் சேர்ந்த அனைவருக்கும் தெரியும்!" என்றான் ஜனநாதன் வழக்கமான புத்தி திட்சண்யத்துடனும் விஷமச் சிரிப்புடனும்.

''அவ்வாறு கோட்டைக்குள்ளிருந்து தீவட்டி வெளிச்சத்தை ஆட்டிக் காண்பித்து எச்சரிக்கலாம் என்று வைத்துக்கொள்ளலாம். ஆனால் மூன்றாவது சாமத்திற்குத் தேவையான வீரபாண்டியன் இந்த முதற் சாமத்திலேயே கோட்டைக்கு வெளியிலிருப்பானா?"

"இருக்க மாட்டான்! உன்னையும் என்னையும்போல் வேலையில்லாமலிருக்க அவன் அவ்வளவு தூரம் சோம்பேறியல்ல! வீரபாண்டியன் மூன்றாவது சாமத்தில் குறிப்பிட்ட நேரத்திற்குச் சற்று முன்புதான் கோட்டை வாசலுக்கு வருவான். ஆனால் அவனுடைய மற்ற ஆட்கள் இப்போதுமுதலே தயாராகக் கோட்டைக்கு வெளியே புல்லறுத்துக் கொண்டிருப்பார்கள்! இரவுக் கூலிகள் முதற் சாமத்திலிருந்தே புல்லறுக்கத் தொடங்குலது வழக்கமாதலால், நம் வெளிவாசல் காவலருக்குச் சந்தேக மேற்படாமலிருக்க, இப்போது முதலே வீரபாண்டியனின் ஆட்கள் இரவுக் கூலிகள் போல் புல்லறுத்துக் கொண்டிருப்பார்கள். மூன்றாலது சாமத்தில் அவர்களுக்குக் கூழ் கொண்டு வரும் கிழட்டுத் திருநாவுக்கரசு சுவாமிகளாய் வீரபாண்டியன் மட்டும் வருவான். இதனால் இப்போது யாராவது கோட்டைக் குள்ளிருந்து தீப்பந்த வெளிச்சத்தை ஆட்டிக் கோட்டைக்கு வெளியே இருக்கும் இரவுக் கூலிகளை எச்சரித்துவிட்டால், வீரபாண்டியன் நம் கோட்டை இருக்கும் திசைக்கே வராமல் திரும்பிப் போய் விடுவான்!"

"அதனால் நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்!"

"சரி, இப்போதே கிளம்பிப் போ, வீரசேகரா! இந்த முதற் சாமத்திலேயே நீ படை திரட்ட ஆரம்பித்தால்தான் தூங்கி வழியும் நம் போர்வீரர்கள் மூன்றாவது சாமத்திற்குள்ளாகவாவது உடுப்புகளை அணிந்துகொண்டு அணிவகுப்புக்குத் தயாராவார்கள்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

வீரசேகரன் பெரிய இலட்சியத்தில் ஈடுபடப்போகும் வீர உணர்ச்சியுடன் நிமிர்ந்து நின்றான்.

ஜனநாதன் அவனை நோக்கி, "வீரசேகரா! நீ அரசாங்கத்தின் சகலவிதமான படைகளையும் அழைத்துச் செல். தேவைப்பட்டால் என் வாள் படையையும் கூட்டிச் செல். அதோடு, என் மாளிகையில் உன்னுடைய வீரவாள் இருக்கிறது! நீ ஊர்மிளாவைத் திருப்பி ஒப்படைக்கும்வரை அடைமானமாய் உன் வீரவாளை நீ காவற்காரர்களிடம் கொடுத்துவிட்டு வந்தாயே, நான் காவற்காரர்களை ரகசியமாகக் கொன்றுவிட்டு அந்த வாளை மீட்டு வந்து என் மாளினகயில் வைத்திருக்கிறேன்! அதையும் எடுத்துக் கொண்டு போ! உன்னுடைய வீரசரித்திரத்தை எழுத இந்தச் சந்தர்ப்பத்திலாவது உன் வாள் உபயோகப்படட்டும்!" என்றான் ஜனநாதன்.

"ஏன், நீயும் என்கூட வரவில்லையா? வீர பாண்டியனைப் பிடித்துச் சரித்திரப் பிரசித்தி அடையும் அரிய சந்தர்ப்பம் இது! நம் சோழநாட்டு வீர சரித்திரத்திலும் இந்தப் பாண்டிய நாட்டு அரசியல் சரித்திரத்திலும் அதி முக்கியத்துவம் பெறப் போகும் பொன்னாள் இது! நம்முடைய லட்சிய யாத்திரையின் துருவ நட்சத்திரத்தை நாம் எட்டிப் பிடிக்கப் போகும் மகத்தான இரவு! இந்த அரிய முயற்சியில், வீரபாண்டியனைப் போரிட்டுப் பிடிக்கும் மகத்தான சாதனையில் நீயும் ஈடுபடப் போவதில்லையா?" என்று வீரசேகரன் இலட்சியப் பெருமூச்சுடன் கேட்டான்.

"இல்லை, தம்பி! நான் மற்றவர்களைத்தான் ஆயுதங்களாக உபயோகப்படுத்துவேனே தவிர நானே

ஆயுதமாக மாறுவதில்லை! நான் இங்கேயே இருக்கிறேன். வீரபாண்டியனை நீயும், மூத்த மகனைக் கிழவர் சம்புவராயரும் இந்த வழியாகத்தானே பிடித்துக்கொண்டு வரவேண்டும்? அப்போது அந்தக் கண்கொள்ளாக் காட்சியை என் கண்ணால் பார்த்துக் கொள்கிறேன்!"

"நீ உன் மாளிகைக்குக் கூட வரவில்லையா?"

"இல்லை! இங்கே ஜிலுஜிலுவென்று திறந்த வெளிக்காற்று வீசுகிறது! இந்தக் காளி கோயில் திண்ணையிலேயே கொஞ்சநேரம் தூங்குகிறேன்! நீ வீரபாண்டியனைப் பிடித்துக்கொண்டு இந்த வழியாக வரும்போது என்னை எழுப்பிச் சொல்லிவிட்டுப் போ!" என்று ஜனநாதன் காளி கோயிலின் வெளித் திண்ணைமீது சாய்ந்து படுத்தான்.

"இன்றிரவுக்குள் நான் எப்படியும் வீர பாண்டியனைச் சிறைபிடித்து வீரப்புகழ் அடைந்து விடுவேன்! ஆனால் ஊர்மிளாவைத் தேடிக் கண்டுபிடித்து அரசாங்க விசாரணைக்கு ஆளாக்குவது என் முதல் கடமையல்லவா?" என்றான் வீரசேகரன்.

"தம்பி, கவலையுறாதே! ஊர்மிளாவைத் தேடிப் பிடிக்கும்படி சம்புமாலி என்ற முரடனை அனுப்பி யிருக்கிறேன்!" என்றான் ஜனநாதன்.

"சம்புமாலியா! அவன் கம்ப ராமாயணத்தில் வரும் ஒரு கதாபாத்திரமல்லவா? அநுமாரைக் கட்டிப் பிடித்து வரும்படி அனுப்பப்பட்ட ஒரு அசுரனல்லவா?" என்று கேட்டான் வீரசேகரன்.

"நான்தான் அந்த முரடனுக்குச் சம்புமாலி என்று பெயர் வைத்தேன்! நம் சோழதேசத்தில் இனிமேல்தான் ஒரு ராமாயணம் நடக்கப் போகிறது என்று சொல்லி வருகிறேனல்லவா? அதனால் நம் எல்லோரையும் அதன் கதாபாத்திரங்களாக ஆக்கி வருகிறேன்! சம்புமாலி இந்நேரம் ஊர்மிளா என்ற அந்தப் பெண் குரங்கைப் பிடித்து வந்து எங்காவது அடைத்து வைத்திருப்பான்!

இனி நான் சொன்னாலுங்கூட அரசாங்கச் சதிகாரியான அவளைத் தண்டிக்காமல் வெறுமனே விடமாட்டான்! அவ்வளவு தூரம் அவனுக்கு ராஜபக்தியும் தேசபக்தியும் முற்றிப் போயிருக்கிறது! அதனால் நீ அநாவசியமாகக் கவலைப்படவேண்டாம்!" என்றான் ஜனநாதன்.

"ஜனநாதா! இனி நம் சோழ தேசத்தில் நடக்கப் போகும் ராமாயணத்தில் உனக்கு என்ன கதாபாத்திரம்?" என்று விளையாட்டாகக் கேட்டான் வீரசேகரன்.

"தம்பி! என்னுடைய விஷமமான செய்கைகளைப் பார்த்துச் சிலர் என்னை அனுமார் என்று நினைக்கிறார்கள். என்னோடு அனுபவப்பட்ட பல அரசியல்வாதிகளோ என்னைக் கட்சிவிட்டுக் கட்சிமாறும் விபீஷண ஆழ்வார் என்று கருதுகிறார்கள். ஆனால் நான் பகிரங்க ராஜத்துரோகியாகி ஒருநாளும் வீரபாண்டியனிடம் சரணாகதி அடைந்து அவனுக்குக் காவடி தூக்கமாட்டேன். பாண்டிய சாம்ராஜ்யத்தை ஆழக் குழி தோண்டிப் புதைப்பதில் நான் முக்கிய கதாபாத்திரமாக இருப்பேன்!" என்றான் ஜனநாதன்.

வீரசேகரன் வியப்புடன் அவனைப் பார்த்துவிட்டு விடைபெற்றுக் கொண்டு வீரபாண்டியனைச் சிறை பிடிக்கப் படை திரட்டச் சென்றான்.

இவ்வளவையும் காளி கோயிலின் உள்ளிருந்து ஒற்றுக் கேட்டுக் கொண்டிருந்த ஊர்மிளா, பிரதிமைபோல் செயலற்று நின்றாள். உள்ளூர இருதயம்மட்டும் சோகச் சுழலில் இலேசாகத் துடித்துக் கொண்டிருந்தது. எவ்வளவு பயங்கரமான செய்திகளைக் கேட்டோம் என்று ஒன்றன்பின் ஒன்றாக நினைக்கும்போது அவளுக்குப் பிரக்ஞை தடுமாறிவிடும் போல் இருந்தது. உட்புறக் கதவின் தாழ்ப்பாளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கீழே விழுந்து விடாமல் நின்றாள்.

'சக்கரவர்த்திகள் வீரபாண்டியத் தேவரை எப்படியும் காப்பாற்றுவேன்! இங்கு ஒற்றுக் கேட்ட விஷயங்களை அவருக்கு அறிவித்து எப்படியாவது

எச்சரிக்கவேண்டும்!' என்று அவளது மிருதுவான உதடுகள் இன்னும் மிருதுவாக முணுமுணுத்தன.

கதவின் தாழ்ப்பாளைத் திறந்துகொண்டு சட்டென்று வெளியே ஓடிவிடலாமா என்று நினைத்தாள். ஆனால் வெளி மண்டபத்தின் திண்ணையில் ஜனநாதன் உருவிய வாளுடன் உட்கார்ந்திருப்பான் என்ற பிரமை தட்டியதும் அவளுக்கு ஒரு கணம் சப்த் நாடியும் ஒடுங்கிவிட்டது.

மெய்சிலிர்த்து வெடுக்கென்று திரும்பினாள். பின்னால் பூதம் போல் கபாலிகன் நின்றுகொண்டு அவளையே கண்கொட்டாமல் கவனித்தான். அவன் உயிரோடிருக்கும்வரை அவன் கையிலிருந்து தப்பிக் காளி கோயிலைவிட்டு அவள் வெளியேற முடியாது! அவன் உயிரையோ அவள் தன் மிருதுவான கையால் கொல்லவும் முடியாது! என்ன செய்வது என்று தெரியாமல் ஊர்மிளா திகைத்துக் குழம்பினாள். கோயிலினுள் சிறு அசைவோ சப்தமோ கேட்டாலும் வெளியே இருக்கும் ஜனநாதன் சந்தேகப்பட்டுக் கோயிலுக்குள் வந்து விடுவான்! பூதம் போன்ற கபாலிகன் கையிலிருந்தாவது தப்பி ஓடலாம். அந்த ஒல்லியான ஜனநாதனின் நரிக்கண்ணிலிருந்து தப்பவே முடியாது! ஊர்மிளா, தன் புடவையின் சிறு சலசலப்புக்கூட ஏற்படாதபடி மிகவும் ஒடுங்கி அசைவற்று நின்றாள்.

எங்கிருந்தோ இருட்டில் ஒரு சாக்குருவி கூவும் பயங்கர ஒலி வந்தது.

ஊர்மிளாவின் மெல்லிய தேகம் புல்லரித்தது! 'வீரபாண்டியத் தேவரை எச்சரிக்காவிடில் வீரசேகரன் கையில் சிக்கி உயிர் துறந்து விடுவார்' என்று உள்ளூரப் பொருமினாள். விம்மலின் சிறு ஒலிகூடக் கேட்காதபடி கண்ணீர் வடித்தாள்.

'வீரபாண்டியத் தேவர் சோழர்களின் கையில் சிக்கிவிடுவார். அவரது லட்சியம் அழிந்துவிடும்! பாண்டிய நாட்டின் மகிமை பெற்ற மன்னராய்ப் பட்டத்து யானை மீதேறிப் பவனி வரவேண்டியவர் கைகளில்

விலங்கிடப்பட்டுப் பாண்டிய நாட்டின் ஒவ்வொரு வீதியிலும் வேட்டையாடப் பெற்ற மிருகம்போல் நடத்திச் செல்லப்படுவார். தாழ்ந்த சாதியினரையும் உயர்ந்த சாதியினரையும் ஒரே மாதிரி வாரியணைக்கும் அந்த மன்னரின் கைகளில் விலங்கிடப்படும்!...' இவ்வளவும் ஊர்மிளாவின் கற்பனையில் ஓடவே அவள் புழுப்போல் துடித்தாள். கோட்டைக்குள்ளிருந்து மூத்த மகன் திருஞானசம்பந்தர் வேஷத்தில் தப்பி வருவதை எதிர்நோக்கிக் கோட்டை மதிற்சுவருக்கு வெளியே இரகசியமாகக் காத்திருக்கப் போகிறார் வீரபாண்டியத் தேவர்! அவரை முன்னதாக எப்படியும் எச்சரித்துக் காப்பாற்ற வேண்டுமெனப் பரிதவித்தாள். அதற்காகத் தன் உயிரைப் பலியிடவும் சித்தமாயிருந்தாள். ஆனால் பாழுங்காளி கோயிலை விட்டு வெளியேறும் வகைதான் அவளுக்குத் தெரியவில்லை. நூறாயிரம் யோசனைகளும் செய்து பார்த்தாள். ஆனால் ஒன்றும் நடைமுறையில் பலனளிக்கக் கூடியதாய்த் தெரியவில்லை. உள்ளே இருக்கும் முரட்டுக் கபாலிகன், வெளியே படுத்திருக்கும் ஜனநாதன் இவ்விருவர்களையும் ஏமாற்றிச் செல்ல முடியாதே! காளி பிரசன்னமாகி அவ்விருவர்களையும் ஏககாலத்தில் விழுங்கிவிடக் கூடாதாவென்று, அது நடக்காத காரியமெனத் தெரிந்தும் நினைத்தாள். அசக்தியான நிலையில் பெண் உள்ளம் எதைத்தான் நினைக்காது?

விவரம் தெரியாத சிறு குழந்தைபோல் துறுதுறுவென்று காலம் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. சற்றுமுன் பொழுது போகவில்லையே என்று துடித்தவள் இப்போது பொழுது வீணாகப் போகிறதே என்று பரிதவித்தாள்.

முதற்சாமம் கழிந்து இரண்டாவது சாமம் ஆயிற்று.

வெளியே படுத்திருக்கும் ஜனநாதனிடமிருந்து குறட்டை விடும் சப்தம் வந்தது. பிறகு அதுவும் மெல்ல மெல்லத் தேய்ந்து நின்று விட்டது. குறட்டையைக் கூட மறந்து ஜனநாதன் நன்றாக அயர்ந்து தூங்குகிறான் என்பதை யூகித்துக் கொண்டதும் ஊர்மிளா

ஆனந்தமடைந்தாள். ஆனால் முரட்டுக் கபாலிகன் கண் கொத்திப் பாம்பு போல் விழித்துக்கொண்டு தன்னருகில் நிற்கிறானே! அவனை என்ன செய்வது? ஊர்மிளா புத்தபிரானை மனத்திற்குள் தியானித்தாள். 'சாதி வித்தியாசம் பாராமல் ஜீவஜந்துக்களுக்கும் அன்பு காட்டப் பிறந்த அண்ணலே, நீர்தான் அருள் போதம் தரவேண்டும்!' என்று புத்தர்பிரானை மனசுக்குள் உருவகப்படுத்தி அதே தியானத்தில் ஆழ்ந்துவிட்டாள்.

காளி கோயிலுக்கு வெளியே ஏதோ மாட்டுச் சதங்கை குலுக்கும் சப்தமும், இரண்டாவது சாமக்கோழி கூவுவதுபோல் விசித்திரமான ஓர் ஓசையும் கேட்டன. அதைத் தொடர்ந்து காளி கோயிலின் சிறு காற்று துவாரத்தின்மீது ஏதோ இரண்டு பித்தளைக் கலயங்களை டக்கென்று யாரோ வைத்துவிட்டுப் போகும் ஓசையும் உண்டாயிற்று.

கபாலிகன் அந்தச் சிறு ஜன்னலை நோக்கி ஆவலோடு ஓடினான். "நமக்கு இவ்வளவு நேரங் கழித்தாவது சாப்பாடு வந்ததே! அதோடு உன்னை என்ன செய்ய வேண்டுமென்ற செய்தியும் வந்திருக்கும்!" என்று ஆவலோடு முணுமுணுத்துக் கொண்டு ஓடியவன் சிறு ஜன்னலின் மீதுள்ள இரண்டு கலயங்களை எடுத்துப் பார்த்ததும், "செய்தி எதுவும் வரவில்லை! சாப்பாடுதான் வந்திருக்கிறது!" என்றான்.

"உனக்குப் பசியால் பிராணன் போகிறது! எனக்குக் கவலையால் பிராணன் போகிறது!" என்றாள் ஊர்மிளா எரிச்சலுடன் மெல்லிய குரலில்.

"பெண்ணே! உனக்குப் பசிக்கவில்லையா? அந்தி இருட்டியதும் பசியால் பிராணன் போகிறது என்று பதறினாயே!" என்றான் கபாலிகன்.

"இரையாதே! வெளியில் படுத்திருக்கும் ஜனநாதன் விழித்துக்கொண்டு விடுவான்!" என்றாள் ஊர்மிளா மெல்லிய குரலில்.

"இதோ, இரண்டு கலயங்களிலும் என்ன இருக்கிறது தெரியுமா?" என்று மெல்லிய குரலில் கபாலிகன் கேட்டான்.

"என்ன இருக்கும்? வழக்கம்போல் ஒரு கலயத்தில் உனக்கு உணவும் இன்னொரு கலயத்தில் எனக்கு உணவும் இருக்கும்! என்னை விட்டுவிடுவதானால் என் கலயத்தையும் நீயே விழுங்கிவிடு!" என்றாள் ஊர்மிளா எரிச்சலோடு.

"இல்லை, பெண்ணே! இத்தனை நாளும் நமக்கு விதவிதமான சைவ உணவுகளே வந்துகொண்டிருந்தன. இப்போது ஒரு கலயத்தில் ஆட்டு இறைச்சியும் இன்னொரு கலயத்தில் கள்ளும் வந்திருக்கிறது! இன்றுதான் என் ஆசைப்படி நல்ல சாப்பாடு சாப்பிடப் போகிறேன்!"

"உன் இஷ்டம்போல் சாப்பிடு!"

"ஆனால் உனக்கு?... பசியால் பிராணன் போகிறது என்றாயே?"

"நான் புத்தமதத்தைப் பின்பற்றுபவள்! ஆட்டு இறைச்சி சாப்பிடமாட்டேன்! நான் கண்ணை மூடிக் கொள்ளுகிறேன். நீயே எல்லாவற்றையும் விழுங்கிவிடு!"

"தாகமாய் இருக்கிறது என்றாயே, இதோ இந்தக் கலயத்திலுள்ள கள்ளையாவது கொஞ்சம் குடி!"

"வேண்டாம்! நான் கள் குடிக்கும் பெண்ணல்ல!"

"நீ இவற்றைச் சாப்பிடமாட்டாய் என்று தெரிந்து தான் இறைச்சியையும் கள்ளையும் மட்டும் அனுப்பி யிருக்கிறார்கள் போல் இருக்கிறது! அதாவது உன்னைப் பட்டினி போட்டுக் கொல்வது என்று முடிவு செய்திருக்கிறார்கள்!"

"நல்லது! அதனால் உன் கத்திக்குச் சிரமமில்லை! காளிக்கு ஆடு கோழிகளைப் போல் நரபலியாவதைவிடக் காளிமாதாவின் சந்நிதியில் உபவாசமிருந்து உயிர்விடுவது

எவ்வளவோ மேல்! பட்டினியில் சாகும்போது இந்தத் தேசத்திலுள்ள பல்லாயிரக்கணக்கான ஜனங்களில் நானும் ஒரு ஜீவன்தான் என்ற நிம்மதியோடாவது சாகலாமல்லவா?" என்றாள் ஊர்மிளா எரிச்சலுடன்.

கபாலிகன் இரண்டு கலயங்களையும் தன் முன்னால் வைத்து இறைச்சியையும் கள்ளையும் மாறி மாறிச் சாப்பிடத் தொடங்கினான். ஊர்மிளா வேறுபுறம் திரும்பி உட்கார்ந்து கொண்டு, 'வீரபாண்டியத் தேவரைக் காப்பாற்ற வேண்டுமே?' என்ற சிந்தனையில் கண்ணீர் வடிக்கத் தொடங்கினாள்.

சிறிது கணங்கள் கரைந்தன.

தொண்டையில் ஏதோ அடைத்துக் கொள்வதுபோல் ஒரு விசித்திரமான விக்கல் ஓசையும், 'ஹா!' என்ற பயங்கர ஒலியும் கபாலிகனிடமிருந்து கிளம்பி வந்தன.

ஊர்மிளா திரும்பிப் பார்த்தாள்.

கபாலிகன் மலைபோல் தலை மண்ணிடை விழ, விழுந்து கிடந்தான்! கண்கள் மேலே செருகிப் பிணம்போல் உடல் விறைக்கப் படுத்திருந்தான். சில கணங்களில் அவன் உடலெங்கும் நீலம் பாயத் தொடங்கியது

இறைச்சியும் கள்ளும் இருந்த இரண்டு கலயங்களிலும் கடும் விஷம் கலக்கப்பட்டிருந்தது. முரட்டுக் கபாலிகனுக்கு நஞ்சிட்ட இறைச்சியும் கள்ளும் வைத்துவிட்டுப் போனவர்கள் யாராயிருக்குமென ஊர்மிளா சிந்தித்தாள். தன்னைக் காப்பாற்றப் படகோட்டிச் சாமியாரான ஈழவராயர் வந்திருப்பார்; அவர்தான் இந்தச் சூழ்ச்சி செய்திருப்பார் என்று நினைத்தாள். அவள் முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது.

ஆனால் மரணத்தறுவாயில் பாம்புபோல் சீறிப் புழுப்போல் துடிக்கும் கபாலிகனைக் காணவே அவளுக்கு ஒருபுறம் பரிதாபமாகவும் இருந்தது.

அவனது உயிர் பிரியும் முகத்தைப் புரட்டி, "சாகப் போகிறாயே? இப்போதாவது சொல்! நீ யார்?" என்று கேட்டாள் ஊர்மிளா.

"நான்... சம்புமாலி...விஷம்!" என்று என்னவோ உளறினான். பயங்கரமாய்ச் சிரித்தான்.

ஊர்மிளாவைத் தேடிப்பிடிக்க ஜனநாதன் அனுப்பிய சம்புமாலியா இவன்? அல்லது சம்புமாலி வேறொருவனா? இந்தக் கபாலிகனிடமிருந்து அவளைக் கவர்ந்து செல்லச் சம்புமாலி விஷங்கலந்த உணவை அனுப்பிக் கொன்றுவிட்டான் என்று இவன் சொல்கிறானா? அப்படியானால் கபாலிகனைக் கொன்றுவிட்டுச் சம்புமாலி என்ற விஷப்பாம்பு காளி கோயிலின் வெளியே பயங்கரமாய்க் காத்திருப்பானோ? இவ்வாறெல்லாம் ஊர்மிளா நடுங்கினாள்.

"கபாலிகனே! சாகப் போகிறாயே, உண்மையைச் சொல். உன்னைக் காப்பாற்ற முயல்கிறேன்!" என்று மெல்லிய குரலில் அவன் காதருகில் கெஞ்சினாள் ஊர்மிளா.

"நன்றி! நன்றி! நல்ல கருணை!" என்று கபாலிகன் என்னவோ பாம்புபோல் சீறி உளறினான். மரணத்தின் கடைசிப் பிடியில் அவன் நெருப்புப் பொறி பறக்க ஒரு முறை பயங்கரமாய்ச் சிரித்தான்; பிறகு உயிரை விட்டு விட்டான்!

ஊர்மிளாவுக்குத் தடையாயிருந்த கபாலிகன் பிணமாகிக் கிடந்தான். ஆனால் வெளியே இருந்த ஜனநாதன்...?

பிணம்போல் நன்றாக அயர்ந்து உறங்குகிறான் என்பதற்கு அடையாளமாக வெளியிலிருந்து ஜனநாதனின் குறட்டைச் சப்தம் பெரிதாகக் கேட்டது.

விடுதலை பெறப்போகும் பறவைபோல், ஊர்மிளா ஆனந்தத்துடன் காளிகோயில் கதவின் உட்புறத் தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு மெல்ல வெளியே ஓடினாள்.

வெளித் திண்ணைமீது, கரடுமுரடான தரைமீது, ஜனநாதன் தன் தலைப்பாகையால் முகத்தைப் போர்த்திக் கொண்டு நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். இருளை ஊர்மிளா சுற்றுமுற்றும் ஊடுருவிப் பார்த்தாள். படகோட்டிச் சாமியாரான ஈழவராயனோ, சம்புமாலி என்ற பயங்கர மனிதனோ, வேறு எந்த ஆளின் அரவமுங்கூடக் காளி கோயிலின் அருகில் காணவில்லை!

காரிருளில் யாரோ அவள் பின்னாலிருந்து முந்தானையைப் பிடித்திழுக்கும் உணர்ச்சி தட்டியது. ஊர்மிளாவுக்கு ஒரு கணம் உயிரே போய்விட்டது போல் இருந்தது. வெடவெடவென்று மேனி நடுங்க மெல்லத் திரும்பிப் பார்த்தாள்.

வந்த வேகத்தில் அவள் முந்தானைக்குள் ஏதோ ஒரு மரக்கிளையின் நுனிதான் சிக்கிக்கொண்டு இழுத்தது. நிஜத்தைவிட வெறும் மனப்பிரமைதான் அதிகக் கோழைத்தனத்தைத் தருகிறது என்று நினைத்தாள். ஆனாலும் தெருவில் அப்பியிருக்கும் கன்னங்கரேலென்ற இருளும், சாக்குருவிகளின் ஓலமும், ஆந்தைகளின் அலறலும், காளி கோயிலின் சூலாயுதங்களும், இருளில் பேய்போல் தலைவிரித்தாடும் மொட்டை மரங்களும் அவளுக்கு அதிபயத்தை ஊட்டின. கண்ணை மூடிக்கொண்டு முன்னால் தாவி ஓடினாள்.

மறுகணம் ஏதோவொரு அதலபாதாளத்தில் சறுக்கிவிழும் உணர்ச்சி தட்டியது. உயிரோடிருக்கி றோமோ, இறந்துவிட்டோமோ என்று அவளுக்குத் திக்பிரமை உண்டாயிற்று. அவளுடைய இருகால்களையும் எழும்பவிடாமல் யாரோ அழுத்திப் பிடித்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. நன்றாக இருளை ஊடுருவிப் பார்த்த போதுதான் காளி கோயிலின் முன்னாலுள்ள பாழடைந்த கிணற்றுக்குள் வழுக்கி விழுந்து கிடப்பதையும், கிணற்றிலுள்ள சகதியும் பாசிகளும் அவளது கால்களைப் பிடித்துக் கொண்டிருப்பதையும் கண்டாள். தன் மெல்லிய உடம்பில் தன் முழுப் பலத்தையும் வரவழைத்துக் கொண்டு கிணற்றிலிருந்து

ஏறி வெளியே வந்தாள். அடுத்த கணமே கருவிழிகளை அகலவிரித்துக் கொண்டு குறுகலான ஓர் இருண்ட பாதையில் வேகமாக ஓடினாள்.

'வீரபாண்டியத் தேவரைக் காப்பாற்றப் போகிறோம்! அவரை எதிரிகளின் கையில் சிக்காமல் எச்சரித்து அனுப்புவதற்குப் போதுமான நேரம் இருக்கிறது!' என்ற எண்ணம் ஊர்மிளாவுக்கு ஒரு தனி வேகத்தைக் கொடுத்தது. அவள் நான்கு குதிரை வேகத்தைவிட மான்போல் மருண்டு துள்ளி ஓடிக்கொண்டேயிருந்தாள்!

## அத்தியாயம் 11

### பிரம்மாஸ்திரப் படலம்

'போர் அவர் அறிவுறாவகை மறைந்து அயன்தன்
வென்னற் போர்ப்படை விடுதலே நலமிது விதியால்'

**கம்ப ராமாயணம்**

மத்தியான நேரத்தில் எவனுக்கும் சற்று எரிச்சல் வருவது சகஜம். வீரசேகரனோ எல்லோர்மீதும் எரிந்து விழுந்துகொண்டிருந்தான். எதிரே விஷமச் சிரிப்புடன் நிற்கும் ஜனநாதன் மீதுதான் அவனுக்கு அதிகக் கோபம் வந்தது. ஆனால் அவனைத் தன் ஆருயிர்த் தோழனாகவும் இலட்சியப் புருஷனாகவும் மதித்து வந்ததால் வீரசேகரன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டான்.

"தம்பி! ஊமைக் காயம் பொல்லாதது. அதை அறுத்துவிட்டு மருந்து வைத்துக் கட்டவேண்டும்!" என்று ஜனநாதன் மெல்லச் சிரித்தான்.

"எனக்கு ஊமைக் காயம் எதுவும் ஏற்படவில்லை! முதல் சாமத்தில் ஓடிப்போன வீரபாண்டியனைப் பிடிக்க மூன்றாவது சாமத்தில் படைதிரட்டிச் சென்ற என் போர் வீரர்களுக்குக் கத்தியை உருவும் அவசியங்கூட ஏற்படவில்லை! நான் சுத்த வீரனாகையால் இந்த அவமானத்தை என்னால் சகிக்க முடியவில்லை! என் நெஞ்சில் இரத்தக் காயங்களுடன் படுதோல்வியடைந்து வெறுங் கையனாய்த் திரும்பியிருந்தாலும் எவ்வளவோ ஆனந்தமடைந்திருப்பேன்!"

"தம்பி! இந்த மதுரைக் கோட்டைக்குள் மீனாட்சியம்மன் கோயிலில் திருஞானசம்பந்தர் கோலத்தில் வீரபாண்டியனின் மூத்தகுமாரன் பதுங்கியிருக்கிறான் என்று மட்டுந்தான் நான் யூகித்தேன்! என் யோசனையின் பிரகாரம் கிழவர் சம்புவராயர் தம்முடைய கையாட்களின் மூலம் அந்தப் பாலகனை வெகு சுலபமாகச் சிறைபிடித்து விட்டார்! கோட்டைக்கு வெளியே திருநாவுக்கரசர் கோலத்தில் காத்திருப்பவன் வீரபாண்டியன் என்று நீதான் யூகித்தாய்! நீதான் நம் சோழ அரசாங்கத்தின் படைகளையெல்லாம் திரட்டிச் சென்று வெறுங்கையனாய்த் திரும்பி வந்திருக்கிறாய். அதற்காக உன் வேலைக்காரர்கள் முதல் உனக்குக் கத்திகள் செய்து கொடுத்தவனின் முப்பாட்டன் தலைமுறைவரை எரிந்துவிழுவது சுத்த அசட்டுத்தனம்! வேண்டுமானால் என்மீது எரிந்து விழலாம்! ஏனென்றால் நான் உன் ஆருயிர் நண்பன்!" என்றான் ஜனநாதன்.

"நான் வீரபாண்டியனைப் பிடிக்க முடியாது என்று உனக்கு அப்பொழுதே தெரியும்! என் முயற்சியை நீ தடுத்திருக்கலாம்!" என்றான் வீரசேகரன்.

"தடுத்திருந்தால், எங்கே எனக்குப் போட்டியாக முளைத்து விடுவாயோ என்ற பொறாமையால்தான் தடுக்கிறேன் என்று நீ நினைத்திருப்பாய்! தம்பி, நான்

அநாவசியமாகப் பிறர் முயற்சிகளில் தலையிடும் வழக்கமில்லை!"

"வீரபாண்டியனைப் பிடிக்கப் போகிறேன் என்ற ரகசியம், பாழடைந்த காளி கோயிலின் வெளித் திண்ணையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த நம்மிருவரையும் தவிர, வேறு யாருக்கும் தெரியாது! ஊர்மிளாவை என்னிடமிருந்து தூக்கிச் சென்ற முரட்டுக் கபாலிகன் அப்பாழடைந்த காளி கோயிலினுள் பிணமாகிக் கிடந்தான்! ஊர்மிளாதான் நாமிருவரும் பேசியதை ஒற்றுக் கேட்டு, கபாலிகனைக் கொன்றுவிட்டு ஓடிச் சென்று, கோட்டைக்குள்ளிருந்தவாறு வெளியே மாறு வேஷத்தில் நிற்கும் வீரபாண்டியனை எச்சரித்திருக்க வேண்டும்!"

"அவ்வாறானால் ஓர் அபலையின்மீது கொலைக் குற்றமும் சதிக்குற்றமும் விழுகின்றன!"

"ஊர்மிளா அப்பாழடைந்த கோயிலினுள்ளிருந்து கதவைத் திறந்துகொண்டு வெளியே ஓடிவர வேண்டு மானால், வெளித் திண்ணையில் படுத்திருந்த உன்னைத் தாண்டிக் கொண்டுதான் ஓடியிருக்க வேண்டும்! அப்போது நீ ஏன் ஊர்மிளாவைத் தடுத்து நிறுத்த வில்லை?" என்று கோபமாகக் கேட்டான் வீரசேகரன்.

"தம்பி! நம் அரசர்பிரானும் அரசாங்க சபையுங்கூட என்னிடம் கேட்கத் தயங்கும் கேள்விகளையெல்லாம் நீ கேட்கிறாய்! இந்த வாள் நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயனைக் கேள்வி கேட்க உனக்கு என்ன அந்தஸ்து அல்லது அதிகாரம் இருக்கிறது?"

"ஆருயிர்த் தோழன், அரசியலில் என் இலட்சிய புருஷன் என்ற உரிமையால்தான் கேட்கிறேன்!"

"தம்பி! அறிவில் எப்படி நான் சாணக்கியனோ, அப்படியே உறக்கத்தில் கும்பகர்ணன்! ஊர்மிளா என் தலையை மிதித்துக் கொண்டு என் உடம்பின்மீது ஏறி ஓடியிருந்தாலும் அது எனக்குத் தெரிந்திராது!"

"இவ்வளவு பெரிய படையை இரவின் மூன்றாவது சாமத்தில் ஏன் திரட்டிக் கொண்டு போனேன் என்று அரசாங்கம் என்னைக் கேட்டால் நான் என்ன சொல்வது?"

''இம் மதுரையை நம்மிடமிருந்து மீட்க வீரபாண்டியன் முற்றுகையிட்டால் எந்தச் சமயத்திலும் அதைச் சமாளிக்க நம் கையில் ஒரு பெரிய சோழியப் படை தயாராக இருக்கிறது என்று குடி ஜனங்களுக்குக் காட்டவே ராத்திரியில் திடுமென்று படைதிரட்டிச் சென்றதாக ஒரு பொய் சொல்லிவிடு! நடந்துபோன ஒரு விஷயத்தை நமக்கு ஏற்றவாறு சந்தர்ப்பம்போல் மாற்றித் திரித்துச் சொல்வதுதான் சரியான ராஜதந்திரமாகும்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"நான் சுத்த வீரனாகையால் பொய் சொல்லக் கூசுகிறேன்."

''தம்பி! அரிச்சந்திர மகாராஜாக்களுக்கு அரசியலில் இடமில்லை! உன்னைப் போன்ற சத்தியசீலர்கள் அரசியல் துறைக்கு வந்தால், தனயனையும் தாலிகட்டிய மனைவியையும் ஏலம் கூறி விற்பது மட்டுமல்ல; உன் தலையையும் பறிகொடுக்க நேரிடலாம்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

இவர்களிருவரும் இவ்வாறு ஜனநாதன் மாளிகையின் மேல் மாடியில் பேசிக்கொண்டிருந்தபோது, தெருவில் பாண்டிய ஜனங்கள் பெரும் ஊர்வலமாக வந்து கொண்டிருந்தனர்.

"உதவிக்கு வந்த சோழியப் படையே! உடனே திரும்பிப் போ!"

"விக்கிரம பாண்டியனுக்கு விரைவில் முடிசூட்டி விட்டு விரைவில் திரும்பிப் போ!"

"எங்கள் பாண்டிய நாட்டில் அன்னியர் அதிகாரம் ஒழிக!" என்று வானமிடிய கோஷங்களிட்டவாறே ஜனங்கள் ஊர்வலம் சென்றனர்.

''நம் சோழியப்படை இப்பாண்டி நாட்டில் பாதுகாவலாயிருப்பதை இந்த ஜனங்கள் ஏன் இப்படி வெறுக்கிறார்கள்? நாம் ஆதரிக்கும் விக்கிரமபாண்டியன் கட்சியைச் சேர்ந்த கோட்டைத் தலைவர்கள் கூட நம்மைக் கண்டு முணுமுணுக்க ஆரம்பித்திருக்கிறார்களே, காரணமென்ன?" என்று வீரசேகரன் வருத்தத்துடன் ஜனநாதனை நோக்கிக் கேட்டான்.

"தம்பி! நாம் எதற்காகப் படையெடுத்து வந்து இம்மதுரையைக் கைப்பற்றிக் கொண்டோம்? நம் சோழ சாம்ராஜ்யத்துக்குப் பரமவிரோதியான வீரபாண்டியனிட மிருந்து பாண்டிய சிம்மாசனத்தைக் கைப்பற்றி, நம் இஷ்டப்படி ஆடும் பொம்மை ராஜாவாக விக்கிரம பாண்டியன் என்ற ஒரு அசடனை அதில் அமர்த்தி வைப்பதற்காகத்தானே?"

"ஆமாம்! விக்கிரமபாண்டியனுக்கு நாம் விரைவில் முடிசூட்டினாலென்ன?"

"விரைவில் நாம் இந்தப் பாண்டிய நாட்டை விட்டுத் திரும்பிப் போக நேரிடும்! அதனால் நம் சோழிய அதிகாரிகள் இங்கே சூறையாடி வரும் கொள்ளையும், இங்கு நம் சோழியப்படை இருப்பதற்காக நாம் பாண்டிய அரசாங்கத்திடம் வசூலித்து வரும் பெருவாரியான வரி வருமானமும் குறைந்து போகும்! தம்பி, நம் சோழ சாம்ராஜ்யம் திக்கெட்டும் வீரச் செல்வர்களை அனுப்பித் திக்விஜயம் செய்யும் வரை, நம்முடைய பூதாகாரமான போர்ப் படைகளுக்குத் தீனி போடும் வேலையை இந்தப் பாண்டிய நாட்டின் தலைமீதுதான் சுமத்தவேண்டும்! இதில் பொருளாதார தத்துவம் மட்டுமல்ல, இன்னொரு ராஜதந்திரமும் அடங்கியிருக்கிறது, தம்பி! நாம் மதுரையைக் கைப்பற்றியதுமுதல் விக்கிரமபாண்டியனுக்கு முடிசூட்டிவிட்டுத் திரும்பிப் போகும்வரை, அரசனில்லாத ஒரு இடைக்கால அரசாங்கம் அமைத்து அதை நாம் மறைமுகமாக நிர்வகித்து வருகிறோம்! தம்பி, நம் சோழ சாம்ராஜ்யத்தின் இஷ்டப்படி ஆடும் ஒரு பொம்மை அரசாங்கம் இப்பாண்டிய நாட்டில் உருவாக வேண்டுமானால், இந்த இடைக்கால அரசாங்கம்

நடக்கும்போதே, இங்குள்ள முக்கியமான அரசியல் பதவிகளிலெல்லாம் நம்முடைய தாஸாநுதாஸர்களை அமர்த்திவிட்டுப் போகவேண்டும்! ஆகவே, விக்கிரம பாண்டியனுக்கு முடிசூட்டும் விழாவை எவ்வளவு தள்ளிப் போடுகிறோமோ அவ்வளவுக்கு நல்லது! இந்த அபூர்வமான யோசனையை நான்தான் நம் சோழ அரசாங்கத்திற்கு உணர்த்தினேன்! ஆனால் அந்தரங்கமான என் கருத்து என்ன தெரியுமா?"

"என்ன?"

"நூறு வருஷங்களுக்கு முன் எங்கள் பல்லவ சாம்ராஜ்யம் அடியோடு அழிந்ததுபோல், இந்தப் பாண்டிய சாம்ராஜ்யமும் நம் சோழ சாம்ராஜ்யமும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு இரண்டுமே அடியோடு அழிந்து விட வேண்டுமென ஆசைப்படுகிறேன். வீரபாண்டியன் நம்மிடமிருந்து இம்மதுரையை மீட்கப் பெரும் படை திரட்டி லந்து நம் சோழியப் போர் வீரர்களோடும் போரிட வேண்டுமென்பது என் திட்டம். இப்போது நாம் விக்கிரம பாண்டியனுக்கு முடி சூட்டிவிட்டால், விஷயம் முடிந்துவிட்டதென்று வீரபாண்டியன் கோழைபோல் சரணாகதியடைந்துவிடுவானோ என்ற தயக்கம் எனக்கு!"

"என்ன ஜனநாதா! நீயா இப்படிச் சொல்கிறாய்?"

"இல்லை, தம்பி! நம் கிழவர் சம்புவரராயர் ஒருவேளை உன்னிடம் இப்படி அர்த்தவியாக்கியானம் செய்யக் கூடுமென்றுதான் சொன்னேன். உன்னிடம் பிடிபடாமல் ஓடிவிடும்படி வீரபாண்டியனை எச்சரிப்பதற்காகத்தான், பாழடைந்த கோயிலில் முரட்டுக் கபாலிகனை நானே கொன்று, ஊர்மிளாவை ஓடிவிட விட்டேன் என்றுகூட நீ அவரிடம் சொல்லலாம்!" என்று சிரித்தான் ஜனநாதன். அவன் வழக்கம்போல் விளையாட்டாய்ப் பேசுகிறான் என்று நினைத்து வீரசேகரனும் அவனோடு சேர்ந்து சிரித்தான்.

"சரி தம்பி, கிளம்பு!"

"எங்கே?"

"இன்று நாம் ஆதரிக்கும் விக்கிரமபாண்டியனின் கட்சியைச் சேர்ந்த பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் ஒன்று கூடுகிறார்கள். இன்று இடைக்காலப் பாண்டிய மந்திராலோசனை சபை கூடுகிறது. அதில் வந்து கலந்துகொள்ளும்படி நம் சோழிய அதிகாரிகள் அனைவருக்கும் அன்புடன் அழைப்பு அனுப்பியிருக்கிறது. அந்தச் சபை நமக்கு ஒரு சிறு விருந்து நடத்தியபிறகு, விக்கிரமபாண்டியனுக்கு நாம் எப்போது முடிசூட்டப் போகிறோம் என்று ஒரு பெரிய கேள்வி போடும். அதற்குப் பதில் சொல்லும் பொறுப்பை நம் சோழ அரசாங்கம் என் தலைமீதுதான் சுமத்தியிருக்கிறது."

"அதற்கு என்ன செய்யப் போகிறாய்?"

"எல்லோரையும் ஒடுங்கிவிடச் செய்யும் ஒரு பிரம்மாஸ்திரம் என்னிடம் இருக்கிறது. அதை நான் பிரயோகித்ததும் பாண்டிய சபையிலுள்ள அத்தனை வானரங்களும் அப்படியே ஸ்தம்பித்துப் புத்தி கலங்கி உணர்ச்சி ஒடுங்கிப் போய்விடும்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"அதென்ன பிரம்மாஸ்திரம்? கம்பர் ராமாயணம் எழுதும் காலத்தில்தான் நாம் இருக்கிறோமென்றாலும் ராமாயணம் நடக்கும் புராண காலத்திலா இருக்கிறோம்?"

"தம்பி, நான் பிரம்மபுத்திரர்களைப் போல ஒரு அறிவாளியாகையால், வெறும் இரும்பு ஆயுதங்களை உபயோகப்படுத்துவதில்லை! சர்வ வல்லமை படைத்த சொல் ஆயுதங்களைத்தான் உபயோகப்படுத்துவேன். நான்முகனின் பிரம்மாஸ்திரம் என்பது அறிவாளிகள் நடத்தும் மாயைப் போரில் நான்கு திசைகளிலுள்ள ஜனக்கும்பலையும் சக்தியற்றதாக்கிவிடும் ஒரு சொல் அஸ்திரந்தான்! பார் இன்று அந்தப் பிரம்மாஸ்திரத்தின் வலிமையை!" என்றான் ஜனநாதன்.

இவ்வாறு அவனும் வீரசேகரனும் உரையாடிக் கொண்டே, இரண்டு குதிரைகள் மீதேறி, மதுரை நகரின்

தெற்குப் புறமுள்ள பாண்டியர்களின் புராதனமான அரண்மனை வாசலை அடைந்தனர். வாசலில் ஏராளமான பாண்டியப் பிரஜைகள் கும்பல்கூடி வீரகோஷங்களிட்டவாறு ஆக்ரோஷத்துடன் நின்றனர். அந்த ஜனத்திரளை உள்ளே நுழைந்து விடாதபடி வாசலில் ஏராளமான போர் வீரர்கள் தங்கள் கத்திகளை உருவித் தடுத்தவண்ணம் நின்றனர்.

ஜனநாதனும் வீரசேகரனும் அரண்மனைக்குள் கம்பீரமாக நுழைந்து அங்குள்ள மந்திராலோசனை மண்டபத்தை அடைந்தனர். விக்கிரமபாண்டியனுக்கு இன்னும் சோழர்கள் முடிசூட்டவில்லையாதலால், மண்டபத்தின் நடுவே இருந்த சிம்மாசனம் சூன்யமாகவே இருந்தது. அதனருகிலுள்ள ஒரு சிறு ஆசனத்தில், விக்கிரமபாண்டியன், தன் கட்சியைச் சேர்ந்த கோட்டைத் தலைவர்கள் புடைசூழத் தலைகுனிந்தவாறு அமர்ந்திருந்தான். அவன் வாலிப வயதினனானாலும் அவன் முகத்தில் பிள்ளைபோன்ற மருட்சியும், அசட்டுக் களையும், ஒருவிதப் பீதியும் நிறைந்திருந்தன.

"அவன் யார்?" என்று வீரசேகரன் மெல்லிய குரலில் ஜனநாதனைக் கேட்டான்.

"தம்பி! அவன்தான் நம்முடைய ராமாயணத்தில் விபீஷண ஆழ்வார்! நாம் வீரபாண்டியனிடமிருந்து இப்பாண்டி நாட்டின் அரசுரிமையைப் பரிபூர்ணமாகப் பறித்து அவனுக்கு முடிசூட்டுவோமென நம்மிடம் அடைக்கலம் புகுந்திருக்கும் விக்கிரமபாண்டியன்!'' என்றான் ஜனநாதன் மெல்ல.

"அவனது வலது கைபோல் வலது கைப்புறம் பூதாகாரமான தோற்றத்துடன் சுயநலம் வழியும் பூனைப் பார்வையுடன் ஒருவன் திமிராக உட்கார்ந்திருக்கிறானே, அவன் யார்?"

''அவன்தான் அஞ்சுகோட்டை நாடாள்வான்! பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்களில் அதி முக்கியமானவன்! அவனும் விபீஷண ஆழ்வார்

வர்க்கத்தைச் சேர்ந்தவன்தான்! வீரபாண்டியன் மீது நாம் படையெடுத்து வந்து இம்மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டபோது, வீரபாண்டியனின் மூத்த மகனுக்குத் துணையாக நின்று போரிடுவதாகப் பாசாங்கு செய்து நல்ல சந்தர்ப்பத்தில் நம் கையாளாக மாறி வீரபாண்டியனுக்குத் துரோகம் செய்து வடக்குக் கோட்டை வாசலை நமக்கு இரகசியமாகத் திறந்து விட்டவன்!"

"சுயநலம், பேராசை, வஞ்சகம், மமதையெல்லாம் ஒன்றாக உருவானதுபோல் அவன் முகம் இருக்கிறது! குட்டைச் சகதியில் கிடக்கும் சிறுமீனைப் போல அவன் கண்கள் எவ்வளவு குரூரமாக இருக்கின்றன!"

"தம்பி! அவன்தான் நம் ராமாயணத்தில் மகரக் கண்ணன்! ஏனெனில் இந்தப் பாண்டி நாட்டின் மகரக் கொடிக்கு தன்னைக் கண் போன்றவன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்! விரைவில் தனக்கு உத்திரமந்திரி பதவி வேண்டுமென்பதற்காக விக்கிரம பாண்டியனுக்கு நாம் விரைவிவ் முடிசூட்ட வேண்டுமென ஆசைப் படுகிறான்!"

இவ்வாறு இருவரும் மெல்லிய குரலில் சம்பாஷித்துக் கொண்டே மந்திராலோசனை சபைக்குள் உற்சாகமான வரவேற்பு வாழ்த்துக்களுடன் நுழைந்தார்கள்.

சுவையான ஒரு சிறு விருந்துக்குப் பிறகு, பாண்டிய மந்திராலோசனை சபை ஒன்றுகூடிச் சுவையற்ற முறையிலே சோழியர்களின் படையுதவிக்குப் பெரும் நன்றி செலுத்தி வாழ்த்துக் கூறியது.

ஜனநாதன் அச்சபையை நோக்கி, "எங்களை நீங்கள் வாழ்த்துவதை நம்புவதா, அல்லது வெளியிலுள்ள ஜனங்கள் தூற்றுவதை நம்புவதா என்று எனக்குப் புரியவில்லை! வெளியேயுள்ள உங்கள் ஜனங்கள் ஏன் கூச்சல் போடுகிறார்கள்? ஒவ்வொரு பிரஜையும் ஊமையாகப் பிறப்பதைத்தான் எங்கள் சோழ அரசாங்கம் விரும்பும்!" என்று விஷமப் புன்னகை செய்தான்.

அஞ்சுகோட்டை நாடாள்வான் லெடுக்கென்று எழுந்து நின்று, "இதோ எங்கள் விக்கிரமபாண்டிய தேவருக்கு முடிசூட்டுவதற்காகத்தான் வீரபாண்டியனிடமிருந்து உங்கள் சோழியப் படை இம்மதுரையைக் கைப்பற்றியது! இப்போது தனியரசான பாண்டிய நாட்டை உங்கள் சோழப் பேரரசோடு இணைத்துவிடுவீர்களோ என்ற சந்தேகம் எங்கள் ஜனங்களுக்கு உண்டாகியிருக்கிறது! ஜனங்களைத் திருப்தி செய்வதற்காகவாவது நீங்கள் விரைவில் முடிசூட்டு விழாவை நடத்திவிடவேண்டும்!" என்றான்.

''மிகவும் அவசரப்படுகிறீர்கள்! இப்பாண்டிய நாட்டிற்கு யார் யாரை மந்திரிகளாக்குவது, முக்கியமாக உத்திர மந்திரியாக எவரை நியமிப்பது என்று எங்கள் சோழ ராஜசபையில் சமர்ப்பிக்க இன்னும் நான் ஒரு பட்டியலும் தயாரிக்கவில்லையே!" என்றான் ஜனநாதன்.

அப்போது வெளியேயிருந்த ஜனங்களின் கோஷங்களும் கூச்சல்களும் அதிகமாகிவிட்டன.

"இந்த அரண்மனைக்கு வெளியே எங்கள் ஜனங்கள் கொந்தளித்துக் குமுறித் திரண்டு நிற்கிறார்கள். இன்னும் சிறிது நேரம் சென்றால் ஜனங்கள் பெருங்கலகம் செய்து உள்ளே நுழைய முயல்வார்கள்! அவர்களை என்ன செய்வது? அத்தனை பேரையும் வெட்டியெறியும்படி எங்கள் போர் வீரர்களுக்கு உத்தரவிடட்டுமா?" என்று கேட்டான் அஞ்சுகோட்டை நாடாள்வான்.

"வேண்டாம்; ஒரு சிறு குழந்தைக்கும் ஒரு சிறு காயங்கூட ஏற்படாதபடி அத்தனை ஜனங்களையும் உள்ளே விட்டுவிடுங்கள்! நான் இந்த மந்திராலோசனை சபையில் பேசுவதை அப்பாவிகளான ஜனங்களும் மௌனமாகக் கவனிக்கட்டும்!" என்றான் ஜனநாதன்.

அஞ்சுகோட்டை நாடாள்வான் அளவிறந்த ஆனந்தமடைந்தவனாய் அவ்வாறே உத்தரவிட்டதும், ஜனங்கள் மடைதிறந்த வெள்ளம் போல் உள்ளே பாய்ந்து வந்து மந்திராலோசனை சபையைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டு நின்றார்கள்.

ஜனக் கும்பலிலிருந்து ஒரு பாண்டிய வாலிபன் ஜனநாதனை நோக்கிப் பலமாகக் கூவினான்:

"சோழிய அதிகாரிகளே! விரைவில் விக்கிரம பாண்டியனுக்கு முடிசூட்டிவிட்டு விரைவில் உங்கள் நாட்டிற்குத் திரும்பிப் போங்கள்!" என்று அவன் கத்தினான்.

அதைத் தொடர்ந்து ஜனங்களும், 'முடி சூட்டு!' 'முடி சூட்டு!' என்று ஆக்ரோஷமாய்க் கூவினார்கள்.

"முடிசூட்டத்தான் போகிறோம்! எங்கள் குலோத்துங்க சோழச் சக்கரவர்த்தியே தம் திருக்கையால் உங்கள் விக்கிரம பாண்டியத் தேவரின் தலையில் முடிசூட்டுவார்!" என்று ஜனநாதன் பலமாகக் கத்தியதும் ஜனக்கும்பலில் அமைதியும் ஆனந்தமும் நிலவின.

ஜனநாதன் அந்த ஜனத்திரளை நோக்கி, "நாங்கள் முடிசூட்டத் தயார்தான்! ஆனால் இந்த விக்கிரம பாண்டியத் தேவரின் தலையில் முடியென எதைச் சூட்டுவது? பாண்டிய மன்னர்கள் வாழையடி வாழையாகத் தரித்துவந்த. பாண்டிய வம்சத்தின் பொன்முடி, உங்கள் மூதாதையர்கள் கண்டுகளித்து வந்த புராதனமான மகரமுடி, உண்மையான ராஜமுடி, இப்போது தலைமறைவாய்த் திரியும் வீரபாண்டியன் கையிலன்றோ சிக்கிக் கொண்டிருக்கிறது!" என்றான் ஜனநாதன்.

அதைக் கேட்டதும் அஞ்சுகோட்டை நாடாள்வான் உட்படப் பல பாண்டிய நாட்டுத் தலைவர்களும் ஒருவரையொருவர் பார்த்துத் திருதிருவென விழித்தார்கள்.

ஜனநாதன் ஜனங்களை நோக்கி மேலும் தொடர்ந்து, "எங்கள் நாட்டிற்கு விரைவில் திரும்பிப் போகவேண்டுமென்ற ஆசையால் நாங்கள் அவசரப்பட்டு ஒரு போலி முடி தயாரித்து விக்கிரம பாண்டியரின் தலையில் சூட்டினால் அதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா? உலகம் காறி உமிழாதா? சுற்றுப் பிரதேசத்திலுள்ள மக்களும் மன்னரும் அங்கீகரிப்பார்களா? எங்கள் குலோத்துங்கச்

சோழ சக்கரவர்த்தி உண்மையான ராஜரத்தத்தில் பிறந்தவரென்றால், ராஜ ராஜ சோழன் காலம் முதல் வாழையடி வாழையாகச் சோழ வம்சத்தினர் தரித்துவரும் உண்மையான ராஜமுடி தரித்திருப்பவரென்றால், இந்த விக்கிரம பாண்டியர் தலையில் புராதனமான பாண்டிய வம்சத்தின் பொன்முடியைச் சூட்டுவாரே தவிர, வேறு எந்தப் போலி முடியையும் தம் கையால் தொடவும் மாட்டார்!" என்றான் ஜனநாதன்.

அங்கிருந்த ஜனங்கள், அதிகாரிகள் அனைவரும் உணர்ச்சி ஒடுங்கி, சப்த நாடியும் அடங்கி, பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்டவர்கள் போல் ஸ்தம்பித்து விட்டனர்.

சிறிது நேரத்தில் ஜனங்கள் சுயநினைவு பெற்று, "எங்களுக்குப் போலி முடி வேண்டாம்! புராதனமான பொன்முடிதான் வேண்டும்!" என்று கத்தத் தொடங்கினர். ஜனநாதன் பிரசங்கம் செய்த களைப்புத் தீரச் சற்று ஒதுப்புறமாய்ச் சென்று காற்று வீசும் சாளரத்தருகில் நின்றான். அவனைத் தொடர்ந்து அளவிறந்த வியப்புடன் வீரசேகரனும் வந்து நின்றான்.

"தம்பி! பார்த்தாயா என் பிரம்மாஸ்திரத்தின் வேலையை? வானர சேனைகள் அத்தனையும் வாயடங்கி ஒடுங்கிப் போய் விட்டன!" என்று ஜனநாதன் மெல்லச் சிரித்தான்.

அப்போது அஞ்சுகோட்டை நாடாள்வான் மதயானை போல் மமதையான நடையுடன் எழுந்து வந்து ஜனநாதனை நோக்கி, "நான் யார் தெரியுமா?" என அழுத்தலோடு கேட்டான்.

"தெரியாது!" என்று ஜனநாதன் அலட்சியமாகப் பதிலளிக்கவே, நாடாள்வானின் முகம் சிறிது சுருங்கியது.

"என்னைத் தெரியாதவர்கள் யாரும் இருக்க முடியாதே! உங்கள் சோழ அரசாங்கத்திற்கு ஆருயிர் நண்பனான என்னை நீர் சுலபமாக மறந்துவிடவும் மாட்டீர்!"

"நான் ஆருயிர் நண்பர்களை அடுத்த கணமே மறந்துவிடுவேன்! அற்பமான பகைவர்களைத்தான் அதிக காலம் ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பேன்!" என்றான் ஜனநாதன் விஷமப் புன்னகையுடன்.

"என்னைப் பார்த்திருக்க மாட்டீர்! ஆனால் நிறையக் கேள்விப்பட்டிருப்பீர்! நான்தான் அஞ்சுகோட்டை நாடாள்வான்!"

"அஞ்சுகோட்டைகளில் ஒரு கோட்டையையும் நான் பார்த்ததில்லை! பாண்டி நாட்டில்தான் மணல் கோட்டைகளுக்குக் கணக்கு வழக்கில்லையே?" என்று ஜனநாதன் கூறியதும் அஞ்சுகோட்டை நாடாள்வானின் மமதையான முகம் அதிகம் வாடிச் சுருங்கிவிட்டது.

"நீங்கள் வீரபாண்டியன்மீது படையெடுத்து வந்து இம்மதுரையை முற்றுகையிட்டபோது, நான் இரகசியமாக வடக்குக் கோட்டை வாசலைத் திறந்து விடாதிருந்தால் உங்கள் சோழியப் படை இம்மதுரைக்குள் நுழைந்திருக்க முடியாது!" என்றான் நாடாள்வான்.

"அந்த நம்பிக்கைத் துரோகத்திற்கு இப்போது எங்களிடம் பரிசு கேட்கிறீரா? உமக்கு வேண்டியது இப்பாண்டி நாட்டின் உத்திர மந்திரி பதவிதானே?" என்று சிரித்தான் ஜனநாதன்.

அஞ்சுகோட்டை நாடாள்வான் கோபமும் மமதையும் பொங்க, "நான் இப்பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்களுக்கெல்லாம் அதிமுக்கியமானவன்! நான் வாயசைத்தால் இன்னும் எத்தனையோ கோட்டைத் தலைவர்கள் வீரபாண்டியனின் கட்சியிலிருந்து விலகி என் கட்சியில் சேர்வார்கள்! உங்கள் சோழியப் படையின் உதவியில்லாமலே நானே படைதிரட்டிச் சென்று வீரபாண்டியனைக் கொன்று புராதன பாண்டிய வம்சத்துப் பொன்முடியை வெகு விரைவில் கொண்டு வந்து விடுவேன்!" என்றான்.

"சந்தோஷம்! ஆனால் வீரபாண்டியன் எந்த ஊரில் பதுங்கியிருக்கிறான், எந்தக் கோட்டைக்குள் இரகசியமாய்ப்

படை தயாரிக்கிறான் என்ற விஷயம் முதலில் தெரிய வேண்டுமே?" என்றான் ஜனநாதன்.

"உங்கள் சோழிய அதிகாரி சம்புவராயர்தான் வீரபாண்டியனின் மூத்த குமாரனைச் சிறை பிடித்துவிட்டாரே! அந்தச் சிறு பையனைச் சித்திரவதை செய்தால் எல்லா விஷயத்தையும் கக்கிவிடுகிறான்!" என்றான் நாடாள்வான்.

"இதை முன்கூட்டியே யூகித்துத்தான் வீர பாண்டியனின் மூத்த மகனை இந்தச் சபையில் பகிரங்கமாக விசாரணை செய்வதற்காகக் கொண்டு வரும்படி எங்கள் கிழவர் சம்புவராயருக்குச் செய்தி யனுப்பியிருக்கிறேன்!... அதோ, அவரும் வந்துவிட்டார்" என்றான் ஜனநாதன்.

அப்போது கிழவர் சம்புவராயர் முகத்தில் வெற்றிக்களை தாண்டவமாடக் கம்பீரமாக வந்து நின்றார். அவர் பின்னால் ராட்சசர்கள் போல் இருபது சோழிய வீரர்கள், பன்னிரண்டு வயதுகூட நிரம்பப் பெறாத ஒரு சிறுவனின் கைகளில் விலங்கிட்டு, இரும்புச் சங்கிலிகளால் பிணைத்து விசாரணைக்காக அந்தச் சபையின் முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

அந்தச் சிறுவனின் பச்சிளம் முகத்தில், ஒரு மருட்சியும், இரும்புச் சங்கிலிகளால் ஏற்படும் வேதனையும் நிறைந்திருந்தன! சபையை மிரள மிரளப் பார்த்துக் கொண்டே பிடிபட்ட மான்போல் மருண்டு நின்றான் வீரபாண்டியனின் மூத்த மகன் பராக்கிரமன்!

# அத்தியாயம் 12

## அட்சகுமாரன் வதைப்படலம்

*நண்ணினன் நானும் நின்றேன்,*
*காலனும் நணுகி நின்றான்.*

**கம்ப ராமாயணம்**

மந்திராலோசனை சபையையும் அதில் விஷப் பாம்புகள் போல் நெளியும் துரோகிகளான பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்களையும் பிரம்ம ராட்சஸர்கள் போல் வீற்றிருக்கும் சோழிய அதிகாரிகளையும் வீரபாண்டியனின் மூத்த மகன் மிரள மிரள விழித்துப் பார்த்தான். பன்னிரண்டு வயதுகூட நிரம்பப் பெறாத அந்தச் சிறுவனின் முகத்தில் ஒருவித மருட்சி இருந்ததே தவிர, அழுகையோ கண்களில் ஒரு துளிக் கண்ணீரோ சிறிதும் இல்லை! சுமக்க முடியாத இரும்புச் சங்கிலிகளையும் கனமான விலங்குகளையும் அவனது மெல்லிய உடல் சுமந்துகொண்டிருந்தாலும் அந்தச் சிறுவன் சிறிதுகூடத் தலை குனியவில்லை; நன்றாக நிமிர்ந்தே நின்றான்! காட்டுப் பன்றிகளுக்கும் குள்ள நரிகளுக்கும் நடுவே நிற்கும் சிறு புலிக்குட்டி போலவே நின்றான்!

பால் வழியும் முகமுள்ள அந்தப் பாலகனை இந்த நிலையில் கண்ட ஜனத்திரள், ஒருவிதப் பச்சாத்தாப உணர்ச்சியுடன் மௌனமாகி விட்டது.

வீரசேகரன் மெல்ல ஜனநாதனை நோக்கி, "அந்தச் சிறுவனைப் பார்க்கும்போது எனக்குப் பரிதாபம் உண்டாகிறது. சிறிதும் பயமில்லாமல் இத்தனை எதிரிகளின் மத்தியில் தனியொருவனாக எவ்வளவு

கம்பீரமாக நிற்கிறான்! இந்தச் சபை என்னதான் விசாரித்தாலும் பையன் வாய்திறந்து எதுவும் சொல்ல மாட்டான் போலிருக்கிறது!" என்று தன் முகத்தை வேறு புறம் திருப்பிக் கண்களில் துளிக்கும் கண்ணீரை அடக்கிக் கொண்டான்.

ஜனநாதனோ ஒன்றும் சொல்லாமல் வழக்கம்போல் விஷமச் சிரிப்புடன் காட்சியளித்தான்.

''இந்தப் பாண்டிய ராஜாங்க சபை ஏதோ பிரமாதமாக எதிர்பார்த்து இன்று கூடியது! ஆனால் கடைசியில் இங்கே என்னதான் உருப்படியாக நடக்கப் போகிறதோ, தெரியவில்லை!" என்றான் வீரசேகரன்.

''என்ன நடக்கும்? கடைசியில் அட்சகுமாரன் வதைப்படலம் தான் நடக்கும்!" என்று மெல்லச் சிரித்தான் ஜனநாதன்.

"அட்ச குமாரனா? அது யார்? இங்கே என்ன கம்பராமாயணமா நடக்கப் போகிறது?"

"தம்பி! அதோ நிற்கும் வீரபாண்டியனின் மூத்த குமாரனைத் தான் நான் அட்சகுமாரன் என்றேன்! ஏனெனில், வீரபாண்டியனை ராவணன் என்று நம் சோழ அரசாங்கம் அடிக்கடி சித்திரித்துப் பேசி வருகிறது! ராவணனின் மகன் கம்ப ராமாயணப்படி அட்ச குமாரனில்லையா? அதுவும் ஒரு குரங்கின் கையில் அகப்பட்டு மடிந்தானில்லையா?"

"குரங்கு யார்?"

"அனுமார்தான்!" என்று ஜனநாதன் பிரகாசமான பல்வரிசையெல்லாம் தெரிய மெல்லப் பரிகாசமாய்ச் சிரித்தான்.

அந்த ஜனத்திரளின் மத்தியில் சித்திரப் பாவைகள் போல் நின்ற பெண்களின் கும்பலில் ஊர்மிளாவும் இருந்தாள். வீரசேகரனோ அல்லது வேறு யாருமோ தன்னைப் பார்த்துவிடக் கூடாதேயென்று, அடையாளம்

தெரியாதபடி முகத்தை முக்காடிட்டு மறைத்துக் கொண்டு, தாமரைக் குளத்திலுள்ள மலர்களின் மத்தியில் கூம்பித் தொங்கும் தாமரை போல முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றாள். வீரபாண்டியனின் மூத்தகுமாரனை எப்படியாவது காப்பாற்ற வேண்டுமேயென்று அவள் நெஞ்சு பரிதவித்தது. அந்தச் சிறு பையன் எதிரிகளிடம் பிடிபட்டு, எந்த விதத்திலும் தப்ப முடியாதபடி பல புலி களின் மரணப் பிடியில் சிக்கிக்கொண்டு விட்டானே என்று அவளது பெண் நெஞ்சு பாகாய் உருகியது. அவனைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்தாள். ஆனால் அவளது உயிரைப் பிரதியாய் வாங்கிக் கொண்டு வீரபாண்டியனின் மூத்த குமாரனை ஒருபோதும் விட்டுவிட மாட்டார்களே என்று கலங்கினாள். அவளுக்குச் சட்டென்று, தூரத்தில் நிற்கும் வீரசேகரனின் நினைப்பு வந்தது. வீரசேகரனுக்கு அவள்மீது அன்பு உண்டென்பதும், அவள் வாய் திறந்து கேட்டால் ஆனந்தமாகத் தன் உயிரைக் கூடக் கொடுத்து விடுவான் என்பதும் அவளுக்குத் தெரியும்! ஆனால் வீரசேகரன் தன் உயிரைக் கொடுப்பானே தவிர ஒருபோதும் கடமையுள்ளம் தவறமாட்டானே, என்னதான் கெஞ்சிக் கூத்தாடினாலும் வீரபாண்டியனின் மூத்த குமாரனைத் தந்திரமாகக் காப்பாற்றி விடுதலை செய்யச் சம்மதிக்க மாட்டானே, தியாகம் செய்வானே தவிரக் கடமை தவறி ராஜாங்கத்திற்கு நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டானே என்றெல்லாம் உள்ளூரப் பொருமினாள். பிறகு பொங்கி வரும் விம்மலையும் அழுகையையும், துக்கத்தையும் பல்லால் உதட்டைக் கடித்து அடக்கிக் கொண்டு மேலே நடப்பவனவற்றை மௌனமாகக் கவனிக்கத் தொடங்கினாள்.

பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்களில் ஒருவனான தொண்டைமான் ராயன் மந்திராலோசனை சபையில் எழுந்து நின்று, "சோழ நாட்டுப் பிரபல யானைப் படைத் தலைவரான அத்திமல்லர் சம்புவராயர் நம் சார்பாக வீரபாண்டியனின் மூத்தகுமாரன் பராக்கிரமனைச் சிறைபிடித்து வந்து நம்முன் நிறுத்தியிருக்கிறார்! இந்தப் பாண்டிய ராஜாங்க சபையின் சார்பாக அவரை வாழ்த்துகிறேன்!" என்றான்.

சிறைபிடிக்கப்பட்ட சிறுவன் பராக்கிரமன் சட்டென்று, "அந்தக் கிழவர் என்னைப் பிடிக்கவில்லை! இந்த முரட்டுச் சேவகர்கள் அத்தனை பேரும் சேர்ந்துதான் என்னைப் பிடித்தார்கள்!" என்று தன்னைப் பிடித்துக் கொண்டு நிற்கும் இருபது சோழிய வீரர்களையும் சுட்டிக் காட்டினான்.

ஜனத்திரள் கொல்லென்று சிரித்தது. ஜனநாதனோ அதிகமாகச் சிரித்தான்.

கிழவர் சம்புவராயர் தலை குனிந்தார். அந்தப் பையனின் முகத்தில் விழிக்கவே மனங்கூசியவராய், "இவனைச் சிறைபிடித்ததில் பெருமை இல்லை. இவன் மீனாட்சியம்மன் கோயிலில் திருஞான சம்பந்தர் கோலத்தில் பதுங்கியிருந்தான் என்பதையும், நகர்க்கோட்டையை விட்டு இவனைக் கடத்திக் கொண்டு போக முயற்சி நடந்தது என்பதையும் கண்டுபிடித்த பெருமையைத்தான் வாழ்த்த வேண்டும்!" என்று குறிப்பாக ஜனநாதனை ஒருமுறை பார்த்து விட்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டார்.

பிறகு வீரபாண்டியனின் மூத்தகுமாரன் பராக்கிரமனைப் பாண்டிய ராஜாங்க சபை விசாரணை செய்யும் காட்சி ஆரம்பமாயிற்று.

தொண்டைமான் ராயன், அச்சிறுவன் முன்வந்து நின்று விசாரிக்கலானான்.

"தம்பி!" என்று துவங்கினான் தொண்டைமான்.

"நான் உன் தம்பியல்ல! உன் இளவரசன்!" என்றான் சிறுவன் பராக்கிரமன், வெடுக்கென்று கோபமும் கம்பீரமும் கலந்த குரலில்.

"நீதானே வீரபாண்டியனின் மூத்த குமாரன்? உன் பெயர்தானே பராக்கிரமன்?"

"ஏன். உனக்குத் தெரியாதா? எத்தனையோ தடவை என்னைச் சின்ன வயசில் உன் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு கொஞ்சி விளையாடினாயே?"

தொண்டைமான் ராயன் தலைகுனிந்தான். வீரபாண்டியனுக்குத் துரோகம் செய்தோமே என்ற மனச்சாட்சி அவன் நெஞ்சை அந்தக் கணம் ரம்பம்போல் அறுத்தது. பையனின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கத் தைரியமில்லாதவனாய்த் தலை குனிந்துகொண்டே மற்றக் கேள்விகளையும் வரிசையாகக் கேட்கலானான்:

"சோழ நாட்டுப் படை இம்மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றியபோது உன் தந்தை வீரபாண்டியத் தேவர் தோற்றோடினாரே; எங்கே ஓடினார்?"

"என் தந்தை தோற்றோடவில்லை! நீங்களெல்லாம் சமயத்தில் துரோகம் செய்துவிட்டீர்கள்! அவர் மறுபடி படை தயாரித்துச் சண்டை போட்டு, அதோ அந்த சிம்மாசனத்தில் மறுபடியும் ராஜாவாக அமர்வார்!"

அப்போது அங்கிருந்த பல பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் தலை குனிந்தார்கள்! சிலரின் கண்களில் கண்ணீரும் வந்துவிட்டது.

"இம்மதுரைக் கோட்டைக்குள் நீ மட்டுந்தான் சிக்கிக் கொண்டாயா? உன் தந்தை எங்கே? உன் தாய் எங்கே? உன் தம்பி எங்கே? அவர்களும் இந்த மதுரைக் கோட்டைக்குள் சிக்கிக் கொண்டு இன்னும் தலைமறைவாகப் பதுங்கியிருக்கிறார்களா?"

"இல்லை!"

"அப்படியானால் உங்கள் குடும்பம் எந்த ஊரில் இருக்கிறது? உன் தந்தை எந்த ஊரில் உள்ள கோட்டையில் இரகசியமாய்ப் படை திரட்டுகிறார்?"

"சொல்லமாட்டேன்!"

"உண்மையைச் சொல்லிவிடு! நீ ராஜபோகமாய் வாழலாம்! பிற்காலத்தில் நீ ஆள்வதற்குத் தென்பாண்டி நாட்டை வேண்டுமானாலும் தருகிறோம்!"

"எனக்கு ஒன்றும் வேண்டாம்!"

"நீ உண்மையைச் சொல்லாவிட்டால் என்ன செய்வார்கள் தெரியுமா?"

"தெரியும்! அடித்து உதைப்பார்கள்!"

அப்போது ஜனத்திரளில் பலர் விம்மி அழும் சப்தம் கேட்டது.

"கடைசி முறையாகக் கேட்கிறேன், சொல்லிவிடு!"

"சொல்லமாட்டேன்!"

அதற்கு மேலும் அந்தச் சிறுவனை விசாரிப்பதில் பிரயோஜனமில்லையென்று தொண்டைமான் ராயன் மௌனமாகி விட்டான்.

இவற்றைக் கவனித்துக் கொண்டிருந்த வீரசேகரன் மெல்ல ஜனநாதனின் காதருகில் குனிந்து, "அந்தப் பையன் பிடிவாதமாய் ஒன்றையும் சொல்ல மாட்டேனென்று சாதிக்கிறானே? இனி என்ன செய்வார்கள்?" என்று கேட்டான்.

"சித்திரவதை செய்து அவன் வாயிலிருந்து எப்படியும் விஷயத்தைக் கக்க வைத்துவிடுவார்கள்! விரல், கை, மூக்கு என்று ஒவ்வொரு அங்கமாய் வெட்டிச் சித்திரவதை செய்து கேட்கும்போதோ அல்லது இருதயத்தை வெட்டியெடுக்கும்போதாவது அந்தச் சிறுபயல் விஷயத்தைச் சொல்லிவிட மாட்டானா?"

"பாவம்! அந்தக் கண்ணறாவிக் காட்சியை வேறு நம் கண்களால் பார்க்கவேண்டாம்! வா, ஜனநாதா! இங்கிருந்து போய்விடுவோம்!"

"தம்பி! கவலைப்படாதே! இவ்வளவு பெரிய ஜனத்திரளின் முன் இந்த ராஜாங்க சபையில் பகிரங்கமாக அந்தச் சிறு பையனைச் சித்திரவதை செய்யமாட்டார்கள். அவனைத் தோள்மீது தூக்கி வைத்து வளர்த்த பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் இந்த ராஜாங்க சபையில் இருக்கிறார்களாகையால், இப்போது அந்தச்

சிறுவனின் உடலில் ஒரு சிறு அங்கத்தை எவன் வெட்டினாலும், அவனை எல்லோரும் வெறுப்பார்கள். ஜனங்களும் அதைச் சகிக்காமல் கலகம் செய்வார்கள். ஆகவே, அவனைச் சிறைக்குக் கொண்டுபோய் இரகசியமாகவே சித்திரவதை செய்து எப்படியும் அந்தப் பையனின் வாயிலிருந்து விஷயத்தைக் கக்கவைத்து விடுவான் விக்கிரமபாண்டியன்!"

அப்போது விக்கிரம பாண்டியன் தன் ராஜாங்க சபையை நோக்கி, "அந்தச் சிறு பையனான பராக்கிரமனின் பிதுர் பக்தியையும் தைரியத்தையும் நேர்மையையும் மிகவும் பாராட்டுகிறேன். ஆனால், இந்தத் தேச நலனுக்காக, வீரபாண்டியன் நம்மிடம் வந்து சரணாகதி அடையும்வரை அவனது மூத்த குமாரனைச் சிறையிலடைத்து வைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. கொண்டு போங்கள் அவனைச் சிறைக்கு!" என்றான்.

ஜனநாதன் சட்டென்று விக்கிரம பாண்டியனின் முன்வந்து நின்று, "உங்கள் பாண்டிய ராஜாங்க சபை அனுமதித்தால் இந்தச் சிறுவனைச் சில கேள்விகள் கேட்டுச் சில விஷயங்களை அறிந்து கொள்ள விரும்புகிறேன்!" என்றான்.

விக்கிரம பாண்டியன் அதற்கு அனுமதியளித்ததும் ஜனநாதன் அச்சிறுவன் முன் வெகு அருகில் வந்து நின்று அவனை விசாரிக்கத் தொடங்கினான். ஜனநாதன் என்ன கேள்வி கேட்கப் போகிறான் என்று சபையில் இருந்த அனைவரும் ஆவலோடும் பீதியோடும் கவனித்தார்கள்.

ஜனநாதன் சட்டென்று, "குழந்தாய்! நான் யார் தெரியுமா?" என்று விஷமச் சிரிப்புடன் கேட்டான்.

"தெரியும்! நீ எங்கள் ஜன்ம சத்ரு! எங்கள் பாண்டி நாட்டை விழுங்க வந்த சோழநாட்டு அதிகாரிகளில் ஒருவன்!"

"தம்பி! எங்கள் சோழியப்படை எதற்காக வீரபாண்டியன்மீது படையெடுத்து வந்து இம்மதுரையைக்

கைப்பற்றியது என்ற உண்மையான விஷயம் உனக்குத் தெரியுமா?"

"தெரியும்!"

"அப்படியானால் உன் அம்மா எங்கிருக்கிறாள் என்று சொல்! உன் தந்தை மறைந்திருக்கிற இடத்தை நீ சொல்லாவிட்டாலும், உன் அம்மா இருக்கிற இடத்தையாவது நீ சொல்லித்தானாக வேண்டும்!"

"என் அம்மா வீரசுவர்க்கத்தில் இருக்கிறாள்!"

"உன் சொந்த அம்மாவான இலங்கை ராணியைச் சொல்லவில்லை! அகில உலகத்திலும் இதுவரை பூத்திராத அழகியென்று சேரராஜன் மகளை உன் தந்தை புதிதாகக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறாரே, அந்தச் சின்ன அம்மாவைச் சொன்னேன்!" என்று சொல்லிவிட்டு ஜனநாதன் கலகலவென்ற பரிகாசமான விஷமச் சிரிப்புடன், "தம்பி! நிஜமாகவே உன் சிற்றன்னை மிக அழகாயிருப்பாளா?" என்று கேட்டான்.

அந்தச் சிறுவன் அளவிலா அருவருப்படைந்து ஜனநாதனின் முகத்தில் காறி உமிழ்ந்தான். நெற்றியில் விழுந்த எச்சிலைத் துடைத்துக் கொள்ளாமலே ஜனநாதன் மரம்போல் நின்றான். அதைக் கண்ட சோழநாட்டு அதிகாரிகளில் பலருக்கு உள்ளூர ஆனந்தம் பொங்கி வழிந்தது.

"தம்பி! புது மனைவியின் அழகில் மயங்கி அந்த மோகக்கிறக்கத்தினால்தான் உன் தந்தை தன் தலைநகரைப் பறிகொடுத்து விட்டுப் போரில் தோற்றோடினார் மனைவியைப் பிரிந்துவர மனமில்லாமல்தான், இம்மதுரையை எங்களிடமிருந்து மீட்கப் படையெடுத்து வராமல் கோழைபோல் தலைமறைந்து அஞ்ஞாதவாசம் புரிகிறார் என்றெல்லாம் நான் நினைக்கிறேன்! இது உண்மையா?" என்று ஜனநாதன் மறுபடியும் கேட்டான்.

அந்தச் சிறுவன் மறுபடியும் ஜனநாதனின் முகத்தில் காறித் துப்பினான். மறுபடியும் ஜனநாதனின் அரசியல்

தோழர்கள் அகமகிழ்ந்தார்கள். மறுபடியும் ஜனநாதன் தன் முகத்தில் விழுந்த எச்சிலைத் துடைத்துக் கொள்ளாமலே அடுத்த கேள்வியைக் கேட்டான்:

"தம்பி! உனக்கு இருக்கும் தைரியம்கூட உன் தந்தைக்கு இல்லையே! ஒரு யௌவனப் பெண்ணின் அமாநுஷ்யமான அழகு ஒருவனைக் கோழையாகவும் ஆக்கும்; இராவணனாகவும் ஆக்கும்!"

சிறுவன் மறுபடியும் ஜனநாதனின் முகத்தில் காறி உமிழ்ந்தான். அந்த எச்சிலையும் ஜனநாதன் துடைத்தெறியவில்லை!

"தம்பி! இதோ என் தலைப்பாகையில் எங்கள் சோழ நாட்டுப் புலி இலச்சினை பொறித்திருக்கிறது. கங்கையும் கடாரமும் தாண்டித் திக்கெட்டும் திக்விஜயம் செய்யப் போகும் எங்கள் சோழ சாம்ராஜ்யத்தின் புலிக்கொடிக்கு வாழ்த்துக் கூறி வணங்கு! என் காலிலும். அதோ இந்நாட்டின் புராதன முடி சூடப்போகும் விக்கிரம பாண்டியத் தேவரின் காலிலும் விழுந்து கும்பிட்டு, மன்னிப்புக் கேள்! என் முகத்தில் நீ மூன்று முறை எச்சிலைத் துப்பியிருந்தாலும், உன் அசட்டுத்தனத்தை யெல்லாம் மன்னித்து விடுகிறேன்!" என்றான் ஜனநாதன்.

சிறுவன் பராக்கிரமனோ நான்காவது முறையாகப் பலமாகக் காறிக் காறி ஜனநாதனின் முகத்தில் பலதடவை எச்சிலைத் துப்பினான். அவ்வளவு எச்சிலையும் ஜனநாதன் துடைத்துக் கொள்ளாமலே ஆக்ரோஷத்துடன் நின்றான். அவனோடிருந்த அவனது அரசியல் சகாக்களான சோழநாட்டு அதிகாரிகளுக்கோ உள்ளூர ஆனந்தம் பொங்கி வழிந்தது!

ஜனநாதனுக்கு மெய் சிலிர்த்தது! முகம் முழுதும் வடியும் எச்சிலைத் துடைத்துக் கொள்ளாமலே, ஜனநாதன் மிதியுண்ட புலிபோல ஆக்ரோஷத்துடன் திரும்பி ராஜாங்க சபையை நோக்கிக் கத்தினான்:

"பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்களே! சோழ நாட்டின் அதிமுக்கியமான அதிகாரிகளில் ஒருவனான

என்னை, அவனியாளப் பிறந்தான் வாள்நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயனான என்னை, விருந்து என்று வரவழைத்து என் முகம் எச்சில் பணிக்கம் ஆவதை அநுமதித்துவிட்டீர்கள்! இந்த அற்பச் சிறுவன் உங்கள் முன்னிலையில் என் முகத்தில் ஒருமுறை இருமுறையல்ல; ஏழுமுறை எச்சிலைக் காறித் துப்பினான்! இது என் முகத்தில் துப்பப்பட்ட எச்சிலல்ல! ஜனநாதனின் முகத்தில் துப்பப்பட்ட எச்சிலல்ல! எங்கள் சோழ சாம்ராஜ்யத்தின் புலிக்கொடிமீது துப்பப்பட்ட எச்சில்! எங்கள் குலோத்துங்கச் சோழச் சக்கரவர்த்தியின் முகத்திலே துப்பப்பட்ட எச்சில்! இங்கு விருந்துக்கு வந்த சோழ அதிகாரிகள் ஒவ்லொருவரின் முகத்திலும் துப்பப்பட்ட எச்சில்! சோழ சாம்ராஜ்யத்தின் சார்பாக நான் ஒவ்வொரு காரியத்தையும் செய்வது போலலே இந்த எச்சிலையும் சோழ சாம்ராஜ்யத்தின் சார்பாக ஏற்றுக் கொண்டேன்!" என்று ஜனநாதன் சொன்னதும் அங்கிருந்த சோழிய அதிகாரிகளின் ஆனந்தம் லடிந்த முகங்களிலே இப்போது அவமானத்தின் எச்சில் லடிந்தது!

ஜனநாதன் மேலும் தொடர்ந்து சிம்ம கர்ஜனை செய்தான்: "பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்களே! இந்த அவமான எச்சிலை இந்தப் பையனின் ரத்தததால் கழுவித் துடைத்தெறிய உங்களில் ஒருவராவது முன்வரமாட்டீர்களா? உங்களில் ஒருவருக்காலது நன்றி விசுவாசம் இல்லையா?"

அங்கிருந்த பாண்டிய நாட்டுக் கோட்டைத் தலைவர்களில் ஒருவருக்காவது தைரியமில்லை. பையனைத் தீண்டினால் ஜனங்கள் கலகம் செய்வார்கள்; அனைலரின் வெறுப்புக்கும் ஆளாகி நசித்துப் போக நேரிடும் என்று எல்லோரும் நினைத்து, இருந்த இடத்தை விட்டு அசையாமல் இருந்துவிட்டார்கள்!

ஜனநாதனோ விடாமல் கத்தினான்: "அதோ எங்களால் இந்நாட்டின் மன்னராகப் போகும் விக்கிரமபாண்டியத் தேவர்கூட எங்களுக்கு இழைக்கப்பட்ட அவமான்னத்துக்குப் பரிகாரம் தேடாமல் மௌனமாய் இருக்கிறார்! பங்காளி மகன் என்ற ரத்த பாசத்தால்

அரசியல் பாங்கரிடம் நன்றி விசுவாசத்தை மறந்து விட்டதில் ஆச்சரியமில்லை! ஆனால் இந்நாட்டின் எதிர்கால உத்திரமந்திரியாகப் போகும் புத்திசாலிகூடவா இதற்கும் பரிகாரம் தேடாமலிருப்பார்? இந்த அவமானத்தை இந்தச் சிறுவனுடைய இரத்தத்தால் கழுவித் துடைத்தெறியாவிட்டால் என்ன நேரிடும் என்பதை அவர்கூடவா ஆலோசிக்காமலிருப்பார்?'' என்று ஜனநாதன், அங்கு ஒருபுறம் இருந்த அஞ்சுகோட்டை நாடாள்வானைக் குறிப்பாகப் பார்த்தான்.

அதைக் கண்டதும் அஞ்சுகோட்டை நாடாள்வான் மிதியுண்ட அஞ்சுதலை நாகம்போல் சீறியெழுந்து வந்து சிறுவன்முன் நின்று, கத்தியை உருவிக் கையால் பிடித்துக்கொண்டே கத்தினான்.

"மூடச் சிறுவனே! சோழ அதிகாரிக்கு மாபெரும் அவமானம் இழைத்துவிட்டாயே! அது ராஜாங்கத் துரோகம் என்றும் கருதாமல் இந்த ராஜாங்க சபையை அவமதித்துவிட்டாயே? தேசத் துரோகி!'' என்று உறுமினான் அஞ்சுகோட்டை நாடாள்லான்.

"அதைச் சொல்ல உனக்கென்ன யோக்கியதை இருக்கிறது? எனக்குத் துணையாக நின்று போரிடுவதாக என் தந்தையிடம் சத்தியம் செய்துவிட்டு, வடக்குக் கோட்டை வாசலை எதிரிகளுக்குத் திறந்துவிட்ட நம்பிக்கைத் துரோகியல்லவா நீ!'' என்று சிறுவன் பராக்கிரமன் காறி உமிழ்ந்தான்.

அடுத்த கணம் ஆக்ரோஷத்தில் குமுறிய அஞ்சுகோட்டை நாடாள்வான் தன் கத்தியை ஓங்கி அச்சிறுவனின் கழுத்தை நோக்கி வீசினான்.

மறுகணம் அந்தச் சிறுவனின் தலை கழுத்திலிருந்து துண்டிக்கப்பட்டு விக்கிரமபாண்டியனின் காலடியில் லந்து விழுந்தது! சிறுவனின் கழுத்திலிருந்து பீறிட்ட ரத்தத்திலிருந்து சில துளிகள் ஜனநாதன் முகத்திலும் தெறித்தன. ஜனநாதன் தன் முகத்தில் ரத்தத் துளிகளோடு கலந்து லழியும் எச்சிலையெல்லாம் தன் விரல் நுனியால்

நன்றாக வழித்தெடுத்து வீசினான். அந்த ரத்த நிறம் கொண்ட எச்சில் அஞ்சுகோட்டை நாடாள்வானின் முகத்தில் போய் விழுந்து வழிந்தது! தலையற்று விழுந்த சிறுவனின் முண்டத்தைக் கண்டதும் அங்கிருந்த ஜனத்திரள் ஒருகணம் திக்பிரமையடைந்து மௌனமாக நின்றது. மேலே என்ன செய்வது என்று ஜனங்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

அப்போது ஜனக் கும்பலிலிருந்து ஒருவன், "அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒழிக! துரோகி ஒழிக!" என்று முதன்முதலில் கத்தினான். அவ்வளவுதான்! அதைத் தொடர்ந்து ஆட்டு மந்தைகள் போல் மற்ற ஜனங்களும் உணர்ச்சி வசமாகி ஆத்திரமும் அருவருப்பும் கொண்டு கத்தினார்கள்: "அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒழிக! துரோகி ஒழிக!"

"சோழநாட்டுக் குள்ள நரிகளே! ராட்சஸர்களே! எங்கள் நாட்டை விட்டுத் தொலைந்து போங்கள்!" என்றெல்லாம் ஜனங்கள் கோஷமிட்டுக் கலகம் செய்யத் தொடங்கினார்கள்.

"அக்கிரமக் கொலை புரிந்த அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒழிக! கொலைக்குக் கொலை! பழிக்குப் பழி! ரத்தத்திற்கு ரத்தம்!" என்று ஜனக் கும்பலில் ஒரு பகுதி ஆக்ரோஷமாகக் கத்திக்கொண்டே அஞ்சுகோட்டை நாடாள்வானை நோக்கி முன்னேறி லந்தது.

அஞ்சுகோட்டையான் அஞ்சிப் பதறி அரண்மனைக்குள் ஓடி ஒளிந்துகொண்டான்.

விக்கிரமபாண்டியனும் சகலவிதமான அதிகாரிகளும் கூடச் சபை மண்டபத்தை விட்டு எழுந்து உள் மண்டபங்களுக்குள் ஓடிக் கதவுகளைப் 'பட்பட்'டென்று மூடிக் கொண்டனர்!

இவ்வளவுக்கும் ஆதிமூல புருஷனான ஜனநாதனோ எங்கோ மாயமாய் மறைந்துவிட்டான்!

பாதுகாவலுக்கிருந்த போர் வீரர்களோ எவ்வளவுதான் வெட்டுக் குத்து உதை கொடுத்தும் பொங்கி

எழும் ஜனசக்தியின் பேரலைகளை அடக்க முடியவில்லை. சிறிது நேரத்திற்குள் அந்த மந்திராலோசனை மண்டபம் பெரிய கலக மேடையாகவும் பெரும் போர்க்களமாகவும் மாறிவிட்டது!

பெண்களின் கும்பலோ, கீழே ரத்த வெள்ளத்தில் கிடக்கும் சிறுவனின் பிணத்தைப் பார்த்துப் பார்த்து விம்மி விம்மி அழுது, ஆண்களின் கும்பலுக்கு வீர ஆவேசக் கனல் மூட்டியது. அங்கு அழாமலிருந்த பெண்கள் தரையில் மூர்ச்சித்து விழுந்து கிடந்தனர்!

இவ்வளவு நேரமும் ஏதோ எதிர்பாராத அதிர்ச்சியால் தாக்குண்டு ஊர்மிளா முக்காடிட்ட வண்ணம் உயிரற்ற சிலைபோல் தூரத்தில் நின்றாள். அவளுக்குச் சுயநினைவு திரும்பி, கீழே கிடக்கும் சிறுவனின் ரத்தமயமான பிரேதத்தைப் பார்த்ததும், "ஐயோ... பராக்கிரமா...!" என்று நெஞ்சுக்குழி கிழிய வீறிட்டு அலறினாள்.

அந்த அலறலைக் கேட்டதும் ஒருபுறம் நின்ற வீரசேகரன் சட்டென்று ஊர்மிளாவின் குரலை நினைத்துக்கொண்டு ஆவலோடு திரும்பிப் பெண்களின் கும்பலையும் புலம்பலையும் ஊடுருவிப் பார்த்தான். முக்காடிட்டு நின்ற பெண் உருவத்தின் முகம் ஊர்மிளாவின் முகம் போல் ஒரு பிரமை தட்டியது. மறுகணம், "ஆ... பராக்கிரமா!" என்று அவள் அலறிய வண்ணம் கீழே மூர்ச்சித்து விழுந்துவிட்டாளாகையால், அவள் ஊர்மிளாதானா என்று நிச்சயிக்க முடியாமல் வீரசேகரன் திணறினான்.

பொங்குமாங் கடல்போல் பொங்கி விழும் ஜனத்திரளை அவன் விலக்கிக்கொண்டு போய்ச் சேர்வதற்குள் முக்காடிட்ட பெண் நின்ற இடம் சூன்யமாகக் காட்சியளித்தது! அந்த அரண்மனைக்குள் பிணமாகவும் மூர்ச்சித்த பாவைகளாகவும் கிடந்த பெண்களையெல்லாம் சோதித்துப் பார்த்தான். அதற்குள் மாலை மங்கி இருட்டத் தொடங்கியது. உள் மண்டபத்தில் ஜனக்கும்பல் கலைந்து பிரிந்து ஓடிக் குறைந்துவிட்ட தென்றாலும் கலகமும், சேவகர்களுக்கும் பிரஜைகளுக்கும் கைகலப்பும் இன்னும் நின்றபாடில்லை!

போர் வீரர்களின் கத்தி வீச்சுகளுக்குத் தப்பி வெளியே ஓடும் ஜனத்திரளோடு வீரசேகரனும் அரண்மனை வாசலுக்கு ஓடிவந்து அங்கு நின்ற சோழிய வீரனொருவனை நோக்கி, "இந்தப் பக்கம் முக்காடிட்ட பெண் ஒருத்தி ஓடிவந்தாளா?" என்று கேட்டான்.

"அவளை யாரோ ஒரு கிழவி இந்தப் பக்கம் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாள். ஆனால் எந்தப் பக்கம் ஓடினாள் என்று தெரியவில்லை!'' என்று சோழிய வீரன் பதிலளித்தான்.

இனி இருட்டிய பிறகு ஊர்மிளாவைத் தேடுவதில் பயனில்லை என்று நினைத்து வீரசேகரன் மெல்லத் தன் பாசறைக்கு வந்து சேர்ந்தான்.

அங்கே ஜனநாதன் வழக்கம்போல் சிரித்துக் கொண்டே அவனுக்காகக் காத்திருந்தான்!

''யார்! ஜனநாதனா? எனக்கு முன்னால் வந்துவிட்டாயே?" என்று கேட்டான் வீரசேகரன்.

''ஆமாம், தம்பி! ஜனங்களிடையே புரட்சி கிளம்புகிறதென்று தெரிந்ததும் அதற்கு வித்திட்ட நான் அனுமார்போல் ஜனக்கடலையும் தாண்டி முன்னால் தாவி ஓடிவந்து விட்டேன்."

''ஆருயிர் நண்பனான என்னைக் கூட்டத்தில் விட்டுவிட்டாயே?"

"தம்பி, உன் கையில் கத்தி இருப்பதால் எப்படியும் உன்னைத் தற்காத்துக் கொள்வாய்! கத்தியுள்ளவன் சண்டையிடும் ஆட்டு மந்தைகளின் நடுவில் தைரியமாய் நிற்கலாம்! ஆனால் புத்தியுள்ளவன் அந்த இடத்தைவிட்டு ஓடிவந்துவிட வேண்டும்!" என்று கலகலவெனச் சிரித்தான் ஜனநாதன்.

வீரசேகரனுக்கோ சிரிப்பு வரவில்லை. அளவற்ற துயரந்தான் பொங்கி வந்தது.

"தம்பி! இன்று நடந்த அட்சகுமாரன் வதைப்படலம் எப்படி?" என்று சிரித்துக்கொண்டே ஜனநாதன் கேட்டான்.

"உண்மையில் அவனைக் கொன்றது யார்?" என்று வீரசேகரன் வருத்தத்தோடு கேட்டான்.

"கம்பராமாயணப்படி அட்சகுமாரனைக் கொன்றவன் அனுமார்தான்! குரங்கின் வால்போல் தன் கட்சி பலம் நீளும் என்று கனவு கண்ட அந்த அஞ்சுகோட்டை நாடாள்வானை அனுமார் என்று சொல்வதிலும் தவறில்லை!"

"மிகவும் பரிதாபகரமான காட்சி! கொஞ்சமும் ஈவிரக்கமற்ற கொடூரச் செயல்! பாலம் அந்தப் பேதைச் சிறுவனை அஞ்சுகோட்டை நாடாள்வான் படுகொலை செய்துவிட்டான்! பாபி!" என்றான் வீரசேகரன்.

"தம்பி! எய்தவன் இருக்க அம்பை நோவதில் பயனென்ன?" என்றான் ஜனநாதன் மெல்ல.

"ஆமாம்! அஞ்சுகோட்டை நாடாள்வான் உன் கையில் வெறும் அம்புதான்! நீதான் அவனை எய்தவன்! நீ அவ்வாறு ஆவேசம் வரும்படி பேசித் தூண்டியதால்தான் அவன் அந்தச் சிறுவனைப் படுகொலை செய்துவிட்டான்! பாவம், பால் வடியும் அந்தப் பாலகனின் முகத்தைப் பார்த்துக் கூடவா உனக்கு மனமிரங்கவில்லை?... அவன் தலையை வெட்டும்படி ஏன் தூண்டிவிட்டாய்?"

"அந்தச் சிறுவனின் நன்மைக்குத்தான்! நான் அவ்வாறு அவனைத் திடீரென்று இறக்கச் செய்திராவிட்டால் அஞ்சுகோட்டை நாடாள்வான் அந்தச் சிறுவனைச் சிறையிலடைத்து வைத்து வீரபாண்டியனின் ரகசிய இடங்களைச் சொல்லும்படி சித்திரவதை செய்து, அந்த அப்பாவிப் பையனை அங்கம் அங்கமாய் வெட்டி அணு அணுவாக உயிரைப் போக்கியிருப்பான்! அந்தத் துன்ப வாழ்க்கையிலிருந்து விடுதலை செய்யவே அந்தப்

பாலகனுக்கு நான் விரைவில் ஜீவன்முக்தி கொடுத்தேன்!"

''எனக்கு ஒருபுறம் துக்கமும் கண்ணீரும் வந்தாலும் இன்னொரு புறம் நிம்மதி உண்டாகிறது! ஏன் தெரியுமா? வீரபாண்டியன் பலம் பெற்று நம்மோடு மோதி நம் சோழ ராஜ்யத்தை அழிக்க வேண்டுமென்பதற்காக நீ மறைமுகமாக வீரபாண்டியனுக்கு நன்மையான காரியங்களைக்கூடச் செய்வாய் என்று இனி நம் கிழவர் சம்புவராயர் அர்த்த வியாக்யானம் செய்ய மாட்டாரல்லவா? ஏனென்றால், வீரபாண்டியனின் மூத்த மகனைக் கொன்றுவிட்டாய்!"

"இல்லை, தம்பி! வீரபாண்டியனின் நன்மைக்குத் தான் வீரபாண்டியனின் மூத்த மகனைக் கொன்றேன்! ஏனென்றால் ஒரு அரசனுக்கு ஒரு குமாரன்தான் இருக்கலாம்! அநாவசியமாக இரண்டு குமாரர்கள் இருந்தால் அநாவசியமாக அரசியல் போட்டிகள் ஏற்பட்டு மூலபலமே சிதைந்துவிடும்! தவிர வீரபாண்டியனுக்கு இலங்கை ராணிமூலம் பிறந்த மூத்த குமாரனை வெறுக்கும் பல பாண்டி நாட்டுக் கோட்டைத் தலைவர்கள் இனி அவன் கட்சியிலிருந்து வெளியேற மாட்டார்கள்! மூத்தகுமாரன் கொலையுண்டதற்காக வீரபாண்டியன் எனக்கு விலைமதிப்பற்ற பரிசளித்தாலும் நான் ஆச்சரியப்பட மாட்டேன்! இனி வீரபாண்டியனின் கட்சியில், சேரராஜன் முதலாகப் பலரும் சேர்வார்கள்!" என்று விஷமமாய்ச் சிரித்தான் ஜனநாதன்.

''வீரபாண்டியனின் கட்சி நன்மையடைய வேண்டுமென்பதற்காகத்தான் அவனது மூத்த குமாரனைக் கொலை செய்யும்படி நீ தூண்டினாயோ?"

"தம்பி, உன் நன்மைக்குத்தான் அவ்வாறு செய்தேன்!"

"என் நன்மைக்கா...?"

"ஆமாம், தம்பி! நம்மிடமிருந்து தலைநகரை மீட்பதற்கு நம்மீது நியாயமாகப் படையெடுத்து வரவேண்டிய வீரபாண்டியன் இத்தனை காலமும் கோழைபோல் தலைமறைந்திருந்தான்! இப்போது அவனது மூத்த குமாரன் கொலையுண்ட செய்தியறிந்து ஆவேசம் கொண்டு பழிதீர்க்க இந்த மதுரைக் கோட்டைமீது அவசியம் படையெடுத்து வருவான்! உன்னோடு போரிட்டு உன் கையில் வீரமரணமடைவான்! நீ குன்றாப் புகழடைவாய்! நீ வெற்றி வீரனாகத் திகழவேண்டு மென்பதற்காகவே இந்தக் கொடூரமான அட்சகுமாரன் வதைப்படலத்தைப் பாண்டிய மந்திராலோசனை சபை மண்டபத்தில் அரங்கேற்றினேன்! அறிவாளி இரும்பு ஆயுதத்தை உபயோகப்படுத்த மாட்டானாகையால் இன்று அஞ்சுகோட்டை நாடாள்வானையே என் ஆயுதமாக உபயோகப்படுத்தி வீரபாண்டியனின் மூத்த குமாரனைக் கொன்றுவிட்டேன்!"

"அதோடு அஞ்சுகோட்டை நாடாள்வானையும் கர்வ பங்கம் செய்து அவனது சக்தியையும் வதைத்துவிட்டாய்! அவனுக்கு இப்பாண்டி நாட்டு ஜனங்களிடையே எவ்வளவு மதிப்பு இருந்தது! அரசியல் தலைவர்களிடையே எவ்வளவு செல்வாக்கு இருந்தது! இனி ஜனங்களும் நண்பர்களும் அரசியல் புருஷர்களும் சொந்த மனைவி மக்களுங்கூட அவனைக் கண்டு அருவருப்புக் கொள்வார்கள்! அட்சகுமாரன் கொலையின்மூலம் அனைவரின் வெறுப்புக்கும் அஞ்சுகோட்டை நாடாள்வானை ஆளாக்கி விட்டாய்! அவன் உன்னோடு சில வார்த்தைகளைத் தலைகர்வத்தோடு பேசினான் என்பதற்காக அவன் இனி என்றென்றும் தலையெடுக்க முடியாதபடி அவனைச் சர்வநாசம் செய்துவிட்டாய்!"

"தம்பி! அவனுக்கு எவ்வளவு கர்வம்! அவன் வாயசைத்தால் எத்தனையோ பாண்டியத் தலைவர்கள் அவன் பக்கம் சேர்ந்து அனுமார் வால்போல் நீள்வார்களென்றும், நம் சோழப் படையுதவியில்லாமலே வீரபாண்டியனைப் பிடித்துவிட முடியும் என்றும் எவ்வளவு ஜம்பமாய்ப் பேசினான்! இனி நம்

சோழியர்களின் உதவியில்லாமல் இந்தப் பாண்டி நாட்டில் ஒரு காரியமும் நடைபெற முடியாது! இனி அஞ்சுகோட்டை நாடாள்வான் அரசியல் விதவைக்குச் சமம்!"

"அவன் அந்தச் சிறுவனின் தலையை வெட்டியதும் ஜனங்கள் திக்பிரமை அடைந்து மௌனமாய்த்தான் இருந்தார்கள். ஆனால் கும்பலில் எவனோ ஒருவன் முதன்முதலில் "அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒழிக!" என்று கூவியதுந்தான் மற்ற ஜனங்களும் ஆட்டு மந்தைகள்போல் ஆக்ரோஷத்தைப் பின்பற்றிக் கலகம் செய்யத் தொடங்கினார்கள்!"

''தம்பி! அந்தக் கும்பலில் ''அஞ்சுகோட்டை நாடாள்வான் ஒழிக" என்று முதலில் கூவியவன் யார் தெரியுமா?"

"யார்? நீயா?"

"இல்லை! அவன் என் கையாள்!"

"ஆனால், ஆத்திரத்தில் நீ ஒன்றை மறந்துவிட்டாய், ஜனநாதா! நாம் ஆதரிக்கும் விக்கிரம பாண்டியன் கட்சிக்கே அந்த அஞ்சுகோட்டை நாடாள்வான் மூலபலம் போன்றவன்! அவன் தலைவர்களுக்கெல்லாம் தலைவனாய் விளங்கி அக்கட்சியில் ஒற்றுமையும் பலமும் பெருகச் செய்தவன்! இனி அக்கட்சியில் ஒற்றுமை சீர்குலைந்து மிகவும் பலவீனமடைந்துவிடுமே என்றுகூட யோசிக்காமல் செய்து விட்டாயே!"

"அதுவும் நம் சோழியர்களின் நன்மைக்குத்தான், தம்பி! இந்தப் பாண்டிய நாட்டில் நாம் ஒரு பொம்மை அரசாங்கத்தை ஸ்தாபிக்க விரும்பினால், அந்த ராஜாங்க சபைக்கு அடிப்படையான கட்சி மிகவும் பலஹீனமாகத் தான் இருக்கவேண்டும்! அப்போதுதான் எந்தக் காலத்திலும் நம்மிடமிருந்து திமிறச் சக்தியற்று எதற்கும் நம் வாயையும் கையையும் எதிர்நோக்கும் ஒரு பொம்மை அரசாங்கம் இந்நாட்டில் நீடித்திருக்கும்! தம்பி, நீ அரசியலுக்குப் புதிது.

அதனால் உனக்கு அரசியல் சூழ்ச்சி எதுவும் தெரியாது!" என்று ஜனநாதன் சிரித்தான்.

வீரசேகரன் அவனை வியப்புடன் ஏறிட்டு நோக்கி, "ஒரே கல்லில் இரண்டு குருவிகளை அடித்து வீழ்த்தும் சாமர்த்தியம் சிலருக்குத்தான் வரும்!" என்றான்.

''இல்லை, தம்பி! இந்த ஜனநாதன் ஒரே கல்லில் பல குருவிகளையும் குள்ளநரிகளையும் அடித்து வீழ்த்துபவன்!" என்று சிரித்த வண்ணம் ஜனநாதன் சொல்லிக்கொண்டே வீரசேகரனிடம் விடைபெற்றுத் தன் மாளிகைக்குப் போய்விட்டான். அவன் போனதும் வீரசேகரனுக்கு ஊர்மிளாவின் நினைவு வந்து விட்டது.

ஜனங்கள் கலகம் செய்தபோது பெண்களின் கும்பலி லிருந்து முக்காடிட்ட ஓர் இளம் பெண்ணை ஒரு தலைநரைக் கிழவி தூக்கிக் கொண்டு போனாளே. அந்த இளம்பெண் நிச்சயமாக ஊர்மிளாவாக இருப்பாளா? அப்படியானால் அந்தத் தலைநரைத்த கிழவி அவளை ஏன் தூக்கிக் கொண்டு போனாள்?... அந்தக் கிழவி யார்?... ஜனநாதனிடம் கேட்டிருக்கலாமே என்று நினைத்தான்.

ஆனால், "அந்தக் கிழவி ஒருவேளை கபாலிகையாய் இருப்பாள்" என்று ஜனநாதன் பரிகாசம் செய்வானே என்று வெட்கப்பட்டுக் கொண்டு பேசாமல் இருந்துவிட்டான். இப்போது அந்த எண்ணம் அவன் நெஞ்சைத் துளைத்தது!

வீரசேகரன் அன்றிரவு அந்தப் பாசறையிலேயே உணவருந்திவிட்டுப் படுத்துத் தூங்க முயன்றான். ஊர்மிளாவின் அழகிய குறும்பு முகம் சதா அவன்முன் வந்து நின்றது.

"ஊர்மிளாவின் நினைப்பு எனக்கு ஏன் சதா உண்டாகிறது? அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?

ஏதோ யுக யுகாந்தரமாகத் தொடர்ந்து வருவதுபோல் ஒரு மானசீகப் பிணைப்பு தோன்றுகிறதே! அவள் வாய் திறந்து கேட்டால் சிரித்துக் கொண்டே என் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கிறேனே! அப்படியே அவளும் எனக்காக உயிரைக் கொடுப்பாள் என்றும் தோன்றுகிறதே! ஏன்? இது எத்தகைய பாசம்? ஓர் இளம் பெண்ணுக்கும் வாலிபனுக்கும் நடுவே எத்தகைய அன்பு இருக்கமுடியும்? ஒருவேளை காதலோ? அவளை என்னையறியாமல் காதலிக்கிறேனோ?... பின்னே சாதலுக்கும் தயாராகிவிட்டேனே!... இன்று மந்திராலோசனை மண்டபத்தில் பாண்டிய குமாரன் பிணமாகி விழுந்ததைக் கண்டதும் ஊர்மிளா மூர்ச்சித்து விழுந்தாளே?... ஒருவேளை எங்கள் சோழ சாம்ராஜ்யத்தோடு என்னையும் சேர்த்துச் சபித்துக் கொண்டிருப்பாளோ!" இவ்வாறெல்லாம் வீரசேகரன் பலவாறு எண்ணமிட்டுக் கொண்டே படுக்கையில் புரண்டான்.

அன்றிரவு முழுதும் அவனுக்குத் தூக்கம் வரவேயில்லை!

ஊர்மிளாவின் பாசப் புன்சிரிப்பு தவழும் முகமும், அன்று கொலையுண்ட பாலகுமாரனின் பால்வடியும் முகமும் சதா அவன் கண்முன் வந்து நின்று அவனை வதைத்துக் கொண்டேயிருந்தன!



# அத்தியாயம் 13

## வேள்விப் படலம்

'கோமான்
புரியும் வேள்வியும் காண்டும் நாம்
எழுக!' என்று போனான்.

**கம்ப ராமாயணம்**

மறுநாள் பொழுது விடிந்தபோது வீரசேகரனுக்கு, முதலில் ஊர்மிளாவின் ஞாபகந்தான் வந்தது. நேற்று விக்கிரம பாண்டியனின் சபா மண்டபத்தில் அட்சகுமாரன் வதைப்படலமும் ஜனங்களின் கலகமும் நடந்தபோது கீழே மூர்ச்சித்து விழுந்த ஊர்மிளாவை எவளோ ஒரு கிழவி தூக்கிக் கொண்டு போனாளே, அந்தக் கிழவி யாராயிருக்கும் என்று வீரசேகரன் மதி குழம்பினான். ஒருவேளை அவள் கபாலிகையாக இருந்தால், அந்தச் சூன்யக்காரக் கிழவியிடமிருந்து மாயா மோகினியான ஊர்மிளாவைக் காப்பாற்ற வேண்டுமென்று துடிதுடித்தான். மதுரை மாநகரிலுள்ள ஒவ்வொரு சிறு குடிசையையும்கூடச் சோதித்துப் பார்க்க அரசாங்கத்திடம் அனுமதி பெற வேண்டுமென எண்ணமிட்டவனாய் விளக்கு வைக்கும் அந்தி நேரத்தில் தன் வீட்டுக்குத் திரும்பினான்.

அவனுடைய வருகைக்காகத் தெரு வாசற்படியில் ஆவலோடு காத்திருந்த சிவகாமி, வீரசேகரனைக் கண்டதும் துள்ளிக் குதித்து எழுந்தாள். முப்பது வயதான அவள் சிறு பெண்ணைப் போல் அலங்கரித்துக் கொண்டிருப்பது அவளுடைய முதுமையைத்தான் அதிகம் எடுத்துக் காட்டியது. அவள் உற்சாகத்தோடு

வீரசேகரனின் கையைப் பிடித்துப் பரபரவென வீட்டினுள் இழுத்துக்கொண்டு போனாள்.

"வீரசேகரா. நீ நேற்று இரவு முழுவதும் பாசறையி லேயே உறங்கிவிட்டாயா? நான் இந்த வீட்டில் தனியாக எவ்வளவு கஷ்டப்பட்டேன், தெரியுமா?" என்றாள் சிவகாமி.

"எனக்கு உடம்பெல்லாம் ஒரே அசதியாயிருந்தது. பாசறையிலேயே நிம்மதியாக உறங்கிவிட்டேன்!"

"இந்த ஊரில் ஒரு பெரிய அதிசயம் நடந்திருக்கிறது. அந்தச் செய்தி உனக்குத் தெரியுமா?"

"நீ சோழ சாம்ராஜ்யத்தின் சாமர்த்தியமான ஒற்றுப் பெண். உனக்குத் தெரியாதது எனக்கு என்ன தெரியும்?"

"நேற்று அரண்மனையிலே பாண்டிய மந்திரா லோசனை சபை மண்டபத்திலே வீரபாண்டியனின் மூத்தகுமாரனின் தலையை அஞ்சுகோட்டை நாடாள்வான் வெட்டிப் போட்டான் அல்லவா? அப்போது ஜனங்கள் செய்த கலகத்தாலும் குழப்பத்தாலும் பையனின் பிரேதத்தை மண்டபக் கூடத்திலிருந்து அப்புறப்படுத்தாமல் அதிகாரிகள் போய்விட்டார்கள். இராத்திரி இரண்டு காவற்காரர்கள் மட்டும் கூடத்தின் வாசலில் காவல் இருந்தார்களாம். நடுச்சாமத்தில் யாரோ இரண்டு பெண்கள் இரகசியமாக உள்ளே நுழைந்து பையனின் பிரேதத்தையும் தலையையும் தூக்கிக் கொண்டு மாயமாய் மறைந்துவிட்டார்களாம்! தூக்கக் கலக்கத்தில் இருந்த இரண்டு காவற்காரர்களும் ஏதோ பேய் பிசாசுகளின் நடமாட்டம் என்று பேசாமல் இருந்துவிட்டார்கள். விடிந்த பிறகுதான் விஷயம் தெரிந்ததாம்!"

"யார் அந்த இரண்டு பெண்கள்?"

"ஒருத்தி தலைநரைத்த கிழவியாம்; இன்னொருத்தி குமரிப்பெண்ணாம்!"

"அவள் ஊர்மிளாதான்! அந்தத் தலைநரைத்த கிழவி அவளுடைய தாயாராகத்தான் இருக்கவேண்டும்!" என்று வீரசேகரன் உற்சாகத்தோடு கூவினான்.

"ஊர்மிளாவா?... என்று கேட்ட சிவகாமியின் முகம் அளவற்ற பீதி அடைந்தது. "யார் அவள் ஊர்மிளா? அவளை உனக்கெப்படித் தெரியும்?" என்று கலவரமடைந்த குரலில் கோபமாய்க் கேட்டாள்.

"ஒன்றும் இல்லை! அரசியல் சம்பந்தமாகத்தான் ஊர்மிளாவை எனக்குத் தெரியும். அவள் வீரபாண்டியனின் ஒற்றுப்பெண். அவளை அரசாங்க விசாரணைக்காக நான் சிறை பிடித்துப் போகும் போது அவள் என்னை ஏமாற்றித் தப்பியோடிவிட்டாள். நல்லவேளை, அரசாங்கம் அவளை மறந்துவிட்டது!"

அப்போது ஜனநாதன் கலகலவென்று சிரித்துக் கொண்டே அங்கே வந்தவன், "தம்பி! அரசாங்கம் அவளை மறந்துவிடலாம். ஆனால் இந்த ஜனநாதன் மறக்கவில்லை! நீ ஊர்மிளாவைக் கைநழுவி ஓடவிட்ட காட்சி என் நெஞ்சில் பசுமரத்தாணிபோல் பதிந்திருக்கிறது" என்றான்.

"அந்த ஊர்மிளாவுக்கு என்ன வயது இருக்கும்?" என்று சிவகாமி சட்டென்று ஜனநாதனைக் கேட்டாள்.

"ஊர்மிளா இளவயசுப் பெண்தான். உன்னைவிடப் பத்து வயசாவது குறைந்தவளாயிருப்பாள். ஆனால் உன்னைவிடப் பத்து மடங்கு அழகானவள்!" என்றான் ஜனநாதன். அதைக் கேட்ட சிவகாமியின் முகம் அதிகமாய்ப் பீதியடைந்தது.

வீரசேகரனோ துள்ளிக் குதித்தவனாய், "ஊர்மிளாவை நான் எப்படியும் சிறை பிடித்துவிடுவேன்! வீரபாண்டியனின் மூத்தகுமாரனுக்கு நல்லமுறையில் ஈமக்கிரியை நடத்தவேண்டுமே என்பதற்காகவேதான் ஊர்மிளாவும் அவளுடைய தாயாரும் பையனின் பிரேதத்தை ஆலோசனை மண்டபத்திலிருந்து இரகசியமாகத் தூக்கிக் கொண்டு போயிருக்கிறார்கள். சுடுகாட்டிற்குப் போனால் அவர்களைச் சுலபமாகப் பிடித்துவிடுவேன்!" என்றான்.

"தம்பி, சதா சுடுகாட்டைப் பற்றியே நினைக்கிறாய்! அவசரப்படாதே! இன்னும் அதற்குக் காலம் வரவில்லை"

என்று ஜனநாதன் பரிகாசம் செய்துவிட்டு, "தம்பி, வீரபாண்டியனின் மூத்தகுமாரனை அவ்வளவு பகிரங்கமாகச் சுடுகாட்டில் சுட்டெரிக்க ஊர்மிளா உன்னைப்போல் அவ்வளவு அசடல்ல!" என்றான்.

ஏதோ ஒரு பிரமையில் ஆழ்ந்திருந்த சிவகாமி சட்டென்று, "அந்தக் கிழவியும் குமரியும் பையனின் பிரேதத்தைத் தந்திரமாக மதுரைக் கோட்டையைவிட்டுக் கடத்திக்கொண்டு போய்விட்டார்கள். நேற்றிரவு தன் பையனுக்கு அம்மை நோய் கண்டிருப்பதாகவும், வேண்டுதலுக்காகக் கோட்டைக்கு வெளியே உள்ள காளியம்மன் கோயிலுக்குக் கொண்டுபோக வேண்டுமென்றும் கிழவி கூச்சலிட்டாளாம். காவற்காரர்கள் அவர்களை வெளியே போக விட்டுவிட்டார்களாம்! இந்தத் தெருவில் குடியிருக்கும் காவற்காரக் கிழவன் மனைவி என்னிடம் சொன்னாள்!" என்றாள்.

அதற்கு விளக்கம் தருவதுபோல் ஜனநாதன் விவரிக்கலானான்: "தம்பி, பையனின் பிரேதம் இந்நேரம் வீரபாண்டியனிடம் சேர்ந்திருக்கும். தன் மூத்த குமாரன் அநாதைப் பிணம்போல் ஆலோசனை மண்டபத்தில் அழுகுவதையோ, அந்நியர்களான நாம் ஈமக்கிரியை நடத்திப் பையனின் பிரேதத்தைச் சுடலைத் தீயில் வைத்து வேள்வி செய்வதையோ வீரபாண்டியன் விரும்ப மாட்டான். இந்த வேள்விப் படலத்தை ரகசியமாக அவனே நடத்த விரும்புவான்."

"அப்படியானால் வீரபாண்டியன் இரகசியமாகப் பதுங்கியிருக்கும் கோட்டைக்கு ஊர்மிளா போய்விட்டாள். இனி அவளைச் சிறைபிடிப்பது சிரமம். ஆனால் நான் மரணத்திற்கும் துணிந்து வீரபாண்டியன்மீது படையெடுத்துச் சென்று ஊர்மிளாவை எப்படியும் சிறைபிடித்து விடுவேன்!" என்றான் வீரசேகரன்.

சிவகாமி மிகவும் மனம் பதறியவளாய், "வேண்டாம் வேண்டாம், வீரசேகரா!" என்று கூவி, "நாம் இந்தப் பாண்டிய தேசத்தையே விட்டு நம்முடைய சொந்தத்

தேசமான சோழ நாட்டுக் கிராமத்துக்கே போய்விடுவோம், வா! உன்னைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டியவள் நான். கூலி வேலை செய்தாவது சமைத்துப் போடுகிறேன்! நீ வீட்டைவிட்டு வெளியே போகவேண்டாம். உனக்கு இந்த அரசியலே வேண்டாம்!" என்று சொல்லிவிட்டு ஜனநாதனை நோக்கி, "அரசியலை விட்டு இவன் விலகிவிடுவது நல்லது இல்லையா?" என்று கேட்டாள்.

"ஆமாம். அதனால் அரசியலுக்குக் கூட நல்லதுதான்! ஏனென்றால் இவனைப் போன்ற அப்பாவிகளால்தான் மக்களின் அரசியல் எதேச்சாதிகாரிகளின் அரசியலாக மாறிட நேரிடுகிறது" என்று சிரித்துவிட்டு ஜனநாதன் தனக்கு முக்கியமான காரியம் ஒன்று இருப்பதாகச் சொல்லிப் போய்விட்டான்.

அவன் போனதும் எங்கிருந்தோ ஒரு சேவகன் ஓடிவந்து வீரசேகரனின் காதுக்குள் ஏதோ ரகசியமாகச் சொல்லவே, அளவிலாத ஆனந்தமடைந்தவனாய் வீரசேகரன் அவசரமாகச் சிறைச்சாலையை நோக்கி ஓடினான்.

பாண்டியர்களின் மதுரை மாநகரில் சோழிய அதிகாரிகள் இரகசியமாக அமைத்திருக்கும் சிறைச் சாலைக்குள் நுழைந்து வீரசேகரன் வெகு நாழிகை கழித்து மறுபடி வெளியே வந்தான். சிறைக்காவலரை நோக்கி, "அவர்கள் தப்பி விடாதபடி பத்திரமாய்ப் பாதுகாத்திடுங்கள். அவர்களை வைத்திருக்கும் சிறைக்கதவுக்கு மூன்று பூட்டுப் போடுங்கள்!" என்று எச்சரித்துவிட்டு ஜனநாதனின் மாளிகையை நோக்கி வீரசேகரன் வேகமாகத் தன் வெள்ளைக் குதிரைமீது சென்றான்.

வழக்கமான பரிகாசச் சிரிப்புடன் ஜனநாதன் அவனை வரவேற்றதும், "ஜனநாதா! வீரபாண்டியன் பதுங்கியிருக்கும் கோட்டைக்குப் படையெடுத்துச் சென்று அவனைச் சிறைபிடிப்பது முக்கியமா இல்லையா?" என்றான் வீரசேகரன்.

“ஆமாம், அப்போதுதானே வீரபாண்டியனோடு ஊர்மிளா உனக்குக் கிடைப்பாள்!” என்று சிரித்தான் ஜனநாதன்.

“ஊர்மிளாவைப் பிடிக்கவேண்டும் என்பதற்காக மட்டும் சொல்லவில்லை. தீவிரமாகச் சிந்தித்துப் பார்! நாம் தலைநகரான மதுரையைக் கைப்பற்றி விட்டாலுங்கூடச் சுற்றுப்புறங்களிலுள்ள பாண்டிய நாட்டுக் கிராமங்கள் இன்னும் நமக்குச் சரியாக அடங்கவில்லை! வீரபாண்டியனை மறுபடியும் ஆட்சிக்குக் கொண்டு வரவேண்டுமென அவன் கட்சியினர் பல ஊர்களிலும் இடையிடையே ஜனங்களைத் தூண்டிவருகின்றனர். நாம் வீரபாண்டியனின் சக்தியை அடியோடு நிர்மூலமாக்கி, அவனைச் சிறைப்பிடித்து அடக்கினால்தான் பாண்டிய நாட்டின் எதிர்ப்புச் சக்தி அடியோடு அடங்கும். அப்போது தான் நாம் விக்கிரமபாண்டியனுக்கு முடிசூட்டி நமக்குத் தோதான ஒரு அரசியலை இங்கு அமைத்துவிட்டு விரைவில் நம் சோழ தேசத்துக்குத் திரும்பிப் போக முடியும். வீரபாண்டியன் ரகசியமாகப் படை தயாரிக்கும் கோட்டைமீது நாமே படையெடுத்துச் சென்று வீரபாண்டியனைச் சிறைபிடிப்பது மிக முக்யம்” என்றான்.

“தம்பி, அது முக்கியந்தான்! ஆனால் வீரபாண்டியன் இந்த விஸ்தாரமான நாட்டில் எந்த ஊரில் எந்தக் கோட்டைக்குள் பதுங்கியிருக்கிறான் என்பதையல்லவா நீ முதலில் கண்டுபிடிக்க வேண்டும்?” என்றான் ஜனநாதன் அலட்சியமாக.

“நான் கண்டுபிடித்து விட்டேன்” என்று உற்சாகமாய்க் கூவிய வீரசேகரன் புலிக்குட்டி போல் பாய்ந்து ஜனநாதனின் கையைப் பிடித்து இழுத்து, “நம் சோழ சாம்ராஜ்யத்தின் புலிக்கொடி வானளாவிப் பறக்கும் காலம் வந்துவிட்டது. என் இலட்சியக் கனவு பலிக்கும் நாள் நெருங்கிவிட்டது” என்று சொல்லிக் கொண்டே சிறைச்சாலைக்குக் கூட்டிக் கொண்டு போனான்.

"தம்பி, வீரபாண்டியனைப் பிடித்துச் சிறைக்குள் அடைத்து வைத்திருக்கிறாயா?" என்று ஜனநாதன் பரிகாசமாய்க் கேட்டுக் கொண்டே சிறைச்சாலையை அடைந்ததும் வீரசேகரன் அங்குள்ள பாதாளச் சிறைக்குள் இறங்கி ஓர் இருண்ட அறையைச் சுட்டிக் காண்பித்தான். மூன்று பெரிய பூட்டுக்கள் இட்டுப் பூட்டப்பட்டிருந்த அந்தச் சிறு அறைக்குள் சுமார் இருபதுக்கு மேற்பட்ட பரதேசிகள் அடைபட்டிருந்தார்கள். எல்லோரும் திருநீறணிந்து சிவனடியார்களாகக் காட்சியளித்தார்கள்.

"தம்பி, இந்தச் சிவனடியார்கள் எல்லாம் யார்? இந்த அன்னப் பண்டாரங்களை எங்கே பிடித்தாய்? ஒருவேளை வீர வைஷ்ணவனான நீ இந்தச் சிவ பக்தர்களுக்கு விரைவில் உன் கத்தி முனையில் கைலாச பதவி கிடைக்க இந்தச் சிறைச்சாலையில் அடைத்து வைத்திருக்கிறாயோ? அல்லது வீரபாண்டியன் அப்பர் சுவாமிகள் கோலத்தில் இந்தச் சிவனடியார் கூட்டத்தில் இருக்கிறானோ?" என்று ஜனநாதன் பரிகாசச் சிரிப்புடன் கேட்டான்.

வைஷ்ணவனான வீரசேகரனைக் கண்டு வெறுப்புற்ற சிவனடியார்கள், நெற்றியில் சிவ சின்னம் தரித்துள்ள ஜனநாதனைக் கண்டதும், அவன் தங்களை விடுதலை செய்வான் என்ற ஆவலோடு, "ஹரஹர சம்போ மகாதேவா! அடியார்கள் குறைதீர்க்க அவதரித்து வரும் ஆண்டவா!" என்று கூச்சலிடத் தொடங்கினார்கள்.

"வீரசேகரா! இந்த மெய்யடியார்களை எந்தச் சோம்பேறி மடத்திலிருந்து பிடித்து வந்தாய்? நமது சிறைச்சாலைக்கு அவர்களை எதற்காக அதிதிகளாக அழைத்து வந்திருக்கிறாய்? இப்போதே இந்தச் சிறையிலுள்ள குற்றவாளிகளுக்குச் சாப்பிடத் தீனி கிடைக்காமல் சைவர்கள் கூட மாமிச பக்ஷிணிகளாக மாறிச் சிறைச் சுவர்களில் ஊரும் பல்லிகளையும் கட்டெறும்புகளையுங்கூடப் பிடித்துச் சாப்பிடுகிறார்கள். ஒருவேளை சுத்த சைவர்களைச் சுத்த அசைவர்களாக மாற்ற வேண்டுமென்பது உன் வைஷ்ணவ எண்ணமோ என்னமோ?" என்று ஜனநாதன் பரிகாசமாய்க் கேட்டான்.

"இவர்களை நான் பிடிக்கவில்லை. இலங்கையிலிருந்து இவர்கள் ஒரு சிறு படகில் வந்து இரகசியமாய்ப் பாண்டிய நாட்டுக் கரையில் இறங்கினார்கள். நம் சோழ வீரர்கள் சந்தேகப்பட்டு இவர்கள் போகும் ஊர்களுக்கெல்லாம் பின்பற்றிச் சென்று கடைசியில் இவர்கள் இளையான்குடிக்குப் போகும்போது சிறைபிடித்து விட்டார்கள். இவர்கள் இலங்கை மன்னன் பராக்கிரம பாகுவிடமிருந்து வீரபாண்டியனுக்கு இரகசியமாகச் செய்தி கொண்டு வருபவர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் நமக்குப் புரியாத வகையில் எழுதப்பட்ட சில ஓலைகள் இந்தச் சிவனடியார்களிடம் இருந்தன" என்று ஜனநாதன் காதுக்குள் இரகசியமாக வீரசேகரன் சொன்னான்.

மிகவும் குறுகலான இருண்ட சிறைக்குள் மூச்சு விடக்கூட முடியாமல் நெறுக்குண்டு நின்ற சிவனடியார்களெல்லாம், "ஹரஹர சம்போ மகாதேவா, இது என்ன சோதனை, முக்கண்ணா!'' என்று கூச்சலிட்டார்கள்.

அந்த அடியார்களை நோக்கி ஜனநாதன் சிரித்துக்கொண்டே, "சிவனடியார்களே! அநாவசியமாகக் கூச்சல் போடாதீர்கள்! நீங்கள் இந்தச் சிறைச்சாலைக்குள் உபவாச விரதம் அநுஷ்டிக்க வேண்டுமென்பது மட்டுமல்ல, மௌன விரதமும் அநுஷ்டிக்க வேண்டுமென்று எங்கள் சோழ அரசாங்கம் வற்புறுத்துகிறது. மெய்யடியார்களே! அநாவசியமாகக் கூச்சல் போட்டு மெய்யெனப்படும் உங்கள் உடம்புகளுக்கு அடிகள் விழும்படி செய்து கொள்ளாதீர்கள்!'' என்றான் ஜனநாதன்.

அதைக் கேட்டதும் சிவனடியார்கள் வாய் ஒடுங்கி விட்டார்கள். அவர்களின் தலைவர்போல் விளங்கிய ஒரு குங்குமச் சாமியாரின் கண்களில் அதிகக் கலவரம் உண்டாயிற்று. நெடிய ஆகிருதியும் பரந்த தோள்களும் உள்ள அவர், கண், காது, மூக்கு என்று உடம்பில் ஓர் இடமும் விடாமல் சிவந்த குங்குமத்தை அள்ளி அப்பிக்கொண்டு சுய உருவம் தெரியாதபடி குங்கும மலை

போலவும் இரத்தக் கொப்பரை போலவும் இருந்தார். அவருடைய ஒரு கையில் குங்கிலியக் கலயம் ஒன்றும் இன்னொரு கையில் குங்கிலியத் தூம தீபக்காலும் இருந்தன.

அவரைச் சுட்டிக்காட்டி ஜனநாதன், "இவரைப் பார்த்தால் அப்பர் சுவாமிகளாய்த் தெரியவில்லையே! இவர் கையில் உழவாரப் படை இல்லை. அதற்குப் பதில் குங்கிலியக் கலயம் இருக்கிறது. இவர் குங்கிலியக் கலய நாயனாரேதான்!" என்றான்.

அதைக் கேட்டதும் அந்நாயனார் அதி வியப்படைந்தவராய், "அடியேன் குங்கிலியக் கலய நாயனார்தான். நீவிர் எவ்வாறு அறிவீர்? சிவபெருமான் கனவில் தோன்றிச் சொன்னாரோ?" என்றார்.

"நாயனாரே, நான் அஜீரணம் ஏற்படும்படி அன்னம் புசிப்பதில்லையாதலால் எனக்குக் கனவுகள் தோன்றுவதில்லை! பெரியீர்! சேக்கிழார் பெரியபுராணம் படித்த காலம் முதலாக நான் விரைவில் சிவலோகம் சேர்ந்து குங்கிலியக் கலய நாயனாரைத் தரிசிக்க வேண்டுமென்று ஆவல் பட்டதுண்டு. நீரே என் கண்முன் இப்பூலோகத்தில் பிரத்தியட்சமாகி விட்டீர்!" என்றான் ஜனநாதன்.

குங்கிலியக் கலய நாயனார் திருதிருவென்று விழித்தார்.

ஜனநாதனோ அதிபக்திப் பரவசமானவன்போல், "நாயனாரே, திருக்கோயிலில் குங்கிலியத் தூபமிடுவது உம் திருத்தொண்டல்லவா? நீர் உம் மனைவியின் தாலியை விற்றுக் குங்கிலியப் பொதி வாங்கிய பேரடியார் அல்லவா? உம் மனைவியாருக்கு மறுபடி புதுத் தாலி வாங்கிக் கொடுத்துவிட்டீரா?" என்று கேட்டான்.

"எனக்கு மனைவியே இல்லை!" என்றார் நாயனார்.

"அப்படியானால் நான் பெரிய புராணத்தில் படித்த குங்கிலியக் கலய நாயனார் கதை பொய்யா?

திருப்பனந்தாள் கோயிலிலே சிவலிங்கத் திருவுரு சாய்ந்திருந்ததே, அரசன் யானைகளையெல்லாம் கட்டி இழுத்தும் லிங்கம் நிமிரவில்லையாமே? உம் கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்தே லிங்கத்தை நிமிர்த்தி விட்டீராமே! நான் படித்த அதெல்லாங்கூடப் பொய்யா?" என்று ஜனநாதன் கேட்டான்.

"திருப்பனந்தாள் கோயில் சிவலிங்கத்தை நான் நிமிர்த்தவில்லை. அக்கோயிலிலுள்ள நாயனார் பூஜைக்கு நிலங்களைத் தானந்தான் செய்தேன்!" என்றார் நாயனார்.

"குங்கிலியக் கலய நாயனாரே, நீவிர் இலங்கையி லிருந்து வந்த காரணம் என்ன? அப்பர் சுவாமிகளையும், திருஞான சம்பந்தரையும் தரிசித்து அவர்களுக்கு எப்போது விருந்து அளிக்கப் போகிறீர்? நாங்களும் அவர்களைத் தரிசிக்க வழிகாட்டுவீரா?" என்று ஜனநாதன் கேட்டுவிட்டு வீரசேகரனை நோக்கிக் கடைக்கண்ணால் சிரித்தான்.

குங்கும நாயனார் திருதிருவென விழித்தார்.

"குங்கிலியக் கலயரே, சேக்கிழாரின் பெரிய புராணம் முடிந்து இத்தனை காலமும் நீர் எப்படி உயிரோடிருக்கிறீர்? ஏன் உமக்கு இன்னமும் சிவபதவி கிடைக்கவில்லை?" என்றான் ஜனநாதன்.

"மூடனே, நான் பெரிய புராணத்தில் வரும் பெருந்தகைக் குங்கிலியக் கலய நாயனார் அல்லேன். அவர்மீதுள்ள பக்தியால் நானும் அவர் பெயரைச் சூட்டிக் கொண்டு குங்கிலியக் கலயத்தைத் தூக்கிக்கொண்டு திருத்தொண்டு செய்கிறேனே தவிர, வேறல்ல; நீ சைவனாயிருந்தும் அந்த வைஷ்ணவனோடு சேர்ந்து சிவனடியார்களான எங்களைப் பரிகசிப்பது அடாத செயல்!" என்றார்.

வீரசேகரன் உற்சாகத்துடன் ஜனநாதனை நோக்கி, "இந்த வேஷதாரிகள் இலங்கையிலிருந்து வந்து எதற்காக இளையான்குடிக்கு அவசரமாகப் போனார்கள் தெரியுமா? இப்போதாவது வீரபாண்டியன் எங்கே இரகசியமாகப்

பதுங்கியிருக்கிறான் என்பதை யூகிக்க முடியவில்லையா?" என்று கேட்டான்.

அவனைக் கூர்ந்து பார்த்த ஜனநாதன், "இப்போது எனக்குத் தெரிகிறது! இளையான்குடிக்கு அருகில் நெட்டூர்க் கோட்டை இருக்கிறது. அது மிகவும் பாழடைந்த பெரிய கோட்டையாக இருந்ததால் அதை நாம் கைப்பற்றவும் இல்லை; கவனிக்கவும் இல்லை. வீரபாண்டியனும் அவனது குடும்பமும், அவனுடைய படைகளும், உன்னுடைய ஊர்மிளாவுங்கூட அந்த நெட்டூர்க் கோட்டைக்குள் மறைந்திருக்கிறார்கள். இதுதானே உன்னுடைய யூகம்?" என்று சிரித்தான் ஜனநாதன்.

"ஆம்; வீரபாண்டியன் இரகசியமாகப் படை திரட்டும் நெட்டூர்க் கோட்டையின்மீது நாம் உடனே எதிர்பாராதவிதமாகப் படையெடுத்துச் சென்று கைப்பற்ற வேண்டும். ஜனநாதா! நம் சோழ அரசாங்கத்தின் அரசியல் சட்டசபையை அவசரமாகக் கூட்டிப் படையெடுப்பின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்திப் பேசவேண்டும்!" என்றான்.

ஜனநாதனோ அலட்சியமாய்ச் சிரித்துக் கொண்டே குங்கும நாயனாரின் பக்கம் திரும்பி, "ஓய் நாயனாரே, நீர் ஏன் இளையான்குடிக்கு அவசரமாகச் சென்றீர்? அப்பர் சுவாமிகளைத் தரிசிக்கவா? பிராட்டியாரைச் சந்திக்கவா?" என்று கேட்டான்.

குங்கிலியக் கலயர், "இளையான்குடி மாற நாயனாரைச் சந்திக்க இளையான்குடிக்குச் சென்றேனே தவிர, வேறல்ல!" என்றார்.

"மாறன் என்பது பாண்டியர்களின் மரபுச் சொல். இளையான்குடி மாற நாயனார் என்று நீர் குறிப்பிடுவது வீரபாண்டியன்தானே? அவனுடைய ஆளுடைய பிள்ளையாரான திருஞானசம்பந்தர் நேற்று அரண்மனையிலே அஞ்சுகோட்டை நாடாள்வான் வாள்முனையிலே சிவகதி அடைந்த புராணத்தை அப்பர் சுவாமிகளிடம் சொல்லத்தான் கிளம்பினீரோ?"

குங்கிலியக் கலயர், "சிவ சிவ" என்று காதைப் பொத்திக் கொண்டு, "அதெல்லாம் அல்ல. நானும் இளையான்குடியாரும் சேர்ந்துகொண்டு ஒரு மாபெரும் வேள்வி நடத்தப் போகிறோம்!" என்றார்.

"எதற்கு வேள்வி? வீரபாண்டியனை மறுபடி ஆட்சிக்குக் கொண்டுவர, இப்பாண்டிய நாடு முழுவதும் தீ வைத்துக் கொளுத்தும் வேள்வியா?" என்று கேட்டான் ஜனநாதன்.

"அல்ல! உங்கள் சோழ அரசாங்கம் எங்கள் சைவ சமயத்துக்குப் பெருங்கேடு விளைவித்து வருகிறது. இப் பாண்டிய நாட்டின் ஆதி சைவ சமயம் பௌத்த மதத்தைப்போல் சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆனால் உங்கள் சோழ அரசருக்கு ஞான குருக்களாயும் சைவாசாரிகளாயும் வந்து அமருபவர்கள் லாட தேசத்திலிருந்தும், வடதேசத்திலிருந்தும் வந்தவர்கள். சைவ சமயத்தில் கடவுளின் பெயரால் ஜாதியாசாரத்தை உண்டுபண்ணி அசுத்தப்படுத்துகிறார்கள். அதைப் புனிதப்படுத்துவதற்காகவே நாங்கள் ஒரு மாபெரும் வேள்வி நடத்தப் போகிறோம்!" என்றார் நாயனார்.

அப்போது சிறைக் காவலதிகாரிகளில் ஒருவன் வீரசேகரனிடம் வந்து, "இந்தப் பரதேசிச் சாமியார்களை மேற்கொண்டு என்ன செய்வது? சதா தாளம் போட்டுச் சத்தம் போடுகிறார்கள். நிறையவும் சாப்பிடுவார்கள் போல் இருக்கிறது. நம்முடைய சிறைச்சாலைப் பண்டாரத்தில் நவதானியங்கள் குறைவாகத்தான் இருக்கின்றன. எங்கள் காவற்படை அதிகாரியிடம் சொல்லி இந்த அன்னக்காவடிகளை வெளியே அனுப்பி விடலாமா?" என்று கேட்டான்.

"வேண்டாம்; இவர்களை இரகசியமாய் இங்கே சிறை வைத்திருப்பது ஒரு ஈ காக்கைக்குக் கூட வெளியே தெரிய வேண்டாம். வீரபாண்டியனின் நெட்டூர்க் கோட்டையின் மீது படையெடுத்துச் செல்லும்போது இந்தப் பரதேசிகளால் நமக்குப் பல சௌகரியங்கள் ஏற்படும். முக்கியமாகச் சுயரூபம் தெரியாமல் குங்குமத்தால் தம் உடலை

மறைத்துக்கொண்டிருக்கும் குங்கிலியக் கலய நாயனார் நமக்கு அதிகம் உபயோகப்படுவார். அவரைப் பத்திரமாகப் பாதுகாத்திடுங்கள்!" என்றான் வீரசேகரன்.

"அதோடு அவருக்குச் சிறையில் நிம்மதியாகத் தூபம் போட ஒரு பொதி குங்கிலிய மூட்டையும் கொடு. ஆனால் அந்த மெய்யடியார்கள் சதா உபவாசம் இருப்பவர்களாகையால் ஒரு வேளைக்கு மேல் அமுது படைக்காதே!'' என்றான் ஜனநாதன் சிரித்துக் கொண்டே.

சிறைச்சாலையை விட்டு வீரசேகரன் வெளியே வந்ததும், முகத்தில் லட்சிய ஆவல் பீறிட ஜனநாதனை நோக்கி, "நாம் நெட்டூர்க் கோட்டையை எதிர்பாராத விதமாக முற்றுகையிட்டால் வீரபாண்டியனைச் சுலபமாகச் சிறைபிடித்து விடுவோம். பாண்டிய நாட்டுப் பிரச்சினை தீர்ந்துவிடும். பிறகு நம் லட்சிய யாத்திரை தொடங்கும். அகில உலகத்திலும் தமிழர் நாகரிகத்தைப் பரப்பச் சோழ சாம்ராஜ்யத்தின் வீரப் படையினர் திக்விஜயம் செய்வார்கள். திக்கெட்டும் தீ ஜ்வாலைவிட்டு எரியும். நம்முடைய லட்சிய வேள்வி தொடங்கும் காலம் பிறந்துவிட்டது!" என்றான்.

"வேள்விப் படலம் ஒன்று இருந்தால் அதற்கு ஒரு ஆற்றுப் படலம் இருக்குமென்பதையும் மறந்துவிடாதே!" என்று கலகலவெனச் சிரித்தான் ஜனநாதன்.



# அத்தியாயம் 14

## அரசியல் படலம்

*நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும், நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும் எவர்க்கும் அன்னான்.*

**கம்ப ராமாயணம்**

மனத்தில் இலட்சிய எண்ணங்களுடன் வீட்டிற்கு வந்த வீரசேகரனுக்கு சேனை மீகாமனிடமிருந்து ஓர் அரசியல் ஓலை காத்திருந்தது. அரசாங்க முத்திரை பதித்த ஓலை என்றதும் வீரசேகரன் பதறினான். அரசியல் குற்றவாளியான ஊர்மிளாவைக் கைநழுவவிட்ட தவறுக்குத்தான் தன்மீது நடவடிக்கை எடுக்கச் சேனைமீகாமன் ஓலை அனுப்பியிருக்கிறாரோ என்று பீதியடைந்தான். ஆனால் ஓலையைப் பிரித்துப் பார்த்ததும் அதில் அவன் சிறிதும் எதிர்பாராத செய்தி இருந்தது:

"மதுரைப் படை ஏழாவது பிரிவைச் சேர்ந்த வீரசேகரனுக்கு, சேனை மீகாமன் கிளியூர் மலையமான் பெரியுடையானான இராஜராஜச் சேதிராயன்மூவம் பிறந்த கட்டளை:"

"மதுரை இராச காரியமாய் ஆலோசிக்க நம் சோழ மண்டலத்துக்குச் சாமந்தர்களும் உடன் கூட்டத்துப் பெருமக்களான முதலிகளும், வரும் வெள்ளிக்கிழமை உதயாதி நாழிகை பத்தே முக்காலுக்கு மேல் ஆயிரத்தளி மந்திராலோசனை மண்டபத்தில் கூடுகிறமையால் அதுசமயம் மதுரை வெற்றிக்கு உதவி புரிந்த உன் தைரியத்தைக் கௌரவிக்கும் பொருட்டு வீரப்பதக்கம்

பரிசளிக்கவிருப்பதாகச் சொன்னோம். பாண்டி மண்டல இராச காரியமாய் உன் அபிப்பிராயங்களை எடுத்துச் சொல்லப் பண்ணவும் நம் சோழ மண்டல மந்திராலோசனை சபையில் உன்னை ஒரு உறுப்பினனாகச் சேரப் பண்ணவும் வேணுமென்று வான்நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயர் சொன்னமையால் இராசதேவர் திருவாய் மலர்ந்தருளினபடி இன்றுமுதல் நீ அந்த உரிமைபெறக் கடவதாகச் சொன்னோம். மந்திராலோசனை சபையில் உன் ஆசன எண் எழுநூற்று முப்பத்தேழு என்றும், சபைக்குள் உன்னை அனுமதிப்பதற்கும் அங்கீகரிப்பதற்கும் இந்தக் கட்டளை ஓலையே போதுமானதென்றும் சொன்னோம். எழுதினான் திருமந்திரவோலை..."

மேற்கூறிய ஓலையைப் படித்து முடித்ததும் வீரசேகரன் தனக்கு இவ்வளவு தூரம் மதிப்பு உயர்ந்துவிட்டதா என்று ஒரு கணம் மலைத்து நின்றான். தனக்காக இவ்வளவு தூரம் பிரயாசைப்பட்ட ஜனநாதனை உள்ளூர வாழ்த்தினான்; மதுரையைக் கைப்பற்றியதுமே, மதுரையிலே சோழ ராஜதந்திரிகளின் மந்திராலோசனை சபை கூடும் என்று எதிர்பார்த்தான். ஆனால், என்ன காரணத்தாலோ, அரசாங்க அசமந்த வழக்கப்படி, சபை இத்தனை நாட்களாகக் கூடாமல் தள்ளிப் போடப்பட்டுக்கொண்டே வந்து, இப்போது அவசரமாகச் சோழியர் தலைநகரான ஆயிரத்தளியில் கூடப் போகிறது... மூன்றாங் குலோத்துங்கச் சோழன் காலத்தில் சோழவேந்தரின் தலைநகராய் விளங்கியது கும்பகோணத்தை அடுத்துள்ள ஆயிரத்தளி ஆகும். நந்திபுரம், பழையாறை, முடிகொண்ட சோழபுரம் என்றும் அதற்குப் பல பெயர்கள் வழங்கப்பட்டன. பாண்டிய மண்டலத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பு சோழ மண்டலத்தின் தலைநகரான ஆயிரத்தளியில் காத்திருந்தது! அது சமயம் வீரபாண்டியன் கட்சியை நிர்மூலமாக்க உடனே அவன் பதுங்கியிருக்கும் நெட்டூர்க் கோட்டைமீது படையெடுத்து முற்றுகையிட வேண்டிய அவசியத்தைப் பற்றி மந்திராலோசனை சபையில் வற்புறுத்திப் பேச வேண்டுமென வீரசேகரன்

நினைத்தான். 'ஆனால் அவ்வளவு பெரிய மந்திர சபையில், முதிர்ந்த ராஜதந்திரிகள் முன் எவ்வாறு சங்கோஜமில்லாமல் எழுந்து நின்று பேசுவது? சபையில் பேசிப் பழக்கமில்லையே; சோழ ராஜதந்திரிகளின் மாபெரும் சபையை ஒரு முறைகூடக் கண்ணால் பார்த்ததுமில்லையே; வீரப்பதக்கம் சன்மானம் பெறுவதற்கு வெறும் இரண்டொரு உபசார வார்த்தைகள் பேசுவதற்குக் கூட வாய் வராதே?' என்றெல்லாம் சபைக் கூச்சத்தைப்பற்றிக் கற்பனை செய்து வீரசேகரன் மதி குழம்பினான். அன்றிரவெல்லாம் அவனுக்குத் தூக்கமில்லை. மதுரையை விட்டுக் கிளம்பி ஆயிரத்தளி நகரை வந்தடைந்து இரண்டு நாட்களான பிறகும் அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

மந்திராலோசனை சபை கூடுவதற்கு முதல் நாளான வியாழக்கிழமை அவனையறியாமல் வெகு வேகமாக நெருங்கிவிட்டது! சபைக் கூச்சத்தை நீக்குவதற்கு ஏதாவது வழியுண்டா, மருந்துண்டா என்றெல்லாம் வீரசேகரன் யோசித்துக் கொண்டே இரவு முழுவதையும் தூங்காமல் கழித்தான். சபைப் பரிச்சயமுள்ள ஜனநாதனின் யோசனையைப் பெறலாமென்றாலோ அநாவசியமான சமயத்திலெல்லாம் வலிய வந்து பேசும் அவன், அவசியமான சமயத்தில் தேடிச் சென்றாலும் தரிசனம் தரவில்லை!

ஒருவழியாக இரவு கழிந்து பொழுது விடியத் தொடங்கியது! வீரசேகரன் படுக்கையைவிட்டுத் துள்ளியெழுந்தான். இந்த அதிகாலை நேரத்தில், யாரும் இல்லாத வேளையில், மந்திராலோசனை மண்டபத்தை ஒருமுறை பார்த்துவிட்டு வந்தால் ஒருவேளை தன் சபைக் கூச்சம் நீங்கித் தைரியம் வரலாம் என்று நினைத்தான்.

போர் முகத்து மந்திராலோசனை மண்டபம் அரண்மனையையொட்டி ஒரு நந்தவனத்தின் நடுவே இருந்தது. அதைச் சுற்றி ஒரு காத தூரம் வரை ஆள் அரவமே இல்லை. இரகசிய மண்டபத்துக்குள் ஈ காக்கைகூட எட்டிப் பார்க்க முடியாதபடி சுற்றிலும் பலத்த காவல் இருந்தது. ஒரு மாபெருங் காவற்படையே இவ்வளவு

அதிகாலை நேரத்தில் காவலுக்கு வந்துவிட்டது. அங்குமிங்கும் ஓடியாடி வேலைகள் பார்த்துக் கொண்டிருந்த சிற்றாட்களெல்லாம், இன்ன இன்ன சிற்றரசர்கள் இன்னின்ன நேரத்தில் புறப்பட்டு வருகிறார்கள். எந்தெந்த நாட்டதிகாரி எந்தெந்த நேரத்தில் தலைநகருக்குப் புறப்பட்டு வந்து எவரெவர் மாளிகையில் தங்கியிருக்கிறார்கள் என்பது பற்றிய செய்திகளைப் பரிமாறிக் கொண்டிருந்தனர். வீரசேகரன் போர் வீரனுக்குரிய சின்னம் தரித்திருந்ததால் அவன் நந்தவனத்திற்குள் நுழைவதையோ, மண்டபக் கட்டுவாசல் வரை செல்வதையோ யாரும் பொருட்படுத்தவில்லை.

பெரிய பெரிய தூண்களுடன் வானத்தை முட்டுவதுபோல் நிற்கும் மண்டபம் ஒருபுறம் கம்பீரத்தையும் இன்னொருபுறம் பீதியையும் வீரசேகரனுக்கு அளித்தது. மண்டபத்தைச் சுற்றித் தொங்கும் ஆலவட்டங்களையும், தோரணங்களையும், புலிக் கொடிகளையும் சபை கூடுவதற்கு முன்னுள்ள பிரமாதமான ஏற்பாடுகளையும் பார்க்கும்போது வீரசேகரனுக்கு அடிநாக்கு வறண்டது. ஆலோசனை மண்டபத்துப் பிரகாரங்களின் உள்ளும் புறமும் செவிடர்களான பணியாட்களும் ஊமைகளான காவலாட்களும் தயாராய் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தார்கள். அவர்கள் அங்குள்ள சிலைகளோடு சிலைகளாக மௌனமாக நின்றனர். கடிகை மாராயத்தினரும் வாச்சிய மாராயத்தினரும் தங்கள் கருவிகளுடன் காத்திருந்தனர்.

மண்டபத்தினுள்ளோ மாபெரும் சூன்யம் நிலவியிருந்தது. தூபக் கால்களில் சாம்பிராணிப் புகை போடப்பட்டு, கமகமவென்று நறுமணம் வீசியது. கருங்கல் தரைகளெல்லாம் சலவைக்கல் பளிங்கு போல் பளபளவென மின்னுமாறு சுத்தமாகக் கூட்டி மெழுகப்பட்டிருந்தன. ஏழு சுற்று வட்டங்களாக மொத்தம் எழுநூறு ஆசனங்களுக்கு மேல் போடப்பட்டிருந்தன. அவற்றினடியில் உயர்தர இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. ஆசனம் என்பது தங்க முலாம்

பூசப்பட்ட ஒரு மரப்பலகையும், அதன்மீது ஒரு பட்டுத் திண்டும், முதுகு சாய்ந்து கொள்வதற்கு இன்னொரு திண்டுந்தான்! ஒவ்வொரு ஆசனத்தின் முன்னும் ஒரு சிறு முக்காலியும், அதன்மீது ஏடு நறுக்குகளும் வெள்ளி எழுத்தாணியும் பலவித வியவகாரக் குறிப்புகளடங்கிய ஓர் ஏட்டுப் பிரதியும், விஷய அட்டவணையும் வைக்கப்பட்டிருந்தன. அவற்றோடு ஒவ்வொரு ஆசனத்தின் பக்கமும் பொன்னால் புனைந்து புலி இலச்சினை பொறித்த கைப்பிடியுடன் ஒவ்வொரு சிறு கை மணி வைக்கப்பட்டிருந்தது தான் பேசப் போவதாக அறிவிக்கவோ; அடுத்த கோடியிலுள்ளவரின் பேச்சை இடைமறித்து நிறுத்துவதற்கோ!

அங்கிருந்த ஒவ்வொரு ஆசனத்தருகிலும் ஒவ்வொரு எண் உள்ள சீட்டை வரிசையாகக் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு வந்தார் ஒரு சோழிய அதிகாரி. அவர் வயதான கிழவராய், பூதாகாரமான தோற்றமும், பெரிய மீசைகளும், பெரிய தொந்தியும் உள்ளவராய், மார்பில் ஏராளமான அதிகாரச் சின்னங்கள் அணிந்தவராகவுமிருந்தார். அவருடைய முகத்திலுள்ள முறைப்பையும் கடுமையையும் பார்க்கும்போது எந்தத் திடசித்தனுக்கும் ஒரு கணம் நெஞ்சு கலங்கவே செய்யும். ஆனால் வீரசேகரனோ, தன்னுடைய எண்ணுள்ள சீட்டு எந்த ஆசனத்தின்மீது கட்டித் தொங்க விடப்பட்டிருக்கிறது, எந்த மகானுபாவனருகில் வீற்றிருக்க நேரிடும் என்று அறியவேண்டுமென்னும் ஆவலுடன் மண்டபத்திற்குள் ஒரு காலை எடுத்து வைத்து எட்டிப் பார்த்துவிட்டான். அவ்வளவுதான்; அங்கிருந்த கிழட்டு அதிகாரி புற்றுப் பாம்புபோல் சீறினார்.

"யாரடா அவன்?... உன் காலை எடு; உன் கால் தூசு தரையில் பட்டுவிடப் போகிறது!... போ, போ! அப்பாலே போ! என்ன நிற்கிறாய்? இந்த எல்லைக்குள் எவன் வந்தாலும் நான் கண்ணை மூடிக்கொண்டு கண்டதுண்டமாய் வெட்டிப் போடுவேன்! அந்த அதிகாரம் இந்த நாட்டில் என் ஒருவனுக்குத்தான் உண்டு!" என்று அந்த அதிகாரி அதட்டி விரட்டினார். அவர் முகத்தை ஏறிட்டுப் பார்க்கக்கூடத் தைரியமில்லாதவனாய்,

அவருடைய மார்பிலுள்ள அதிகாரச் சின்னங்களையே வெறித்துப் பார்த்துக் கொண்டு, வீரசேகரன் வெளியே வந்துவிட்டான்.

அப்போது ஆபத்பாந்தவனைப் போல ஜனநாதன் எங்கிருந்தோ தன் வெள்ளைக் குதிரைமீது அங்கு வந்து சேர்ந்தான்.

"ஜனநாதனா?..." என்று வீரசேகரன் ஆவலோடு கூவி அவனை வரவேற்றான்.

"என்ன வீரசேகரா, இவ்வளவு அதிகாலையிலே சபா மண்டபத்திற்கு வந்துவிட்டாய்? உதயாதி நாழிகை பத்தரைக்குமேல் தானே சபை கூடப் போகிறது?" என்று கேட்டுக் கொண்டே வந்த ஜனநாதன் வேகமாக வீரசேகரன் தோள்களைப் பிடித்து உலுக்கி, "வீரப்பதக்கம் சன்மானம் பெறுவதற்கு இன்னும் கொஞ்ச நாழிகை காத்திருக்கக்கூடாதா?... அதற்குள் தங்க விலையொன்றும் குறைந்துவிடாது, தம்பி! உன் ஊர்மிளாவும் தங்க ஆசாரியும் வெளியே காத்திருக்கவும் மாட்டார்கள்!" என்று விஷமமாய்ச் சிரித்தான்.

"இல்லை! எனக்கு வீரப்பதக்கம் முக்கியமில்லை. நம் அரசியல் விஷயந்தான் முக்கியம்!"

"வீரபாண்டியன் பதுங்கியிருக்கும் நெட்டூர்க் கோட்டைமீது படையெடுக்க நீ இன்னும் கொஞ்ச நாழிகை பொறுக்கக்கூடாதா? நம் அரசியல் கிழவர்கள் நீராகாரம் சாப்பிட்டு வெற்றிலை மென்று அசைபோடக்கூட விட மாட்டாய்போல் இருக்கிறதே!" என்றான் ஜனநாதன்.

"நீ ஏன் இவ்வளவு அதிகாலையில் சபா மண்டபத்திற்கு வந்தாய்? சபையில் பேசுவதற்கு முன் ஏதாவது விவரங்கள் குறித்துப் போகவா?" என்று வீரசேகரன் கேட்டான்.

"இல்லை, தம்பி! சபையில் பேசுவதற்குமுன் நான் ஆரம்பப் பிரசங்கிகள் போல் குறிப்புகள் எழுதி வைத்துக் கொள்வதில்லை! அதிகப் பிரசங்கிகள் போலக்

குறிப்பில்லாமல் பேசுவதுமில்லை! நம் அரசியல் கிழவர்களைப்போல இரண்டொரு வார்த்தை முனகி விட்டு உட்காருவதுமில்லை! உன்னைப் போலப் பலதடவை ஒத்திகை பார்த்துக் கொண்டு வருவதுமில்லை!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"பின் எதற்காக இவ்வளவு அதிகாலையில் வந்தாய்?"

"சில சில்லறை விஷயங்களுக்காக வந்தேன்!" என்று ஜனநாதன் சொல்லிவிட்டு, "சபா மண்டபத்திற்குள் இப்போது எவன் அடை காக்கிறான்?" என்று கேட்டான்.

"ஒரு வயதான சோழிய அதிகாரி இருக்கிறார்?" என்று வீரசேகரன் உள்ளே ஆசனங்களுக்கு எண் சீட்டு கட்டித் தொங்கவிட்டுக் கொண்டிருந்த பயங்கரமான சோழிய அதிகாரியைச் சுட்டிக் காட்டினான்.

ஜனநாதன் உட்பக்கம் திரும்பிக் கைகளைத் தட்டினான். அந்தச் சோழிய அதிகாரி திகைப்புடன் திரும்பிப் பார்த்தார். ஜனநாதன் தன் கைவிரலைச் சுண்டி அவரைக் கூப்பிடவே, அவர் நாய்போல் ஓடிவந்து அவன்முன் பவ்யமாய் நின்றார்!

"என்ன ஆடையூர்க் கிழவா! நீ புதிதாய் ஒரு வீடு கட்டினாயே, அந்த வீட்டிற்கு மர உத்திரம் எங்கிருந்து வந்தது? உன் அருமைக் கூட்டாளியான யுத்த தளவாடக் கணக்கப்பிள்ளை புதிதாய் ஒரு வீடு கட்டினாரே, அந்த வீட்டிற்கும் உத்திரம் எங்கிருந்து வந்தது? தேர்ப்படையில் ஒரு பெரிய தேர் தீயில் எரிந்துவிட்டதென்று பொய்க் கணக்கு எழுதி, தேரின் மரக்கால்களைப் பிரித்து உங்கள் வீடுகளுக்கு உத்திரமாக உபயோகப்படுத்திக் கொண்டீர்கள், இல்லையா?" என்று கேட்டான் ஜனநாதன்.

அந்தச் சோழிய அதிகாரிக்கு முகம் சுருங்கியது; கழுகுக் கண்களில் பீதி நிறைந்தது.

"அதனால் பரவாயில்லை. கிழவா! தேரானது வீடுகளை இடிப்பதற்கு உபயோகப்படாமல் வீடுகளைக் கட்டுவதற்கு உபயோகப்பட்டதே பெரிய கைங்கரியம்!"

என்று ஜனநாதன் சிரித்துவிட்டு, "இன்று சபையில் எந்தெந்தப் பெரிய மனுஷன் வாய் உளறப் போகிறான் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியாது!" என்று அந்த கிழட்டு அதிகாரி குழைவான குரலில் சொன்னார்.

"கிளியூர்க் கிழவர் தம் ஆசனத்தை எங்கே போடச் சொல்லியிருக்கிறார்?"

"யார், கிளியூர் மலையமான் ஆகார சூரனான கம்பீர சேதிராயரா?"

"ஆமாம்! அந்தச் சொன்னதைச் சொல்லும் கிழட்டுக் கிளிப் பிள்ளைதான்!"

"அந்தக் கிழவர் வழக்கம்போல் தம் ஆசனத்தைக் கடைசி வரிசையிலே போடச் சொல்லியிருக்கிறார்!"

"அதாவது, வழக்கம்போல இன்றும் அவர் பேசப் போவதில்லை! வழக்கம்போல் இன்றும் கடைசி வரிசையில் நிம்மதியாகச் சிந்தனை நித்திரை செய்யப் போகிறார்!... அந்தக் கிழவர் கிடக்கட்டும்! பல்லில்லாக் கிழவர் தம் ஆசனத்தை எங்கே போடச் சொல்லியிருக்கிறார்?"

"பெருமான் நம்பிப் பல்லவராயரா?"

"ஆமாம், அந்த வெறும் அவலை மெல்லும் பல்லவர்தான்!"

"அந்தக் கிழவர் கடைசி வரிசையிலுள்ள தம் ஆசனத்தைத் தூக்கி முன் வரிசையில் போடச் சொல்லி யிருக்கிறார்."

"அதாவது, இன்று அவர் என்னை எதிர்த்துப் பேசப் போகிறார்."

"அப்படித்தான் தோன்றுகிறது! அந்தக் கிழவர் தம் ஆசனத்தின் கீழ்ச் சிட்டுக்குருவி லேகியமும் மறைத்து வைக்கச் சொல்லியிருக்கிறார்!"

"அதாவது, அரை நாழிகை நேரம் பேசப் போகிறார்! சிட்டுக்குருவி லேகியம் அந்தக் கிழவருக்கு அரை நாழிகை நேரம் எழுந்து நின்று பேசும் யௌவன சக்தியை அளிக்கும்!"

கிழட்டு அதிகாரி அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

ஜனநாதன் அக்கிழவரை நோக்கி, "நல்லது! அந்தக் கிழவரின் ஆசனத்தைத் தூக்கி வழக்கம்போல் கடைசி வரிசையிலே போட்டு விடு. கடைசி வரிசையிலிருந்து இரைந்து பேசமுடியாமல் அந்தக் கிழவர் சும்மா இருப்பதே சுகம் என்று இருந்துவிடுவார்! கேட்டால் முன் வரிசையில் இடம் காலி இல்லையென்று சொல்லிவிடு!" என்றான்.

"உங்கள் ஆசனத்தை எங்கே போடுவது?"

"இப்போது எவன் பேச்சைக் கேட்டுக் கொண்டு எந்த மூலையில் போட்டிருக்கிறாய்?"

"வழக்கம்போல் முன் லரிசையில் ஏகவாசகன் வாணகோவரசருக்குப் பக்கத்தில் போட்டிருக்கிறேன்!"

"அந்த மெய்ப்பொருள் நாயனாருக்குப் பக்கத்தில் இந்தக் கழற்சிங்க நாயனாருக்கு ஆசனம் போடவேண்டாம்! அவருக்கு எதிர்வரிசையில் என் ஆசனத்தைப் போடு! இன்று அவரை நான் எதிர்த்துப் பேசப் போகிறேன்! அதோடு நான் பேச்சின் நடுவே எதையாவது ஆத்திரமாகக் குத்திப் பேசும்போது ஏதாவது கடகடவென்று ஆடிச் சப்தம் கேட்க வேண்டும்! அதனால் என் ஆசனத்தின் முன்னுள்ள முக்காலியில் ஒரு காலைக் கொஞ்சம் வெட்டிக் குறைத்து விடு!"

"போன தடவை வெட்டிய முக்காலி இருக்கிறது! அதையே போட்டுவிடுகிறேன்! வேறெதாவது செய்ய வேண்டுமா?"

"என் ஆசனத்தினடியில் கொஞ்சம் மூக்குப் பொடி மட்டையை மறைத்துவை! இன்று சபையில் யாராலது பேசும்போது நான் அபசகுனமாய் இரண்டு முறை தும்ம வேண்டும்!"

"இன்று இவ்வளவு அவசரமாக எதற்காகச் சபை கூட்டப்பட்டிருக்கிறது? நீங்களா சபையைக் கூட்டச் சொன்னீர்கள்?"

"கூட்டுவது என் வேலையல்ல! ஏகவாசகரின் வேலை அது! இன்று மதுரை இராசகாரிய விஷயமாய் ஒரு முக்கியமான முடிவு செய்யப் போகிறார்கள்! சக்கரவர்த்தி உடனே சபை கூட்டச் சொல்லிவிட்டார்!"

"சபைக்கு இராசதேவர் வருவாரா?"

"சக்கரவர்த்தி வரமாட்டார்! அரசியல் சக்கரத்தை உருட்டுவதற்கு வழக்கம்போல் திருமந்திர ஓலைகள் நாயகத்தை அனுப்பி வைப்பார்!"

"நான் வேறு ஏதாவது செய்ய வேண்டுமா?"

"மகதை நாடாள்வாரின் ஆசனத்தில் நிறைய மூட்டைப் பூச்சிகள் உள்ள திண்டாகப் பார்த்துப் போடு! சபையைச் சீக்கிரமாக முடித்தால் போதுமென்று அவர் அதிகமாகப் பேசும் எவன்மீதும் எரிந்து விழுந்து கொண்டேயிருக்கட்டும்!"

"வேறு ஏதாவது...?"

"செங்கேணி அத்திமல்லரான நம் கிழவர் சம்புவராயரின் ஆசனத்னத எந்த மூலையில் போட்டிருக்கிறாய்?... அந்தக் கிழவரை என் பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தால்தான் அவர் தம் திருவாயை மூடிக்கொண்டு நான் திருவாய் மலர்ந்தருளுவதை மெய்மறந்து கேட்டுக்கொண்டிருப்பார்! அவருடைய ஆசனத்தைத் தூக்கி என் இடது கைப்பக்கம் போடு! இந்தப் புது வாலிபனின் ஆசனத்தைத் தூக்கி என் வலதுகைப் பக்கம் போடு! இவன் எனக்கு லலது கை போன்றவன்!"

"இந்தப் பையன் யார்?"

"இவன்தான் வீரசேகரன்!"

“எழுநூற்று முப்பத்தேழாவது எண்ணா?”

“ஆமாம்!” என்று ஜனநாதன் சொல்லிவிட்டு வீரசேகரனைக் கூட்டிக்கொண்டு நந்தவனத்தைக் கடந்து வெளியே வந்தான்.

“மந்திராலோசனை சபை நேரம் நெருங்க நெருங்க எனக்குப் பயமாயிருக்கிறது!” என்றான் வீரசேகரன்.

“என்ன பயம்? நீ ஊர்மிளாவைத் தப்பி ஓடவிட்ட குற்றம் உன்னையும் என்னையும் தவிர வேறு ஒரு பிராணிக்குக்கூடத் தெரியாது!” என்றான் ஜனநாதன்.

அதற்கில்லை! வயது முதிர்ந்த ராஜதந்திரிகள் அமர்ந்திருக்கும் மந்திராலோசனை சபையில் முற்றிலும் புது இளைஞனான நான் எப்படி வாய்விட்டுப் பேசுவது என்ற பயந்தான்!”

“பல்லில்லாத கிழவர்களைக் கண்டு பல்லுள்ள வாலிபன் எதற்காகப் பயப்படவேண்டும்?”

“நான் சபையில் பேசுவதற்கு எவ்வளவோ விஷயங்களை மனப்பாடம் செய்து வந்திருக்கிறேன்! ஆனால் சபை நடுவே சங்கோஜத்தால் என் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளிவராது போல் இருக்கிறது! சபைக் கூச்சத்தை நீக்குவதற்கு ஏதாவது வழி சொல்லமாட்டாயா?”

“அதென்ன பிரமாதம்? உன்னைத் தவிர சபையிலுள்ள அத்தனை பேரும் முட்டாள்கள் என்று நினைத்துக் கொள்! உனக்குச் சுலபமாகப் பேச வந்துவிடும்!”

“நம் ராஜதந்திரிகள் ஒரு வார்த்தைக்கு ஒன்பது அர்த்தங்கள் வைத்துப் பேசக் கூடியவர்களாயிற்றே! நான் எதைப் பேசுவது?”

“நீ எதை வேண்டுமானாலும் பேசு! நீ என்ன பேசுகிறாய் என்று ஒருவன்கூடக் கவனிக்க மாட்டான்! ஒவ்வொருவனும் தன் பேச்சில் தான் குறியாயிருப்பான்!”

*"நான் பேசும்போது பெரியவர்கள் என் முகத்தைக் கூர்ந்து பார்த்தால் எனக்குத் தொடை நடுக்கம் வந்துவிடும்!"*

*"கவலைப்படாதே! எல்லோரும் கண்ணை மூடிக் கொண்டு நிம்மதியாக அனந்தசயனம் செய்வதற்குத்தான் அரசியல் சபைக்கு வருகிறார்கள்."*

*''நம் சோழிய ராஜதந்திரிகள் வைதிக சம்பிரதாயங்களைக் கவனிக்கக் கூடியவர்களாயிற்றே, நான் சபைக்குள் முதன் முதலில் நுழையும்போது இடதுகாலை எடுத்து வைப்பதா? வலதுகாலை எடுத்து வைப்பதா?"*

*"எந்தக் காலை வேண்டுமானாலும் எடுத்து வை. எவனும் கீழே குனிந்து பார்க்கமாட்டான். எவனும் மமதையுடன் தலைநிமிர்ந்து தான் வீற்றிருப்பான்."*

*"சரி சரி, வா ஜனநாதா! போய்க் குளித்துவிட்டுக் குறித்த நாழிகைக்குள் சபைக்கு வந்து சேரவேண்டும்."*

*"இல்லை, இல்லை. நாம் பலரைக் காக்க வைத்து நேரங்கழித்துச் சபைக்கு வந்தால்தான் நம்மை எல்லோரும் கவனிப்பார்கள்; நம்முடைய மதிப்பும் உயரும்" என்று ஜனநாதன் சிரித்தான்.*

*உதயாதி நாழிகை பத்தரைக்குமேல் சோழ ராஜதந்திரிகளின் மாபெரும் மந்திராலோசனை சபை கூடியது. சிற்றரசர்களும் ''உடன் கூட்டத்துப் பெருமக்களான" முதலிகளும் நாட்டதிகாரிகளும் தங்கள் பரிவாரங்களுடன் வந்திருந்தனர். மதுரை அரசியல் சம்பந்தமாக முக்கியமானதொரு முடிவு செய்யும் சபையாகையால், மதுரையிலுள்ள இராசப் பிரதிநிதிகளும் இராசாங்கத் தூதர்களும் வந்திருந்தார்கள். அரசியல் தலைவர்களெல்லாம் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து நின்று மெல்ல உரையாடிக் கொண்டிருந்தார்கள் சிவப்பழம்போல் விளங்கிய எதிரிலி சோழ சம்புவராயர் இன்னொரு கிழவரிடம் தம் உத்திராக்ஷ மாலையை*

உருட்டிக் கொண்டே ஜனநாதனைப் பற்றிக் குறை கூறிக் கொண்டிருக்கும்போது ஜனநாதன் அச்சபைக்குள் வந்தான். அக்கிழவரை ஜனநாதன் கடைக்கண்ணால் விஷமமாய்ப் பார்த்துக்கொண்டே, "பேச்சுப் பேச்சு என்னுமாம் கிளி; பெரும் பூனை வந்தக் கால் கீச்சு கீச்சு என்னுமாம்" என்று பாடிக்கொண்டே நடந்தான்.

கிழவர் கோபமுற்று அவனை நோக்கி, "ஜனநாதா! சுதேசம், ஆசாரம், மதம், வைதிகம் எல்லாவற்றையும் அலட்சியமாகக் கருதுகிறாய். பௌத்தனாய்ப் பிறக்க வேண்டியவன் தப்பிச் சுத்தச் சைவனாய் பிறந்துவிட்டாய்! பெரியவர்களை நையாண்டி செய்வதே உன் பிழைப்பு! கடவுள் உன்னைத் தண்டிக்காமல் விடமாட்டார்!" என்றார்.

"கடவுளா! அவரை உம் நாக்கில்தான் பார்க்க முடிகிறதே தவிர. உம்முடைய உத்திராக்ஷக் கொட்டையில் கூட நான் பார்த்ததில்லையே! ஐயா, பெரியவரே! கடவுள் உமக்கு மட்டும் சொந்தமான சொத்தல்ல; எல்லோருக்கும் சொந்தமானவர்தான்!" என்று சொல்லிவிட்டு ஜனநாதன் தன் ஆசனத்தில் கம்பீரமாக அமர்ந்தான்.

அங்கிருந்த பெரிய பெரிய தலைவர்களையெல்லாம் ஜனநாதன் தனக்கு அறிமுகம் செய்து வைப்பான் என்று வீரசேகரன் எதிர்பார்த்தான். ஆனால் அவர்களின் குணக்கோளாறுகளையும் பலவீனங்களையும் ஜனநாதன் வர்ணித்தானே தவிர, அருகில் ஒருவனைக் கூட அண்ட விடவில்லை. கழுகுக் கண்களிடமிருந்து புறாவைக் காப்பாற்றுவது போல் வீரசேகரனைக் காப்பாற்ற முயன்றான்.

சபை ஆரம்பமாகும் நேரம் வந்ததும் மும்முறை மணியடித்து அறிவிக்கப்பட்டது.

சபையைப் பிரதம மந்திரி ஆரம்பித்து வைத்தார். சபையில் எள்ளுப் போட்டால் எள் ஒலி கேட்கும்படியான நிச்சப்தம் நிலவியது. ராஜதந்திரிகள் அனைவரும் அடைகாக்கும் பெட்டைக் கோழிகளைப் போல உன்னிப்பாகவும் கரும சிரத்தையாகவும் தங்கள்

ஆசனங்களில் உட்கார்ந்திருந்தார்கள். ஜனநாதன் மட்டும் அலட்சியமான தோரணையுடனும் வேண்டுமென்றே அடிக்கடி வீரசேகரன் பக்கம் திரும்பிச் சிரித்துக் கொண்டும் அட்டஹாசமாய் உட்கார்ந்திருந்தான். சபையிலுள்ள கிழவர்கள் சிரிப்பு வரும் திசையில் அடிக்கடி திரும்பி முறைத்துப் பார்த்தார்கள். ஜனநாதன் பக்கத்தில் ஏன் உட்கார்ந்தோம் என்றுகூட வீரசேகரனுக்குத் தோன்றியது. மந்திராலோசனை சபை விஷய அட்டலணையில் முதலாவதாக வீரசேகரனுக்குத் தங்கப்பதக்கம் சன்மானமளிக்கும் சடங்கு நடைபெற்றது. அதைப் பலர் ஈமச்சடங்குக் கிரியையைக் கவனிப்பது போல் கவனித்தனர்.

வீரப்பதக்கம் பெற்ற வீரசேகரன் சபையை நோக்கி, "பெரியவர்களே! இன்று இந்தச் சிறுவனின் வாழ்வில் ஒரு பெருநாள். உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கும் என் உணர்ச்சிகளை எப்படி லார்த்தைகளால் சொல்லுவ தென்று தெரியவில்லை. என் சொல்லாலும் செயலாலும் இந்த மகாசபைக்கு, இராச காரியத்துக்கு, இராச தேவருக்கு, இச்சோழ மண்டலத் தாய்க்கு நான் என்றென்றும் கட்டுப்பட்டிருப்பேன். நம் சோழர்களின் புலிக்கொடி தமிழ் நாகரிகத்தின் சின்னமாய் எங்கெங்கும் தலைதூக்கிப் பறக்க என் உயிரையும் தியாகம் செய்வேன். என் இராச கடமையிலிருந்து எள்ளத்தனையும் தப்பினேனாகில் ஏழா நரகில் கீழா நரகம் புகுவேனாக!" என்று கூறிவிட்டு அமர்ந்தான் அங்குள்ள பல தலைவர்களையும் தனித்தனியாகப் புகழ்ந்து கூறவேண்டுமென்று எவ்வளவோ முகமன் வார்த்தைகளை மனப்பாடம் செய்து வந்திருந்தான்; ஆனால் முகஸ்துதி செய்வது அவனுக்குப் பழக்கமில்லையாகையால் அவ்வளவையும் மறந்து விட்டான். அவனது கடமையுணர்ச்சியைப் பற்றிய உள்ளப் பூர்வமான பேச்சுக்கு அங்கிருந்த ஒருவரிடமிருந்தாவது கைதட்டல் கிடைக்கவில்லையென்றாலும், ஏகவாசகர் வாணகோவரசரின் கூர்மையான கண்களிலும், ஆடையூர் நாடாள்வாரின் கூர்மையான நாக்கு முனையிலும் இலேசான புன்னகைகள் கிடைத்தன. அந்த மதிப்புக்குரிய புன்னகைகளுக்காகவே வீரசேகரன் தன் உயிரையும்

தியாகம் செய்யக் கூடிய மனப்பான்மையுடையவனாக இருந்தான்.

அரசியலின் கூறுகளான வீரப்பதக்கப் படலமும் முகஸ்துதிப் படலமும் முடிந்த பிறகு அன்று சபை அட்டவணையிலுள்ள மதுரை அரசியலைப் பற்றி முக்கியமான விவாதம் ஆரம்பமாயிற்று.

பாண்டிய இராச காரியமாய் மதுரை அரசியலுக்கு விரைவில் ஒரு முடிவு காண வேண்டுமென்று குலோத்துங்கச் சோழச் சக்கரவர்த்தி விரும்புவதாக, அவர் திருவாய் மலர்ந்தருளியதைத் "திருவாய்க் கேள்வி" நாயகரான வேளாளர் எழுந்து நின்று சபையில் வெளிப்படுத்தினார்.

"கருவூரில் உள்நாட்டுக் குழப்பத்தை அடக்குவதற்கும், கங்கைப் படையெடுப்பு இலங்கைப் படையெடுப்பு முதலான திக்விஜயங்களுக்குப் படை தயாரிப்பதற்கும் உடனடியாக அரசாங்கப் படை தேவைப்படுகிறதென்றும், கைக்கோளப் படையையும் மூன்று மகாசேனைகளையும் அநாவசியமாக மதுரையில் நிறுத்தி வைக்க அவசியமில்லையென்றும், மதுரை அரசியலுக்கு ஒரு நிர்ணயத் திட்டம் தயாரித்துச் சோழநாட்டின் ராஜப் பிரதிநிதியாய் விக்கிரமபாண்டியனை மதுரைச் சிம்மாசனத்தில் அமர்த்திவிட்டுச் சோழ அதிகாரிகளையும் படைகளையும் விரைவில் தலைநகருக்குத் திருப்பி அழைக்க வேண்டுமென்றும் ஆடையூர் நாடாள்வார், கம்பீர சேதிராயர் முதலான அரசர் கட்சியினர் வற்புறுத்திப் பேசினார்கள்.

அதற்கு ஆட்சேபணையாக, விக்கிரம பாண்டியனுக்கு முடிசூட்டுவதற்குப் புராதனமான பொன்முடி வீரபாண்டியனிடம் சிக்கிக் கொண்டிருக்கிறதென்று ஜனநாதன் தெரிவித்தான். மதுரையின் குழப்ப நிலையை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவதில் ஜனநாதனுக்கு இஷ்டமில்லை என்பதை அங்குள்ள ராஜதந்திரிகள் யூகித்திருந்தாலும் முன்பொரு நாள் அவன் பாண்டிய சபையில், "எங்கள் சோழ மன்னர் உண்மையான சோழ

இரத்தத்தில் பிறந்தவராய் இருந்தால் விக்கிரம பாண்டியனுக்கு உண்மையான பாண்டிய முடியைத்தான் சூட்டுவார்" என்று கூறிய சூளுரையை அவர்களால் புறக்கணிக்கவும் முடியவில்லை.

"வாள்நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயன் சொல்வது உண்மைதான். அதற்குப் பரிகாரமாக நாம் உடனே வீரபாண்டியன் பதுங்கியிருக்கும் நெட்டூர்க் கோட்டையின்மீது படையெடுத்துச் சென்று புராதனமான பாண்டிய முடியைக் கைப்பற்றி வரவேண்டும். பகைவனைக் கடைசிவரை நிர்மூலமாக்குவதுதான் சரியான ராஜதந்திரமாகும். இதுதான் நான் சொல்லும் ஒரே வாசகம்!" என்று ஏகவாசகன் வாணகோவரசர் உறுதியான குரலில் சொன்னார்.

ஜனநாதனோ அதற்கு மறுப்புரையாக, "நெட்டூர்க் கோட்டையை வெறும் வாசகங்களால் முற்றுகையிட முடியாது. அதற்கு வீரவாலிபர்கள் தேவை" என்றான்.

உடனே ஆடையூர் நாடாள்வார் ஏளனச் சிரிப்புடன் எழுந்து நின்று, "ஜனநாதக் கச்சிராயன் அதைரியப் படுவதற்குக் காரணம் அவன் கையில் மொத்தம் முப்பதினாயிரம் வீரர்கள்தான் இருக்கிறார்கள். என் கையிலோ அதைப்போல இரண்டு மடங்கு போர் வீரர்கள் இருக்கிறார்கள். நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிடலாமா கூடாதா என்று ஒவ்வொருவரும் யோசனை சொல்லுவது ஒவ்வொருவரின் சொந்தப் பலத்தைப் பொறுத்துத்தான் வெளி வருகிறது!" என்றார் கேலியாக.

உடனே ஜனநாதன் விஷமச் சிரிப்புடன், "ஆடையூர் நாடாள்வாரின் கையிலுள்ள வீரர்களின் தொகை என் கையிலுள்ளதைவிட எண்ணிக்கையில் இரண்டு பங்கு அதிகம் என்பது மிகப்பெரிய உண்மைதான்! ஆனால் என் போர் வீரர்களுக்குத் தேக பலம் இல்லையே தவிர, புத்தி பலத்தில் இரண்டு மடங்கு அதிகமானவர்கள்!" என்றான்.

சோழ நாட்டில் அரசாங்கப் படையைத் தவிர ஒவ்வொரு நாட்டதிகாரியும் குறுநில மன்னராய்ச்

சொந்தத்தில் படைகள் பரிவாரம் வைத்துக் கொள்வதும், தேவை ஏற்பட்டபோது தங்களுக்குள் சண்டைபிடித்துக் கொள்வதும், ஆபத்துக் காலங்களில் அரசாங்கத்துப் படை உதவி புரிவதும் உண்டு. ஒவ்வொரு மண்டலத் தலைவரின் கையிலுள்ள படைப்பலத்தைக் கொண்டு பொது அரசாங்கத்தில் அந்தஸ்து அதிகரிப்பதுமுண்டு. இதையொட்டி ஜனநாதனுக்கும் ஆடையூர் நாடாள்வாருக்கும் அடிக்கடி மனஸ்தாபம் ஏற்படுவது வழக்கம். இப்போது அவர்களிருவரின் வாக்குவாதத்தின் நடுவே பிரதம அமைச்சர் குறுக்கிட்டு, "ஒவ்வொருவரின் சொந்த பலத்தைப் பற்றிப் பேசுவதற்கு நாம் இங்கே சபை கூடவில்லை. ஜனநாதன் இராசகாரியமான தன் அரசியல் அபிப்பிராயத்தை மட்டும் சொல்லட்டும்!" என்றார்.

ஜனநாதன் சபையை நோக்கி, "பாண்டி நாட்டுக்குள்ளே தற்காப்பு மிக்க அரண் நெட்டூர்க் கோட்டை ஒன்றுதான். அதற்கு நான்கு சுற்று மதிற் சுவர்களும் நான்கு பெரிய அகழிகளும் உண்டு. அவற்றின் கோட்டை வாசல் கதவுகள் மரத்தாலானவை யல்ல; அவ்வளவும் கெட்டி இரும்பால் ஆக்கப்பட்டவை! போன தலைமுறையில் நடந்த யுத்தத்தில் இலங்கைப் படையினர் நெட்டூர்க் கோட்டையை யுத்த வியூகமாய் அமைத்துத் தலைசிறந்த தற்காப்பு அரணாக ஆக்கிவிட்டுப் போயிருக்கிறார்கள்! சரியாக நாற்பதினாயிரம் போர் வீரர்களைப் பலி கொடுத்து ஏழு மதிற் சுவர்களை இடித்துக் கோட்டைக்குள் புகுந்து கடைசியாகச் செத்த பாம்பை அடிப்பது போலத்தான் ஆகும் வீரபாண்டியன் மீது முற்றுகையிடுவது என்பதும்! அதற்கு அவ்வளவு தூரம் அவசரமும் இல்லை; அவசியமும் இல்லை. புற்றைவிட்டுப் பாம்பு தலைநீட்டினால் நாம் கல்வாய் அடிப்போம். புற்றுக்குள் கிடக்கும் பாம்பைப் புற்றுக்குள்ளே செத்தழிய விட்டுவிடுவோம்!" என்றான்.

"செத்த பாம்புக்கு இலங்கையர் பால் வார்த்து மறுபடி உயிர் மூட்டி விடலாம்! முன் தலைமுறையில் இலங்கைப் படையினர் சோழ நாடுவரை முன்னேறி

எவ்வளவு அட்டூழியங்கள் புரிந்தார்கள் என்பதையும், நம் சுவாமிதேவர் இருபத்தெட்டு நாள் அகோர பூஜை செய்து அப்பாப கர்மாக்களை அழியச் செய்தார் என்பதையும் ஆர்ப்பாக்கத்துச் சிவன் கோயில் சாசனம் தெளிவாக எடுத்துக் கூறுகிறது. மதுரையில் இலங்கையர் குறைவாய் இருந்த சமயம் பார்த்து நாம் படையெடுத்துச் சென்று வீரபாண்டியனிடமிருந்து மதுரையைச் சுலபமாகக் கைப்பற்றிக் கொண்டோம் என்றால், அது நம் ராஜதந்திரிகளின் விவேகத்தினாலல்ல; கடவுளின் விருப்பம் அவ்வாறிருந்தது! பௌத்த மதத்தின் சமதர்மக் கொள்கைகளைப் பின்பற்றவும் அநாசாரங்களை உண்டாக்கவும் முயலும் வீரபாண்டியனை நிர்மூலமாக்க வேண்டுமென்பதுதான் நம் சிவபெருமானின் உள்ளக்கிடக்கை என்பதை நாம் முதலில் உணரவேண்டும். இப்போது நெட்டூர்க் கோட்டைக்குள் வீரபாண்டியன் கட்சியை வளரவிட்டு அதற்கு உதவியாக இலங்கைப் படை இங்கு வந்து மறுபடி அட்டூழியங்கள் புரிய ஆரம்பித்தால் அப்போது வாள்நிலை கண்டான் ஜனநாதக் கச்சிராயன் என்ன வழி சொல்வான்?" என்று எதிரிலி சோழ சம்புவராயர் கேட்டார்.

"அதற்குத்தான் நம்மிடம் ஒரு சுலபமான வழி இருக்கிறதே! யுத்தத்தில் ஜயிப்பதற்கு அநாவசியமாகப் போர் வீரர்களைச் சேமிக்காமல், நம் பழைய சுவாமி தேவரையே கூப்பிட்டு இருபத்தெட்டு நாள் அகோர பூஜை செய்யச் சொன்னால் போதும்! இலங்கைப் படை ஒழிந்துவிடும்! நான் ஆர்ப்பாக்கத்துச் சிவன் கோயில் சாசனத்தையும் கடவுள் சக்தியையும் பரிபூர்ணமாக நம்புபவன்!" என்று ஜனநாதன் சொல்லிவிட்டுத் தன் ஆசனத்தில் வெகு சுலபமாய் அமர்ந்தான்.

வீரசேகரன் அவன் காதருகில் குனிந்து, "கடவுள் பெயரை இங்கேன் அநாவசியமாக இழுக்கிறாய்?" என்று மெல்லக் கேட்டான்.

"மதவாதகர்கள் தங்கள் சுயநலத்தையும் சுயபீடத்தையும் காப்பாற்றிக் கொள்ளக் கடவுள் பெயரை உபயோகப்படுத்தும் போது நான் பொதுநலத்துக்குக்

கடவுளின் பெயரை அரசியலில் உபயோகப்படுத்தக் கூடாதா?" என்று ஜனநாதன் அவன் காதுக்குள் சொல்லி மெல்லச் சிரித்தான்.

வீரசேகரன் மறுபடி மெல்ல ஜனநாதனின் காதுக்குள், "வீரபாண்டியன்மீது படையெடுப்பதன் அவசியந்தான் உனக்குத் தெரியுமே! அதை ஏன் எதிர்த்துப் பேசுகிறாய்?" என்று ரகசியமாய்க் கேட்டான்.

"என் விரோதியான ஆடையூர் நாடாள்வான் அதை ஆதரித்துப் பேசுகிறான்! அதனால் அதை நான் எதிர்த்துப் பேசவேண்டும்! அவனிடம் என்னைவிட இரண்டு பங்கு படைப்பலம் உண்டு என்னும் திமிர்! ஆனால் எனக்கு எவ்வளவு வாக்குபலம் உண்டு என்பதை இன்று காட்டிவிடுகிறேன்!" என்று ஜனநாதனும் அவன் காதுக்குள் பரமரகசியமாய்ச் சிரித்துக் கொண்டே சொன்னான்.

ஏகவாசகர் சபையில் எழுந்து நின்று, "இந்தச் சபைக்கு ஒரு வாசகம் சொல்ல விரும்புகிறேன்: இலங்கையிலிருந்து இனித் தேவையான அளவு உதவி வீரபாண்டியனுக்குக் கிடைக்காது! இலங்கை மன்னர் பராக்கிரமபாகு தம் சொந்த நாட்டுள் சீர்திருத்தங்களில் முனைந்துவிட்டார்! அயல்நாட்டு விவகாரங்களைக் கவனிக்க இனி அவருக்கு ஆயுசு இல்லை! இப்போது வீரபாண்டியன் தந்திரமாக இலங்கை உதவியை நிராகரித்துவிட்டு இலங்கையின் பரமவிரோதியான சேரராஜனின் உதவியை நாடுவானாகில், மகளை மணம் புரிந்து கொடுத்த சேரராஜன் மாபெரும் படையுடன் தன் மருமகனுக்கு உதவிபுரிய முன்வருவான் என்பதில் எள்ளத்தனையும் சந்தேகமில்லை! அதற்குள் வீரபாண்டியனை நிர்மூலமாக்கி விடவேண்டும்!" என்று சொல்லி வந்தவர், தமக்கு ஆதரவாக ஏதோ சொல்ல விரும்பித் தவிக்கும் வீரசேகரன்மீது கண்பார்வை படவே, "அரசியலில் பழமையோடு புதுக்கருத்துக்களும் தேவைதான்! புது வாலிபனான வீரசேகரன் தன் கருத்துக்களை இந்தச் சபையில் சொல்லட்டும்" என்றார்.

உற்சாகத் தூண்டுதல் கிடைத்த வீரசேகரன் கம்பீரமாக எழுந்து நின்று தன்னையும் சபையையும் மறந்து மடைதிறந்த வெள்ளம்போல் உணர்ச்சிகளைக் கொட்டலானான்:

"வீரபாண்டியன் நெட்டூர்க் கோட்டைக்குள் பதுங்கியிருக்கிறானென்றால், புலி பதுங்குவது பாய்ச்சலுக்கே தவிர வேறல்ல. படைத் தயாரிப்பு முடிந்து பூர்ண பலம் பெற்றதும் வீரபாண்டியன் தன் தலைநகரை மீட்க மதுரைமீது படையெடுத்து வருவான் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இலங்கை ஆள் உதவி செய்யாவிட்டாலும் அவனுக்கு ஏராளமான யுத்தக் கருவிகளையும் போர்த் தந்திரிகளையும், வரும் பௌர்ணமிக்குப் பிறகு அனுப்பி வைப்பதாக ஒரு சாமியார் மூலம் இரகசியமாக ஓலை அனுப்பியிருக்கிறது. சேர ராஜன் படை உதவியை வீரபாண்டியன் பெறுவதில் தனக்கு ஆட்சேபணையில்லையென்றும் அந்த ஓலையில் தெரிவித்திருக்கிறது! ஆதலின், பௌர்ணமி கழிந்ததும் வீரபாண்டியன் நம் வசமிருக்கும் மதுரைமீது மாபெரும் பலத்துடன் படையெடுத்து வருவான்! அதற்குள் பௌர்ணமியன்றோ அதற்கு முன்போ நாம் அவனது நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிட்டு, எலியை எலி வலைக்குள்ளேயே நசுக்கிவிட வேண்டும்! வீரபாண்டியன் வீரமரணம் அடையவேண்டும்; அல்லது நம் கையில் சிறைப்படவேண்டும்! அதுவரை மதுரை அரசியல் விவகாரம் முடிவும் பெறாது! நம் புலிக்கொடி பாண்டி நாட்டின்மீது நிரந்தரமாகப் பறக்கவும் முடியாது. நம்முடைய சோழ சாம்ராஜ்யத்தின் இலட்சியம் பாண்டிநாட்டு எல்லையோடு முடிந்து விடவில்லை என்பதையும் நாம் மறத்தலாகாது. அது கங்கையும் கடாரமும் தாண்டி அடிவானத்துக்கப்பாலும் பரந்து கிடக்கிறது! பல ராஜ்யங்களாய் இல்லாமல் ஒரே ராஜ்யமாய்த் தமிழ் நாகரிகம் தலைநிமிர்ந்து நிற்க வேண்டுமென்றால் ஒவ்வொரு தமிழ் மகனும் ஆண் மகனாய்ச் சோழ சாம்ராஜ்யத்துக்குத் தன் இரத்தத்தைச் சிந்தத் தயாராய் இருக்கவேண்டும்!" என்று வீரசேகரன் தன் உணர்ச்சிகளைப் பொழிந்தான்.

ஜனநாதன் விஷமச் சிரிப்புடன் எழுந்து நின்று, "நாம் அழகான வார்த்தைகளையும் உணர்ச்சிகளையும் கவிஞர்களுக்கு விட்டு விடுவோம்! இந்தச் சபையில் நாம் எதையும் அநுபவ அறிவைக் கொண்டுதான் ஆராயவேண்டும்!" என்றான்.

வீரசேகரன் சட்டென்று, "புகழ்பெற்ற ராஜராஜ சோழர் காலத்தைப்போல நம் குலோத்துங்கச் சோழச் சக்கரவர்த்தியின் காலத்திலும் தமிழ்ச் சாம்ராஜ்யம் மகோன்னதமாக உருவாக வேண்டுமென்றால், அது வெறும் அறிவினால் நடக்கக் கூடியதல்ல; எண்ணற்ற வீரர்களின் உணர்ச்சிகளால்தான் அது உருவாக வேண்டும். உணர்ச்சிகளுக்குத்தான் எதையும் உருவாக்கும் ஆக்க சக்தி உண்டு! ஆகவே நமக்குக் கவிஞர்களின் அழகான வார்த்தைகளும் கற்பனைகளுங்கூடத் தேவைப்படலாம்!" என்றான்.

அவனுடைய அறிவுத் திறனைச் சபையிலிருந்த அனைவரும் உள்ளூர வியந்தார்கள்; ஜனநாதனை அடியுண்ட பாம்பைப் பார்ப்பது போல் பரிகாசக் கண்களால் பார்த்தார்கள். உடனே ஜனநாதன் வெகுண்டெழுந்து, "தேச பக்தியைப்பற்றிப் பிரமாதமாகவும் உணர்ச்சிகரமாகவும் வீரசேகரன் இந்தச் சபையில் பேசுகிறான். ஆனால் அவன் அறிந்தோ அறியாமலோ வீரபாண்டியனுக்குச் சாதகமாய்ச் செய்த ஒரு மாபெரும் ராஜத் துரோகத்தை இந்தச் சபை அறியட்டும்! வீரபாண்டியன் நம்மிடம் படுதோல்வியடைந்து மதுரை நம் கையில் வீழ்ந்தபோது ஓர் இளம் பெண் நம் காவற்காரர்களின் கையில் சிக்கினாள். அவளை அரசாங்கச் சிறைக்குக் காவற்காரர்கள் அழைத்தேகும் போது அவளை வழியில் சந்தித்த வீரசேகரன், காவற்காரர்களை மிரட்டி அவளை விடுவித்து நல்ல சமயத்தில் அவளைத் தப்பியோட விட்டுவிட்டான். அவள் வேறு யாருமல்ல; வீரபாண்டியன் மனைவியேதான்! அவளை வீரசேகரன் தப்பியோடச் செய்யாதிருந்தால் பாண்டிய அரசியல் விவகாரம் எப்போதோ தீர்ந்து போயிருக்கும்!" என்றான்.

அவ்வளவுதான்; அச்சபையில் இருந்த அனைவரும் திகைப்புச் சிலைகளாகி விட்டார்கள். வீரசேகரனுக்கோ வானமே தலைமீது இடிந்து விழுவதுபோல் இருந்தது!

சர்வாங்கமும் வெடவெடவென்று நடுங்கியவாறு தலைகுனிந்து நின்ற வீரசேகரன் மெல்லத் தலைநிமிர்ந்து சபையைச் சுற்றிலும் பார்த்தான். ரோஷத்தால் உதடுகள் துடிதுடிக்க ஆத்திர உணர்ச்சியுடன் கூவினான்:

''நான் அவளை ஊர்மிளா என்னும் ஒரு சாதாரணப் பெண் என்றுதான் நினைத்தேன்! அவள் வீரபாண்டியன் மனைவியாய் இருப்பாள் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை! அறியாமல் செய்த அப்பிழைக்குப் பரிகாரமாக இச்சபையில் ஒரு பிரதிக்ஞை செய்கிறேன்; வீரபாண்டியன் மனைவியான திரைலோக்ய முழுதுடையாளை நானே சிறைசெய்து இச்சபை முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன். இந்தச் சபதத்தை நான் நிறைவேற்றாவிட்டால், கங்கையிடைக் குமரியிடைச் செய்தார் செய்த பாவத்தில் படுவேன் ஆவேன். ஏழாம் நரகத்தில் கீழாம் நரகத்தில் புகுவேன். இப்படித் தப்பினேனாகில் என்னாட்டை யானே எடுத்துத் தம்பலமும் கலச்சோறும் தின்றேன் ஆவேன்!'' என்று வீரப்பிரதிக்ஞை செய்துவிட்டான் வீரசேகரன்.

அவனை மேலும் விடாமல் ஜனநாதன் வெறித்து நோக்கி, ''வீரசேகரா! பிரதிக்ஞை செய்துவிட்டாய்! ஆனால் அந்த முயற்சியில் வீரபாண்டியன் மனைவி உயிருக்கு எந்தவிதமான ஆபத்தோ உடம்புக்கு ஒரு சிறு ஊறோ ஏற்பட்டாலும் அரசர் பெருமான் உனக்கு மரணதண்டனை விதிப்பார். பாண்டிய தேசத்தைப் போல் வீரபாண்டியன் மனைவியின் உயிரும் காப்பாற்றப்பட வேண்டிய ஒரு பொருள் என்று சக்கரவர்த்திகள் கருதுகிறார்கள். வீரபாண்டியன் மனைவி வேள்வித் தீயில் குதித்துத் தற்கொலை செய்து கொள்ள முயன்றாலும் உன் தலைக்கு மரணம் தப்பாது என்பதை ஒருபோதும் மறக்காதே! வீரபாண்டியன் மனைவியை நீ உயிருடன்தான் சிறைபிடித்து வரவேண்டும்'' என்றான். அதற்கு ஆதாரமாக அங்கிருந்த திருமந்திர ஓலை

நாயகமான மீனவன் மூவேந்த வேளாருக்குச் சமிக்ஞை செய்து அரசரின் திருமந்திர ஓலையைச் சபையில் வாசித்துக் காட்டச் செய்தான்.

"...வீரபாண்டியன் தேவியான திரைலோக்கிய முழுதுடையாள் நம் பிராட்டியார் பெண்ணரசியான பெரிய நாச்சியாருக்கு உடைமையாவாள். போரில் அவளை உயிரோடு சிறைபிடிக்க வேண்டுமேயல்லாது அவள் உயிருக்குப் பங்கமேற்பட எவன் காரணமாயிருந்தாலும் பெரிய ராஜத்துரோகக் குற்றமாகக் கருதப்பட்டுக் கொலைத்தண்டனை விதிக்கப்படுவானாக!..."

சபா மண்டபம் முழுதும் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கும் அரசர் ஆக்ஞையை வீரசேகரன் கம்பீரமாகக் காது கொடுத்துக் கேட்டு, "வீரபாண்டியன் மனைவியை உயிரோடு சிறைபிடித்து வருகிறேன்! தப்பினேனாகில் அக்கணமே உயிர் மரிப்பேனாக!" என்று சபதம் கூறி அமர்ந்தான்.

"அவ்வாறானால் நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிடும் படைத் தலைமையை வீரசேகரனே வகிக்கட்டும். வீரபாண்டியன் தேவி சம்பந்தமாக அவ்வாறு பிரதிக்ஞை செய்பவருக்கே அம்மாபெரும் படைத் தலைமைப் பதவியையும் கௌரவத்தையும் அளிக்க வேண்டுமென்பது அரசர் பெருமானான பெரிய தேவரின் விருப்பம்!" என்று திருமந்திர ஓலை நாயகம் எழுந்து நின்று ராஜகட்டளையைப் பிரதம மந்திரிமூலம் சபைக்குத் தெரிவிக்கச் செய்தான்.

அத்துடன் சபை முடிந்துவிடும் என்று எல்லோரும் எதிர்பார்த்த சமயத்தில் ஜனநாதன் மெல்ல விஷமச் சிரிப்புடன் எழுந்து நின்று, "நாம் நிறையப் பேசிவிட்டோம்! நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிட வீரசேகரனுக்குப் படைத் தலைமைப் பதவியைக் கொடுப்பதாகவும் முடிவு செய்துவிட்டோம்! ஆனால், முக்கியமானதொரு தேவையை முடிவு செய்ய மறந்துவிட்டோம்!... நெட்டூர்க் கோட்டையை முற்றுகையில் கைப்பற்ற நம் தரப்பில் குறைந்தபட்சம் ஆயிரம் யானைகளையும் நாற்பதினாயிரம் போர்

வீரர்களையும் பலிகொடுக்க நேரிடும் என்று சொன்னேன். ஆயிரம் யானைகளை இனி அத்திமல்லர் காட்டில் போய்ப் பிடிக்கமுடியாது! அரசாங்கத்தின் நிலப்படையிலிருந்து ஆயிரம் யானைகளை எடுத்துப் பலி கொடுப்போம்! அடுத்தபடியாக நாற்பதினாயிரம் போர் வீரர்களைப் பலி கொடுக்கவேண்டும். அதற்கு, நம் சோழ மண்டலம் பாதுகாப்புக்கும் மதுரை மண்டலப் பாதுகாப்புக்கும் நிலப்படைக்கும் தேவையானது போகப் பத்தாயிரம் போர் வீரர்கள்தான் அரசாங்கப் படையில் உபரியாக இருக்கிறார்கள். பலி கொடுப்பதற்குத் தேவையான இன்னும் முப்பதினாயிரம் போர் வீரர்களுக்கு எங்கே போவது? அதுவும் முற்றுகையில் பயிற்சிபெற்ற போர் வீரர்களாக இருக்கவேண்டும்! இந்தச் சபையிலுள்ள மண்டலத் தலைவர்களில் யாராவது தான் தம் சொந்தப் படையிலிருந்து முப்பதினாயிரம் படை வீரர்களை அரசாங்கத்திற்கு கொடுத்துதவ வேண்டும்! இராச காரியத்துக்காக அம் மாபெரும் இரத்ததானம் செய்யக் கூடிய உதார குணம் இந்தச் சபையில் யாருக்குண்டு? அந்தப் பெருமையை யாருக்களிப்பது?" என்று சபையைச் சுற்றிலும் தன் கண்ணோட்டத்தைச் செலுத்தினான்.

அங்கிருந்த மண்டலத் தலைவர்கள் ஒவ்வொருவரும் எங்கே தன் பெயரைச் சபையில் ஜனநாதன் பிரேரேபித்து விடப் போகிறானோவென்று அவன் கண் பார்வையில் படாதவாறு தங்கள் தலைகளை மறைத்துக் கொள்ள முயன்றார்கள்.

ஜனநாதன் அருகிலிருந்த கிழவர் சம்புவராயர் முன்னெச்சரிக்கையாய் எழுந்து நின்று ஜனநாதன் காதுக்குள் பரமரகசியமாய், "ஜனநாதா! உன் கூட்டாளி என்பதற்காகத் தயை புரிந்து அந்தப் பெருமையை எனக்குத் தர முயலாதே! என் கையிலுள்ள முப்பதினாயிரம் போர் வீரர்களைப் பிரிவதென்றால் இந்தக் கிழவனின் உயிரே பிரிந்துவிடும்!'' என்று பரிதாபகரமாகக் கெஞ்சினார்.

"நீர் பேசாமலிரும். நான் வேறொருவனைக் குறி வைத்திருக்கிறேன்!" என்றான் ஜனநாதன் இரகசியமாக.

அந்தச் சமயம் ஆடையூர் நாடாள்வார் எழுந்து நின்று, "ஜனநாதன் இரத்ததானம் செய்யும்படி பிறருக்கு ஆலோசனை சொல்லுவதைவிடத் தானே தன் முப்பதினாயிரம் போர் வீரர்களை இரத்ததானம் செய்து பெருமையடையலாமே!" என்றார்.

ஜனநாதன் சட்டென்று, "உண்மைதான்! துரதிர்ஷ்ட வசமாக அந்தப் பாக்கியம் எனக்கில்லை! அரசாங்கப் படையைப் போல என் போர் வீரர்களும் கூலி பெறுவதில் காண்பிக்கும் சுறுசுறுப்பை யுத்தம் செய்வதில் காண்பிப்பதில்லை! யாராவது சண்டை செய்து பிடித்த கோட்டைக்குள் என் வீரர்கள் சூறையாடுவதில் சூரர்களே தவிர, கோட்டையைப் பிடிப்பதில் சூரர்கள் அல்ல! அந்தச் சூரத்தனம் நாடாள்வாரின் படைகளுக்குத்தான் உண்டு. என்னைவிட இருமடங்கு படை வீரர்களையும் உடையவர். அவர் தம்மிடம் உபரியாகவுள்ள முப்பதினாயிரம் போர் வீரர்களை அரசாங்கத்துக்குத் தானம் கொடுக்கச் சிறிதும் தயங்கமாட்டார். ஏனெனில், சக்கரவர்த்திகள் மீது அவருக்குள்ள விசேஷ அபிமானத்தைச் செயலில் காட்ட இப்போது விசேஷமான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிற தல்லவா?" என்றான்.

ஆடையூர் நாடாள்வாருக்கு அதை ஒப்புக்கொண்டு தம் படைவீரர்கள் இரத்ததானம் செய்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போய்விட்டது! ஜனநாதன் தன் சூழ்ச்சி பலித்துவிட்டது என்ற ஆனந்தத்துடன், "ஆடையூர் நாடாள்வார் வாழ்க!" என்று வாழ்த்திக் கொண்டே உட்கார்ந்தான்.

அதற்குப் பிறகு சபையின் தீர்மானங்களெல்லாம் ஓலை நறுக்குகளில் எழுதப்பட்டு, எல்லோராலும் கையொப்பமிடப்பட்டு, சபை முடிந்துவிட்டதாக முதலமைச்சரால் அறிவிக்கப்பட்டது.

சபை கலைந்து வெளியே வரும்போது ஜனநாத னோடு ஒரு வார்த்தையும் வீரசேகரன் பேசவில்லை. அவனுடைய தொடர்பையே அறுத்துக் கொள்ள விரும்புபவனைப் போல மௌனமாக வேறு வழியில் பிரிந்து சென்றான்.

ஆனால் ஜனநாதன் விடவில்லை. வலியச் சென்று வீரசேகரனிடம் நட்புரிமை கொண்டாடினான்.

"என்ன வீரசேகரா, அதற்குள் என் நட்பை மறந்து விட்டாயா?" என்று ஜனநாதன் வழக்கம்போல் விஷமச் சிரிப்புடன் கேட்டான்.

''உன் நட்பு இல்லாமலிருப்பதே நல்லது என்று நினைக்கிறேன்!" என்றான் வீரசேகரன் வருந்திய குரலில்.

"தம்பி, அவ்வளவு சுலபமாக என் நட்பை யாரும் உதறித் தள்ளிவிட முடியாது!"

"மந்திராலோசனை சபையில் நீ நடந்துகொண்ட முறைதான் உன் நட்புக்கு அடையாளமோ? எனக்கு உறவாடிக் கெடுக்கும் மனப்பான்மை இல்லை. அதனால் உன் நட்புக்கு நான் தகுதியானவனல்ல!"

"தம்பி! நட்பு வேறு; அரசியல் வேறு!"

"இரண்டையும் பிரித்துப் பார்க்கும் வியாபார புத்தியோ ஆராய்ச்சித் திறனோ எனக்கு இல்லை!"

"தம்பி, ஆத்திரப்படுகிறாய்!"

"பின்னே என்ன செய்வது? நான் வீரபாண்டியன் மனைவியைத் தப்பி ஓடவிட்டேன் என்று சபையில் சொன்னாயே! இப்போதாவது நிஜத்தைச் சொல். அவள் ஊர்மிளாவா, அல்லது வீரபாண்டியன் மனைவியா?"

"இதில் சந்தேகமென்ன? அவள் ஊர்மிளாதான்! அவள் வீரபாண்டியன் மனைவியாயிருந்தால் உன்னைக் காதலிக்க முடியுமா?"

''பின்னே சபையில் பெரிய பொய்தானே சொன்னாய்?"

"ஆமாம். பொய்தான் சொன்னேன்! ஆனால் அதற்கு அரசியலில் ராஜதந்திரம் என்று பெயர்!"

"ஜனநாதா! உன் ராஜதந்திரத்துக்கு நான்தான் பலி கிடைத்தேனா? மனமறிந்து அவ்வளவு பெரிய பொய்யை ஏன் சொன்னாய்? நம்பிக்கைத் துரோகம்! நட்புத் துரோகம்!" என்று சீறினான் வீரசேகரன்.

"தம்பி, சீறாதே! ஊர்மிளா என்ற ஒரு பெண்ணைக் கூட உன் ஜன்மத்தில் பார்த்ததில்லையென்று நீயும் பொய் சொல்லி மறுத்திருக்கலாம்! உன்னைத் தவிர அந்தச் சபையில் எந்த அரசியல்வாதியும் அப்படித்தான் மறுத்து புளுகியிருப்பான்!" என்றான் ஜனநாதன்.

"நடந்ததை மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் தைரியமாய் ஒப்புக்கொள்வதுதான் மனிதத் தன்மை. நான் வீரத்தமிழன்!"

"தம்பி, அந்த மனிதத்தன்மையால்தான் உனக்கு ஆபத்து வந்தது. நீ நிஜத்தை ஒப்புக்கொள்வாய் என்று நன்றாகத் தெரிந்த பிறகே உன்மீது சுலபமாகக் குற்றம் சுமத்த முன்வந்தேன்! உன்னைத் தவிர வேறு எவன்மீதும் அப்படிப் பழி சுமத்த எனக்குத் துணிவு வந்திராது!"

"எனக்கு அந்தப் புத்தி கிடையாது!... ஜனநாதா! நான் இருதயம் உள்ளவன். இலட்சிய உணர்ச்சி படைத்த நேர்மையான வாலிபன்!"

"தம்பி, தமிழர்களுக்கு வெறும் உணர்ச்சிமட்டும் போதாது! காரிய வெற்றிக்காகச் சூழ்ச்சித் திறனும் வேண்டும்!"

"எனக்கு வெற்றி முக்கியமல்ல! அதைக் கடைபிடிக்கும் வழிதான் முக்கியம்! ஜனநாதா! உன் வழி வேறு; என் வழி வேறு!"

"அவ்வாறே இருக்கட்டும்! ஆனால் நாம் இருவரும் நண்பர்களாகவே இருப்போம்!"

"இன்னுமா என் நட்பை எதிர்பார்க்கிறாய்? என்மீது பழி சுமத்த அவ்வளவு பெரிய பொய்யை ஏன் சொன்னாய்?"

"உன் நன்மைக்குத்தான்!" என்று ஜனநாதன் சிரித்தான்.

வீரசேகரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது! ஜனநாதனின் முகத்தை அவநம்பிக்கையுடன் கூர்ந்து பார்த்தான்.

"தம்பி. சந்தேகப்படாதே! உனக்காகத்தான் அந்தப் பொய்யைச் சொன்னேன்! நான் அப்படிச் சொல்லியிராவிட்டால் வீரபாண்டியனின் மனைவியை உயிரோடு சிறைபிடிப்பதாக அவ்வளவு பெரிய சபதம் நீ செய்திருப்பாயா? நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிடும் படைத் தலைமையும், இவ்வளவு சீக்கிரமாகப் பதவி உயர்வும், மாபெரும் சபையில் இவ்வளவு சுலபமாக மதிப்பும் உனக்குக் கிடைத்திருக்குமா?"

ஜனநாதனை ஒருகணம் வீரசேகரன் கூர்ந்து பார்த்தான். அடுத்த கணம் கலகலவென்று வாய்விட்டுச் சிரித்தான். ஜனநாதனின் கையைக் கோத்துக்கொண்டு, "உன்னைப் போன்ற நண்பன் எனக்கு இந்த உலகில் யாரும் கிடையாது!" என்றான்.

ஜனநாதன் அவனோடு சேர்ந்து சிரித்தான்.

வீரசேகரன் பெருமையும் நன்றியறிதலும் பொங்கும் குரலில், "நிஜமாக என் நன்மைக்குத்தான் இவ்வளவு பெரிய ராஜதந்திரத்தைக் கையாண்டிருக்கிறாயா?" என்றான்.

"இல்லை. என் நன்மைக்குத்தான் கையாண்டேன். வீரபாண்டியன் மனைவி சிறை பிடிக்கப்பட்டால் நம்

குலோத்துங்கச் சோழச் சக்கரவர்த்தி எனக்குச் சன்மானம் அளிப்பார்."

"அதனால் சக்கரவர்த்திக்கு என்ன நன்மை?"

"பட்டமகிஷியின் புன்னகை சக்கரவர்த்திக்குக் கிடைக்கும். எப்போதோ பெண்கள் சண்டையில், வீரபாண்டியன் மனைவியைத் தனக்குக் குற்றேவல் புரியும் அடிமைத் தாதியாக்குவதாகச் சக்கரவர்த்திகளின் பெரிய நாச்சியார் சொன்னாராம்! நீ வீரபாண்டியன் மனைவியை உயிரோடு சிறைபிடித்து அடிமைப் பெண்ணாக அந்தப்புரத்துக்குள் அனுப்பினால் உன்னுடைய அந்தஸ்து எவ்வளவு தூரம் உயரும் என்று சொல்லமுடியாது! உனக்குச் சக்கரவர்த்தியோடு சரியாசனம் கிடைத்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை."

"நிஜமாகவா?"

"ஆமாம்! பார்த்தாயா, நான் சொன்ன ஒரு பொய்யினால் எத்தனை பேருக்கு எத்தனைவிதமான நன்மைகள் உண்டாகின்றன? தம்பி! இதுதான் அரசியல் படலம்!" என்று ஜனநாதன் கலகலவென்று சிரித்தான். வீரசேகரனும் அவனோடு சேர்ந்து கலகலவென்று சிரித்தான்.

நண்பர்கள் இருவரும் எப்படிக் கைகோத்துக் கொண்டு சபா மண்டபத்துக்குள் நுழைந்தார்களோ, அதுபோலவே கை கோத்துக் கொண்டு நந்தவனத்தை விட்டு வெளியே சென்றார்கள்.

# அத்தியாயம் 15

## கையடைப் படலம்

*'இடையூற்றுக்கு இடையூறா, யான் காப்பேன்!*
*பெருவேள்விக்கு எழுக!' என்றான்.*

**கம்ப ராமாயணம்**

மயானக்கரைபோல் நெட்டூர்க் கோட்டையைச் சுற்றியுள்ள மண்பூமி நடுநிசியில் அதி பயங்கரமாகக் காட்சியளித்தது.

கோட்டைக்குள் பதுங்கியிருக்கும் வீர பாண்டியனையும் அவன் மனைவியையும் சிறைபிடிக்க வேண்டும் என்ற ஆத்திரத்தில் வீரசேகரன் மாபெரும் சோழியப் படையைத் திரட்டி வந்து ஒன்பது நாளாக முற்றுகையிட்டான். பலம் மிகுந்த நான்கு கோட்டைச் சுவர்களில் வெளிமதிற் சுவரை மட்டுமே அவனால் தகர்க்க முடிந்தது. முதலாவது கோட்டை வாசல்மட்டுமே உடைபட்டுத் தீமயமாகக் காட்சியளித்தது. இன்னும் மூன்று கோட்டைச் சுவர்களையும், கோட்டை வாசல்களையும் தகர்த்தாக வேண்டும்.

அதற்குள் உள்ளும் புறமும் எண்ணற்ற போர்வீரர்களின் உடல்கள் பிணமலைகளாகக் குவிந்துவிட்டன. எங்கும் இரத்த வாடை! பகலெல்லாம் சிந்திய இரத்தத்தால் செம்மண் பூமி உறைந்து போய்க் குங்குமத் திடலாகவும், இரவுக் கன்னிகைக்கு வீரதேவதை அளிக்கும் சிவப்பு முத்தமாகவும் விளங்கியது.

நள்ளிரவாகையால் யுத்த நிறுத்தம் ஏற்பட்டுக் கோட்டைக்கு எதிரேயுள்ள மயானக் கரையில் சோழியப் படைகள் கூடாரங்கள் அடித்து உறங்கிக் கொண்டிருந்தன. மறுநாள் போரில் மீளா நித்திரை அடைவதற்குப் போர் வீரர்கள் முன்னிரவிலே உறங்கி ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தனர்.

தலைமைப் பாசறையில் வீரசேகரன் உற்சாகப் பெருவெள்ளத்தில் மூழ்கியவனாய் உறங்காமல் விழித்துக்கொண்டிருந்தான். அவனது விழிகள் தூரத்தில் தெரியும் நெட்டூர்க் கோட்டையின் பலமான சுவர்களின் மீதே வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவனுக்குப் பின்னால் அவனுடைய அருமைத் தோழனான ஜனநாதன் வழக்கம் போல் விஷமச் சிரிப்புடன் நின்று கொண்டிருந்தான்.

“ஒன்பது நாள் யுத்தம்! ஆனாலும் முதலாவது கோட்டை வாசலை உடைத்துவிட்டோம். இன்னும் மூன்று கோட்டை வாசல்களை உடைத்து உள்ளே புகுந்தால் வீரபாண்டியனையும், அவன் மனைவியையும் சுலபமாகச் சிறைபிடித்து விடலாம்!'' என்று வீரசேகரன் உற்சாகமாகக் கூவினான்.

“அது அவ்வளவு சுலபமல்ல, தம்பி!” என்று சிரித்த ஜனநாதன், பெண்ணின் முகத்தை வாஞ்சையுடன் தன் பக்கம் திருப்புவதுபோல் வீரசேகரனின் அழகிய முகத்தை வாஞ்சையுடன் தன் பக்கம் திருப்பி, “தம்பி! முதலாவது கோட்டை வாசலைப் பிடிக்க நான் மந்திராலோசனை சபையில் கணித்தபடி நம்முடைய அரசாங்கப் படையில் பத்தாயிரம் வீரர்களை உயிர்ப்பலி கொடுத்து விட்டாய்! இன்னும் மூன்று 'கோட்டை வாசல்களையும் பிடிக்க நான் சொன்ன கணக்குப்படியே இன்னும் முப்பதினாயிரம் போர் வீரர்களைப் பலிகொடுக்க வேண்டும்!” என்றான்.

“பலி கொடுப்போம்!”

“ஆனால் அரசாங்கப் படையில் உபரியாக இருந்த பத்தாயிரம் போர் வீரர்களின் கணக்குத் தீர்ந்துவிட்டது.

*இனி அரசாங்கப் படையில் ஒரு போர் வீரனின் உயிரைக்கூடப் பலி கொடுக்கக் கூடாது!"*

*"உயிர்ப்பலி கொடுப்பதற்கு என்றே ஆடையூர் நாடாள்லாரிடமிருந்து முப்பதினாயிரம் போர் வீரர்களை அரசாங்கத்திற்கு இரத்ததானம் வழங்கும்படி செய்திருக்கிறாயே! நம் மந்திராலோசனை சபையில் ஆடையூர் நாடாள்வார் சொன்ன வாக்குப்படி அவர் தம்முடைய முப்பதினாயிரம் போர் வீரர்களையும் மார்க்கண்டேய முதலியின் மேற்பார்வையின்கீழ்த் தயாராக அனுப்பிவிட்டார்! படை வீரர்களெல்லாம் நேற்றிரவே வந்து சேர்ந்து தாங்கள் சாக லந்தவர்கள் என்பது தெரியாமல் உண்டு களித்து உல்லாசமாக உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்!"*

*"சாவதற்காகவே முப்பதினாயிரம் போர் வீரர்களை அனுப்பிய ஆடையூர் நாடாள்வார், அந்தப் படையோடு தம் அந்தரங்கப் படையதிகாரியாக மார்க்கண்ட முதலியையும் ஏன் கூடவே அனுப்பியிருக்கிறார் தெரியுமா?"*

*"வீரப்புகழில் தன் அருமை நேசரும் பங்கு பெறட்டும் என அனுப்பியிருக்கலாம்! அதைப்பற்றி நமக்கென்ன கவலை?"*

*"இல்லை, தம்பி! அவ்லளவு சுலபமாக நினைத்து விடாதே! இன்று ராஜதந்திரத்தில் நீ அதி சாதுரியமாய்ச் சமாளித்தாக வேண்டும்! உன் சார்பாக நான் கையடைப் படலத்தை வெற்றிகரமாக முடிக்கப் போகிறேன்!"*

*"கையடைப் படலமா? என்ன விளையாடுகிறாய்?"*

*"ஆமாம், தம்பி! கையடைப் படலம் என்றால், கையில் அடைக்கலமாக அனுப்பப்பட்ட படலம் என்று அர்த்தம். அடைக்கலம் என்றால் பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருந்து பின்பு தன் பக்கம் தருமாறு ஒருவன் பிறிதொருவனிடம் கொடுத்து வைக்கும் பொருள்! மார்க்கண்டேய முதலியின் கையிலுள்ள ஆடையூர் நாடாள்வாரின் படை வீரர்கள்தான் அடைக்கலப் பொருள்கள் என்று விளக்கத் தேவையில்லை!"*

"என்னது! மார்க்கண்டேய முதலியை எதற்காக அனுப்பியிருக்கிறார் என்கிறாய்..?"

"தம்முடைய படைகளுக்கு உயிர்ச்சேதமேற்படாமல் தந்திரமாகப் பாதுகாப்பதற்குத்தான்! முடியுமானால் முப்பதினாயிரம் போர் வீரர்களையும், முடியாவிட்டால், குறைந்த பட்சம் ஒரு போர் வீரன் உயிரையாவது பத்திரமாகத் தம்மிடம் திருப்பிக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்பதற்காகவே மார்க்கண்டேய முதலியைக் கூடவே அனுப்பியிருக்கிறார். அதில் முதலி மகாசூரன்! நழுவிக் கொடுப்பதில் பெண்ணையும் மீனையும்விட மகா தந்திரக்காரன்!"

"ஆடையூர் நாடாள்வாரின் போர் வீரர்களை நிர்வகிக்கும் அதிகாரத்தை மார்க்கண்ட முதலியின் கையிலிருந்து என் கைக்கு மாற்றிக்கொண்டு விடுகிறேன். அதுதான் முதல் வேலை!"

"ஆமாம், வீரசேகரா! முதலில் மாரீச முதலியை இங்கே வரவழை!"

"அது யாரவன், மாரீச முதலி?"

"அந்த மார்க்கண்ட முதலியைத்தான் சொல்கிறேன். அவன் தான் நம்முடைய ராமாயணத்தில் மாரீசன்! ஏனென்றால், வேஷம் போடுவதில் அவன் அசல் மாரீசனேதான்! எப்படி அரசியலில் எல்லோருக்கும் நல்ல பிள்ளையாக நடந்து போலித்தனமாக விளங்குகிறானோ, அதுபோலவே, பல புலவர்களின் பாடல்களையெல்லாம் திருடி, தன்னுடைய பாடல்கள் என்று கூறி, போலி இலக்கியங்கள் படைப்பான். உதாரணமாக, நம் கம்பர் அழகாக ராமாயணம் பாடினால் அவருடைய பாடல்களையெடுத்து அங்குமிங்குமாக மாற்றிப்போட்டு இவன் ஒரு மார்க்கண்டேய புராணம் எழுதிவிடுவான்! அதனால் புலவர்கள் குழாம் மார்க்கண்டேய முதலிக்கு மாரீச முதலியென்று புனர்நாமம் இட்டிருக்கிறது."

"நிஜமாகவா?"

"ஆமாம்! அவன் பாடல், செயல், வாக்கு, கொள்கை அனைத்துமே போலியானவை. ஒற்று வேவைகளுக்கு உருமாறுவதிலும் அவன் மாரீசனைப்போல் மாயாவி! மாரீச முதலி என்று சொன்னால் தான் இலக்கிய வட்டாரத்தில் மட்டுமல்ல, எந்த வட்டாரத்திலும் யாருக்கும் அவனைத் தெரியும்."

"அவன் எப்படிப்பட்டவன்?"

"உருவத்தில் அசல் பெண்மானைப்போல் இருந்தாலும் உள்ளத்தில் குள்ள நரி! அதோடு கோழை! எல்லாம் தனக்குத் தெரிந்து விட்டதாகப் பாவிக்கும் பெரிய முட்டாள்!"

"அவ்வளவு மோசமானவனா?"

"இல்லாவிட்டால் ஆடையூர் நாடாள்வாரைப்போல அவனும் என் மறைமுக எதிரியாக இருப்பானா? அரசர்பிரானிடம் என்னைப் பற்றி இல்லாத கோளெல்லாம் சொல்லி என் செல்வாக்கைக் கவிழ்க்கச் சமயம் பார்த்துக் கொண்டிருப்பானா?"

"ஜனநாதன் தன் எதிரி யாரென வெளிப்படையாகத் தன் நண்பனிடங்கூடச் சொல்வது இதுதான் முதல் தடவை!"

"ஏனென்றால் மாரீசன் மாயமானாகி மாயப் போகிறான்!" என்று ஜனநாதன் சிரித்தான்.

வீரசேகரன் வியப்புடன் சிரித்துவிட்டு, மாரீச முதலியை உடனே அங்கு வரவழைத்தான்.

மான்போல் மருளும் விழிகளுடனும், பெண்மை செறிந்த முகத்துடனும் லாவகமான உடலுடனும் மாரீச முதலி வெகு வேகமாக அங்கே துள்ளி வந்து சேர்ந்தான்.

அவனை நோக்கி ஜனநாதன், "மாரீச முதலி! இன்றைக்கு என்ன உருமாற்றம் எடுக்கப் போகிறாய்?" என்று கேட்டான்.

மாரீச முதலி வெறுப்போடு பார்த்தானே தவிர, பதில் சொல்லவில்லை.

உடனே ஜனநாதன் தன் முகத்தில் கடுமையை வரவழைத்துக் கொண்டு, "மாரீச முதலி! நாளைமுதல் ஆடையூர் நாடாள்வாரின் முப்பதினாயிரம் போர் வீரர்களும் வீரசேகரன் சாகச் சொன்னாலும் உடனே கீழ்ப்படிந்தாக வேண்டும். எவன் கீழ்ப்படிய மறுத்தாலும் அந்த இடத்திலேயே ஏழு துண்டமாக வெட்டப்படுவான்! அவ்வாறு நீ கொண்டுவந்திருக்கும் படை வீரர்களுக்கு உத்தரவிடு" என்றான்.

"நான் அதற்கு ஆட்சேபணை சொல்லவில்லை! ஆனால் என் படை வீரர்கள் எவ்வாறு நடத்தப் படுகிறார்கள் என்று தெரிலதற்கு அதிகாரபூர்லமாக இல்லாவிட்டாலும் மறைமுகமாகவாவது என் மேற்பார்வை இருக்கவேண்டும்! ஏனென்றால், எங்கள் ஆடையூர் நாடாள்வாரிடம் இரண்டு மடங்கு படைபலம் இருப்பதால் ஜனநாதர் அலருடைய முப்பதினாயிரம் போர் வீரர்களைப் பலியாகச் செய்து சமபலமாக்கிவிட முனைவார் என்று எங்கள் தலைவர் என்னை எச்சரிக்கையுடன் அனுப்பியிருக்கிறார்!"

"அதுதான் உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெரிகிறதே!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"ஆனால், அவ்வாறு அரசருக்குப் பக்கபலமான ஆடையூர் நாடாள்லாரின் படை பலத்தைக் குறைப்பதன் மூலம் அரசரை விட ஜனநாதர் அதிகச் செல்வாக்குடன் விளங்க விரும்புகிறார் என்ற விஷயம் இன்னம் உள்ளங் கை நெல்லிக்கனிபோல் விளங்கவில்லை!" என்றான்.

ஜனநாதன் அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே, "மாரீச முதலி! நான் பல அறிஞர்கள் கூடிய ராஜ சபையிலே ராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்! அநாவசியமாக ஒரு ராஜ பக்தனை ராஜத் துரோகியாக்க முயலுவது உனக்குந்தான் ஆபத்து!" என்றான்.

"சான்றுகள் கிடைக்கும்போதுதான் ஆபத்து!" என்று மாரீச முதலி திருத்தினான்.

ஜனநாதன் அலட்சியமாகச் சிரித்து, "மாரீச முதலி! உன்னை ஒரு எதிரியாகப் பாவிக்குமளவுகூட உனக்கு அந்தஸ்து கொடுக்க நான் விரும்பவில்லை" என்று சொல்லிவிட்டு, முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு, "முதலி! முதலில் உறங்கும் உன் போர் வீரர்களை யெல்லாம் தட்டியெழுப்பு, இன்னும் பொழுது புலராவிட்டாலும் திருப்பள்ளியெழுச்சி பாடிவிடு!" என்றான்.

"ஏன்?" என்றான் மாரீச முதலி.

"நாளை அதிகாலையில் வீரசேகரன் இரண்டாவது கோட்டை வாசலைப் பலமாக முற்றுகையிடப் போகிறான். அதற்கு முதலில் பத்தாயிரம் பேரை உயிர்ப்பலி கொடுத்தாக வேண்டும். அதற்கு உன் போர் வீரர்களில் திடகாத்திரமானவர்களாகப் பத்தாயிரம் பேரைப் பொறுக்கியெடுத்து முன்னணிப் படையில் தயாராக அணிவகுத்து நிறுத்தி வை!"

"எதற்காக முன்னணிப் படையில்..?"

"சாவதற்குத்தான்! முன்னால் நிற்கும் முன்னணிப் படைதான் சாகும்! இனி அரசாங்கப் படையிலிருந்து ஒரு போர்வீரன் உயிரைக்கூடப் பலிகொடுக்க முடியாதாகையால் எங்கள் அரசாங்கப் படை பின்னணிப் படையாகத்தான் நிற்கும்!" என்று ஜனநாதன் சொல்லி விட்டுத் தூரத்தில் தெரியும் நெட்டூர்க் கோட்டையைச் சுட்டிக் காட்டினான்.

மூன்று கோட்டை வாசல்களின் உட்புறமும், வாசலுக்கு நேராக ஒன்றரைப் பனைமர உயரத்திற்கு நான்கு ஸ்தம்பங்கள் நடப்பெற்று, பத்து ஆள் சுற்று வட்டமுள்ள பிரம்மாண்டமான ஒவ்வொரு நெருப்புக் கொப்பரை வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு நெருப்புக் கொப்பரையினுள்ளும் இரும்பைக் காய்ச்சி ஊற்றிய

நெருப்புக் குழம்பின் ஜுவாலையும் கரித்தூள்களினால் கொழுந்து விட்டெரியும் தீப்பொறிகளும் சுழன்று சுழன்று வீசி, வானத்தைச் கட்டெரிக்கும் மூன்று தீச்சட்டிகள்போல் காட்சியளித்தன. கொப்பரையின் ஒரு காது வளையம் ஓர் இரும்புச் சங்கிலியால் கீழ்நோக்கி இழுத்துக் கட்டப்பட்டும், இன்னொரு காது வளையம் இன்னொரு தேர்வடக்கயிற்றால் மேல் நோக்கி இழுத்துக் கட்டப்பட்டும் இருந்தன.

மூன்று கோட்டை வாசல்களிலுள்ள மூன்று கொப்பரைகளிலும் மேல் நோக்கி இழுத்துக் கட்டப்பட்ட கயிறுகள் பல உருளைகளின் வழியாகக் கோட்டையின் உச்சித் தள வரிசையிலுள்ள மேடைக்குக் கொண்டு போகப்பட்டு வரிசையாக மூன்று முளைகள் அடித்து, ஒவ்வொரு கயிறாகக் கட்டப்பட்டிருந்தன. முற்றுகையைச் சமாளிக்க முடியாமல் போனால், எதிரிகள் வாசற்கதவை உடைத்துக்கொண்டு உள்ளே புகுவார்களானால் குறிப்பிட்ட வாசலின் உள்ளேயுள்ள நெருப்புக் கொப்பரையின் கயிற்றை வெட்டிக் கொப்பரை கவிழ்த்து விடப்படும். அதிலிருந்து கொட்டும் நெருப்புக் குழம்பில் வெற்றி வீரர்களாய் உள்ளே புகும் அத்தனை எதிரிகளும் எரிந்து போவார்கள்!

இவ்வாறு முதலாவது கோட்டை வாசல் உடைபட்டபொழுது கயிற்றை வெட்டி வீரபாண்டியன் கவிழ்த்த நெருப்புக் கொப்பரையின் தீ இன்னும் எரிந்துகொண்டிருந்தது. கடைசிச் சாமத்தின் போதுதான் அது பூராவாக எரிந்து அணைந்து முடியும்!

அது நெருப்புக் கொப்பரைகளை மாரீசமுதலிக்குச் சுட்டிக் காட்டிய ஜனநாதன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே, “கோட்டை வாசலைத் தாக்கும் போது வீரமரணமடைபவர்கள் போக எஞ்சியுள்ள உன்போர் வீரர்கள் அனைவரும் அந்த நெருப்புக் கொப்பரைகளுக்கு அர்ப்பணம் ஆவார்கள். உன்போர் வீரர்கள் அக்கினி குலத்தவராயிருந்தாலும் நெருப்புக்கு ஹவிஸாகாமல் தப்ப முடியாது! பிறகு கோட்டை வாசல்களை உடைத்து, அத்தனை போர் வீரர்களும் எரிந்து சாம்பலான பின்,

எங்கள் அரசாங்கப் படையினர் அவ்விடங்களில் மெல்லப் பிரவேசித்துக் கோட்டையைச் கலபமாகக் கைப்பற்றிக் கொள்வார்கள். சுருக்கமாகச் சொன்னால் உன் போர் வீரர்களின் மரணப் பாதையில் எங்கள் அரசாங்கப் படை வெற்றி கீதம் பாடிச் செல்லும்!" என்றான்.

"ஏன், கோட்டை வாசல் வழியாக நுழையாமல் மதிற் சுவர்களின் மீதேறி உள்ளே குதித்தால்..."

"உள்ளே உள்ள நீரகழிகளுக்குள் விழுந்து சாகவேண்டியது தான்! சாதாரணமாக நீரகழிகளுக்குள் பசியுள்ள முதலைகளைமட்டுந்தான் போட்டு வைப்பது வழக்கம். ஆனால் வீரபாண்டியனோ, தப்பித் தவறியும் எவனும் நீந்திக் கரையேறிவிடக் கூடாதேயென்று காலைப் பிடித்து உள்ளே இழுக்கும்படியாக நூதனமான வலைகளையும், பொறிகளையும், கருவிகளையும் வைத்திருக்கிறான்! எப்படியும் உன்னுடைய முப்பதினாயிரம் போர் வீரர்களில் ஒரு கோழையின் உயிர்கூட மிஞ்ச முடியாது."

"அநியாயம்! அநியாயம்!" என்றான் மாரீச முதலி.

"இதிலென்ன அநியாயம்? உன்னுடைய ஆடையூர் நாடாள்வாரின் வாக்குப் பரிபாலனம்! உயிர்ப்பலி கொடுப்பது என்றே நான் மந்திராலோசனை சபையில் ஸ்பஷ்டமாகச் சொல்லிவிட்டேன்! அக்கிழவரும் இரத்ததானம் செய்வதாக ஸ்பஷ்டமாகவே வாக்களித்தார்!" என்றான் ஜனநாதன்.

"ஒரு பெரியாரின் வாக்குப் பரிபாலனத்திற்கு நீர் கற்பிக்கும் அர்த்தம் வெகு அழகாயிருக்கிறது! யுத்த முனையில் அநாவசியமாக உயிர்ச்சேதம் ஏற்பட்டு நம் பலத்தைக் குறைத்துக்கொள்வது சரியான விவேகமல்ல!"

"உபயோகப்படாத சதை அநாவசியமாக உடம்பில் இருப்பதும் விவேகமல்ல! மாரீச முதலி, அந்த நெருப்புக் கொப்பரைகளுக்கு என்ன வழி சொல்லுகிறாய்? அந்தப் பெரும் வேள்வித்தீக்கு உன் போர் வீரர்களின் உயிர்தான் நீராக உபயோகப்பட வேண்டும்!"

"இன்னும் கொஞ்ச நாள் காத்திருப்போம்!"

"காத்திருந்தால் நெருப்புத் தானாகவே அணைந்து விடாது! மேலும் மேலும் நெருப்புக் குழம்பை உற்பத்தி செய்து கொண்டிருப்பார்கள்!"

"மழை வரலாம்! அடை மழையில் நெருப்புக் கொப்பரைகள் அணைந்து நீர்ச் சட்டிகளாக நீர்த்துப் போகலாம்!"

"இது மழை பெய்யும் காலமல்ல! திடீர் மழை வருமென்று ஜோஸிய பலனும் சொல்லவில்லை!"

"கடவுள் கிருபையால் பெருமழை பெய்யலாம்! கடவுள் நமக்கு உதவி செய்வார்!"

"அநியாயக்காரர்களுக்குத்தான் கடவுள் உதவி செய்வதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள்! நாமோ நியாயத்திற்காகப் போராடுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம்! கடவுள் நமக்கு உதவி செய்வார் என்று எதிர்பார்ப்பது அறிவீனம் மட்டுமல்ல, இயற்கை தர்மத்துக்குங்கூட விரோதம்!"

"மழை பெய்யாவிட்டாலென்ன? கோட்டைக்குள்ளே வீரபாண்டியன் கட்சியில் துரோகிகள் ஏற்பட்டு நமக்குச் சாதகமாகக் கோட்டைக் கதவுகளைத் திறந்துவிடுவார்கள்! அத்தகையதொரு சூழ்நிலை கிடைக்கும்வரை காத்திருப்போம்!"

"வீரபாண்டியனுக்கு இலங்கை ராணிமூலம் பிறந்த மூத்த குமாரன் இளவரசுப் பட்டத்திற்குரியவனாய் உயிரோடிருந்தவரை அத்தகையதொரு சூழ்நிலை இருந்தது வாஸ்தவந்தான்! ஆனால் அக்குமாரனை நாம் மதுரை மண்ணிலே அட்சகுமாரன் வதைப்படலம் நடத்தி முடித்து விட்ட பிறகு, சூழ்நிலை மாறிவிட்டது! இப்போது வீரபாண்டியன் கட்சியில் புதிதாகத் தோழர்கள் சேர்வார்களே தவிர, துரோகிகள் ஏற்பட மார்க்கமில்லை!"

"கோட்டைக்குள் உணவுச் சேமிப்புகள் குறைந்து வீரபாண்டியன் சரணாகதியடையலாம்!"

"அதற்கும் மார்க்கமில்லை! கோட்டைக்குள் இன்னும் இரண்டு வருஷங்களுக்குத் தேவையான உணவுச் சேமிப்பு இருக்கிறதாம்! அதோடு கோட்டைக்குள்ளே வயல் வரப்புகளும் உழவர்களும் இருப்பதாகக் கேள்விப் படுகிறேன்!"

"வேறு ஏதாவது நாம் யூகிக்க முடியாதபடி எதிர்பாராத மார்க்கம் கிடைக்கலாம்!"

"அது முட்டாள்களும், கோழைகளும் எதிர்பார்க்கும் மார்க்கம்! கண்ணுள்ள நாங்கள் அதுவரை காத்திருக்க முடியாது! நாளை அதிகாலையிலேயே வீரசேகரன் சர்வ நிச்சயமாக இரண்டாவது கோட்டை வாசலை முற்றுகையிடப் போகிறான்!"

"முப்பதினாயிரம் போர் வீரர்களின் உயிர்கள் சாமானியமான தொகையல்ல. அவை ஆடையூர் நாடாள்வார் என் கையில் அடைக்கலமாக அனுப்பிய உன்னதப் பொருள்கள். அவற்றிற்கு அடைக்கலம் கொடுப்பது என் சோற்றுக்கடன்!"

"மாரீச முதலி! இந்தக் கையடைப் படலத்திற்கு விரைவில் ஒரு முடிவேற்பட வேண்டும். கையடை கைமாற வேண்டும்!" என்றான் ஜனநாதன்.

மாரீச முதலி மேலும் தயங்கினான்.

"மாரீச முதலி! இப்போது நீ உன் படைகளைக் கொடுத்துதவப் போகிறாயா? இல்லை, மறுக்கப் போகிறாயா? முடியாதென நீ மறுத்து விட்டால், உடனே நம் தலைநகருக்குத் தகவல் அனுப்பிவிடுகிறேன்! நெட்டூர்க் கோட்டையை வீரசேகரனால் கைப்பற்ற முடியவில்லையென்றால் அது அவன் குற்றமாகாது! நெருக்கடியான சமயத்தில் ஏற்பாட்டை மீறி நீ படையுதவி செய்ய மறுத்ததுதான் முக்கிய காரணமாக விளங்கும்! வீரபாண்டியன் மனைவியை விரைவில் சிறைபிடிக்க வேண்டுமென அரசர்பிரான் ஆத்திரப்படும் இந்தச் சமயத்தில் ஆடையூர் நாடாள்வார் தம் வாக்குத் தவறினால்,

அவரது அரசியல் செல்வாக்கும் அரசரது அபிமானமும் என்ன ஆகும்? அதை உனக்குச் சொல்லத் தேவையில்லை!" என்று ஜனநாதன் கண்டிப்பான குரலில் உச்சஸ்தாயியில் சொன்னான்.

"உயிர்களைக் காப்பாற்ற முயன்றேனே தவிர உங்களுக்குப் படைகளைத் தர மறுக்கவில்லையே!" என்று மாரீச முதலியின் ஸ்தாயி இறங்கியது.

மிஞ்சினால் காரியம் பலிக்காது என்றதைக் கண்ட மாரீச முதலி ஜனநாதனைக் கெஞ்சத் தொடங்கினான். "உயிர் என்றால் இலேசான காரியமா? முப்பதினாயிரம் போர் வீரர்களையும் நெய்ச்சோறும் பாலன்னமும் கொடுத்து எத்தனை ஆண்டுகளாக ஊட்டி வளர்த்தோம்? அவ்வளவையும் ஒரு நொடியில் தெரிந்தே மரணத்தின் தலை வாசலில் தள்ளுவதா? போர் வீரர்களின் உயிர்களைச் சிற்றெறும்புகளைப்போல இலேசாகப் பாவித்துவிடலாமா?" என்று மாரீச முதலி பலவாறாகப் பெண் மானைப்போல மருண்டு புலம்பத் தொடங்கினான்.

"மாரீச முதலி, உயிர் என்பது உனக்கு மட்டுமல்ல, எனக்கும் பெரிய விஷயந்தான்! ஆனால் வேண்டுமென்று நான் செய்யவில்லையே? வேறு வழியிருந்தால் நீயே சொல். கூடியவரையில் உயிர்களைக் காப்பாற்ற முயற்சி செய்யலாம்!" என்று ஜனநாதனும் தன் குரலின் ஸ்தாயியை இறக்கிக்கொண்டான்.

உடனே மாரீச முதலி, "கொஞ்சம் இருங்கள், இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியே சென்றான்.

"இவ்வளவு அவசரமாக எங்கே போகிறான்?" என்று வீரசேகரன் கேட்டான்.

"ஒரு மலையாளத்துப் புலவரை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தப் போகிறான். அவன் மாயவியல்லவா?" என்று சிரித்தான் ஜனநாதன்.

"நமக்கு இங்கே புலவர் எதற்கு?"

''கலிங்கத்துப் பரணி பாட அல்ல; மாரீச முதலியின் கைவித்தையைக் காட்ட! வீரசேகரா, ஒரு போலிப் புலவன் இன்னொரு போலிப் புலவனை இங்கே கொண்டுவந்து நிறுத்தி எவ்வளவு அழகாக நாடகம் நடத்தப் போகிறான், பார்!"

''மாரீச முதலியின் முப்பதினாயிரம் போர் வீரர்களையும் பலி கொடுக்காமல் விடமாட்டாய், இல்லையா, ஜனநாதா?"

"அதிலென்ன சந்தேகம்?"

வீரசேகரன் சிரித்துக்கொண்டே, "ஜனநாதா! எந்தப் பொது லட்சியத்திலும் உன் சுயநலந்தான் பிரதானம் வகிக்கிறது!" என்றான்.

"தம்பி! சுயநலக் கலப்படமில்லாத எந்த இலட்சியமும் உருப்படாது!" என்று ஜனநாதனும் சிரித்துக்கொண்டே, ''தம்பி! சுயநலமில்லாமல் காரியமுமில்லை, வீரியமுமில்லை! இலட்சியத்தோடு கொஞ்சம் சுயநலமும் கலந்திருந்தால்தான், சுயநலம் வெற்றிபெறும்போது அதோடு சேர்ந்து இலட்சியமும் வெற்றிபெறும்! உதாரணமாக உன்னையே எடுத்துக்கொள்! நீ இலட்சியவாதி! நெட்டூர்க் கோட்டைக்குள் சீக்கிரம் புகவேண்டுமென ஆத்திரப்படுகிறாய். அவசரப்படுகிறாய்! கோட்டைக்குள் உன் ஊர்மிளாவைச் சந்திக்கலாம். கோட்டையைக் கைப்பற்றுவதோடு காதலியையும் சேர்த்துச் சிறைபிடித்துக்கொள்ளலாம் என்று ஆசைப்படுகிறாய்! தம்பி, எந்தப் பொது லட்சியத்திலும் தனி மனிதனின் சுயநலம் எள்ளத்தனையாவது கலந்தே இருக்கும்!" என்றான்.

ஊர்மிளாவைப்பற்றிய ஏதோ இன்ப நினைவில் லயித்தவண்ணம் வீரசேகரன் ஒரு கணநேரம் கண்ணை மூடியிருந்தான். பிறகு மெல்லக் கண்ணைத் திறந்து ஜனநாதனை நோக்கி வெட்கத்துடன் புன்னகை செய்தான்.

"ஜனநாதா! நான் முதன்முதலில் ஊர்மிளாவைச் சந்தித்தபோது அவளை நான் காதலித்தேனா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது; அதைப்பற்றி நான் சிந்திக்கவுமில்லை! ஆனால் நீதான் என் உள்ளத்திற்குக் காதல் பயிற்சியளிக்கிறாயோ என்றுகூடத் தோன்றுகிறது!"

"வீரசேகரா! எதிரிடையான குணத்தை நாடுவதுதான் விறுவிறுப்பான காதல்! நட்புக்குங்கூட அந்த இலக்கணந்தான் பிரயோஜனப்படும்!"

"எதிரிடையான குணம் வேறு! எதிரி வேறு! இல்லையா?" என்று வீரசேகரன் சொல்லி வாய் மூடுவதற்குள், மாரீச முதலி எங்கிருந்தோ ஒரு புலவரைப் பரபரவென்று இழுத்துக்கொண்டு வந்து நிறுத்தினான்.

அந்த அப்பாவிப் புலவர் அவனைப்போல் மெலிந்த உருவத்தோற்றமுள்ளவராயும் ஆனால் அவனைவிடக் கோழையானவராயும் துடைநடுங்கி நின்று கொண்டிருந்தார். அடி உதை விழுந்ததன் சின்னங்களாய்த் தோல் உரிந்தும் ரத்தத் துளிகள் நிறைந்தும் அவரது உடல் மிகவும் கன்றிப் போயிருந்தது. அவருடைய கழுத்தில் தங்கத்தால் மான் வடிவம் பொறித்த உத்திராட்ச மாலையொன்று தொங்கியது. உத்திராட்சக் கொட்டைகளின் நடுநடுவே தங்கச் சங்கிலியில் சிறுசிறு பொன்மான்கள் தொங்கின.

"இவன் மலையாளத்துப் புலவனாம். பெயர் மானாபரணராம்! உண்மையில் இவன் யார் தெரியுமா?" என்றான் மாரீச முதலி.

"தெரியும்! கலைமானைப்பற்றியும் பெண் மானைப்பற்றியும் பாடும் ஆண்பாற் புலவர்! இவர் கழுத்தில் தொங்கும் உத்திராட்ச மாலையிலுள்ள மான் இலச்சினையைப் பார்த்தாலும் இவரை மான் ஆபரணர் என்று சொல்லுவதில் தவறில்லை!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"இவன் சேர நாட்டிலிருந்து வருகிறான்! நெட்டூர்க் கோட்டைக்குப் பின்புறம் இவன் அலைந்து

கொண்டிருந்தான். பின்புறம் ஒரு சுரங்க வழி இருக்கிறது என்பது கபாலிகர்களிடையே பிரசித்தம்! அதனால் உடனே இவனைப் போலிப் புலவன் என்று கண்டுபிடித்து விட்டேன்!"

"இனம் இனத்தை வெகு சுலபமாகக் கண்டு கொள்கிறது!"

அது சுருக்கென்று மாரீச முதலிக்குத் தைத்தாலும், தன் பெருமையைவிட்டுக் கொடுக்காமல், "இந்தப் புலவன், சேரராஜன் மனைவியிடமிருந்து வீரபாண்டியன் மனைவிக்கு இரகசியமாக ஓலை கொண்டு போகிறான். இவனை வேஷதாரியென்று எவ்வளவு கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்தேன், தெரியுமா?"

"அது மிக மிகச் சுலபம்! இந்த ஏழைப் புலவர் இன்னும் தம் தங்க மானாபரணத்தை விற்றுச் சாப்பிடவில்லை; மானாபரணங்கள் அப்படியே இவர் கழுத்தில் இருக்கின்றன! இவர் ஒரு வேஷதாரியாய்த்தான் இருக்கவேண்டும் என்பதை எந்த முட்டாளும் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"இந்தப் புலவர் கொண்டுபோகும் ஓலையில் இரகசியமாக என்ன எழுதப்பட்டிருக்கிறது? உடனே பிரித்துப் பார்த்தாயா?" என்று அவசரப்பட்டான் வீரசேகரன்.

"பிரித்தது தெரியாதபடி பிரித்துப் பார்த்தேன். குழாயின் மூடியிலுள்ள முத்திரை அரக்கை ஓர் அணுகூட உதிராதபடி பிரித்து உள்ளேயுள்ள ஓலையை எடுத்துப் படித்துப் பார்த்தேன். ஆனால் ஒன்றும் விளங்கவில்லை. அது வட்டெழுத்தாகவும் இல்லை; கிரந்தமாகவும் இல்லை, தேவநாகரியாகவும் இல்லை; ஏதோ பரிபாஷையில் எழுதப்பட்டிருக்கிறது!" என்று மாரீச முதலி ஓலையையும் அது இருந்த பித்தளைக் குழாயையும், முத்திரையிட்ட அரக்கையும் ஜனநாதன் கையில் வெகு பத்திரமாகக் கொடுத்தான்.

"இது சேர அரண்மனையில் கையாளப்படும் தனிப் பரிபாஷையே! என் கைவசமுள்ள அன்னராஜன் இதைப் படித்துப் பார்த்து அர்த்தம் சொல்லுவதில் கைதேர்ந்தவன்! அவனைப் பற்றித்தான், மாரீச முதலி, நீ நிறையக் கேள்விப்பட்டிருப்பாயே? ஆனால் அவன் ஊமையன்; அதோடு செவிடன். கைஜாடை மூலந்தான் அவனிடம் விஷயத்தைக் கிரகிக்கவேண்டும்! அந்தக் கைஜாடை செய்யும் தனிவிதம் என் ஒருவனுக்குத்தான் தெரியும்!" என்று சொல்லிவிட்டு, அன்னராஜனை வரவழைத்துக் கைஜாடைகளின்மூலம் பேசி, ஓலையின் சாராம்சத்தைக் கிரகித்துக் கொண்டு பிறகு விளக்கினான்.

"சேர ராஜன் மனைவி, அதாவது வீரபாண்டியன் மனைவியின் தாயார் தன் மகளுக்கு ஓலை எழுதியிருக்கிறாள்!" என்று சொல்லிவிட்டு அந்த ஓலையின் வாசகத்தை அப்படியே தமிழ் மொழிபெயர்ப்பில் ஜனநாதன் சொன்னான்:

"குழந்தாய்!

''உன் கணவர் இலங்கையோடு தோழமை கொண்டதனால் தான் உன் தந்தை மனஸ்தாபமுற்றாரே தவிர வேறல்ல. இலங்கைக்கும் சேர நாட்டுக்குமுள்ள பழைய விரோதத்தை இன்னும் உன் தந்தை மறக்கவில்லை. உன் சக்களத்தி இலங்கை ராணி மூலம் பிறந்த மூத்த குமாரன் பராக்கிரமன். இளவரசுப் பட்டத்துக்கு உரிமையாகாமல் மரித்துவிட்டானாகையால், மருமகனுக்கும் மாமனாருக்கும் இடையே மறுபடி சுமுகமான நிலை ஏற்பட வழியிருக்கிறது.

"உன் கணவருக்கு ஆபத்தான இந்தச் சமயத்தில் அவர் தாமாகவே வந்து படையுதவி செய்யலாமென்றாலோ, அவரது ராஜ கௌரவம் இடம் கொடுக்கவில்லை. ஆனால் 'நம் பெண்ணின் எதிர்கால வாழ்வைச் சிந்தித்துப் பாருங்கள்' என்று நான் மிகவும் கெஞ்சிக் கதறியதனால் அவர் ஓரளவு மனமிரங்கி பெரும் படையுடன் வந்து கொற்கை நகரில் தங்கியிருக்கிறார். உன் கணவர் இது சமயம் உடனே கொற்கைக்குப்

புறப்பட்டு வந்து நேரில் உன் தந்தையிடம் படையுதவி கேட்டுக்கொள்ள வேண்டும். உன் தந்தை கேட்கும் சந்தேகங்களுக்கெல்லாம் உன் கணவர் தகுந்த சமாதானங்கள் சொல்லி நெருங்கிய நட்பு உண்டாக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தால் உன் தந்தை முழுபலத்துடன் உதவிசெய்யச் சித்தமாக இருக்கிறார். நெட்டூர்க் கோட்டையை முற்றுகையிடும் சோழிய வீரர்களைப் புறமுதுகிடவும் செய்வார். இந்தச் சமாதான உடன்படிக்கைக்கும் சந்திப்பிற்குமாகவே உன் தந்தை கொற்கை நகரில், வரும் பௌர்ணமி தினம் வரை காத்திருப்பார். அதற்குள் உன் கணவர் வந்து சந்திக்காவிடில் சேர நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் உள்ள ராஜீய உறவு மட்டுமல்ல, உன் தந்தைக்கும் உன் கணவருக்கும் உள்ள குடும்ப உறவுகூட என்றென்றைக்கும் விட்டுப்போகும் என்பதை நீ பரிபூரணமாக நம்பலாம்.

"கண்ணே, தாய்க்கும் மகளுக்கும் உள்ள உறவு விட்டுப் போகக்கூடாது என்பதற்காகவாவது உடனே உன் கணவரைக் கொற்கைக்குப் புறப்பட்டு வரச் சொல். மிகவும் அவசரம்.

இப்படிக்கு,

**கைப்பட எழுதினது உன் தாயார்."**

இதைப் படித்து முடித்த ஜனநாதன் விநயமாய்ச் சிரித்துக் கொண்டே, மாரீச முதலியை நோக்கி, "இது அதிமுக்கியமான ஓலைதான்! ஆனால் இந்த ஓலைக்கும், உன் முப்பதினாயிரம் போர் வீரர்களின் சம்ரக்ஷணத்திற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டான்.

"இருக்கிறது!" என்று மாரீச முதலி திடமான குரலில் சிரித்தான்.

"எப்படி? இந்தப் புலவரைக்கொண்டு சுரங்க வாசல் வழியாக உன்னுடைய முப்பதினாயிரம் போர் வீரர்களையும் உயிரோடு கோட்டைக்குள் புகுத்தி விடுவதா?" என்று ஜனநாதன் கேட்டான்.

"இல்லை! அது அசட்டுத்தனம் என்பது எனக்குந் தெரியும். மிகவும் நீளமானதும் இருண்டதுமான சுரங்க வாசலில் ஒரே சமயத்தில் ஒரே ஆள் நுழையும் அளவுக்குத்தான் இடம் உண்டாம். எதிர் பார்த்ததற்கு மாறாக யாராவது. அந்நியர் உள்ளே நுழைந்தால். உள்ளே சுரங்க வழியின் இருட்டில் தயாராகக் காத்திருக்கும் வீர பாண்டியனின் காவற்காரர்கள் உள்ளே தனியாக நுழைபவனின் தலையை வெகு சுலபமாக வெட்டி விடுவார்கள். என்னுடைய முப்பதினாயிரம் போர் வீரர்கள் ஒவ்வொருவராக உள்ளே நுழைந்தால் ஒவ்வொரு தலையாக வெட்டிக் கொண்டே இருப்பார்கள்!" என்றான்.

"எப்படிப் பார்த்தாலும் உன் போர் வீரர்களின் தலைகளுக்குத் தான் ஆபத்து வந்து சேருகிறது!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"இல்லை. இன்னொரு வழியிருக்கிறது: யாராவது நம்முடைய ஆள், அந்தக் கோட்டைக்குள் போய் மூன்று நெருப்புக் கொப்பரைகளின் கயிறுகளையும் வெட்டி விட்டால், என் முப்பதினாயிரம் வீரர்களின் தலையில் விழவேண்டிய நெருப்புக் குழம்பு வீரபாண்டியனின் ஆட்கள் மீதே விழுந்து கொன்றுவிடுமல்லவா? அதிகமாக உயிர்ப்பலி கொடுக்காமலேயே நாம் சுலபமாகக் கோட்டையைக் கைப்பற்றி விடலாம்!" என்றான்.

"உன் திருவாயிலிருந்து இத்தகையதொரு திருவாசகம் நான் எதிர்பார்த்ததுதான்!" என்று சிரித்த ஜனநாதன் அவனையும் அவனருகில் இருக்கும் புலவரையும் கடைக்கண்ணால் மாறிமாறி நோக்கி, "துரதிர்ஷ்டவசமாக இந்தப் புலவரும் உன்னைப்போல் ஒரு புலவரா யிருக்கிறார்! மேலும் உன்னைப்போலவே இந்தப் புலவரையும் வீரபாண்டியன் ஆட்கள் முன்பின் பார்த்ததேயில்லை என்று நானும் விசாரித்துத் தெரிந்துகொண்டேன்! ஆகா, மாரீசன் உருமாறுவதற்கேற்ற சரியான பாத்திரந்தான் இந்தப் புலவர்!" என்று முடித்தான்.

உடனே மாரீச முதலி, "ஆமாம்; புலவரின் ஆடைகளைப் பறித்து நான் அணிந்துகொண்டு இந்தப் புலவருக்குப் பதில் நானே சுரங்க வழியில் கோட்டைக்குள் புகுவேன். நானே புலவராக நடித்து வீரபாண்டியனின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி, எல்லோரும் உறங்கும் நேரத்தில் மூன்று நெருப்புக் கொப்பரைகளின் கயிறுகளையும் வெட்டி விடுகிறேன்! வேறு யாரையும் அனுப்ப எனக்கு நம்பிக்கைப் படவும் இல்லை. ஏனென்றால் என் முப்பதினாயிரம் போர் வீரர்களின் உயிர் அந்த மூன்று கயிறுகளில்தான் இருக்கிறது!" என்றான்.

"நீயே போ! ஆனால் போகும்போது இந்த ஓலையையும் எடுத்துக் கொண்டுபோய் வீர பாண்டியனிடம் காட்ட மறந்து விடாதே? ஏனென்றால் வீரபாண்டியன் உன்னை நம்ப வேண்டுமல்லவா? அப்போதுதான் மாரீசா, பொய் மானைப் பெண் மானும் நம்புவாள்!" என்றான் ஜனநாதன்.

"வீரபாண்டியன் இந்த ஓலையைப் படித்தால் உடனே சேர ராஜனின் உதவியைப் பெறப் புறப்பட்டு விடுவானே...?" என்று வீரசேகரன் தயங்கிய குரலில் கேட்டான்.

"அதனால் என்ன? சுரங்க வழியாகத்தானே வீரபாண்டியன் கோட்டையைவிட்டு வெளியே வரவேண்டும்? அப்போது வெளியே நம்முடைய ஆட்களைத் தயாராக நிறுத்தி வைத்து வீரபாண்டியன் வெளியே வந்ததும், அவனது தலையை வெட்டி விடலாம்; அல்லது அவனைச் சுலபமாகப் பிடித்துக்கொள்ளலாம்!" என்றான் மாரீச முதலி.

"வீரபாண்டியனுக்குப் பதில் வேறு யாராவது வெளியே வர நேர்ந்து, அவனை நம் வீரர்கள் பிடித்துக் கொண்டுவிட்டால், வீரபாண்டியன் எச்சரிக்கை அடைந்துவிடுவானே?"

''கூடியவரையில் அப்படி ஆகாமல் நான் பார்த்துக்கொள்கிறேன். அப்படியே வீரபாண்டியனுக்குப் பதில் வேறு யாராவது வெளியே வர நேர்ந்தால் அடையாளம் தெரிவதற்காக என் கழுத்திலுள்ள பொன்மான் ஆபரணத்தைக் கழற்றி அவன் கழுத்தில் போட்டனுப்புகிறேன். மானாபரணம் அணிந்து வெளி வருபவனை நீங்கள் ஒன்றும் செய்யாமல் அவன் வழியே போக விட்டு விடுங்கள்!" என்றான் மாரீச முதலி.

"இவ்வாறு வெளியே வருவதற்கும் நீ ஏற்பாடு செய்கிறாயென்றால், உன் வார்த்தைகளை அவர்கள் பரிபூரணமாய் நம்புவதற்கு இந்த ஓலையில் ஒரு வாசகமும் இருக்கவேண்டுமே!" என்றான் ஜனநாதன்.

"நானும் அதைப்பற்றித்தான் யோசித்தேன்! இந்த ஓலையில் என்னைப் பரிபூரணமாக நம்பும்படி பின் வாசகத்தை எழுதிச் சேர்த்துவிடலாம்! ஆனால், அசல் கையெழுத்தைப்போல் எழுதக் கூடியவன்தான் யாரென்று தெரியவில்லை!" என்றான் மாரீச முதலி.

"அதுதானா பிரமாதம்?" என்று ஜனநாதன் சிரித்து விட்டு, ''என்னுடைய ஆள் அன்னராஜன் அசல் கையெழுத்தைப் போலவே அதே பரிபாஷையில் பொய் வாசகங்கள் எழுதுவதிலும் மகா சூரன்! அதற்காகவே அவனுக்கு அதிகத் தீனிபோட்டு வளர்க்கிறேன்!" என்று கூறிவிட்டு, அன்னராஜனுக்குக் கை ஜாடைகள் செய்தான். அவன் ஓலையின் அடியில் பின் குறிப்பாகச் சில வாசகங்களை எழுதினான். அதற்கு இதுதான் அர்த்தமென ஜனநாதன் கீழ்க்கண்டவாறு எடுத்தோதினான்:

**பின் குறிப்பு :** "இந்த ஓலை கொண்டுவரும் புலவர் நம் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். கோட்டையைவிட்டு உன் கணவர் வெளியே வருவதற்கும் இவரே ஏற்பாடு செய்திருப்பார்! உங்கள் கோட்டையின் உச்சித் தளவரிசையில் ஏறி நின்று இரண்டு நெருப்புப் பந்தங்களை ஆட்டி ஜாடை காண்பிப்பதன் மூலம், வெகு தூரத்திலிருக்கும் என் ஆட்களுக்கு உன் கணவர் கோட்டையைவிட்டு வெளியே வரும் செய்தியை

உடனுக்குடன் தெரிவித்துக்கொண்டிருப்பார். அதற்கு வசதி செய்து கொடு!

இப்படிக்கு,
**எழுதினவள், உன் தாயார்.**"

இதை ஜனநாதனின் வாய்மூலம் கேட்ட மாரீச முதலி ஆனந்தத்தால் துள்ளிக் குதித்து, "அபாரம்! அபாரம்! நெருப்புக் கொப்பரைகளின் கயிறுகளை இழுத்துக் கட்டியிருக்கும் உச்சி தளவரிசையின்மீது நான் சந்தேகத்திற்கிடமின்றி ஏறி நிற்பதற்கும் சரியான முகாந்தரம்! கயிறுகளைக் கத்தியால் அறுக்கும் பிரயாசைகூட இல்லாமல் என் கையிலுள்ள திப்பந்துங்களாலேயே கயிறுகளைக் கொளுத்திவிடுவதற்கும் சரியான சூழ்ச்சி முறை...!" என்றான்.

"இவ்வளவு காரியங்களையும் எந்த நேரத்திற்குள் முடிப்பாய், எப்போது கொப்பரைகளைக் கவிழ்ப்பாய் என்பதற்கு ஒரு நாழிகையை குறித்துவிட்டுப் போ. அந்த நாழிகைக்குள் காரியம் நடக்கவில்லையென்றால் உனக்குக் கோட்டைக்குள் ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டது என்று மேற்கொண்டு ஆகவேண்டிய காரியங்களை நாங்கள் கவனிக்கிறோம்" என்றான் ஜனநாதன்.

"நாளை மதியம் சரியாகப் பத்தரை நாழிகைக்குள் எல்லாம் நடந்துவிடும்!" என்று மாரீச முதலி நாழிகை குறித்தான்.

ஜனநாதன் மிகச் சாவதானமாக, "ஆனால் மாரீச முதலி, நீ புறப்படுவதற்குமுன் உன் முப்பதினாயிரம் போர் வீரர்களின் படைத் தலைமையையும் வீரசேகரனிடம் மாற்றிக் கொடுத்துவிட்டுப் போ. ஏனென்றால், பகைவரின் கோட்டைக்குள் நுழையும் உன் விதி என்ன ஆகிறதென்பது எங்களுக்குத் தெரியாது. நீயும் என்றும் பதினாறு வயசு வரம் பெற்ற மார்க்கண்டேய அடியாரல்ல! மேலும் நீ நெருப்புக் கொப்பரைகளை கவிழ்த்துவிட்ட பிறகு கோட்டை

வாயில்களை உடைத்துக்கொண்டு உள்ளே புக, உன் போர் வீரர்கள் தேவைப்படுவார்கள்!" என்றான்.

அதற்கிணங்கி மாரீச முதலி அவ்வாறே ஏற்பாடு செய்துவிட்டுப் புலவரின் உடைகளையும் பொன் மானாபரணத்தையும் தான் வாங்கி அணிந்துகொண்டு, கையில் சேரராஜன் மனைவியின் ஓலையை எடுத்துக் கொண்டு, புலவரை அடித்துத் துன்புறுத்திப் பெற்ற ஜாடை வழிகளின் பிரகாரம் தன்னந்தனியாகப் புறப்பட்டு, நெட்டூர்க் கோட்டையின் பின்புற மதிற்சுவரில், ஓர் கற்றாழைப் புதரின் மறைவிலுள்ள சுரங்க வழிக்குள் புகுந்தான்.

"நம் மாரீச முதலி பகைவர் கோட்டைக்குள் நுழைகிறானே! தனியொருவனாகக் குறித்த நாழிகைக்குள் எல்லா இடையூறுகளையும் செய்து முடிப்பானா? அல்லது அவனுக்கே இடையூறுகள் ஏற்பட்டு விடுமா?" என்று வீரசேகரன் கலவரமடைந்த குரலில் ஜனநாதனைக் கேட்டான்.

"தம்பி! இடையூறுகளுக்கு இடையூறுகள் செய்தும் நான் காரியத்தைக் காப்பாற்றுவேன்! எதற்கும் போர் வீரர்களை அணி வகுத்துத் தயாராகப் பெருவேள்விக்கு நிறுத்தி வை! அதாவது பெரும் நெருப்புக் கொப்பரைக்கு!" என்று சிரித்தான் ஜனநாதன்.



# அத்தியாயம் 16

## மாரீச வதைப் படலம்

'மாள்வதே பொருளாக வந்தான் அவன்
சூழ்வதோர் பொருள் உண்டு இவன் சொல்லினாய்!'

கம்ப ராமாயணம்

மறுநாள் மதியம் பத்தரை நாழிகை ஆயிற்று!

அந்த நேரத்திற்காக ஆவலோடு காத்திருந்த வீரசேகரன் தூரத்தில் நெட்டூர்க் கோட்டைக்குள் தெரியும் மூன்று நெருப்புக் கொப்பரைகளையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். படை வீரர்களெல்லாம் பல வியூகங்களாக அணி வகுக்கப்பட்டுத் தயாராக நிறுத்தப்பட்டிருந்தனர். ஆடையூர் நாடாள்வாரின் போர் வீரர்களின் பத்தாயிரம் நபர்கள் பொறுக்கி எடுக்கப்பட்டு முன்னணிப் படையாக முதலில் நிறுத்தப்பட்டிருந்தனர். அணி வகுப்புகள் அனைத்தும் மேலே என்ன செய்வதென்று வீரசேகரனின் கட்டளைக்காகக் காத்துக்கொண்டிருந்தன. மாரீச முதலி குறித்த வேளை தவறி பதினோராவது நாழிகையும் ஆகிவிட்டது...

நெருப்புக் கொப்பரைகளில் எதுவும் கவிழ்க்கப்படவில்லை! அவற்றை மேல்நோக்கி இழுத்துக் கட்டப் பட்டிருந்த தேர்வடக் கயிறுகள் அறுபடாமல் அப்படியே இருந்தன. அவ்வாறு செய்வதாக நாழிகை குறித்துவிட்டுப் போன மாரீச முதலியோ கோட்டையின் உச்சித் தளவரிசைக்கு வரவுமில்லை! கைகளில் தீப்பந்தங்களுடன்

*நிற்கவுமில்லை! அவன் என்ன கதியானான், கோட்டைக்குள் உயிரோடிருக்கிறானா இல்லையா என்பதன் அறிகுறியே இதுவரை தென்படவுமில்லை!*

*வீரசேகரன் பொறுமையிழந்துவிட்டான். கலவரமுமடைந்தான். தன் கூடாரத்தினுள் ஏமாறிய பூனைபோல் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். ஆனால் அவனருகில் நின்ற ஜனநாதனோ வழக்கம்போல் அலட்சியமான சிரிப்புடன் சிறிதும் கலங்காமலிருந்தான்.*

*"மாரீச முதலி குறித்துப்போன நாழிகைக்குமேல் அரை நாழிகையும் ஆகிவிட்டது! இன்னும் நெருப்புக் கொப்பரைகள் கவிழ்க்கப்படாமல் இருக்கின்றனவே?" என்று குழம்பிய வீரசேகரன் தன்னருகில் நின்ற ஒற்றனை நோக்கி, "நீ நிச்சயமாகப் பார்த்தாயா? இன்று அதிகாலை கருக்கல் நேரத்தில் யாரோ ஒரு புலவர் கோட்டையின் சுரங்க வாசல் வழியாக வெளியே வந்தார் என்றாயே?"*

*"ஆமாம்; என் கண்களால் பார்த்தேன்! விடிவதற்குள் அவர் வெகு வேகமாக வெளியே வந்து, கண்மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் எங்கோ சென்று மாயமாய் மறைந்துவிட்டார்! அவர் தம் கழுத்தில் மான் ஆபரணம் அணிந்திருந்ததால் அவர் வழியே போகட்டுமென விட்டுவிட்டேன்."*

*"நம்முடைய மாரீச முதலிதானே மான் ஆபரணம் அணிந்து கொண்டு புலவர் வேஷத்தில் கோட்டைக்குள் நுழைந்தான்? விடிவதற்குள் ஏன் சுரங்க வாசல் வழியாக வெளியே வரவேண்டும்? வெளியே வந்தவன் இந்நேரம்வரை ஏன் வந்து நம்மைச் சந்திக்கவில்லை?" என்றான் வீரசேகரன்.*

*"மாரீச முதலி கோட்டைக்குள்தான் இருக்கிறான்! புலவர் வேஷத்தில் அவன் உள்ளே நுழைந்தது வாஸ்தவந்தான்! ஆனால் அதே புலவர் வேஷத்தில் வெளிவந்தவன். அவனல்ல!" என்று சிரித்தான் ஜனநாதன்.*

*அதற்கேற்றாற்போல் ஒற்றனும், "அவ்வாறுதான் இருக்க வேண்டும்! ஏனென்றால், வெளியே வந்த*

புலவருக்குச் சுருள் மீசை இருந்தது. நம் மாரீச முதலிக்குச் சுருள் மீசை இல்லை!" என்றான்.

"சரி, நீ போ! யாரும் உள்ளே வராமலிருக்க வெளிக் கதவை மூடிவிட்டுப் போ! மேலே ஆகவேண்டிய காரியத்தை நானும் ஜனநாதனும் தனிமையில் கலந்தாலோசிக்கவேண்டும்!" என்று வீரசேகரன் அந்த ஒற்றனை அனுப்பிவிட்டுப் பாசறையில் அவனோடு தனியாய் நிற்கும் ஜனநாதனை நோக்கி, "அவ்வாறானால் நம் மாரீச முதலி இன்னும் உள்ளே என்ன செய்கிறான்? அவன் ஏன் தன் புலவர் வேஷத்தைக் கலைத்து இன்னொருவனுக்கு மான் ஆபரணத்தைக் கழற்றிக் கொடுத்தான்? வெளியே சுரங்க வாசல் வழியாகப் புலவர் வேஷத்தில் வந்த அந்த ஆள் யார்? அவன் வேகமாக எங்கே சென்றான்? எங்கே மறைந்தான்?" என்று வியப்புடன் வீரசேகரன் கேட்டான்.

"இதிலென்ன இன்னும் சந்தேகம்? வெளியேறி மறைந்த அந்த ஆசாமி வேறு யாருமல்ல! வீரபாண்டியனேதான்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

அதைக் கேட்டுத் திடுக்கிட்ட வீரசேகரன், "அப்படியென்றால் என்ன அர்த்தம்? மாரீச முதலி நம்பிக்கைத் துரோகியென்று அர்த்தமா?" என்றான்.

"இல்லை! நம்முடைய சம்பூர்ண ராமாயணப்படி கோட்டைக்குள் கனகச்சிதமாக மாரீச வதைப் படலம் நடக்கிறது என்று அர்த்தம்!"

"அவ்வாறானால் நம்முடைய மாரீச முதலியைக் கொன்று விட்டு அவனுடைய புலவர் வேஷத்தில் வீரபாண்டியன் இரகசியமாகக் கோட்டையை விட்டு வெளியேறி விட்டானா?"

"வீரபாண்டியன் வெளியேறிவிட்டான் என்பதில் சந்தேகமில்லை! ஆனால் மாரீச வதைப் படலம் இன்னும் கோட்டைக்குள் முடிந்த பாடில்லை!"

"அதை எவ்வாறு அவ்வளவு உறுதியாய்ச் சொல்கிறாய், ஜனநாதா!"

"வீரசேகரா. இன்னும் கொஞ்சம் பொறுத்திருந்து பார்! அந்த நெருப்புக் கொப்பரைகளிலிருந்து உன் கண்களை எடுக்காமல் இன்னும் கொஞ்ச நாழிகை வைத்திரு! எல்லாம் தானாகவே விளங்கும்!"

அவ்வாறு சொல்லி ஜனநாதன் வாய் மூடுவதற்குள் தூரத்தில் தெரியும் இரண்டாவது கோட்டை வாசலினுட் புறமுள்ள நெருப்புக் கொப்பரைத் தூணொன்றில் நாலைந்து ஆட்கள் தடதடலென்று மேலே ஏறிச் செல்லும் நிழல் உருவங்கள் தென்பட்டன. அவர்கள் யாரோ ஒருவனைக் கட்டித் தூக்கிக்கொண்டு போவது போலவும் தென்பட்டது.

"அவர்கள் ஏன் நெருப்புக் கொப்பரைத் தூண்மீது ஏறுகிறார்கள்? யாரை அப்படிப் பரபரவென இழுத்துத் தூக்கிக்கொண்டு போகிறார்கள்?" என்று கேட்டான் வீரசேகரன்.

"நம்முடைய மாரீச முதலியைத்தான்!" என்றான் ஜனநாதன்.

"எதற்காக?"

"நெருப்புக் கொப்பரைக்குள் தூக்கிப் போடுவதற்குத் தான்! வீரசேகரா, துரதிர்ஷ்டவசமாக நம்முடைய ராமாயணப்படி மாரீச வதைப் படலம் நெருப்புக் கொப்பரைக்குள் தான் நடைபெற வேண்டியிருக்கிறது! போலி இலக்கியங்களின் முடிவும் அந்த நெருப்புக் கொப்பரைக்குள் தான் இருக்கிறது!"

"நம்முடைய மாரீச முதலி கொண்டுபோன ஓலையை நம்பி வீரபாண்டியன் வெளியேறியிருக்கும்போது ஓலையைக் கொண்டு போன புலவர்மீது மட்டும் அவநம்பிக்கையுற்று யாராவது நெருப்புக் கொப்பரைக்குள் தூக்கிப் போடுவார்களா?"

"ஏன் போட.மாட்டார்கள்? ஓலையின் பின் குறிப்பாக உள்ள வாசகப்படி.தான் அவர்கள் செய்கிறார்கள்!"

"அந்தப் பின் குறிப்பு வாசகத்தை நீதானே உன் அன்னராஜனைக்கொண்டு எழுதிச் சேர்த்தாய்!"

"ஆமாம்! நான்தான் எழுதச் செய்தேன். ஆனால் உங்களிடம் அதை நான் படித்துக் காண்பித்த விதம் வேறு. அதை எழுதச் செய்த விதம் வேறு."

"அப்படியென்ன மாறுபாடாக எழுதிச் சேர்த்தாய்?" என்று வீரசேகரன் ஆத்திரத்துடன் கேட்டான்.

"இந்த ஓலை கொண்டுவரும் புலவன் வெறும் வேஷதாரி. நம்பிக்கைத் துரோகியாகக் கூடியவன். ஸ்திரீஹத்தி, சிசுஹத்தி செய்த மகா பாவி! இவன் தனக்குரிய மரண தண்டனையை அநுபவிக்கும் போது இவனுடைய மரணமும் ஒரு நல்ல காரியத்துக்காக உபயோகப்பட வேண்டுமென்று விரும்பி இவனை அனுப்பியிருக்கிறோம். இந்த ஓலையைப் படித்து முடித்ததும் இதைக் கொண்டு வருபவனைத் தூக்கி நெருப்புக் கொப்பரைக்குள் போட்டு விடவும்!"

அதைக் கேட்ட வீரசேகரன் அளவிறந்த ஆக்ரோஷமுற்று, "அக்கிரமம்! அக்கிரமம்! அநியாயம்! மகா பாபகரமான படுகொலை!" என்று கத்தினான்.

ஜனநாதனோ சிரித்துக்கொண்டே, "தம்பி. உணர்ச்சிவசமாகாதே! மாரீச முதலி தனக்குரிய தண்டனையைத்தான் அநுபவிக்கிறான். அவன் தன்னிடம் வந்த ஒரு பெண்பாற் புலவரிடம் துராக்கிருதமாய் நடந்து அதன்மூலம் பிறந்த சிசுவைச் சிசுஹத்தி செய்தான் என்பதும், அதைத் தொடர்ந்து அதன் தாயையும் ஸ்திரீ ஹத்தி செய்தான் என்பதும் அழிக்கமுடியாத உண்மைகள். அரசியல் செல்வாக்கால் அவற்றை அழித்து விடலாமென மனப்பாலும் குடித்தான். அதோடு அவன் என் பரம வைரி! அந்தக் கோட்சொல்லி உயிரோடிருக்கும்வரை எனக்கும் ஆபத்து!"

அப்போது நெருப்புக் கொப்பரைக்குள் தூக்கிப் போடப்படும் மாரீச முதலியின் பயங்கரமான அலறல் கேட்பதுபோல் இருந்தது.

அதைப் பார்க்கச் சகியாமல் வீரசேகரன் ஒரு கணநேரம் கண்ணை மூடிக்கொண்டான்.

"இவ்வாறு மாரீச முதலியைப் பழி தீர்க்காதிருந்தால் இந்நேரம் அவன் நெருப்புக் கொப்பரைகளைக் கவிழ்த்து வீரபாண்டியனின் ஆட்களைப் பொசுக்கியிருப்பான்! கோட்டையை நான் வெகு சுலபமாகக் கைப்பற்றி யிருக்கலாம். அக்கிரமம்! நம்பிக்கைத் துரோகம்! தேசத்துரோகம்! ராஜத்துரோகம்! எல்லாவற்றிற்கும் மேலாக நட்புத் துரோகம்!" என்று வீரசேகரன் சீறினான்.

"தம்பி, சீறாதே! குயுக்தியான முறையில் குறுக்கு வழியில் கோட்டையைக் கைப்பற்ற விரும்புவது உன் வீரத்திற்கு அழகல்ல; அது தர்மமுமல்ல. நேரான வழியிலே முற்றுகையிட்டு முறைப்படி ஆடையூர் நாடாள்வாரின் முப்பதினாயிரம் போர் வீரர்களையும் உயிர்ப் பலி கொடுத்து மூன்று கோட்டை வாசல்களையும் உடைத்தெறிந்து உள்ளே நுழைவதுதான் தர்ம யுத்தம்! அதுதான் உன் நேர்மைக்கும் வீரத்திற்கும் ஏற்றது!" என்றான் ஜனநாதன்.

"ஆடையூர் நாடாள்வாரின் முப்பதினாயிரம் போர் வீரர்களையும் உயிர்ப் பலியிட்டு அவருடைய படை பலத்தைக் குறைத்து உனக்குச் சமபலமாக்குவதுதான் உன்னுடைய ஒரே நோக்கம்."

"அந்த நோக்கத்தை நான் எப்போதும் மறைக்க முயன்றதில்லையே! மந்திராலோசனை சபையில்கூட மறைக்கவில்லையே! புத்தியுள்ளவனாயிருந்தால் அப்போதே புரிந்துகொண்டிருக்க வேண்டும்."

"உனக்கு உன் சுயநலந்தான் முக்கியம். நான் கோட்டையைக் கைப்பற்றுவதைப்பற்றி உனக்கு அக்கறையில்லை."

"உன்னைவிட எனக்குத்தான் அதில் அக்கறை அதிகம்! கோட்டையை நிச்சயம் நீ கைப்பற்றத்தான் போகிறாய்! ஆனால் முப்பதினாயிரம் போர் வீரர்களைப் பலி கொடுத்த பிறகு!"

"பலி கொடுக்கத்தான் போகிறேன். இப்போது அதை விட்டால் எனக்கு வேறு வழியில்லை? ஆனால்.. ஆனால் என் சபதத்தை எப்படி நிறைவேற்றப் போகிறேனோ தெரியவில்லை!... ஜனநாதா! நான் வீரபாண்டியன் மனைவியைச் சிறை பிடிக்காவிட்டால் என் தலைக்கு மரணம் காத்திருக்கும் என்று உனக்கு நன்றாகத் தெரியும்."

"உன்னைவிட அது எனக்கு வெகு நன்றாகத் தெரியும்! வீரசேகரா! நீ உன் சபதத்தைக் காப்பாற்றத் தான் போகிறாய்! அது என் உதவியால்தான் நடைபெறப் போகிறது!"

"வீரபாண்டியனைத் தப்பியோட விட்டுவிட்டாய்!"

"வீரபாண்டியனின் மனைவியைத்தான் சிறை பிடிப்பதாக உன் சபதம்!"

"வீரபாண்டியன் நம் சோழ சாம்ராஜ்யத்தின் எதிரி!"

"அவன் ஒரு புலவர் வேஷத்தில் வெளியே போவான் என்று எதிர்பார்ப்பது எனக்கு அலசியப்படவில்லை!"

"அனத நீ முன்பே ஆலோசித்திருக்க வேண்டும். அரசருக்குத் தெரிந்தால் உன்னைப்பற்றி என்ன நடவடிக்கை எடுப்பார்?"

"நீயே வேண்டுமானாலும் அரசருக்குத் தெரிவித்துவிடு! இது போன்ற விஷயங்களைத் தன் காதுலரை எட்டவிட்டு, தர்ம சங்கடத்தில் ஆழ்த்துகிறானே யென்று அரசர் உன்மீதுதான் கோபப்படுவார்!"

"நான் மூன்று கோட்டை வாசல்களையும் உடைத்துக்கொண்டு உள்ளே புகுந்தால் எத்தகைய காட்சியைக் காண்பேன் தெரியுமா? தனிமையில் கோட்டைக்குள் அகப்பட்டுக்கொண்ட வீரபாண்டியன் மனைவி எதிரிகளின் கையில் சிக்க விரும்பாமல் வேள்வித் தீ வளர்த்து அதற்குள் அக்கினிப் பிரவேசமாகி விடுவாள்! அப்போது, நான் சபதம் நிறைவேறாமல் தற்கொலை செய்துகொள்வதைவிட இப்போதே உன்

கையால் என்னைக் கொன்றுவிடுவது நல்லது. சுற்றிவளைத்து நீ எதிர்பார்ப்பதும் என் மரணத்தைத்தானே? என் ஒருவனிடமாவது உன் கோரிக்கையை நேரிடையாக முடித்துக்கொள்!"

''இல்லை அநாவசியமாக உன் மரணத்தை விரும்பவில்லை... வீரசேகரா, சித்தம் கலங்காதே! நீ நிச்சயம் வீரபாண்டியன் மனைவியை உயிரோடு சிறைபிடிக்கத்தான் போகிறாய்! அதற்குத்தான் என் குயுக்திமுறை தேவைப்படும். அந்தச் சந்தர்ப்பத்தில் குயுக்தியை உபயோகிப்பது உன் வீரத்திற்குக் களங்கமும் இல்லை!"

"என்ன சொல்லுகிறாய்?"

"தம்பி, உன் கையில் வாள் உண்டு. உன் கைவசம் முப்பதினாயிரம் வீரத் தோள்களும் உண்டு! எல்லாவற்றிற்கும் மேலாக நானும் இருக்கிறேன்! உன் வெற்றியைப்பற்றி என்ன கவலை?"

''உன்னை என்னால் நம்ப முடியவில்லை, ஜனநாதா! நீ மாரீச முதலி விஷயத்தில் நடந்துகொண்ட பயங்கரமான முறையைப் பார்த்த பிறகு உன் சம்பந்தம் எதுவுமே எனக்குப் பயமாக இருக்கிறது!"

"பகைவர்களிடம் நான் அநுசரிக்கும் முறையைக் கொண்டு நண்பர்களிடமும் அவ்வாறுதான் நடந்துகொள்வேன் என்று எடைபோடாதே! நண்பனின் சபதத்தை நிறைவேற்றுவது என் பொறுப்பு!"

"நான் உன் நண்பனா, பகைவனா என்பதே விளங்கவில்லையே!"

"விளங்க வைக்கக்கூடியது நட்பல்ல."

"எனக்கு அவ்வளவு அறிவு இல்லை. உன்னை நண்பனாகப் பாவிப்பதா, பகைவனாகப் பாவிப்பதா என்று நான் இன்னும் முடிவுகட்டவில்லை!"

"அது உன் உணர்ச்சியைப் பொறுத்தது மட்டுமல்ல; என் அறிவையும் பொறுத்தது! ஆனால் ஒன்று கூற விரும்புகிறேன்: உனக்காக இல்லாவிட்டாலும் எனக்காகவாவது உன் சபதத்தை நிறைவேற்றப் போகிறேன்!" என்று சொல்லிவிட்டு ஜனநாதன் வெடுக்கென வெளியேறினான்.

சற்று நேரத்திற்குப் பிறகு வீரசேகரன் பாசறையைவிட்டு வெளியே வந்து தன் உடைவாளை உருவி, வீசிப் பிடித்து, "போர் வீரர்களே! நெட்டூர்க் கோட்டையைக் கைப்பற்றாமல் இந்த வீரசேகரன் உயிரோடு வீடு திரும்புவதில்லையென வீரப் பிரதிஞ்ஞை செய்கிறேன். புறப்படுங்கள். மூன்றே நாளில் மூன்று கோட்டை வாசல்களையும் உடைத்தெறிய முயலுவோம்!... இளம் வீரர்களே, மரணக் குமரி மனமுவந்தளிக்கும் சிவந்த முத்தத்தை ஏற்கத் தயாராகுங்கள்! எல்லோருமே சர்வ தியாகத்துக்கும் சித்தமாயிருங்கள்! இன்று சூரியாஸ்தமனத்தின் ரத்தச் சிவப்புக்குள் இரத்த வெள்ளத்தில் நீந்தி இரண்டாவது கோட்டை வாசலை உடைத்தெறிவோம்! புறப்படுங்கள்...!" என்று வீர முழக்கமிட்டான்.

மடை திறந்த வெள்ளம்போல் சேனை வெள்ளம் இரண்டாவது கோட்டை வாசலை நோக்கிப் பாய்ந்தது!



# அத்தியாயம் 17

## சித்திரக்கூடப் படலம்

*'வீறுபஞ்சு இன்றி அமுதநெய் மாட்டிய விளக்கே!'*
*'பெண்மை என்று உரைகின்ற உடலினுக்கு உயிரே!'*

**கம்ப ராமாயணம்**

மண்ணும் விண்ணும் அதிர 'வீர கோஷங்கள் நெட்டூர்க் கோட்டைக்குள் கிளம்பின. அதைத் தொடர்ந்து பிண மலைகளும் பெருகின.

இரத்த மலைகளின் நடுவே சோழியர்களின் புலி இலச்சினை பொறித்த பட்டுத் துவஜங்கள் மலைப் பாம்புகள்போல் நெளிந்தன.

''வெற்றி அல்லது வீரமரணம்!'' என்று கூவிக்கொண்டே சோழியர் படைத் தலைவனான வீரசேகரன் முழுபலத்துடன் முற்றுகையிட்டுத் தாக்கியதில் நான்கு கோட்டைச் சுவர்களும் தகர்ந்து நான்கு வாசல்களும் தூள் தூளாய்ச் சிதறிவிட்டன. உடைபட்ட நான்கு கோட்டை வாசல்களிலும் நான்கு நெருப்புக் கொப்பரைகளும் கவிழ்க்கப்பட்டு உறைந்துபோன நெருப்புக் குழம்பில் எண்ணற்ற போர் வீரர்களின் சாம்பல்கள் மிதந்தன. உள்கோட்டை வாசலில் இன்னும் இலேசாக எரியும் நெருப்புக் குழம்பில் ஆடையூர் நாடாள்வாரது போர் வீரர்களின் உடல்கள் பொசுங்கிக் கருகிக்கொண்டிருந்தன. விண்ணில் புகைப் படலமும் மண்ணில் சாம்பல் புற்றுமாக எங்கும் காட்சியளித்தன.

வீரதேவதையின் போதை அணைப்பில் மனிதர்கள் சாம்பலாகவும் ஆவியாகவும் மாறிக்கொண்டிருந்தார்கள்.

நான்கு கோட்டை வாசல்களும் உடைபட்டு விட்டதால் வீர பாண்டியரின் மனைவி, மகன், மந்திரத் தலைவர்கள் முதலானோர் உள்ளேயுள்ள ராஜ மாளிகைக்குள் அடைபட்டுப் பிரம்மாண்டமான கதவுகளை மூடிக்கொண்டு விட்டனர். அம்மாளிகைச் சுவர்களைத்தான் வீரசேகரனின் போர் வீரர்கள் உடைத்தெறிவதில் இப்போது மும்முரமாக ஈடுபட்டிருந்தனர் வெளியே தற்காப்பிற்காக நிறுத்தப்பட்டிருந்த பாண்டியர் படைக்கும் வீரசேகரன் படைக்கும் கடும் யுத்தம் நடந்துகொண்டிருந்தது.

ராஜமாளிகைக்குள் மரணஅமைதிபோல் துயரப் படலம் நிலவியது. ராஜமாளிகையின் இருதய ஸ்தானமாக விளங்கிய சித்திரகூட மண்டபத்தில் இருள் படலம் கவிந்திருந்தது. அதன் மண்டபத்திலுள்ள பெரிய பெரிய பெண் சிலைகளெல்லாம் மௌனப் புன்னகை பூத்திருந்தன. அந்தப் புன்னகையிலும் ஒருவிதத் துயரம் தோய்ந்திருப்பதுபோல் சோகபாவம் தென்பட்டது. வாசனை விளக்குகளிலிருந்து வரும் தூமப் புகையில்கூட ஒருவித்த் துயர மணம் கமழ்ந்தது.

சித்திரகூட மண்டபத்தில் கூண்டுக் கிளிபோல் வீரபாண்டியன் மனைவி தவிதவித்தாள். நினைத்தாலே உயிர் தளிர்க்கச் செய்யும் இளந்தளிர்க் கொழுந்துபோன்ற அவள் ஜீவன் இழந்தவளாகக் காணப்பட்டாள் அவளுடைய அணைப்பில் ஆறு வயதுப் பாலகனான வீரகேரளன் மருண்ட மானைப்போல மிரள மிரள விழித்துக்கொண்டிருந்தான்.

இரத்தக் கறை படிந்த வாள் படைகளைப் போலத் தேவியின் விழிகளில் செவ்வரிகள் படர்ந்திருந்தன.

"என் பிராணபதி வந்துவிட்டாரா?" என்று அடிக்கொருதரம் கேட்டுக் கொண்டேயிருந்தாள் வீரபாண்டியன் தேவி. அவளுடைய நினைவெல்லாம்

எங்கோ தொலை தூரத்தில் இருந்தது. பட்டமகிஷியின் மணியாடைகள் புனைந்திருந்த அவளால் வாய்விட்டு அழவும் முடியவில்லை! அவள்முன் முக்கியமான மந்திரத் தலைவர்களெல்லாம் மௌனப் பதுமைகளாக அமர்ந்திருந்தனர். உறுதியான உள்ளம் படைத்த உத்திரமந்திரி கோனார்கூட நிலைகலங்கி விட்டார். வீரபாண்டியன் இல்லாத சமயம் அவனது மனைவி மக்களுக்கும் கோட்டை மாளிகைக்கும் இவ்வளவு பெரிய ஆபத்து சூழ்ந்து விட்டதேயென்று அவர் உருகி உருகிக் கரைந்துகொண்டிருந்தார். அவரது நரைத்த புருவங்கள் அடிக்கடி நெறிந்தன.

மாளிகையின் வெளியே இன்னும் யுத்தம் நடந்துகொண்டுதான் இருந்தது. ஆனால் கோட்டையின் தற்காப்புப் படையினரிடையே மனத் தளர்ச்சி ஏற்பட்டுவிட்டது. ''இனி மாளிகையைக் காப்பாற்ற முடியாது'' என்று பாண்டிய வீரர்கள் பேசத் தலைப்பட்டுவிட்டனர். தேசபக்தியையும் ராஜபக்தியையும் தூண்டிப் பாண்டியப் படைத் தலைவன் வீரவுரைகள் ஆற்றிக்கொண்டிருந்தான். ஆனால் அவையெல்லாம் ஒரு துயர மௌனத்துடன்தான் வரவேற்கப்பட்டன. உற்சாகம் குன்றி உயிர் விட வேண்டியது கடமையென்னும் உணர்வு பாண்டிய வீரர்களிடையே அதிகரித்துவிட்டது.

வைத்தியரால் கைவிடப்பட்ட நோயாளியின் முன் உறவினர்கள் ஒன்றாகக் கூடியிருப்பதுபோல் சித்திர கூடத்தில் முக்கியஸ்தர்களெல்லாம் கூடியிருந்தனர். அதுதான் பாண்டியத் தலைவர்களின் கடைசி ஆலோசனைக் கூட்டம்!

சபைக்கு நடுநாயகமாக வீற்றிருந்த வீரபாண்டியன் மனைவி திரைலோக்கிய முழுதுடையாள் மனம் பதைத்தவளாய், "அமைச்சரே! நீராவது உண்மையைச் சொல்லும்! இன்னும் நம் மாளிகை எவ்வளவு நேரத்திற்குத் தாக்குப் பிடிக்கும்?" என்று கேட்டாள்.

"தேவி. இன்னும் மூன்று அல்லது நான்கு நாழிகை நேரத்திற்குத்தான். ஏற்கனவே மாளிகைச் சுவரில் நான்கு

சிறு உடைப்புகள் ஏற்பட்டுவிட்டன. அவை நான்கும் நான்கு மரண காயங்கள்..." என்று சொன்ன உத்திர மந்திரி கோனார் அதற்குமேல் பேச முடியாதவராய், "ஓ" வெனப் பச்சைக் குழந்தைபோல் அழுதுவிட்டார்.

"அமைச்சரே, நீரேன் அழுகிறீர்? அழவேண்டியவள் பெண்!" என்று சொன்ன தேவி தன் அழுகையை வாய்க்குள்ளேயே அடக்கிக்கொண்டாள்.

"இல்லையம்மா! அமைச்சனின் மதியையும் மீறிய நிலை வந்துவிட்டது. யாரும் எதிர்பாராத சூறாவளி யுத்தமாக இருக்கிறது. யுத்தப் பயிற்சி இல்லாத வீரசேகரன் வெறி மிருகம்போல் மூர்க்கத் தனமாகத் தாக்குகிறான். ஒவ்வொரு நாள் போருக்கென்றும் ஓய்வுக்கென்றும் போர் வீரர்களை ஒதுக்காமல் அவ்வளவு பேரையும் ஒன்று திரட்டிக் குருட்டுப் போக்கில் ராட்சஸ பலத்துடன் மோதுகிறான்..." என்றார் உத்திர மந்திரி கோனார்.

திருமந்திர ஓலைநாயகமான முரப்பு நாட்டு மறவனூரம்பலவன் குதித்தெழுந்து. "அவனுக்கு அவ்வளவு பலமும் போர் வீரர் எண்ணிக்கையும் இருக்கிறதென ஏற்கனவே நாம் எதிர்பார்த்ததுதான். ஆனால், முதலாவது கோட்டை வாசலை உடைக்க ஒன்பது நாளாயிற்று! மற்ற மூன்று கோட்டை வாசல்களையும் உடைக்கக் குறைந்த பக்ஷம் இருபத்தொரு நாளாவது ஆகுமெனக் கணக்குப் போட்டோம்! வீரசேகரன் நான்கே நாளில் மூன்று கோட்டை வாசல்களையும் உடைத்தெறிந்து விட்டான்!" என்றான்.

மழவராயன் அழமாட்டாத குறையாய், "நம்முடைய முதலாவது கோட்டை வாசல் உடைபட்டபோது நாம் நெருப்புக் கொப்பரையைக் கவிழ்த்தோம்! அதைக்கண்டு வீரசேகரன் பிரமித்துப் பத்தாயிரம் வீரர்கள் உயிர் பலியானதில் மனம் தளர்வான் என்று எதிர்பார்த்தோம். ஆனால் மூன்று கோட்டை வாசலுக்கும் முப்பதினாயிரம் போர் வீரர்களைப் பலி கொடுக்க முன் வருவானென்றோ நம் நெருப்புக் கொப்பரைகளைப் பன்னீர்க் குடமாகக் கருதுவானென்றோ நாம் சிறிதும் எதிர்பார்க்கவில்லை!

வேறு ஏதாவது குறுக்கு வழியில் இறங்குவானென்று எதிர்பார்த்து ஏமாந்தோம்!" என்றான்.

மௌனப் பதுமையாக இருந்த வீரபாண்டியன் மனைவியோ, "கொற்கைக்குச் சென்ற என் பிராணநாதர் இன்னும் திரும்பி வரவில்லையா? என் தந்தை அவரை இன்னும் ஏன் கொற்கையிலே வைத்துக் கொண்டிருக்கிறார்?" என்று கூண்டுக் கிளிபோல் மழலைக்குரலில் கோனாரை நோக்கிக் கேட்டாள்.

"வீரபாண்டியச் சக்ரவர்த்திகள் இன்னும் வரவில்லை! உத்தேசப்படி நாளைக் காலைதான் கொற்கையிலிருந்து திரும்புவார்! இந்த நெட்டூர்க் கோட்டை முற்றுகையிலிருந்து சோழியர்களை விரட்டுவதுமுதல் நம் தலைநகரான மதுரையை மறுபடி மீட்பது வரை சகலவிதமான யுத்த நடவடிக்கைகளையும் சேர ராஜரோடு கலந்தாலோசித்துவிட்டு வருவதாகச் சொன்னார்! ஆனால் வீரபாண்டியர் படை பலத்துடன் திரும்பி வரும்போது இங்கே கோட்டையின் ஒரு சுவடுகூட இராது! தம் கனவுகளெல்லாம் இங்கே சாம்பலாகிக் கிடப்பதைக் காணப்போகிறார்!" என்று புலம்பினார் கோனார்.

"இங்கிருந்து சுரங்கவாசல் வழியாக யாராவது தூதனையனுப்பிச் சக்கரவர்த்திகளுக்கு ஏற்கனவே தகவல் கொடுத்திருக்கலாம்!" என்றாள் தேவி.

"சுரங்க வாசல்களின் வெளிப்புறம் எண்ணற்ற சோழிய வீரர்கள் பாயும் புலிகளாய்க் காத்திருக்கிறார்கள்! சுரங்க வழிகள் அனைத்தும் அடைபட்டுப் போயின!" என்று கோனார் பொருமினார்.

"இந்த நெருக்கடியான நிலையில் சக்கரவர்த்திகள் நம் அருகில் இல்லாததுதான் ஒரு பெரிய குறை! இல்லையெனில் நம்மை எதிர் நோக்கியிருக்கும் வீரச்சாவை ஆனந்தப் புன்னகையுடன் ஏற்றிருப்போம்!" என்றான் இடையாற்றுமங்கலத்து நம்பி.

"முற்றுகை சமயத்தில் கோட்டையைவிட்டு என் பிராண நாதரை அனுப்பியது என் தவறென்று

நினைக்கிறீர்களா?" என்று தேவி தன் நெஞ்சில் பொங்கிவரும் அழுகையை அடக்கத் தன் செவ்வாம்பல் போன்ற உதடுகளைக் கடித்துக்கொண்டு கேட்டாள்.

"இல்லை, தேவி! உங்கள் கணவரோடு நீங்களும் குமாரரும் போகாததுதான் தவறு என்று நினைக்கிறோம்!"

"இந்தக் கோட்டையைவிட்டு நாம் எல்லோருமே போயிருந்தால் இன்னும் அழகாய் இருந்திருக்கும்!" என்றாள் தேவி கம்பீரமாக.

அவளைக் கூர்ந்து நோக்கிய உத்திர மந்திரி கோனார், "தேவி! நிர்க்கதியான நிலைமையை இன்னும் நீங்கள் உணரவில்லை!" என்றார்.

"அமைச்சரே! இந்த நிலையில் ஓர் இராஜ வம்சப் பெண்ணிடம் எத்தகைய உணர்வை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?" என்றாள் தேவி.

உத்திர மந்திரி தலைகுனிந்து ஓவெனக் கதறிவிட்டார். "அம்மா, என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்! என் மதி குழம்பிவிட்டது! எனக்குக் கூர்மையான அறிவு இருந்ததே தவிர, உன்னதமான உணர்ச்சிகளின் உருவங்களைக் காணும் இருதயம் இல்லை!" என்று கண் கலங்கினார்.

தேவி அதற்குமேல் பேசவில்லை. மௌனமாகி விட்டாள்.

சபையில் முன் வரிசையிலிருந்த காளிங்கராயன், "நாழிகை ஆகிறது! இனி நாம் மேலே என்ன செய்வ தென்று விரைவில் ஒரு முடிவுக்கு வந்தாகவேண்டும்! தேவியார் முடிவு சொல்லட்டும்!" என்றான்.

மழவராயன் மெல்ல எழுந்து, "முடிவென்ன? வெளியே நம் தரப்பில் வீரகோஷங்கள் குறைகின்றன. வீரசேகரன் தரப்பில் வெற்றிக் கோஷங்கள் பெருகுகின்றன! நம்முடைய மாளிகைச் சுவர்களில் ஒவ்வொரு கல்லாகவும் நம்முடைய படை வரிசைகளில் ஒவ்வொரு உடலாகவும் நம்மைச் சுற்றித் தரையில்

விழுந்துகொண்டிருக்கின்றன. சரணாகதியா, வீர மரணமா என்ற முடிவான கட்டத்திற்கு வந்துவிட்டோம்!" என்றான்.

"தேவியாரும் குமாரரும் பத்திரமாக வீரபாண்டியத் தேவரிடம் போய்ச் சேர அனுமதிப்பது என்ற நிபந்தனையின் பேரில் நாம் இந்த நெட்டூர்க் கோட்டையை எதிரிகளிடம் ஒப்படைத்துவிடலாம்! சக்கரவர்த்திகள் செய்துவிட்ட பெருந்தவற்றைத் திருத்துவதுதான் இப்போதைய நம் கடமை!" என்றார் பிரம்மராயர்.

தேவியின் மெல்லிய உடல் குலுங்கியது. என்னவோ சொல்ல உதடுகள் துடித்தன. ஆனால் ஒன்றும் வாய்திறந்து சொல்லவில்லை. வில்லிலிருந்து புறப்பட்ட அம்புபோல், அரசவைப் பெட்டகத்தருகில் பாய்ந்து சென்று, அதிலிருந்து இரண்டு உடைவாட்களை எடுத்து வந்தாள். அவற்றில் கட்டிய சலங்கைகள் ஜல்ஜல்வென்று குலுங்க ஒரு வாளை உருவித் தன் கையில் பிடித்துக்கொண்டாள். இன்னொரு வாளை ஆறு வயதுப் பாலகனான வீரகேரளன் கையில் கொடுத்தாள்.

பிறகு தேவி அவனை நோக்கி, "குழந்தாய்! இதோ என் கையிலுள்ள கத்தி எனக்கு மணப்பரிசாக என் தந்தை எனக்களித்த எங்கள் சேர நாட்டு வீரவாள்! உன் கையிலிருப்பது வழிவழி பாண்டிய வம்சத்தின் வீரவாள்! உன் தந்தையின் கையை அலங்கரிக்கும் ராஜவாள்! வா, நாமிருவரும் போரிடப் போவோம்! இக்கோட்டையில் நாம் இருவராவது கடைசிவரை நின்று போராடுவோம்! என் கணவரின் கௌரவத்தைக் காப்பதற்காக நான் போராடுகிறேன்! உன் கோட்டையின் கௌரவத்தைக் காப்பதற்காக நீ போராடு!" என்றாள்.

அவ்வளவுதான்; சபை நெடுகிலும் ஒரு புல்லரிப்பு பரவியது.

பெரிய இராஜவாளின் பாரத்தைச் சுமக்க முடியாமல் பச்சிளம் சிறுவன் மருகினான்.

அவனை நோக்கித் தேவி மேலும் சில வார்த்தைகள் சொன்னாள்:

"குழந்தாய்! சக்கரவர்த்திகள் இங்கு இல்லாத குறையை அவருடைய மனைவியால் பூர்த்தி செய்ய இயலவில்லை யென்றால், என்னை அவர் மணம் புரிந்தது பெருந் தவறு! தந்தை இல்லாத குறையைத் தனயனால் பூர்த்தி செய்ய முடியவில்லையென்றால் உன்னை அவர் மகனாகப் பெற்றெடுத்தது பெருந்தவறு! நம்மிருவரையும் இங்கு நிறுத்திப் போனது இக் கோட்டையின் மானத்தை நினைவுபடுத்துவதற்குத்தான் என்று அவர் கருதாமலி ருந்தால் அவர் பாண்டிய மண்ணில் பிறந்தது பெருந்தவறு! சக்கரவர்த்திகளின் இத்தனை தவறுகளுக்கு நாம் காரணமாயிருக்கவேண்டாம்! வா, போரிடப் போகவாம்!"

சபையில் பரபரப்பு அதிகமாகியது; உணர்ச்சிகளும் கண்ணீரும் அதிகரித்தன.

தேவி தன் பேச்சை விடவில்லை. ஒன்றும் விளங்காமல் விழித்துக் கொண்டு நிற்கும் பச்சிளம் பாலகனை வாரியணைத்து முத்தமிட்டு விட்டுச் சொன்னாள்:

"குழந்தாய்! என்னைப் பெற்றெடுத்த சேரநாடு பெருந்தவறு செய்திருக்க முடியாது! உன்னைப் பெற்றெடுத்த பாண்டிய நாடும் பெருந்தவறு செய்திருக்க முடியாது. உன்னைப் பெற்றவள் என் உடன் பிறந்த சகோதரி, என் உயிரோடு கலந்து பழகி என் உணர்வோடு மறைந்தவள். என்னுள் ஓடும் இரத்தந்தான் அவளுள்ளும் ஓடியிருக்கவேண்டும்! எங்களைப் பெற்றெடுத்த சேர நாட்டுப் பெண்குலம் பெருந்தவறு செய்து விட்டதென்னும் பழிச்சொல் ஏற்படவிடமாட்டேன்! வா, போரிடப் போகலாம்!"

அதற்குமேல் உத்திர மந்திரி கோனாரால் உணர்ச்சிகளைத் தாங்க முடியவில்லை. மிதியுண்ட சிம்மம்போல் கர்ஜித்தார்.

"கேட்டீர்களா, தேவி சொல்வதை! கையில் வாளேந்திப் பச்சிளம் பாலகனோடு இம் மாளிகையை

விட்டுத் தேவியார் வெளியே போவதென்றால், நம்முடைய வாட்களை மட்டுமல்ல, நம்முடைய இருதயங்களையும் ஒடித்துவிட்டுப் போகட்டும்!" என்றார்.

காளிங்கராயன் துள்ளியெழுந்து, "சக்கரவர்த்திகள் இங்கு இல்லாததை நாம் ஒரு குறையாகக் கருதவில்லை! தேவியின் அருள் வாக்கும் வழிவகையும் கிடைத்துவிட்டன! நம்முன் எதிர்நோக்கும் சாவை இன்பப் புன்னகையுடன் ஏற்போம்! புறப்படுங்கள்!" என்று வாளை உருவி அதன் வாயில் இரத்தக் குங்குமம் விழ முத்தமிட்டான்.

கனகராயனும் தன் உடைவாளை உருவி உயரப் பிடித்து, "இங்கு நாம் கைகட்டி வாய்புதைத்து மரணத்திற்குக் காத்திருக்கமாட்டோம்! நாமே சென்று மரணமகளை மணமகளாக வாரியணைத்துக் கட்டியணைப்போம்! மாளிகைச் சுவர்களில் நான்கு உடைப்புகள் ஏற்பட்டு விட்டதென்றால் அவற்றை நம் உடல்களாலேயே அடைத்து மூடுவோம். தோல்வியின் சின்னமாக உடைந்து விழும் ஒவ்வொரு கல்லையும் நம்முடைய ரத்தத்தால் கழுவிச் சுத்தமாக்குவோம். நம்மால் வெற்றிபெற முடியாதென்றாலும் நம்முடைய தோல்வியை உன்னதப் புகழாக்குவோம். நம்முடைய குழந்தைகளின் குழந்தைகளும் நம்மை நினைக்கும்போது மமதை கொள்வார்கள்! எதிரிகள் நம்முடைய மாளிகைச் சுவர்களை அழித்துவிடலாம். ஆனால் நம்முடைய வீரமரணத்தைப்பற்றிய நினைவை அழித்துவிட முடியாது. அவ்வாறானால் என்னுடன் எல்லோரும் சேர்ந்து "தாயகமே, வாழ்க!" என்று கூவுங்கள். "தமிழகமே, தலை நிமிர்க!" என்று கூவுங்கள் "வீரபாண்டியச் சக்கரவர்த்திகள் வாழ்க!" என்ற வாழ்த்தொலிகளுடன் புறப்படுவோம்!"

"வாழ்க! வாழ்க!" என்ற வீரகோஷங்கள் சபை முழுவதும் கிளம்பின.

அந்த உணர்ச்சி வெள்ளத்திற்கு அணைபோடுவது போல் முனையரையன் எழுந்து நின்று, "இந்த வீழ்ச்சி முனையில் நாம் வெறும் உணர்ச்சிகளின் வழியாக

நடந்துவிடக்கூடாது! வீரபாண்டியன் சக்கரவர்த்திகளின் கனவும் இலட்சியமும் இந்த நெட்டூர்க் கோட்டைக்குள்ளேயே முடிந்து விடவில்லை. தலைநகரான மதுரை வரை அது பரந்து இருக்கிறது. நம்முடைய வீரதீரங்கள் மதுரை வரையிலும் தேவைப்படலாம் என்பதை இங்கு நாம் மறந்துவிடக் கூடாது!" என்றான்.

காளிங்கராயன் அதைக் கேட்டு ஆக்ரோஷ முற்றவனாய், "போதும் உன் அறிவியல் போதனை! வீரபாண்டியத் தேவரின் மகத்தான இலட்சியக் கனவு இங்கே சரணாகதியில் துவங்க வேண்டாம். அதைவிட, வீரமரணத்தில் துவங்கி வெற்றிப் பாதையில் நிறைவேறட்டும்!" என்றான்.

"இங்கே எல்லோரும் உணர்ச்சி வசப்பட்டு எனக்கு எதிராக நினைக்கிறீர்கள் ஆனால் நெட்டூர்க் கோட்டைக்காக உயிர்த்தியாகம் என்பது மிகவும் உபயோகமற்றதென்றே நினைக்கிறேன்!" என்றான் முனையரையன்.

"இங்கு முணுமுணுப்பவன் ஒவ்வொருலரும் கோழை! வீரமரணத்திற்கு எதிராகப் பேசும் ஒவ்வொருவரும் தேசத் துரோகி!" என்றான் காளிங்கராயன்.

முனையனரயனும் மேலும் விடாமல், "இந்தச் சந்தர்ப்பத்தில் பிரதம அமைச்சர் ஆலோசித்துக் கூறட்டும். எந்தச் சந்தர்ப்பத்திலும் உணர்ச்சிக்கு இடங்கொடாமல் காரிய சித்தி ஒன்றே குறியாக அறிவை உபயோகப்படுத்தும் அமைச்சர்தான் இந்த உயிர்ப்பலியைத் தடுத்து நிறுத்தவேண்டும்!" என்றான்.

அமைச்சர் கோனாரோ, "சாவின் முனையில் உபயோகப்படுவது அறிவல்ல! அப்போது உணர்ச்சிகள் தான் உன்னதமான உருவங்கொடுக்கும் ஆற்றல் உள்ளவை. உணர்ச்சிகள்தான் சாவிற்குப் பிறகும் தொடர்ச்சி உண்டாக்குபவை!" என்றார்.

மந்திரத் தலைவர் அனைவரும் வீரவாட்களை உயரத் தூக்கி உற்சாகமாக, "வீரமரணம்!" என்று

கூவிக்கொண்டு. சித்திரகூட வாசலை நோக்கிக் கிளம்பினர். அப்போது தேவி இடையில் புகுந்து கை வளையல்கள் குலுங்கத் தன் கையிலுள்ள வீரவாளை உயரத் தூக்கிப் பிடித்து, "நானும் வருகிறேன்!" என்று காற்சிலம்புகள் கணீரென்று ஒலிக்கக் கூறினாள்.

அதற்கு மறுதளிப்பதுபோல் உத்திர மந்திரி கோனார் தலையசைத்தார். "நான் உயிரோடிருக்கும்வரை அதற்கு அநுமதியளிக்கமாட்டேன். தேவி விரும்பினால் அவருடைய ஆறு வயது குமாரனும் போரிட வரலாம். ஆனால் தேவி இந்தச் சித்திர மண்டபத்தைவிட்டு ஓர் அடிகூட வெளியே எடுத்துவைக்க அநுமதியேன்!" என்றார்.

தேவி ஆத்திரமுற்று. "போராட்டத்தில் எனக்குரிய பங்கை மட்டும் ஏன் வஞ்சிக்கிறீர்கள்? உங்களைப்போல் வாள் பயிற்சி போதாவிட்டாலும் தேவையான அளவு எனக்கும் மனப் பயிற்சி இருக்கிறது. கணவரின் கௌரவத்திற்காக மனைவி போரிடுவது சேர நாட்டுப் பெண் குலத்திற்குப் புதிதல்ல! வீர மறவர்கள் மலிந்த உங்கள் பாண்டிய நாட்டுப் பெண் குலத்திற்கும் அது புதிதல்லவே!" என்று கேட்டாள்.

"தேவி! சக்கரவர்த்திகளின் இலட்சியக் கனவுகள் அனைத்திற்கும் உங்கள் நினைவுதான் மூலாதாரம்! இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு மிக அருவருப்பானதொரு செய்தியையும் சொல்ல விரும்புகிறேன். உங்களை உயிரோடு சிறைபிடித்துக்கொண்டு வருவதாக நம் பகைவன் வீரசேகரன் சோழிய மந்திராலோசனை சபையில் சபதமிட்ட பிறகே போருக்கு வந்திருக்கிறான். உங்களைச் சிறை பிடிக்கவில்லையென்றால் வெற்றி மகனாய்த் திரும்பும் அவனுக்குச் சோழ நாட்டில் மரண தண்டனை காத்திருக்கும். ஆதலின் நீங்கள் சித்திர மண்டபத்தைத் தாண்டி மாளிகைக்கு வெளியில் நிராயுதபாணியாவதைவிட. மூடப்பட்ட இந்தச் சித்திர மண்டபத்துக்குள்ளே ஆயுத பாணியாக இருப்பதே நல்லது!"

அதைக் கேட்ட தேவி தீயை மிதித்தவள்போல் பதறினாள். மெய் சிலிர்த்தாள். அவளுடைய நெஞ்சு

விம்மித் தாழ்ந்தது. அதைத் தொடர்ந்து திடமான குரலில் தெளிலாகச் சொன்னாள்.

"அவ்வாறானால், இச் சித்திர மண்டபத்திற்குள் சிதை தயாரித்து அக்கினி வளர்த்துவிட்டுப் போங்கள்! நான் எந்தக் கணமும் இங்கே தீக்குளிக்கத் தயாராக இருப்பேன். வெற்றிக் கோஷத்துடன் என்னைச் சிறைபிடிக்க வரும் வீரசேகரன் இங்கே ஓர் அற்புதமான காட்சியைக் காணட்டும்! நெருப்பிலும் பெண்மை பத்தரைமாற்றுப் பசும் பொன்தான் என்பதை அந்தப் பேதை தெரிந்து கொள்ளட்டும். வீரசேகரன் இங்கிருந்து என் சாம்பலைக்கூடக் கொண்டு போக விடமாட்டேன்!" என்றாள்.

அங்கிருந்த எல்லோரும் எதிர்பார்த்ததுதான் இது; அதனால் திகைக்கவில்லை, குழம்பவும் இல்லை! அனைவரும் துயர மௌனத்துடன் சிதை தயாரிக்க லானார்கள். சித்திரகூடத்திற்குள் விறகுகள் இல்லாததால் அங்கிருந்த மரச் சிலைகளைப் பெயர்த்து வந்து அவற்றையே விறகுகளாக்கிச் சிதை தயாரித்து முடித்தார்கள்.

சிதையின் முன் கம்பீரமாக நின்ற வீரபாண்டியனின் மனைவி தன் குமாரனிடம் ஒரு தீப்பந்தத்தைக் கொளுத்திக் கொடுத்தாள். அவனை வாரியணைத்து முத்தமிட்டுவிட்டுப் புன்னகையுடன் சொன்னாள்:

"குழந்தாய்! நான் சிதையில் ஏறி நின்றதும் உன் கையால் தீ மூட்டவேண்டும். உன் அம்மா தீயில் எரிவதைப் பார்த்து அழக்கூடாது. ஆனந்தமாகச் சிரிக்கவேண்டும். அதுதான் உன்னை வளர்த்ததற்கு நான் எதிர்பார்க்கும் ஒரே கைம்மாறு! அதுதான் மாய்ந்து போன உன் தாய்க்கும் மாளாத ஆனந்தம் தரும்!"



# அத்தியாயம் 18

## கிளை கண்டு நீங்கு படலம்

*......முனிவர் தூசு*
*உடுத்து நண்ணுதற்கு உற்று உளது யாது?' என்றான்.*

**கம்ப ராமாயணம்**

மனிதப் பிரயத்தனங்களின் எல்லையை மீறிய நிலை வந்து விட்டது!

வீரபாண்டியன் கட்சியைச் சேர்ந்த படை வீரர்களின் ஜீவன் ஒடுங்கி விட்டது. நெட்டூர்க் கோட்டைக்குள் இருந்த ராஜமாளிகையின் வெளிப்புறச் சுவர்கள் இடிந்து வீரசேகரனின் படை வீரர்கள் வெற்றி கோஷங்களுடன் மாளிகைக்குள் புகுந்துவிட்டனர்.

வீரபாண்டியன் மனைவியும் அவனது முக்கியமான மந்திரத் தலைவர்களும் கூடியிருந்த சித்திரகூடம் ஒன்றுதான் பகைவர்களின் நாச வேலைக்கு இரையாகாமலிருந்தது. உள்ளே தாழிடப்பட்டு மூடப்பட்டிருந்த அதன் பிரம்மாண்டமான கதவை வீரசேகரனின் ஆட்கள் மோதித் தள்ளித் திறக்க முயன்று கொண்டிருந்தனர். கதவு ஒரே கெட்டி இரும்பால் வார்க்கப்பட்டுக் கலாதேவியின் உலோகச் சிலையொன்றும் பிரம்மாண்டமாகக் கதவின்மீது உருவாக்கப்பட்டிருந்தது. கதவில் தொங்கும் சிறுசிறு துவஜ மணிகளிலும் ஒவ்வொரு பெண் தெய்வத்தின் சிலை குடிகொண்டிருந்தது. சித்திரகூடத்தைச் சுற்றியுள்ள மரச் சுவர்களின்

வெளிப்புறத்தில்கூட அதியற்புதமான சௌந்தரியச் சிலைகள் காட்சியளித்தன. அவற்றை உருவாக்க எண்ணற்ற கலைஞர்களின் வாழ்நாள் அர்ப்பண மாயிற்றென்பதும் அத்தகையதோர் அற்புதமான சித்திரகூடத்தை ஆயிரம் ஆண்டுகளுக்கொருமுறையே உருவாக்க முடியும் என்பதும் உலகப் பிரசித்தமாயிருந்தது.

வாசலிலுள்ள இரும்புக் கதவுகளை மதயானைகளால் மோதச்செய்தாலும் உடைப்பது எளிதல்லவாகையால், சுற்றியுள்ள மரச் சுவர்களைத் தீ வைத்துக் கொளுத்திச் சின்னாபின்னமாக உடைத்துக் கொண்டுதான் சித்திர கூடத்திற்குள் நுழைய வேண்டும். எமகிங்கரர்கள்போல் எண்ணற்ற சோழிய வீரர்கள், படைத் தலைவரின் கட்டளையை எதிர்நோக்கிக் கைகளில் தீப்பந்தங்களுடனும் நெய்ச் சட்டிகளுடனும் தயாராய் மரச் சுவர்களைச் சுற்றிலும் காத்து நின்றார்கள்.

சித்திரகூடத்தை அழிக்க விரும்பாதவன்போல் வீரசேகரனின் படைத் தலைவர்களில் ஒருவன், “கதவைத் திறந்துவிடுங்கள்! இல்லையெனில் இந்த அற்புதமான சித்திரகூடத்தை நாங்கள் அழிக்க நேரிடும்! அழகிய மரச் சுவர்களையெல்லாம் தீ வைத்து நாசம் செய்ய வேண்டியிருக்கும். கலாதேவியைக் காப்பதற்காகலாவது உள்ளே இருப்போர் சரணடைந்து கதவைத் திறந்து விடுங்கள்!” என்று கத்தினான்.

ஆனால் அந்த உரத்த எச்சரிக்கை, சுவரைத் தாண்டி உள்ளே மண்டபத்தில் வெகுதூரம் தள்ளி நின்றவர்களின் காதுக்கு எட்டவே இல்லை!

உள்ளே வீரபாண்டியன் மனைவி ஒரு கம்பீரமான புன்னகையுடன் சிலைகளின் விறகுச் சிதையின் முன் நின்றாள். அவளருகில் பச்சிளங் குமரனான வீரகேரளன் கையில் தீப்பந்தத்துடன் சிதைக்குத் தீ வைக்கத் தயாராகிவிட்டான்.

தேவி, கண்ணீர் அருவி சொரிய, ஒரு சோகப் புன்னகையுடன் உத்திர மந்திரி கோனாரை நோக்கி,

"நான் அக்கினிப் பிரவேசமாகும் நேரம் வந்துவிட்டது! என் பிராணநாதரின் முகத்தைக் கடைசி முறையாக ஒரு தடவையாவது பார்த்துவிட ஆசைப்பட்டேன். தீயில் எரியும் கடைசிக் கணத்திலாவது என்னைக் காண வருவாரெனக் காத்திருந்தேன்! நான் கொடுத்து வைக்காதவள்! வருகிறேன்!" என்று நெஞ்சு விம்மித் தாழக் கூறிவிட்டுப் பிறகு உறுதியான குரலில், "வீரசேகரன் என் சாம்பலைக்கூடத் தொட அநுமதிக்காதீர்கள்!" என்று சொல்லிவிட்டுச் சிதையை மும்முறை வலம் வரத் தொடங்கினாள்.

"அம்மா, உன் உயிரைக் காப்பாற்ற முடியாத நாங்கள் உன் சாம்பலையாவது காப்பாற்ற இரத்தம் சிந்துகிறோம். மனிதப் பிரயத்தனமெல்லாம் முடிந்துவிட்டது. இனி தெய்வாதீனமாக ஏதாவது நடக்குமென்று எதிர்பார்க்க என் பாழும் அறிவிற்குப் பண்பில்லையம்மா!" என்று உத்திர மந்திரி கோனார் குழந்தைபோல் தேம்பினார்.

தேவி மும்முறை வலம் வந்து மனத்தில் பிராணகாந்த ஸ்மரணை செய்தவண்ணம் சிதைமீது ஏறினாள்.

அப்போது, "தாயே! பொறு!" என்று கணீரென ஒரு குரல் ஆண்டவன் தொனிபோல் கேட்டது.

அதைத் தொடர்ந்து, "அம்மா, அவசரப்படாதே! அதற்குள் சிதையில் ஏறாதே!" என்று ஒரு பெண் குரலும் தெளிவாகக் கேட்டது.

தெய்வீகக் குரல்கள் போன்ற அவை வீரபாண்டியன் மனைவியின் பின்புறமிருந்து வந்தன.

எல்லோரும் மெய்சிலிர்த்துப் பின்புறம் திரும்பிப் பார்த்தார்கள் தேவியோ மிக மெதுவாகத் தன் செந்தாமரை முகத்தை மட்டும் திருப்பிப் பார்த்தாள்.

சுவரோரமாக, இருள் சரிவில், ஆணும், பெண்ணுமான இரண்டு உருவங்கள் தென்பட்டன.

அவற்றின் நிழல்கள் மணித்திருவிளக்குகளின் வரிசையான வெளிச்சத்தில் பெரிது பெரிதாக விதவிதமாகத் தெரிந்தன.

"தாயே! பொறு! சிவாய நமவென்று சிந்தித்திருப் போருக்கு அபாயம் ஒருநாளுமில்லை!" என்று கணீரென ஆண் குரல் மறுபடியும் ஒலித்தது.

சுவரோரமுள்ள நாககன்னிகை ஓவியப் பலகை கதவுபோல் திறந்து கிடந்தது. கரங்க வாசலின் சிறு சுவரடைப்பு விலகி இருண்ட பிலத்துவாரம் தெரிந்தது. அந்தச் சுரங்க வழியின் முன்னால் ஒரு சாமியாரும் ஒரு பெண்ணும் நின்றுகொண்டிருந்தார்கள். சாமியாரின் கையில் கிளி வடிவக்கூண்டு விளக்கொன்று நெய் மணம் கமழும் இலேசான புகையுடன் காணப்பட்டது. அதன் திரி வெளிச்சம், பொன் தூள்கள்போல் மினுக்மினுக் கென்று சுரங்கத்தின் இருளை நோக்கி ஆடியது.

சாமியார், உடல் முகமெல்லாம் குங்குமம் பூசி, ருத்ராக்ஷ மாலைகளைக் கழுத்திலும் கைகளிலும் அணிந்து, உடம்பில் ஒரு பட்டுப் பீதாம்பரத்தைப் போர்த்திக்கொண்டு சிவனடியாராகக் காட்சியளித்தார். அவரது பிரகாசமான கண்களில் நீர்த்துளிகள் தென்பட்டன. அவரருகில் நின்ற பெண்மணியோ காஷாய ஆடை அணிந்து உடலெல்லாம் திருமஞ்சனம் அரைத்துப் பூசி நெற்றியில் விபூதிச் சின்னத்துடன் சிவநேசச் செல்வியாக விளங்கினாள். அவளது உதடுகளில் லறட்சி படிந்திருந்தது. இரவின் குளிருக்கு ஒரு முரட்டுக் கம்பளியைப் போர்த்திக்கொண்டு நின்றாள். கறுப்புக் கம்பளியிலும் திருமஞ்சனப் பூச்சிலும் அவளது வதங்கிய உருவம் சரியாகத் தெரியாததுபோலவே, சிரசுமுதல் பாதம்வரை குங்குமத்தை அள்ளி அப்பிக்கொண்டு நின்ற சாமியாரின் உருவமும் சரியாகத் தெரியவில்லை.

அவர்களை நோக்கித் தேவி துயரும் பரிவும் கலந்த குரலில், "நீங்கள் யார்? என்னை ஏன் தடுக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"தடுத்தாட்கொள்வது இறைவனின் லீலையம்மா! அதை நினைத்து நாங்கள் இங்கு வரவில்லையென்றாலும்,

எங்களையறியாமல் எங்கள் மூலமாக எம்பெருமான் தம் திருவுள்ளக் கிடக்கையை நிறைவேற்றிக்கொள்வான் என்று நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை, தாயே!" என்றார் சிவனடியார் கருணை ததும்பும் குரலில்.

"நீங்கள் எதற்காக இங்கே வந்தீர்கள்?" என்று தேவி பாசம் கலந்த குரலில் சிறிது கோபத்துடன் கேட்டாள்.

"நாங்கள் சுரங்க வாசல் வழியாக இங்கு வந்த காரியம் வேறு! இப்போது நாங்கள் உபயோகப்படும் காரியம் வேறு! காரண காரியங்களைத் தாண்டியது எனையாளும் ஈசனின் செயலம்மா!" என்று சிவனடியார் உள்ளங் கரைந்து பக்திப் பெருக்குடன் சொன்னார்.

"என் நிலை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள் தேவி.

"தெரியும். தாயே! தெரியும்! எல்லாம் இறைவனின் திருவிளையாடல் என்று உணர்ந்துவிட்டால் இந்த உலகில் எந்நாளும் துன்பமே இல்லை, தாயே! தற்கொலை செய்து கொள்வதற்கும் காரணமா காரியமில்லை. தாயே!"

அவரருகில் நின்ற பெண்மணி. "அம்மா, சுரங்க வழியில் இருந்தவாறு இங்கு நடந்த எல்லாவற்றையும் கேட்டோம்! என் பெண் உள்ளம் சகிக்கவில்லை! நாங்களிருவரும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்திருக்கிறாம்!..." என்றாள் துயரமும் கருணையும் நிறைந்த குரலில்.

தேவி பதில் சொல்லவில்லை: மௌனமாகச் சிதையை உற்றுப் பார்த்தாள்.

அங்கு நின்ற மதியமைச்சர்களெல்லோரும் மந்திரத்தால் கட்டுண்டவர்போல் மெய்சிலிர்த்து நின்றனர். அவர்களில் சிறந்த சிவநேசச் செல்வரான பொன்னம்பலகாரர். "தெய்வாதீனமான நிகழ்ச்சி!" என்று பக்திப் பரவசமாகிக் கூறினார்.

அவரை நோக்கிச் சிவனடியார், "மனிதர்களுக்குத் தேவையான காரியங்களை மனிதர்களைக்கொண்டே

செய்து முடிப்பதுதான் தெய்வ சங்கற்பம். இன்று எங்கள் மூலம் தெய்வச் சித்தம் நடைபெற வேண்டியிருக்கும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை!" என்று கூறிவிட்டுத் தேவியை நோக்கி உள்ளமுருகியவராய், "உன்னைக் கும்பிடுகிறேன், தாயே! உன் பொருட்டு ஏழையினும் ஏழையான என்னையும் ஒரு பொருட்டாக இறைவன் மதித்திருக்கிறான்!" என்று தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தார்.

அந்தச் சிவனடியாரை உற்று நோக்கிய தலைமை அமைச்சரான கோனார், "சிவனடியாரே, உம்மிடம் சில கேள்விகள் கேட்பது என் கடமையாகிறது!" என்றார்.

"என் அறிவுக்கெட்டியவரை பதில் சொல்கிறேன்! கேட்பவனும் கேட்கப்படுபவனும் ஒருவனேயென்று உணர்ந்துவிட்டால் மனஸ்தாபப்படுவதற்கு ஒரு காரியமுமில்லை!" என்றார் சாந்தமாகச் சிவனடியார்.

"சுரங்க வாசலின் இந்த உபவழி இந்தச் சித்திர மண்டபத்திற்குத்தான் வருகிறதென்பது உங்களுக்குத் தெரியுமா?"

"முன்பு தெரியாது! இன்று அந்தி நேரத்தில்தான் அரும் பிரயாசைப்பட்டுத் தெரிந்துகொண்டோம்! திலகவதியார்தான் சாமர்த்தியமாக அதை விசாரித்தாள்!" என்றார் சிவனடியார.

"திலகவதியார் யார்?"

"இதோ என்கூட வந்த இவள்தான் திலகவதியார். இவள் என் தமக்கையார். சகலவற்றையும் துறந்தவளுக்கு என் உறவை மட்டும் துறக்க முடியவில்லை!" என்று தன்னருகில் துறவினிபோல் நின்றவளைச் சுட்டிக் காட்டி, "இவளுடைய புத்திசாலித்தனமில்லாவிட்டால் எனக்கு இந்த யோக விவகாரமே தெரிந்திராது!" என்றார்.

திலகவதியார் தன் தம்பியைக் கோபமாய்ப் பார்த்தாள்.

"சுரங்கவாசலுக்குள் எப்படி நுழைந்தீர்கள்?" என்று அமைச்சர் கோனார் கேட்டார்.

"கோட்டைக்கு வெளியிலிருந்துதான்! பலாமரத்தின் மறைவில் இதற்கு இரகசிய வழி இருக்கிறது! எவ்வளவு மோசமான பாதை!" என்றாள் திலகவதி.

"அங்கே சுரங்கவாசலின் வெளிப்புறம் எதிரிகளான சோழியர்கள் வேட்டை நாய்கள் போல் காவல் புரியவில்லையா?" என்று கேட்டார் அமைச்சர்.

"பலத்த காவல் இருக்கிறது. மனித தர்மம் நசித்துப் போகும்போது காவல் பெருகுவது இயற்கைதானே?" என்றார் சிவனடியார்.

"காவற்காரர்களுக்குக் கையூட்டுக் கொடுத்து உள்ளே வந்தீர்களா?"

"இல்லை! கையூட்டுக் கொடுத்து யாரும் வரமுடியாது! அங்கே காவற்காரர்களுக்குத் தலைமையதிகாரியாக வீற்றிருக்கும் கலிக்காமத்தேவர் பெரிய பதவியிலிருப்பவர். கையூட்டு வாங்க வேண்டிய அவசியமில்லாதவர்! உத்தமர்! சிறந்த சிவநேசச் செல்வர்!"

"காவற்காரர்களுக்குத் தெரியாமல் தந்திரமாக உள்ளே வந்தீர்களா?"

திலகவதி குறுக்கிட்டு, "ஆந்தைபோல் கொட்டக்கொட்ட விழித்துக்கொண்டிருக்கும் காவற்காரர்கள் பார்வையில் படாமல் வரமுடியுமா? அந்தச் சோழிய அதிகாரியிடம் சொல்லிவிட்டே உள்ளே வந்தோம்!" என்றாள்.

"தகுந்த முகாந்தரம் இல்லாமல் உயிரோடு யாரையும் உள்ளே விடமாட்டார்களே?" என்று கேட்டார் அமைச்சர் கோனார்.

சிவனடியார் அவரை நோக்கி, "தகுந்த முகாந்தரம் சொன்னோம்! இங்கே சித்திர மண்டபத்தில் ஒரு அரசவைப் பெட்டகம் இருக்கிறது. அதில் உங்கள் வீரபாண்டியத்

தேவர் அரும் பெரும் பழைய ஓலைச் சுவடிகளைச் சேகரித்துவைத்திருக்கிறார். அவற்றில் இதுவரை தேவாரத் திருமுறைகளில் சேர்க்கப் பெறாத சில புதுப் பாடல்களும் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் நெட்டூருக்கு வந்ததே வீரபாண்டியத் தேவரைச் சந்தித்துக் கிடைத்தற்கரிய அத் தேவாரச் சுவடிகளை வாங்கிச் செல்லவேண்டும் என்பதற்குத்தான்! இங்கு வந்ததும், வீரபாண்டியத் தேவரின் படை படுதோல்வியுற்று ராஜமாளிகைக்குள் அவரும் அவரது மனைவி மக்களும் சித்திர மண்டபத்தை மூடிக் கொண்டு விஷமருந்தி மடிந்து போனார்கள் என்று சொன்னார்கள். என் நெஞ்சு புலம்பியது. வாய் விட்டு அழுதேன். சோழியப் படை சித்திர மண்டபத்தைச் சூழ்ந்து கொண்டு இடித்துத் தகர்த்துச் சகலவற்றையும் தீ வைத்துக் கொளுத்தப் போகிறது என்று கேள்விப்பட்டபோது புழுப்போல் துடித்தேன். தீக்கிரையாகும் முன் அந்தச் சுவடிகளையாவது காப்பாற்றி விட வேண்டுமென்று பதறினேன். அதற்காகச் சித்திர மண்டபத்திற்குள் போகலேண்டிய அலசியத்தையும் அவசரத்தையும் அந்தச் சோழிய அதிகாரியிடம் கல்லும் கரையும்படி எடுத்துச் சொன்னேன்! அவரும் என்னைப்போல் சிவபெருமானிடம் அந்தரங்க சுத்தியான பக்தியுள்ளவர். சிறந்த சிவநேசச் செல்வர்! விட்டுப் போன தேவாரப் பதிகங்களையெல்லாம் வருங்காலத்திற்குத் தேடி வைத்துவிட்டுப் போவது ஒவ்வொரு திருத்தொண்டரின் கடமை என்பதை உணர்ந்தவர்!"

"இந்த நெருக்கடியான நிலையிலா?"

"முதலில் அவர் தயங்கினார். ஆனால் நான் இறைவன் பணியைக் கூறிக் கெஞ்சிக் கதறினேன்! இராஜராஜசோழச் சக்கரவர்த்திகள் காலத்தில் தேவாரப் பாடல்கள் எவ்வளவு பிரயாசையுடன் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டனவென்பதையும், அதற்காக நம்பியாண்டார் நம்பி எங்கெங்கெல்லாம் சுவடிகளுக்காக அலைந்தாரென்பதையும், சிதம்பரக் கூத்தப் பெருமானின் ஆலயத்தில் கிலமாகிக் கொண்டிருந்த சில தேவாரச் சுவடிகளை இராஜராஜ சோழ மன்னர் எவ்வளவு

சிரமத்துடன் தேடிக் கொடுத்தார் என்பதையும் அந்தச் சோழிய அதிகாரியிடம் எடுத்துச் சொன்னேன்! நான் உண்மையைச் சொன்னதால் உண்மைக்கு மதிப்புக் கொடுத்து அவர் எங்களை இரகசியச் சுரங்கப்பாதை வழியாக இந்தச் சித்திர மண்டபத்திற்கு வர அனுமதித்தார். ஆனால் நாங்கள் உள்ளே நுழையும்போது, "பகைவரின் சுரங்க வழிக்குள் போகிறீர்கள்; பத்திரம்" என்று எச்சரித்தனுப்பினார்! எல்லாம் ஆண்டவன் சித்தப்படியே நடக்கட்டுமென்று சொல்லிவிட்டுச் சுரங்கத்தில் புகுந்தோம்..."

"வெளியிலிருந்து உள்ளே நுழைந்துவிட்டீர்கள்! ஆனால் உள்ளே சுரங்க வழியில் உங்களால் சுலபமாக வரமுடிந்ததா?"

"இறைவன் கருணை இல்லாவிடில். எங்களால் வந்திருக்கவே முடியாது! சுரங்கப்பாதை மிகவும் இருண்டதாக. மிகவும் குறுகலானதாயிருந்தது. பலவாறாக வளைந்து சுற்றிப் பல மடிப்புகளை உடையதாயிருந்தது. ஒரே சமயத்தில் ஒருவர்தான் நடந்துவரக் கூடிய பொந்துபோல் இருந்ததால் நான் விளக்கைத் தூக்கிக்கொண்டு முன்னே வர என் பின்னால் திலகவதியார் வந்தாள். சுமார் இருபதடிதான் எடுத்து வைத்திருப்போம். அதற்குள் ஒரு தடுப்புச் சுவர் குறுக்கிட்டது! அங்கே இருட்டில் உங்கள் பாண்டிய வீரர்கள் உருவிய கத்தியுடன் காவல் புரிந்தார்கள். அவர்கள் நின்ற இடம் மட்டும் சிறிது விசாலமாய் ஒரு ஆழமான படுகுழியுடன் காணப்பட்டது. அந்தக் குழியில் சில சோழிய வீரர்களின் இரத்தம் தோய்ந்த தலைகள் கிடந்தன. ஒரு மயிரிழை தவறியிருந்தால் அந்தக் கத்திகளுக்கு நாங்களும் பலியாகியிருப்போம்! ஆண்டவன் கிருபையினால் தப்பினோம்!"

"அவர்கள் உங்களைத் தடுத்து நிறுத்தவில்லையா?"

"நிறுத்தினார்கள்! ஆனால் நாங்கள் உள்ளே போகும் நோக்கத்தைச் சொன்னோம். அவர்கள் என்ன நினைத்தார்களோ. எங்களை உற்றுப் பார்த்துவிட்டு

எங்கள் வழியே போக விட்டுவிட்டார்கள். ஆனால் எங்களிடம் கத்தி ஏதாலதிருக்கிறதாவென்று நன்றாகப் பரிசோதித்துக் கொண்டார்கள். திரும்பி வரும்போது உங்களிடமிருந்து விடுசீட்டு வாங்கிக் கொண்டு வந்தால்தான் மறுபடி வெளியே விட முடியுமென்றும் எச்சரித்தனுப்பினார்கள்! எவ்வளவு பெரிய தடைகளெல்லாம் எவ்வளவு சுலபமாக விலகி வழி விட்டனவென்று நினைக்கையில் இப்போதும் எனக்கு மெய் சிலிர்க்கிறது! உன்னதமான நோக்கமும் இறைவன் கருணையும் பக்க பலமாய் இருந்து விட்டால் எந்தக் காரியந்தான் சித்திபெறாது?"

இதுவரைக் குங்குமச் சாமியார் கூறியவற்றை மௌனமாகக் கவனித்து வந்த தேவி, அவரை நோக்கி. "அரசவைப் பெட்டகத்தில் சில ஓலைச் சுவடிகள் இருப்பது உண்மைதான்! சக்கரவர்த்திகளின் ராஜமுடி, உடைவாள் முதலான ராஜ சின்னங்களோடு பல சந்தர்ப்பங்களில் பல புலவர்கள் பாடிய தமிழ் நூல்களும் இருக்கின்றன. அவற்றில் ஒரேயொரு தேவார ஏட்டுப் பிரதிமட்டும் பழசாகி நைந்து போன நிலையில் இருக்கிறது. சிவனடியாரே! உம்முடைய விருப்பப்படி அதை எடுத்துக்கொண்டு போகலாம். ஆனால், சக்கரவர்த்திகள் அந்த ஏட்டுச் சுவடிகளைக் குங்கிலியக் கலயனார் என்ற ஒரு பெரியவருக்காகத் தேடியெடுத்துப் பத்திரமாக வைத்திருப்பதாக ஒருமுறை என்னிடம் சொன்னார்!" என்றாள்.

"தாயே! நான்தான் அந்தப் பாவி! குங்கிலியக் கலயன் என்ற மகா பாபி நான்தான்!" என்று கதறிய சிவனடியார், "நான் இலங்கைக்குப் புறப்படும்போது பழம் பெருந் தேவாரச் சுவடிகளைத் தேடியெடுத்துத் தமது அரச சின்னங்களைப் போலவே அவற்றைத் தம் அரசவைப் பெட்டகத்தில் வைத்துப் பாதுகாப்பதாக உன் நாதர் வாக்குறுதி கொடுத்தார் நான் இலங்கையில் கதிர்காமத்தைத் தரிசித்துவிட்டுத் திரும்புகையில் தற்செயலாக இலங்கை மன்னர் பராக்கிரம பாகுவைச் சந்தித்தேன். அவர் உன் பிராண நாதருக்கு ஒரு ஓலை

கொடுத்தனுப்பினார். அந்த அரசியல் ஓலையைக் கொடுத்துவிட்டு உன் நாதரிடமுள்ள தேவாரச் சுவடியை வாங்கிச் செல்லவாமென்று ஆவலோடு வந்தேன்..." என்றார். அதற்குமேல் பேச முடியாமல் ஆறாத்துயரால் அவரது குரல் கம்மியது.

அதைக் கேட்ட உத்திர மந்திரி, "ஓலையா? இலங்கை மன்னரிடமிருந்து ஓலையா?" என்று திகைப்புற்றவராய், "இலங்கை மன்னருக்கு எங்கள் சக்கரவர்த்திகள் ஒரு திருமுகம் அனுப்பியிருந்தார். அதற்கு உரிய காலத்தில் பதில் வராது போகவே இலங்கை தன் இயலாமையால் தான் பராமுகமாயிருக்கிறதென்று எங்கள் சக்கரவர்த்திகள் சந்தேகப்பட்டார்...!" என்றார்.

"அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ஓலையைத்தான் இந்த நன்றி கெட்டவனை நம்பி இலங்கை மன்னர் கொடுத்தனுப்பினார்! ஓலையைப் பெற்றுக்கொண்டு என் சிவனடியார் கூட்டத்துடன் படகில் தொண்டிக் கரைக்கு வந்தேன். அங்கிருந்து நேரே இந்த நெட்டூர்க் கோட்டைக்கு வரவேண்டுமென்பதற்காக இளையான் குடியை நோக்கி வேகமாய் வந்தேன். ஆனால் வரும் வழியில் ஆண்டவன் சோதனை போல் என்ன காரணத்தாலோ சில சோழியர்கள் எங்களைச் சந்தேகித்துப் பிடித்துக்கொண்டு போய் மதுரைச் சிறையில் அடைத்து விட்டார்கள்!" என்றார் சிவனடியார்.

"அந்த ஓலை..?"

"ஜனநாதன், வீரசேகரன் என்ற இரு சோழிய அரக்கர்கள் என் கையிலிருந்த ஓலையைப் பிடுங்கிக் கொண்டார்கள். எங்கள் சிவனடியார் கூட்டத்தை ஒற்றர்களென்றும், சோழிய விரோதிகள் என்றும், இலங்கையின் காவடிகள் என்றும் தூற்றினார்கள். எங்கள் திருத்தொண்டர் கூட்டத்தைச் சிறையிலடைத்து வைத்து அந்த இரு பாவிகளும் எங்களைப் படுத்தி வைத்த பாடு கொஞ்ச நஞ்சமல்ல. வீரசேகரன் என்ற பாவி வைஷ்ணவ மதத்தவன். நம் சைவ சமயத்தையே கருவறுக்க வேண்டுமெனப் பேயாய்த் திரிபவன். ஜனநாதன் என்ற

மகா பாவியோ சுத்த சைவனாய்ப் பிறந்தும் சைவமதப் பெரியார்களை நையாண்டி செய்து திரிபவன்! எந்த ஜன்மத்திலோ செய்த பாவ வினைதான் அவ்வாறு அக்கிராதகர்களின் கையில் நாங்கள் அகப்பட்டுக்கொண்டு பாழுஞ் சிறையில் சொல்லொணாத் துயரங்களை அநுபவித்தோம்! அவ்வாறு மனத்தைத் தேற்றிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை!"

சிவநேசச் செல்வரான பொன்னம்பலகாரர் இடையில் குறுக்கிட்டு, "சிவனடியார் சொல்வது உண்மைதான்! சோழியன் ஜனநாதன் பிற மதத்தைவிடத் தன் சொந்த மதத்தைத்தான் அதிகம் பரிகசிப்பவன்! சிவத்துரோகி!" என்று ஆத்திரத்தோடு தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்.

கருணையே உருவான சிவனடியாருக்கும் ஆத்திரம் பொங்கி எழுந்தது.

"வைஷ்ணவனைக் கண்டால் சிவனடியார்களின் பெருமையை நிலைநிறுத்துவதுதான் ஒரு சுத்த சைவனின் மனோதர்மம்! ஆனால் ஜனநாதன் எங்களைச் சுட்டிக்காட்டி வீரசேகரனிடம் என்ன சொன்னான் தெரியுமா! "தம்பி, முதலில் இந்தச் சோம்பேறிக் கூட்டத்துக்கு நாமம் போட்டுப் பழகினால்தான் மற்றவர்களுக்கு நீ சுலபமாக நாமம் போடமுடியும்" என்றான் பாபி! அதோடு விட்டானா? "உடலைப் பொய்யென்று கூறும் மெய்யடியார்கள் அநாவசியமாக உடல் வாகுடன் இருக்கிறார்கள். இவர்களுக்கு உடலின் அருமை தெரிய வேண்டுமென்றால், சிறைக் கதவைத் திறக்காமல், ஒரு அன்னப் பருக்கைக்கூடக் கொடுக்காமல் முழுப் பட்டினி போடு" என்றான்" என்று சிவனடியார் ஆறாத்துயருடன் சொன்னார்.

அதைக் கேட்ட சிவநேசச் செல்வரான பொன்னம்பலகாரர் அளவற்ற ஆத்திரமுற்று, "வந்த விருந்தினருக்கெல்லாம் பாலன்னம் கொடுத்து உபசரிக்கும் பாண்டிய நாட்டில் திருத்தொண்டர்களைப் பட்டினி போட்டானா?" என்று குமுறினார்.

"ஆமாம்; இரண்டு நாள் பட்டினி போட்டான்! பிறகு நாங்களாகவே பட்டினி கிடக்க ஆரம்பித்துவிட்டோம். குற்றமற்ற எங்களைச் சிறையை விட்டு விடுதலை செய்தாலொழிய உண்ணாவிரதமிருந்து உயிர் விடப் போவதாகச் சொன்னோம்."

"அதற்கு மனமிரங்கி ஜனநாதன் உங்களை விட்டுவிட்டானா?"

"அந்தப் பாவியா விடுவான்? நெஞ்சில் இரக்கம் என்பதே இல்லாத அரக்கனாயிற்றே? நாங்கள் எங்கள் முடிவைத் தெரிவித்ததும், அந்தக் கிராதகன் என்ன பதில் சொன்னான் தெரியுமா? இந்த மாயா உலகைவிட்டு நாங்கள் விரைவில் சிவபதவி அடைய உத்தேசித் திருப்பதைக் குறித்து எங்களை மிகவும் பாராட்டுவதாகவும், ஆனால் நாங்கள் இறந்த பிறகு எங்களுக்கு யாரைக் கொள்ளி வைக்கச் சொல்ல வேண்டுமென்றும் கேட்டான். முற்றும் துறந்த சிவனடியார்களுக்கு இந்த உலகில் எவரும் உறவினர் இருக்கமாட்டார்களாகையால், சிவபெருமானே வந்து எங்களுக்குக் கொள்ளி வைப்பார் என்று குறித்துக் கொள்ளலாமா என்றும் கேட்டான்!"

"அவ்வாறானால் நீங்கள் எப்படிச் சிறையை விட்டு வெளியே வந்தீர்கள்? இரகசியமாகத் தப்பியோடி வந்தீர்களா?" என்று கேட்டார் அமைச்சர்.

"அது முடியக்கூடிய காரியமா? மேலும் நாங்கள் குற்றவாளிகளாய் இருந்தாலல்லவா சிறையைவிட்டுத் தப்பி வந்து தலைமறைவாய் திரிய நினைப்போம்? மதுரையிலுள்ள சோழியர்களின் சிறைகளுக்குத் தலைமையதிகாரியும் காவற்படைத் தலைவரும், சிறந்த சிவநேசச் செல்வருமான ஏகவாசக வாண கோவரசர்தான் எங்கள் பரிதாப நிலையைக் கேள்விப்பட்டு எங்களை விடுதலை செய்யும்படி உத்தரவிட்டார்!"

"ஜனநாதன் விஷயத்தில் குறுக்கிடச் சோழச் சக்கரவர்த்தியும் தயங்குவார் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அவ்வாறிருக்கும் போது, ஜனநாதனின்

விரோதத்தையும் பொருட்படுத்தாமல் உத்தரவிடக்கூடிய ஒரு சோழிய அதிகாரியும் சோழ நாட்டில் இருக்கிறாரா?"

"அத்தகையவர் ஏகவாசகர் வாண கோவரையர் ஒருவர்தான் உண்டு என்று சிறைக் காவலாளிகள் சொன்னார்கள். அதனால்தான் எங்களை எப்படியாவது சிறைவிடுவிக்க வேண்டுமென்று பாடுபட்ட இந்தத் திலகவதியார் நேரே வாணகோவரையரிடம் சென்று முறையிட்டாள். திலகவதியாரின் திருவிசைப் பாடல்களில் அவருக்கு நிறைய மதிப்பும், சிவபெருமானிடம் அந்தரங்க சுத்தியான பக்தியும், சிவனடியார்களிடம் அடியாருக்கும் அடியாராகும் அன்பும் அவருக்கு உண்டு. வைஷ்ணவன் வீரசேகரனோடு சேர்ந்துகொண்டு ஜனநாதன் வேண்டுமென்றே சிவனடியார்களைச் சிறையிலடைத்துத் துன்புறுத்துகிறான் என்று திலகவதியார் மூலம் கேள்விப்பட்டதும் அந்தச் சிவநேசச் செல்வரின் உள்ளம் பொறுக்கவில்லை!"

"ஜனநாதன் ஆக்ஷேபித்திருப்பானே?"

"ஆக்ஷேபித்தான்! ஆனால் அதற்கெல்லாம் வாணகோவரசர் தகுந்த காரணம் சொன்னார். புலவர்களும் இறைவன் திருத்தொண்டர்களும் இரண்டு அரசர்களுக்கு நடுவே தூது போவதும் திருமுக ஓலைகள் எடுத்துச் செல்வதும் தமிழ்நாட்டு மரபுதான் என்றும், அவர்களுக்கு உள்ளூற எந்தவித அரசியல் நோக்கமும் இராதென்றும், ஆகையால் ஒரு சிறு எச்சரிக்கையுடன் எங்களைச் சிறை விட்டுவிடலாமென்றும் சொல்லி, அவ்வாறே ஓலை நறுக்கு எழுதி எங்களைப்பற்றிய குற்றச்சாட்டைத் தள்ளுபடி செய்துவிட்டார்!"

"ஜனநாதன் எந்த நியாயமான முகாந்தரத்தையும் எந்தவிதமும் ஒப்புக்கொள்ளமாட்டானே? முணுமுணுத்திருப்பானே?"

"முணுமுணுத்தான்! தான் சிறைபிடித்த இந்த ஒட்டாண்டிகள் விஷயத்தில் அநாவசியமாகச் சலுகை காட்டுவதற்குப் பிரதியாக வாணகோவரசரிடம் அவனும்

எப்போதாவது தனக்கு வேண்டியவர்களுக்காகச் சலுகை பெற நேரிடும் என்று எச்சரித்துவிட்டுப் போனான். வாணகோவரசரிடம் அவ்வாறு சலுகை பெறுவதற்காகவே தந்திரமாக எங்களைச் சிறை வைத்து எங்களை உபயோகித்துக் கொண்டானோ என்றுகூடச் சிறை அதிகாரிகள் பேசிக் கொண்டார்கள்."

"சிறை விட்டதும் உங்கள் சிவனடியார் கூட்டம் நேரே இந்த நெட்டூர்க் கோட்டைக்கு வரவேண்டிய முகாந்தரம்?"

"என்னிடமிருந்து இலங்கை ஓலை பறிபோன விஷயத்தை வீரபாண்டிய சக்கரவர்த்திகளிடம் விரைவில் சொல்வது என் கடமையென என் மனச்சாட்சி உறுத்தியது! மேலும் தேவாரப் பதிகங்களுக்கு வேறு பாடமுள்ள பழஞ் சுவடிகளை வீரபாண்டியத் தேவரிடமிருந்து பெறவேண்டிய அவசியமிருந்தது. என்னுடன் வந்த சிவனடியார்கள் இளையான்குடி மாற நாயனாரைச் சந்திக்க விரும்பினார்கள். அதனால் இளையான்குடி அருகிலுள்ள இந்நெட்டூர்க் கோட்டையை நோக்கி விரைந்து வந்தோம்!"

"இந்த ஆபத்தான போர்க் காலத்தில் திலகவதியார் உங்களோடு வரவேண்டிய காரணம்?"

"எனக்கு மதுரைச் சிறையில் நேர்ந்த ஆபத்தைக் கண்டபிறகு திலகவதியாருக்கு என்னைத் தனியாகப் போகவிடப் பயம்! அதனால் கூடவே வருவதாகப் பிடிவாதம் செய்தாள்."

சிவனடியாரின் கருணை ததும்பும் முகத்தை உத்திர மந்திரி கோனார் ஒருகணம் கூர்ந்து நோக்கினார். பிறகு ஓர் ஆழ்ந்த பெரு மூச்சுடன் வினவினார்: "பகைவர்கள் சித்திர மண்டபத்தைச் சூழ்ந்திருக்கும் இந்த நேரத்தில் தேவியாரைச் சுரங்க வழியாக அழைத்துச் சென்று சக்கரவர்த்திகளிடம் சேர்ப்பிக்க விரும்புகிறீரா?"

"நான் செய்த கடமைத் துரோகத்திற்கு எம்பெருமான் எனக்குக் காட்டியிருக்கும் பரிகாரம் அது ஒன்றுதான்

என உணர்கிறேன்! திலகவதியாருக்குப் பதிலாக அவளது காஷாய ஆடைகளை வாங்கி அணிந்துகொண்டு சுரங்க வழியாகத் தேவியார் சுலபமாக வெளியேறிவிடலாம்! சாமானியமான துறவியைப் போலத் தேவி சாதுர்யமாக நடந்துகொண்டால் பகைவர் கையில் சிக்காமல் சுலபமாகத் தன் பிராணநாதரிடம் சேர்ந்துவிடலாம்!" என்றார் சிவனடியார்.

அனதக் கேட்டுத் தேவி மனந்தாளாதவளாய்க் கண்ணீர் சொரிந்தாள். தன் உயிரைக் காக்க இன்னொரு பெண்ணின் உயிர் பலியாவதா எனக் குழம்பினாள். அனலில் விழுந்த மெழுகுபோல் மனமுருகியவளாய். திலகவதியாரை நோக்கி, "எனக்காக நீ பிராணத்தியாகம் செய்ய முன் வரலாம்! ஆனால் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன்! என்னை வெளியே அனுப்பிவிட்டு எனக்குப் பதில் நீ இந்தச் சித்திர மண்டபத்தில் இருந்தால், பகைவர்கள் கதவை உடைத்துக்கொண்டு உள்ளே புகும்போது உன் கதி என்ன ஆகும்?" என்றாள்.

திலகவதியோ சாந்தமான புன்முறுவலுடன் "எனக்கொன்றும் ஆகிவிடாதம்மா! சகலத்தையும் துறந்துவிட்ட ஒரு துறவினியை யார் தான் என்ன செய்துவிட முடியும்? வைஷ்ணவனான வீரசேகரனின் படையினால் ஒரு சிவநேசச் செல்விக்குத் தீங்கு நேர்ந்ததென்றால் அது சோழ சாம்ராஜ்யத்தையே பாதிக்கும்! குலோத்துங்க சோழ மன்னர் சிவமதத்தவர் தான்: இன்னும் அதன் பகைவராகிவிடவில்லை!" என்றாள்.

"வேள்வித் தீயில் பிராணத் தியாகம் செய்வதுதான் இந்த நேரத்தில் ஒரு வீரபத்தினிக்குரிய கடனம!" என்றாள் தேவி கம்பீரமாக.

"உன் பிராணன் உனக்கு உடைமையில்லையம்மா! அது உன் பிராணநாதருக்குச் சொந்தம்! உன் கடமை எதுவென யோசித்துப் பார்!" என்றார் திலகவதியார்.

தேவி மௌனமானாள். அவளது கண்ணும் மனமும் காற்றாடிபோல் சுழன்றன. பிராணநாதரின் முகத்தை

நினைக்கும்போது, காற்றடிக்கும் திசையெல்லாம் பறக்கும் காற்றாடியாகவே ஆகிவிட்டாள்.

"நாதனை அடைய ஒரு வழி திறந்த பிறகு தயங்குவது தர்மமல்ல, தாயே! புறப்படு!... திலகவதி! தேவிக்கு உன் காஷாய ஆடைகளைத் தருவதோடு, முகத்தில் திருமஞ்சனம் பூசிவிடவும் மறந்து விடாதே!" என்று சிவனடியார் துரிதப்படுத்தினார்.

அங்கிருந்த மந்திரத் தலைவர்களில் சந்தேகமே உருவான மச்சவராயன் குறுக்கிட்டு, "தேவியாரைக் குங்கிலியக்கலய நாயனார்வசம் அனுப்ப எங்களுக்கு ஆக்ஷேபணை இல்லை! ஆனால் நீர்தான் குங்கிலியக் கலயர் என்பதற்கு அடையாளம் என்ன?" என்று கேட்டான்.

சிவனடியார் சிறிது கோபமுற்றவராய் "நம்பினவர்களுக்குத் தான் சிவலிங்கம்! நம்பாதவர்களுக்கு வெறுங் கல்!" .என்றார். அவரது கருணை ததும்பும் விழிகளில் தீக்ஷண்யம் ஒளிர்ந்தது.

உத்திர மந்திரி கோனார் பலவிதமான சிந்தனைகளிலும் குழம்பியவராய், "குங்கிலியக்கலயனாரை இதற்கு முன் சந்தித்தவர்கள் இங்கு யாருமில்லையா?" என்று கேட்டார்.

சிவனடியார் எதையோ நினைவுப்படுத்திக்கொள்ள முயன்றவராய் மெல்லிய குரலில், "ஏன், உங்கள் மந்திரத் தலைவர்களில் ஒருவரான அம்பலவாணர் இரண்டு வருஷங்களுக்கு முன்பு குன்றைக்குடி திருவிழாவில் என்னைச் சந்தித்திருக்கிறாரே?" என்றார்.

அனைவரும் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். அம்பலவாணன் அங்கு இல்லை. சித்திர மண்டபத்தின் உட்புறக் கதவைப் பாதுகாப்பதில் ஈடுபட்டிருந்தான்.

அவன் அங்கு தருவிக்கப்பட்டதும், சிவமதத்திலிருந்து சமண மதத்துக்கு மாறியவனாகையால் அவன் சிறிது பரிகாசம் கலந்த குரலில் சிவனடியாரை நோக்கி, "குங்கிலியக் கலயரைக் குன்றைக்குடித் திருவிழாவில்

சந்தித்திருக்கிறேன்! ஆனால் முக அடையாளம் தெரியாது! இன்று போலவே அன்றும் திருமேனி திருமுகம் எங்கணும் குங்குமம் பூசிக்கொண்டிருந்தார். ஆனால் இன்று கொஞ்சம் இளைத்திருக்கிறார்!" என்று சொல்லிவிட்டு, அவரை ஏற இறங்க இருமுறை உன்னிப்பாகப் பார்த்து விட்டு, "உம்முடைய உயரம் என்ன?" என்று கேட்டான்.

"தெரியாது!" என்றார் சிவனடியார்.

"திருவிழாவின்போது நீர் என் பின்புறம் நின்று, "சந்நிதி மறைக்கிறது. நந்திபோல் வழி மறைந்திருக்கும் பிள்ளாய், சற்றே ஒதுங்கியிரும்!" என்று சொன்னீர். அப்போது உம்முடைய உயரம் என் தோள் அளவு இருந்தது! உம் வலது கையில் கத்தி வெட்டைப்போல ஒரு வடு இருந்ததும் எனக்கு ஞாபகம் இருக்கிறது!" என்று சொல்லிவிட்டு, சிவனடியாரின் அருகில் வந்து நின்றான்.

அவரது உயரம் சரியாக அம்பலவாணன் தோள் அளவு இருந்தது. அவரது வலது கையில் கத்தி வெட்டைப்போல் ஒரு வடுவும் இருந்தது!

"இவர் குங்கிலியக் கலய நாயனார்தான்! சந்தேகமே இல்லை!" என்றான் அம்பலவாணன்.

அதற்குப் பிறகு சிவனடியாரோடு தேவி புறப்படுவதற்கான ஏற்பாடுகள் நடந்தன. திலகவதியாரின் காஷாய ஆடைகளை தரித்து, முகத்தின் பொன்னிறம் தெரியாமல் திருமஞ்சனம் பூசித் தேவி அசல் துறவினியைபோல் காட்சியளித்தாள்.

தேவாரச் சுவடிகளுள்ள அரசவைப் பெட்டகத்தையும் தவறாமல் தூக்கிச் செல்ல வேண்டுமென்று சிவனடியார் சொல்லவே, சுரங்க வாசலின் அருகே பெட்டகத்தை இருலர் தூக்கிக்கொண்டு வந்து வைத்தார்கள். அந்தப் பெட்டகத்தில் தேவாரச் சுவடிகளோடு வீரபாண்டியனின் இராஜ முடியும் வீரவாளும் தேவியின் கொலு முடியும் இருந்தன.

இதுவரை ஒரு நாடகக் காட்சியைப் பார்ப்பதுபோல் மௌனமாய் ஒரு மூலையில் அமர்ந்திருந்த ஆறு வயதுப்

பாலகனான வீரகேரளன் மெல்லத் தேவியிடம் எழுந்து வந்து, "அம்மா!" என்றான்.

மறுகணம் தேவி உணர்ச்சி வசப்பட்டவளாய், "என்னிடம் ஒப்படைக்கப்பட்ட குமாரனைப் பகைவர் கையில் சிக்கவிட்டுவிட்டு நான் மட்டும் தப்பி வெறுங்கையுடன் என் நாதரிடம் போகமாட்டேன் மூத்தவளின் குமாரனை இளையவள் பலி கொடுத்தாள் என்ற பழிச் சொல்லுடன் எப்படி என் பிராணநாதரின் முகத்தில் விழிப்பேன்?" என்றாள்.

அங்கிருந்த அனைவரும் திடுக்கிட்டார்கள்.

தேவியைக் காப்பாற்றும் முயற்சியில் இடையூறுக்கு மேல் இடையூறாக விளைந்ததைக் கண்டு சிவனடியார் சிறிது நேரம் மனந்தளர்ந்தவராய்க் காணப்பட்டாலும் ஏதோ ஞான ஒளி உதயமானதுபோல் முகம் பிரகாசமடைய, "இவ்வாறு இன்று நான் காப்பாற்ற நேரும் என்று முன்பே தெரிந்திருந்தால் கூடவே ஒரு சிறுவனையும் அழைத்து வந்திருப்பேன். ஆனால் இதற்கும் இறைவன் ஒரு வழி காட்டுகிறான். தேவாரச் சுவடிகளுள்ள பெட்டகத்தில் குமாரனைப் படுத்துறங்கச் செய்து பெட்டகத்தை மூடி நானும் தேவியும் அதைத் தூக்கிச் செல்கிறோம்" என்றார்.

"சுரங்க வாசலின் வெளிப்புறமுள்ள பகைவர்கள் பெட்டகத்தைத் திறந்து பார்க்காமல் விடமாட்டார்கள்!" என்றான் மச்சவராயன்.

"நடுநிசி நேரம்; இருட்டில் தூக்கக் கலக்கத்தில் இருப்பார்கள். என்னைப் பரிபூரணமாக நம்பி உள்ளே அனுமதித்தவர்களானபடியாலே, என்னைச் சந்தேகித்துப் பெட்டகத்தைத் திறந்து பார்க்க மாட்டார்களென்றே நினைக்கிறேன். அப்படியே திறந்து பார்த்தாலும் குமாரன் படுத்திருப்பது தெரியாமல் மேலே ஏட்டுச் சுவடிகள் நிறைந்திருக்கும்!"

"ஏட்டுச் சுவடிகளுக்குள் ஈட்டியால் குத்திப் பார்க்கலாம்? அதனால் குமாரனின் உயிருக்கே அபாயம் நேரிடலாம்!" என்றான் மச்சவராயன்.

"என்னால் முடிந்தவரை அந்தரங்க சுத்தியாய்க் காப்பாற்ற முயல்கிறேன். நாம் எதிர்பார்ப்பதற்கு மாறாக ஏதாவது அபாயம் நேரிட்டுவிட்டால் இறைவன் திருவுள்ளச் சித்தம் அது என்று நினைப்பதைத் தவிர வேறு வழியில்லை!" என்றார் சிவனடியார். அவரது கணீரென்ற குரலில் பரிபூரண நம்பிக்கை தொனித்தது.

அவர் மேலும் தேவியை நோக்கி உருக்கமான குரலில், "தாயே! இந்த ஏழையேன் ஊனத்தைச் சடலத்தில் உயிருள்ளவரை உன்னைப் பத்திரமாக நாதனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கப்பாடுபடுவேன். திருநீல கண்டத்தின் மீது ஆணை!" என்று சொல்லிவிட்டுக் கையிலுள்ள கிளிக்கூண்டு விளக்கைச் சுரங்கவாசலை நோக்கிப் பிடித்து. "புறப்படு, தாயே! இருட்டு நீங்குவதற்குள் பகைவரின் நடமாட்டத்தைவிட்டு நீங்கி இளையான்குடி மாறநாயனார் மாளிகைக்குச் சென்றுவிட வேண்டும். அவரிடம் குதிரை வண்டியொன்று பெற்றுக் கொண்டு விரைவில் நாதன் மாளிகைக்குப் பறக்கவேண்டும்!" அவசரப்படுத்தினார்.

அதற்குப் பிறகு பெட்டகத்தினுள் குமாரனை முடங்கிப் படுக்க வைத்து அவன்மீது தேவாரச் சுவடிகளை நிரப்பி மறைத்துப் பெட்டகத்தை மூடினார்கள்.

புறப்படும்போது தேவி அங்கிருந்த மந்திரத் தலைவர்களை நோக்கி, "உங்கள் நிலை என்ன?" என்று கேட்டாள்.

சிவனடியார் அவர்களை நோக்கி, "வீரபாண்டிய சக்கரவர்த்திகளின் மூலபலத்தைச் சோழியர்கள் இந்த நெட்டூர்க் கோட்டைக்குள்ளேயே புதைத்துவிட விரும்புகிறார்கள் என்று தெரிந்துகொண்டேன். ஆகவே, உங்கள் அனைவரின் வீர மரணத்தையும் அவர்கள் ஆவலோடு எதிர்பார்க்கலாம்! அதற்கு மாறாக நீங்கள்

கலா மண்டபத்தைக் காக்கும் முகாந்தரத்தைக் காட்டிச் சித்திர மண்டபக் கதவைத் திறந்துவிட்டுச் சரணடைவதே உசிதம் என எனக்குத் தோன்றுகிறது! ஏனெனில் உங்கள் சக்கரவர்த்திகள் மறு போருக்கு விரைவில் போர் வீரர்களை உற்பத்தி செய்துவிடலாம்; ஆனால் அவருக்கு உங்களைப் போன்ற அநுபவம் மிகுந்த ஆலோசகர்கள் கிடைப்பது துர்லபம்! நாங்கள் சுரங்கவாசலைக் கடந்து பகைவர்கள் தேடிப்பிடிக்க முடியாத தூரத்திற்குப் போய்ச் சேர அதிகப் பக்ஷம் ஆறு நாழிகைகள் தான் ஆகும். நாங்கள் புறப்பட்டு ஆறு நாழிகை கழித்ததும் சித்திர மண்டபக் கதவைத் திறந்துவிடுங்கள்!" என்றார்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்த உத்திர மந்திரி கோனார் மெல்லத் தலைநிமிர்ந்து தேவியை நோக்கி, "அம்மா! மதியமைச்சனுக்கு வேறு வழி தோன்றாததனால் தான் விதியின் கையில் உங்களை ஒப்படைக்கிறேன்!" என்று தழதழக்கும் குரலில் கூறிவிட்டு, ஏதோ நினைவு வந்தவராய்த் தேவியின் கருவிழிகளைக் குறிப்பாக நோக்கி, "தேவி! கையில் ராஜவாள் இல்லாவிடினும் பாதகமில்லை. ஆனால் புறப்படும் முன் உங்கள் கைவிரலில் கணையாழி இருக்கிறதா என்று கவனித்துவிட்டுப் புறப்படுங்கள்!" என்றார்.

அந்தக் குறிப்பைப் புரிந்துகொண்டவளாய்த் தேவியும் தன் மோதிர விரலிலுள்ள கணையாழியைப் பரிசோதித்துவிட்டு, "என்னை உயிரோடு சிறைபிடிப்பதாக வீரசேகரன் கூறிய சபதத்தை ஒரு நொடிப் பொழுதுகூட மறக்கமாட்டேன்!" என்றாள்.

அதைக் கேட்டதும் உத்திர மந்திரி கோனார் பெண் பேதைபோல் கோவென அழுதுவிட்டார்.

சிவனடியாரோ ஒரு கையில் கிளி விளக்கைத் தூக்கிப் பிடித்து, கனமான பெட்டகத்தின் ஒரு பாகத்தைத் தம் முதுகின்மீது சுமந்தவராய் நின்றார். பெட்டகத்தின் இன்னொரு பாகத்தைத் தேவி தூக்கினாள். இருவரும் பெட்டகத்தைத் தூக்கிக்கொண்டு இருண்ட சுரங்-வாசலுக்குள் நுழைந்தார்கள்.

சிவனடியார் புறப்படும்போது, "தாயே! வழியில் எவ்வளவோ அபாயங்கள் நேரிடலாம்! எதுவும் இறைவன் திருவுளச் சித்தப்படி நடக்கட்டும் என்ற தைரியத்துடன் போவோம்!" என்று கம்பீரமும் கண்ணீரின் உருக்கமும் கலந்த குரலில் சொல்லிவிட்டு, உள்ளூரப் பெருகும் பயத்தைத் துடைக்க விரும்பியவராய்ச் சிவபெருமானின் திருநாமத்தை மூன்று முறை மனத்திற்குள் உச்சரித்துக் கொண்டார்!

# அத்தியாயம் 19

## சடாயு காண் படலம்

*'கடந்தனர்...கண்டனர்*
*கழுகின் வேந்தையே!'*

**கம்ப ராமாயணம்**

மண்ணின் அழுகல் வாசனை தேவியின் மென்மையான நெஞ்சைத் துளைத்தது.

சுரங்க வழியானது கோட்டையின் கருங்கல் தள வரிசைக்கடியில் மண் பூமியைத் துளைத்துக் கொண்டு பாம்புப் புற்றுகள் போல் வளர்ந்து கொண்டே போயிற்று. காற்றே இல்லாத அந்தப் பொந்து வழியில் பலவிதத் துர்க்கந்தங்கள் இருளோடு அப்பிக் கிடந்தன. மண் அரக்கியின் மேனியில் கசியும் வியர்வைத் துளிகள்போல்,

நீரகழிகளினால் மண் குகை ஈரம் கசிவர்ந்து ஒருவித விகார நெடியைச் சிந்தியது. அவற்றின் நாற்றத்தைத் தாங்க முடியாமல் தேவிக்கு மூச்சடைத்தது; ஆனால் பிராணநாதரிடம் போய்ச் சேரப் போகிறோம் என்ற உணர்ச்சியும், நம்பிக்கையுந்தான் தேவியை மூர்ச்சையடையச் செய்யாமல் அவளுக்கு ஒரு புதிய பலத்தையும் அவளுடைய மலரடிகளுக்கு ஒரு புதிய வேகத்தையும் தந்தன.

குங்கிலியக் கலய நாயனாருக்கோ அது வந்த பாதைதான் என்றாலும் குகைக்குள் குகையாகச் செல்லும் அந்தக் கரடுமுரடான பாதையில் கால்கள் தடுமாறின. அவரது கையிலிருந்த கிளி விளக்கின் சிறு வெளிச்சம் பாதாள இருளை விழுங்க முடியாமல் திணறியது. திரி வெளிச்சத்தின் ஆட்டத்தில் அவர்து நெஞ்சின் நடுக்கமும் தெரிந்தது. அவரையறியாமலே அவரது விழிகளில் ஒருவிதப் பீதியும் துயரமும் குடிகொண்டிருந்தன. "நாதன் தாள் வாழ்க! நமச் சிவாயம் வாழ்க!'' என்று அடிக்கொருதரம் தம் உதட்டுக்குள் முணுமுணுத்த வண்ணம் நடந்தார்.

அலர் பெட்டகத்தின் பெரும் பகுதியைத் தம் முதுகில் சுமந்து வந்தாரென்றாலும் அதன் மற்றொரு பகுதியைத் தூக்கிவந்த தேவியின் மெல்லிய கைகள் செந்தாமரைகளாய்ச் சிவந்துவிட்டன. ஆனால் அப் பெட்டகத்திற்குள், தேவாரச் சுவடிகளுக்கு அடியில், வீரபாண்டியரின் பாலகுமாரன் மறைந்திருக்கிறான் என்ற தாய்மைப் பாசந்தான் தேவியின் பலஹீனமான கைகளுக்குப் பலம் தந்தது.

உருவம் தெரியாத அந்தப் பாதாள இருளை விட்டு எப்போது உலகின் வெளிச்சத்துக்கு வருவோம் என்ற உணர்ச்சி அவர்கள் இருவருக்கும் மேலோங்கியது. சுரங்கப் பாதையோ முடிவற்றதாய் நெளிந்து நெளிந்து சென்று கொண்டேயிருந்தது.

பூமி பிளந்து ஸ்ரீராமபிரானின் கைகளுக்கு எட்டாத தொலைவில் பூமியின் வயிற்றுக்குள் மறைந்துபோன

சீதாதேவியைப் போன்றதொரு பிரமை வீரபாண்டியன் தேவிக்கு உண்டாயிற்று.

"தாயே! உன் தேகம் நடுங்குகிறது! பெட்டகத்தின் அசைவில் அதை உணர்கிறேன்!" என்று தழதழத்த குரலில் கூறிய நாயனார் இலேசாக விம்மினார்.

தேவியின் விம்மலில் மருட்சி தொனித்தது. "நாயனாரே! என் வாழ்நாளில் இப்போதுதான் பீதி என்ற உணர்ச்சியை முதன்முதலாக அநுபவிக்கிறேன்! சித்திர மண்டபத்திலேயே ஆனந்தமாகப் பிராணத் தியாகம் செய்துகொண்டிருக்கலாம் என்று கூடத் தோன்றுகிறது!" என்றாள் தேவி.

"ராஜகுல மாதர்களுக்குரிய பேச்சைத்தான் சொல்லுகிறாய்! ஆனால் பிராணத் தியாகம் என்பது உனக்கு உயிரளித்த இறைவனுக்கும் அழகல்ல: உயிரோடிருக்கும் உன் பிராணநாதனுக்கும் அழகல்ல, தாயே!" என்று கூறிய நாயனார் சிறிது தூரம் நடந்ததும் ஏதோ நினைப்பு வந்தவராய், "தாயே. சிறிது நேரத்தில் சுரங்க வாசலின் கடைசிப் பகுதியை நெருங்கிவிடுவோம்! வாசலை அடைத்துக்கொண்டு உட்புறம் கனமான ஒரு பாறைக்கல் இருக்கும். பகைவரை உள்ளே நுழையவிடாமல் அங்கு உன் பாண்டிய வீரர்கள் காவல் புரிவார்கள். ஆனால் அவர்களுக்குக்கூட நீ தேவி என்ற இரகசியம் தெரியக்கூடாது! நாதனிடம் போய்ச் சேரும்வரை நீ என் தமக்கைத் திலகவதியாரைப் போலவே நடித்துவிட வேண்டும்! இருவருக்குள் இருப்பதுதான் இரகசியம். மூன்று பேருக்குத் தெரிந்தால் அது இரகசியமில்லை! இல்லையா, தாயே?" என்றார்.

"நாயனாரே! உம்மை நம்பி வந்துவிட்டேன்! என் நாதரிடம் போய்ச் சேரும்வரை உம் திட்டப்படியே அணு அளவும் பிசகாமல் நடப்பேன்" என்றாள் தேவி.

"தாயே! திருமஞ்சனப் பூச்சு உன் முகத்தின் நிறத்தை மறைத்துவிடலாம்; ஆனால் ராஜகுலமங்கை என்ற உன்

விழிகளின் கம்பீரத்தை மறைத்துவிட முடியாது! தாயே. காவற்காரர்களின் திப்பந்த வெளிச்சமோ என் கைவிளக்கின் வெளிச்சமோ உன் முகத்தில் படாதவாறு கூடிய வரையில் இருட்டிலே ஒதுங்கி நில்! அதற்காகப் பயந்து மறைபவள் போலவும் காட்டிக் கொள்ளக்கூடாது! சந்தேகமேற்படாதவாறு நீ சாதுரியமாய் நடிப்பதில்தான் என் முயற்சி வெற்றி பெறும், தாயே!'' என்றார் நாயனார்.

"எனக்கு அவ்வாறெல்லாம் நடித்துப் பழக்கமில்லை! ஆனால் என் நாதர் மீதுள்ள அன்பு எனக்கு அந்தச் சாதுரியத்தைத் தரும் என்று நம்புகிறேன்!" என்றாள் தேவி, தன்னம்பிக்கையும் மருட்சியும் ஒருங்கே நிறைந்த குரலில்.

சிறிது தூரம் மௌனமாய் நடந்த நாயனார் ஏதோ திகைப்படைந்த குரலில். "தாயே! சித்திரகூடத்திலிருந்து புறப்படும் அவசரத்தில் ஒரு முக்கியமான காரியத்தை மறந்துவிட்டோம்! உன் உத்திர மந்திரியிடமிருந்து விடுஓலை வாங்கி வந்து காட்டினால் தான் மறுபடி வெளியே விடுவதாக உன் சுரங்கக் காவலர்கள் சொன்னார்கள்!" என்று குழம்பினார்.

''மறுபடி இவ்வளவு தூரம் நடந்து சித்திர மண்டபத்திற்குப் போய் விடுஓலை வாங்கி வர நேரமில்லையே!" என்று தேவியும் குழம்பினாள்.

நாயனார் சட்டென்று யோசனை வந்தவராய். "தாயே! உன் கைவிரலில் உள்ள கணையாழியைக் கழற்றிக் கொடு. உத்திர மந்திரியின் விடுஓலை இல்லாதபோது ராணியின் முத்திரை மோதிரத்துக்கு தான் உங்கள் காவலாளிகள் மதிப்புக் கொடுப்பார்கள்!" என்றார்.

சிறிது தயங்கிய பிறகு தேவி தன் கைவிரலிலுள்ள பெரிய நீலக்கல் மோதிரத்தைக் கழற்றி நாயனாரிடம் கொடுத்துவிட்டு, "கணையாழி பத்திரம். காவலர்களிடம் காட்டியவுடனேயே என்னிடம் திருப்பிக் கொடுத்துவிட

வேண்டும். ஒருவேளை பகைவர் கையில் சிக்க நேர்ந்தால், என் மானத்தைக் காப்பாற்றக்கூடிய கொடிய விஷம் அந்தக் கணையாழிக்குள் இருக்கிறது. கண்மூடிக் கண்திறக்கும் நேரத்திற்குள் அதன் ரத்தினக் கல்லைத் திறந்து என் உயிரையும் துறந்து விடலாம்!" என்றாள்.

"தாயே! கவலைப்படாதே! மானத்தைக் காக்க ராஜகுல மைந்தர்களுக்கு வீரவாளைப் போல, ராஜகுல மங்கையருக்குக் கைவிரல் மோதிரம் என்பது எனக்கு ஓரளவு தெரியும். ஆனால் இறைவனின் அருளும் நானும் இருக்கும்வரை மோதிரத்தின் விஷத்தை உபயோகிக்கும் அவசியம் ஏற்படாது என்றே நினைக்கிறேன்."

பிறகு அவர்கள் நெஞ்சில் எண்ணற்ற சுமைகளுடன் சுரங்க வழியில் மௌனமாகவே நடந்தார்கள்.

சுரங்க வழியின் கடைசிப் பகுதியை நெருங்கியதும், பாண்டிய வீரர்கள் உருவிய வாட்களுடனும் தீப்பந்தங்களுடனும் எதிர்ப்பட்டார்கள். பல கருங்கல் மலைகளின் நடுவே கழுகுபோல் பார்வையுடன் காவலாளியின் தலைவன் நின்றான். ஜடாமுனியன் என்ற அவனது பெயருக்கேற்ப, தலைக்கேசம் சடை சடையாய் நரைத்துத் தொங்கும் கிழவனாயிருந்தாலும் அவனது கண்களின் பார்வை வாலிபப் பார்வைபோல் கூர்மையானதாக இருந்தது. அவன் கிழட்டுச் சடாயுவைப்போலவே இருந்தான்.

அவன், "நாயனாரே! உம் தமக்கையாருடன் திரும்பி வந்து விட்டீரா? சித்திர மண்டபத்திலிருந்து தேலாரச் சுவடிகளை எடுத்து வருவதாகச் சென்றவர் அரசவைப் பெட்டகத்தையே தூக்கி வந்திருக்கிறீரே! எங்கே உத்திர மந்திரியின் விடுஓலை?" என்று சிறிது கோபமாகவே கேட்டான்.

"உத்திர மந்திரி விடுஓலை எழுத நேரம் ஏது? இதோ உங்கள் பட்டத்தரசியாரின் முத்திரை மோதிரம்!" என்றார் நாயனார்.

தேவியின் கணையாழியைக் கண்டதும் அங்கிருந்த காவலர் அனைவரின் கண்களிலும் தாரை தாரையாக நீர் வடிந்தது.

''நாயனாரே! நீங்கள் பாக்கியசாலிகள்! ஆசைப்பட்டபடி தேவியை உயிரோடு தரிசித்துவிட்ட உம் தமக்கையார் உம்மைவிடப் பாக்கியசாலி! தேவியின் உயிரற்ற சடலத்தைப் பார்த்துவிட்டுச் சாகப்போகிற நாங்கள்தான் மகா பாவிகள்!" என்றான் ஒரு காவலாளி.

"நாயனாரே! சித்திர மண்டபத்தில் பிராட்டியாரைப் பார்த்திரா? மந்திரத் தலைவர்கள் என்ன செய்கிறார்கள்?" என்று ஒருவன் கேட்டான்.

"தேவியின் சாம்பலைக்கூட வீரசேகரன் தொட அநுமதியாதிர்கள் என்று தேவி தீப் புகுவாள் சிதையிலுள்ள சாம்பலை மந்திரத் தலைவர்கள் பாதுகாப்பார்கள்! எல்லாம் இன்னும் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் மாயமாய் முடிந்துவிடும்!" என்று நாயனார் தழதழத்த குரலில் கூறினார்.

அதைக் கேட்டதும் கிழவனான ஜடாமுனியன் பயங்கரமாய் ஓலமிட்டான்:

''எல்லாமே மாயமாய் முடிந்துவிட்டாலும் நான்மட்டும் சாகமாட்டேன்! தேவியின் துர்ப்பாக்கியத் திற்குக் காரணமான வீரசேகரன் என்ற அந்த மகா பாபியை என் கைகளாலேயே கொன்ற பிறகு தான் இந்தக் கிழவன் சாவேன்! என் குலதெய்வம் சுடலையாடிமீது ஆணை!" என்று மனங்குமுறி வீரப் பிரதிஞ்ஞை செய்தான்.

நாயனாரோ, ''எல்லாம் எனையாளும் ஈசன் செயலாவதன்றி உன் செயலால் ஆவதொன்றுமில்லை! நாளையிருப்பது நமக்கும் தெரியாதபோது எம்பெருமான் மீது ஆணையிடாதே, அப்பனே!'' என்றார்.

ஜடா முனியனோ கழுகுப் பார்வையுடன் புல்லரித்து நின்றவனாய். "நாளை சாகப்போகும் கிழவன்தான் நான்! ஆனால் வீரசேகரனைக் கொன்றாலொழிய என் உயிர் போகாது! அவன் உயிர் என் கழுகுப் பார்வையிலிருந்து தப்பவும் முடியாது. அரக்கர்களைக் கொன்று எமனுக்கு விருந்தளிப்பேன் என்று குமுறிய கிழட்டுச் சடாயு நான்!" என்று வாலிபனைப்போல் சபதம் கூறினான்.

"உனக்கு எம்பெருமான் துணைபுரிவானாக!" என்று நாயனார் கூறிவிட்டு, ஓர் ஆழ்ந்த பெருமூச்சுடன், "உங்கள் வீரபாண்டியச் சக்கரவர்த்திகளுக்குத் தேவியிடமிருந்து கடைசிச் செய்தி கொண்டு போகிறேன்! சீக்கிரம் சுரங்க வாசலின் பாறைக்கல்லை அகற்றி எங்களுக்கு வழி விடுங்கள்!" என்றார்.

பாறைக்கல் அகற்றப்பட்டு. நாயனாரும் தேவியும் சுரங்க வாசலுக்குள் நுழைந்து மற்றொரு சுரங்கத்துக்குள் வந்து சிறிது தூரம் நடந்ததும், தேவியை நோக்கி நாயனார் "திலகவதி! உன் பாண்டியக் காவலர்களின் எல்லையைக் கடந்துவிட்டோம்! இனி உன் பகைவர்களான சோழியக் காவலர்களின் எல்லைக்கு வரப்போகிறோம். இன்னும் சிறிது தூரம் நடந்தால் கோட்டை மதில்களுக்கு அப்பால் பலாமரப் புதர் மறைவிலுள்ள சுரங்கத் துவாரத்துக்கு ஏறும் படிகள் வரும். குறுகலான சுரங்கப் படிகளில் பெட்டகத்தைத் தூக்கிக்கொண்டு மிகவும் ஜாக்கிரதையாக ஏறவேண்டும். வெளியேறும் துவாரம் குறுகலானதால் பெட்டகம் அதற்குள் நுழையுமாவென ஐயுறுகிறேன்! துவாரத்தைப் பெரிதுபடுத்த வேண்டிய சிரமமும் நேர விரயமும் ஏற்படலாம்! அதற்குள் பொழுது விடிந்துவிடாமலிருக்கவேண்டும். இருட்டிலேயே இளையான்குடி மாற நாயனார் மாளிகைக்குப் போய் அவரிடமிருந்து மூடுவண்டி பெற்று விரைந்து போகவேண்டும்... தாயே! உனக்குத் தாலி பாக்கியமும் சிவபெருமான் அருளும் இருந்தால்...!" என்று சொன்னவர் குரலடைக்கவே மௌனமாகி விட்டார்.

"நாயனாரே! என் கையில் விஷ மோதிரம் இருக்கும்வரை பொழுது விடிவதைப்பற்றி எனக்குப் பயமில்லை!" என்று சொல்லித் தேவி அவரிடமிருந்து தன் மோதிரத்தை வாங்கிக் கொண்டாள்.

"தாயே, சுரங்கத் துவாரத்தின் வெளிப்புறம் வேட்டை நாய்கள் போல் சோழியர்கள் காவல் புரிவார்கள்! சிவபெருமான் கிருபையினால் என்னை உள்ளே அநுமதித்த சிவநேசச் செல்வரான கலிக்காமரே இன்னும் அங்கே காவலதிகாரியாய் உட்கார்ந்திருக்கவேண்டும்! ஆனால் என்னதான் அவர் என்னிடம் மதிப்புள்ளவர் என்றாலும் நாம் கொண்டுபோகும் பெட்டகத்தைச் சோதித்துப் பார்க்காமல் விடமாட்டார்கள்! உள்ளே தேவாரச் சுவடிகளுக்குள் குத்திப் பார்க்க ஈட்டியைக்கூட ஓங்கக்கூடும். அதைக் கண்டு நீ "ஆ" வென்று அலறி உன்னை யாரென்று காட்டிக்கொண்டு விடாதே! எந்தவிதப் பயங்கரம் நேர்ந்தாலும் இறைவன் சித்தப்படியே நடக்கட்டுமென்று கண்ணை மூடிக்கொண்டு சாதாரணமாகவே நில். தாயே! பெட்டகத்தைத் திறந்து பார்த்ததோடு திருப்தியடையாமல் உள்ளே தேவாரச் சுவடிகளுக்குள் குத்திப் பார்க்க ஈட்டியை ஓங்கினால், அது என் மார்பை ஊடுருவி விழுமே தவிர, உள்ளேயுள்ள உன் மகனின் மார்பில் அதன் முனைகூட விழாது! அவ்வாறு நேர்ந்தால் அந்தக் குழப்பத்தில் என் பிரேதத்தைக்கூடத் திரும்பிப் பாராமல் நீ இளையான்குடிக்குப் பறந்துவிடு. தாயே! புனிதமான தேவாரச் சுவடிகள்மீது பாழும் ஈட்டி முனைபடாமல் பாதுகாக்க நான் பலியானதைக் கண்டு, அந்தப் பாவத்துக்குப் பரிகாரமாக, தேவாரச் சுவடிகளைப் புரட்டிக்கூடப் பாராமல் பெட்டகத்தை என் சிவனடியார்களிடம் சேர்த்துவிடுவார்கள்!" என்றார் நாயனார்.

அதன் பின்னர் அவர்கள் மிகச் சிரமத்துடன் பெட்டகத்தைத் தூக்கிக் கொண்டு சுரங்கப் படிகளின்

மீது வேகமாக ஏறினார்கள். நாயனார் எதிர்பார்த்தபடி சுரங்கத் துவாரத்தின் வழியாகப் பெட்டகத்தை வெளியேற்றுவதில் சிரமம் ஏற்படவில்லை. பகைவர்கள் தாராளமாக உள்ளே இறங்குவதற்காகக் குறுகலான சுரங்கத் துவாரத்தைப் பெரிது படுத்தியிருந்தார்கள்.

சுரங்கத்தின் வழியாக வெளியேறத் தயங்கிநின்ற நாயனார் மெல்ல தம் பின்புறமுள்ள தேவியைத் திரும்பிப் பார்த்தார். அவள் முகத்தில் பயம் நிழலாடியது.

சுரங்கத் துவாரத்துக்குள் நாயனாரின் கிளிவிளக்கு வெளிச்சத்தைக் கண்டதும் எமகிங்கரர்களைப்போல் எண்ணற்ற சோழிய வீரர்கள் தீப்பந்தங்களை ஏந்தியவண்ணம் சூழ்ந்துகொண்டார்கள்.

அவர்களில் ஒருவன் தன் உடைவாளை உருவிச் சுரங்கத்துவாரத்தை நோக்கி நீட்டிக்கொண்டே, "யாரது?" என்று அதிபயங்கரமாய்க் கேட்டான்.



# அத்தியாயம் 20

## பிராட்டி களங்காண் படலம்

*'உய்யும் உணர்வு நீத்தாளை*
*நெடும்போர்க் களத்தினிடை உய்த்தார்'*

**கம்ப ராமாயணம்**

மகாதேவனின் பவித்திரமான திருநாமத்தை உச்சரித்துக்கொண்டிருந்த குங்கிலியக்கலய நாயனார், "நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்..." என்று கம்பீரமான குரலில் திருத்தாண்டகம் பாடியவண்ணம் சுரங்கத் துவாரத்தைவிட்டு வெளிப்போந்தார்.

தேவியோ ஒரு கணம் செயலற்று நின்றுவிட்டாள். துறவினிபோல திலகவதியார் வேஷத்தில் மறைந்திருக்கிறோம் என்ற தைரியமிருந்தாலும் பகைவர்களின் தீப்பந்த வெளிச்சத்தைக் கண்டதும் அவளது மெல்லிய தேகம் நடுங்கியது. விடியா இருளில் தன்னை வீசிவிட்டது போன்ற பிரமையும் உண்டாயிற்று.

நாயனார் அவளை நோக்கி, "திலகவதி! வா, தாயே! நமச்சிவாயம் படைத்த உயிர்களை மண்ணாசை படைத்தவர்கள் நமனுக்காக நாசப்படுத்தியிருக்கும் போர்க்களத்தைப் பார்! மறுபடியும் இந்த இரத்த பூமியை மிதிக்க மருள்கிறாயா, தாயே? வந்த வழியே தான் போகிறோம்! எல்லோருக்கும் அதுதான் வழி, வா தாயே!" என்றார்.

தேவிக்கோ, தன் படை வீரர்கள் பிணமலைகளாகக் குவிந்து கிடப்பதையும், பகைவர்கள் வெற்றிக்

களியாட்டத்தில் ஆழ்ந்து கிடப்பதையும், யானைகளின் அறுந்த தும்பிக்கைகளின் நடுவே குதிரைகள் குற்றுயிராய்க் கிடப்பதையும், தன் கண்களால் பார்க்கவே மனங்கூசியது.

தேவி கண்ணை மூடிக்கொண்டு, தீப்பந்த வெளிச்சம் தன் முகத்தில் விழாதபடி, பெட்டகத்தின் நிழலில் ஒதுங்கியவளாய், ஒரு சோழிய வீரனின் ஈட்டி முனையருகில் தன் மார்பு இருக்கும்படி நின்று கொண்டாள்.

பகைவர்களான காவலர்கள் தன்னை இனங் கண்டுகொண்டு விட்டால் அந்த ஈட்டி முனையில் விழுந்து எந்தக் கணமும் பிராணத்தியாகம் செய்து கொள்ளத் தயாராகவே நின்றாள்.

நாயனார் எதிர்பார்த்தபடியே, சிவபெருமானின் கிருபையினால், அவரை உள்ளே அனுமதித்த சிவநேசச் செல்வரான கலிக்காமரே இன்னும் காவலுக்குத் தலைமையாய் அங்கு அமர்ந்திருந்தார்.

அவர் ஆனந்தத்தால் முகம் மலர்ந்தவராய், "சிவனடியாரே! உம் தமக்கையார் திலகவதியாருடன் திரும்பி வந்துவிட்டீரா? உங்கள் வருகைக்காகவே இன்னும் நான் உறங்கப்போகாமல் இங்கே காத்திருக்கிறேன்! பகைவர்களின் சுரங்க வழிக்குள் போனீர்களே, உள்ளே உங்களுக்கு என்ன ஆபத்தோ என்று பயந்தேன்! ஏனெனில் உள்ளேயிருக்கும் வீரபாண்டியன் ஆட்களில் பெரும்பாலானவர் பகிரங்கமாகவோ மறைமுகமாகவோ புத்த மதத்தை அநுஷ்டிப்பவர்கள்!" என்றார்.

"புத்த மதத்தவர்களும் நம் சைவசமயிகளைப் போலக் கொல்லா விரதிகள்தாம்; அன்பை ஆராதிப்பவர்கள்தாம்! என்னைச் சிறையிலடைத்து வாட்டிய உங்கள் கிராதகன் வீரசேகரனின் வைஷ்ணவ மதத்தைக் கண்டு மருள்வது போல் புத்தமதத்தைக் கண்டு நான் மருள்வதில்லை!" என்றார் நாயனார்.

அதைக் கேட்ட அங்கிருந்தவர்களில் வைஷ்ணவனான ஒரு சோழிய அதிகாரி, "குங்குமச் சாமியாரே!

சோழியர்களின் இந்த மாபெரும் வெற்றிக்குக் காரணமானவன் வீரசேகரன்! இன்னொரு முறை அவனைப் பழித்திரானால் உம் சிவபெருமானே கைலாசத்திலிருந்து இறங்கி வந்து தடுத்தாலும் உம் நாவைத் துண்டிக்காமல் விடேன்!" என்றான்.

"செய் அப்பனே செய்! உங்கள் காலற்படை அதிகாரி ஏகவாசகவாண கோவரசர் இன்னும் இறந்துவிடவுமில்லை; சிவமதத்திலிருந்து மதம் மாறிவிடவுமில்லை; என் மீதுள்ள மதிப்பை மறந்து விடவுமில்லை! சிவனடியாரின் மேனிமீது ஒரு வைஷ்ணவனின் சுண்டு விரல் நுனி பட்டாலும் வைஷ்ணவர்களின் ரத்தத்தால் அந்தப் பாபத்தைக் கழுவி விடுவார்!" என்றார் நாயனார்.

கலிக்காமர் அவரை நோக்கி ஆவல் ததும்பும் குரலில். "நாயனாரே! உள்ளே சித்திரமண்டபத்தில் வீரபாண்டியன் மனைவியைப் பார்த்திரா? மந்திரத் தலைலர்கள் என்ன செய்கிறார்கள்? பிராட்டியார் திரைலோக்கிய முழுதுடையாள் ஏன் வாளேந்திப் போர்க்களத்திற்கு வரவில்லையாம்?" என்று கேட்டார்.

"உங்கள் வீரசேகரன் உயிரோடு சிறைபிடிப்பதாகச் சபதம் ஒன்று செய்திராவிட்டால் பிராட்டியார் போர்க் களத்தில் உங்கள் கைவரிசைகளைக் காண வந்திருப்பாள்!" என்றார் நாயனார்.

"இப்போது சித்திர மண்டபத்தில் பதுங்கிய வீரபாண்டியன் மனைவி என்ன நிலையில் இருக்கிறாள்?" என்று ஒரு சோழியன் கேட்டான்.

"வீரபாண்டியன் மனைவி தீப்பாய்ந்து சிவபதவி அடைந்து விட்டாள்! அந்தப் புனிதவதியின் சாம்பலைக்கூட உங்கள் பாபி வீரசேகரன் தொட விடக்கூடாதென்று மந்திரத் தலைவர்களெல்லாம் சிதையைக் காவல் புரிகிறார்கள்!" என்றார் நாயனார்.

அதைக் கேட்ட அங்கிருந்த சோழியக் காவலர் அனைவரும் திடுக்கிட்டார்கள். அவர்களின் வெற்றிப் பிரதாப முகங்கள் வாடிக் கூம்பின.

சிவநேசரான கலிக்காமரோ, ஆழ்ந்த துயருற்றவராய், "நாயனாரே! வீரபாண்டியன் மனைவி சாம்பலான செய்தியை உம் வாயாலேயே எங்கள் குலோத்துங்கச் சோழ சக்கரவர்த்திகளிடம் சொல்வீரானால், வெற்றி பெற்று வரும் வீரசேகரனுக்குத் தம் கையால் வீரமாலை சூடுவதற்குப் பதிலாக உம் கையாலேயே அவனுக்குக் கொலைத் தண்டனை நிறைவேற்றும் பொறுப்பைத் தருவார்! வீரசேகரனின் வெற்றிகீதத்தில் தேவியின் சாவே அவனுக்கு மரண வாக்குமூலம் எழுதிவிட்டது!" என்றார்.

வைஷ்ணவ அதிகாரியோ துயரின் நடுவே வெகுண்டெழுந்தவனாய், "சிலனடியாரே! தேவாரச் சுவடிகளை எடுத்து வருவதாகச் சென்றீர்! உள்ளேயிருந்து ஒரு பெட்டகத்தைக் கொண்டு வந்திருக்கிறீரே! அந்தப் பெட்டகத்தைச் சோதித்துப் பார்க்கவேண்டும்!" என்று கத்தினான்.

சிவநேசரான கலிக்காமரும், "தேவாரச் சுவடிகள் எங்கே? பெட்டகத்திற்குள் என்ன இருக்கிறது? உள்ளே சென்ற உம் நோக்கம் நிறைவேறிவிட்டதா?" என்று கேட்டார்.

அதற்கு நாயனார், "இறைவன் திருவுள்ளசித்தம் இருந்தால் எதுதான் நிறைவேறாது? பெட்டகம் நிறைய எண்ணற்ற பழம் பெருஞ் சுவடிகள் கிடைத்தன..." என்று பெட்டகத்தைத் திறந்து காட்டியவர், "...ஆனால் அவ்வளவு சுவடிகளும் பழுதாகி நைந்து இலமாகிக் கலைந்து கிடக்கின்றன. தொட்டால் பொடிப் பொடியாய் உதிர்ந்து விடுமோ என்று ஏடுகளைப் புரட்டிப் பார்க்கக்கூடப் பயந்தவனாய்ப் பெட்டகத்தோடு தூக்கிக்கொண்டு வந்துவிட்டேன்!" என்றார். அதைக் கேட்டதும், சுவடிகளுக்குள் குத்திப் பார்க்க ஈட்டியை ஓங்கிய சோழிய வீரன் 'தொப்'பென்று ஈட்டியைத் தரையில் போட்டு விட்டான்.

அப்போது குதிரையொன்று கனைக்கும் சப்தம் கேட்கவே நாயனார் அத்திசையில் திரும்பிப் பார்த்தார். யுத்தகளத்தில் கலிக்காமருக்கு உணவும் உடுப்பும் ஏற்றி வரவும் அவர் பத்திரமாகப் படுத்துறங்கவும் உபயோகப்

படுத்தப்படும் இரண்டு குதிரைகள் பூட்டிய ஒரு மூடு வண்டி அவருக்குப் பின்னால் தயாராய் நின்றது.

நாயனார் மெல்லக் கலிக்காமரை நோக்கி, "இந்தச் தேவாரச் சுவடுகளைத் தரிசிப்பதற்காகக் குன்றைக்குடியில் என் சிவனடியார்கள் கூட்டம் காத்திருக்கும். இனி இந்தப் பெட்டகத்தை எங்களால் சுமந்து செல்ல முடியாது! திலகவதியாரால் இனி ஓர் அடிகூட நடக்க முடியாது..." என்று சொல்லி வந்தவர், கலிக்காமரின் முகத்தை நிமிர்த்தி அவரது தாடையைப் பிடித்துக் கெஞ்சியவராய், "சிவகாரியமாக உம்மிடம் ஓர் உதவி கேட்கலாமா?" என்று கேட்டார்.

"பெட்டகத்தையும் உம் தமக்கையாரையும் ஏற்றிச் செல்ல என்னுடைய மூடு வண்டியைக் கேட்கிறீரா?" என்று வெடுக்கெனக் கேட்டார் கலிக்காமர்.

"ஆமாம்! தேவாரச் சுவடிகளைத் திருமுறைகளாகத் தொகுத்து நம்பியாண்டார் நம்பி பெற்ற சிவபுண்ணியம் உமக்கும் கிடைக்கும்!... நான் சிவகாரியமாக உம்மிடம் அதிகமாக ஒன்றும் கேட்டுவிடவில்லை! உங்கள் சோழியப் படைகள் வெற்றி கோஷங்களுடன் கோட்டைக்குள் பிரவேசித்து விட்டதால், இனிக் காலாட்கள் தேவைப்படலாமே தவிர, இனிக் குதிரைகளுக்கும் மூடுவண்டிக்கும் யுத்தத் தேவை இராது!" என்றார்.

"வண்டியோட்டி நேற்றைய யுத்தத்தில் மரித்து விட்டானே..."

"நீர் உம்முடைய மூடு வண்டியை மட்டும் ஒரு நாளைக்குக் கைமாற்றுத் தந்தால் போதும்! நானே சாரத்தியம் செய்துகொள்கிறேன்!"

"இரண்டு குதிரைகளும் பழக்கப்பட்டவன் கைக்கே அடங்காத முரட்டுக் குதிரைகள் ஆயிற்றே!"

"திருவருளை நம்பி இறங்கிய தொண்டர்களுக்கு ஆகாத காரியம் என்றும் ஒன்றுண்டா? ஓட்டுபவனும் ஓட்டப் படுபவனும் ஒருவனே என்று உணர்ந்தவருக்கு எதுதான்

ஒரு பொருட்டாய்த் தோன்றும்?" என்று சிவனடியார் தன்னம்பிக்கையுடன் வண்டியருகில் சென்றார்.

இருண்டு கிடந்த வானத்தில் மழைக்கு அறிகுறியாகச் சடசடவென்று இடிகள் புரண்டு தூரத்தில் பறியும் மின்னல்கள் அருகி வரத்தொடங்கின!

"ஆண்டவன் கிருபையால் மழை வராமல் இருக்க வேண்டும்! வழிப்பாதையில் காட்டாறுகள் குறுக்கிடாமல் இருக்கவேண்டும்!" என்று சொன்ன குங்கும நாயனார், இருளில் பதுங்கி நிற்கும் தேவியை நோக்கி, "திலகவதி! மின்னலையும் மழையையும் உண்டாக்கி இறைவன் உன்னையும் என்னையும் சோதிக்கத் திருவுளம் கொண்டுள்ளான் போலும்! தூரத்திலுள்ள மின்னலும் மழையும் நெருங்கி வருவதற்குள் நாம் விரைந்து போகவேண்டும். வண்டியில் ஏறிக்கொள்!" என்றார். மூடு வண்டிக்குள் பெட்டகம் ஏற்றப்பட்டுத் தேவி உள்ளே ஏறி மூடுவண்டியின் கதவை உட்புறம் தாழிட்டுக் கொண்டாள்.

"ஆண்டவனே! மழை பெய்யாமல் இருக்கவேண்டும்! என் முயற்சிகளெல்லாம் வீணாகிவிடும்!" என்ற குங்கும நாயனாரின் வேண்டுதலுக்கு இரங்கி, வானம் மழை பெய்யவில்லையே தவிர, இடியும் மின்னலும் அதிகரித்தன. வெகு தொலைவில் அடிவானத்தின் விளிம்பில் பயங்கரமான அடைமழை பெய்யும் மின்னலொளிகளும் தெரிந்தன.

கலிக்காமரை நோக்கி ஒரு பெரிய கும்பிடு போட்டு நாயனார் மூடு வண்டியின் முன்னாலுள்ள சாரதித் தட்டில் ஏறி அமர்ந்தார்.

நாயனார், ''நமச்சிவாயம் வாழ்க!'' என்று குதிரைகளின் கடிவாளத்தை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையில் சவுக்கை எடுத்ததும் குதிரைகளிரண்டும் நாலுகால் பாய்ச்சலில் கிளம்பின. இடியும் மின்னலும் எதிர்கொண்டழைக்க, இருள் படுதாவையும் புழுதிப்படலத்தையும் கிழித்துக் கொண்டு, மூடுவண்டி காட்டுப் பாதையை நோக்கிப் பறந்தது.

# அத்தியாயம் 21

## ஆறுசெல் படலம்

*'கருமம் என்ற ஒரு பொருள் தந்து நாட்டுதல்*
*அருமை என்பது பெரிது அறிதி ஐய நீ!'*

**கம்ப ராமாயணம்**

மன்னவன் இல்லாத மாநிலம் போலவும், கதிரவன் இல்லாத பகல் போலவும், சந்திரிகை இல்லாத இரவு போலவும் உள்ளுறை உயிர் இல்லாத உடல் போலவும், வீரபாண்டியன் மனைவி சாம்பிய முகத்துடன் மூடுவண்டிக்குள் அமர்ந்திருந்தாள்.

வானம் குமுறுவதும், பூமி அதிர்வதும் இருள் சுவர்வதும் பயங்கரமான அடை மழைக்குமட்டும் அறிகுறியல்ல, ஏதோ ஒரு பயங்கர விளைவுக்கும் அறிகுறி என்று அவளது நெஞ்சில் ஒரு பிரமை ஓயாமல் வந்து வந்து விழுந்துகொண்டிருந்தது.

குங்கிலிய நாயனாரின் கைக் கடிவாளத்திற்கு அடங்காமல் முரட்டுக் குதிரைகளிரண்டும் வெறி பிடித்ததைப்போல இருளைக் கிழித்துக் கொண்டு ஓட, காற்றைப்போலக் கடுகிச் சென்ற மூடுவண்டி ஓரிடத்தில் சறுக்கென்று குலுங்கி அதிர்ந்து நின்றது.

வண்டிப் பாதையைக் கிழித்துக்கொண்டு ஒரு பெரிய காட்டாறு ஓடியது. எங்கோ தொலைவில் விடாமல் பெய்யும் மழையால் இரண்டு நாளாகவே வெள்ளம்

திரண்டு வந்து அந்தக் காட்டாற்றில் சடசடவென்று பேரிரைச்சலுடன் ஓடிக்கொண்டிருந்தது. காட்டாற்றில் இறங்கிய வண்டி நீர்ச் சுழிப்புகளின் மத்தியில் திடீரென்று நின்றுவிட்டது.

வண்டிக்குள் பதுமைபோல் அமர்ந்திருந்த வீரபாண்டியன் மனைவி, "ஏன் வண்டி நின்றுவிட்டது?" என்று அலறினாள்.

"தாயே! வண்டி வந்து காட்டாற்றில் இறங்கிய வேகத்தில் இரண்டு குதிரைகளில் ஒரு குதிரையின் கால் சகதிக்குள் சிக்கிப் படீரென ஒடிந்துவிட்டது, தாயே!" என்று வண்டியின் முன்புறம் சாரதித் தட்டில் அமர்ந்திருந்த குங்கிலிய நாயனார் கத்தினார்.

"காட்டாற்றில் வெள்ளம் வடிந்த பிறகு வண்டியை இறக்கியிருக்கலாமே?'' என்று தேவி அழுகையும் ஆதங்கமும் கலந்த குரலில் கேட்டாள்.

"அதற்கு நேரமில்லை. தாயே! இவ்வளவு பெரிய காட்டாற்று வெள்ளம் பொழுது விடியும்வரை அடங்காது, தாயே! இந்நேரம் நெட்டூர்க் கோட்டையின் சித்திர மண்டபக் கதவை உன் மந்திரத் தலைவர்கள் திறந்து பகைவர்களிடம் சரண் அடைந்திருப்பார்கள்! அல்லது சித்திர மண்டபத்தைச் சோழியர்கள் தீ வைத்துக் கொளுத்திவிட்டு வெற்றிக் கோஷங்களுடனோ அல்லது உன்னைத் தேடிப் பிடிக்கவோ இந்தப் பாதையில்தான் வருவார்கள். இந்த இடத்தில் தாமதிக்கும் ஒவ்வொரு நொடிப் பொழுதும் உனக்கு அபாயம், தாயே!" என்று நாயனார் புலம்பும் குரலில் ஓவென அலறினார்.

அதைக் கேட்டதும் தேவி, வெள்ளத்தினிடையே உடைந்து விட்ட மரக்கலம் போலத் தத்தளித்தாள்.

உருவம் தெரியாத காரிருளில் குங்கிலியக் கலய நாயனார் மூடுவண்டியின் சாரதித்தட்டிலேயே கற்சிலையாகச் சமைந்துவிட்டார். குப்பை கூளங்களை

அடித்துக்கொண்டு கனவேகமாய் வரும் காட்டாற்று வெள்ளமும் கணத்திற்குக் கணம் பெருகிக்கொண்டிருந்தது.

மூடுவண்டிக்குள்ளிருந்த தேவி சிறிது சுய நினைவு வரப்பெற்றவளாய், "இனி என்ன செய்வது? பகைவர்கள் படை என்னை விரட்டி வருவதற்குள் என் கைவிரல் கணையாழியைக் கழற்றிப் பிராணத்தியாகத்திற்குத் தயாராகட்டுமா?" என்று கம்பீரமாகக் கேட்டாள்.

"வேண்டாம், தாயே! எம்பெருமான் உன்னைச் சோதிக்கவில்லை! என் ஊழியத்தைத்தான் சோதிக்கிறான்!" என்று கலங்கிய குரலில் சொன்ன நாயனார், இருளை ஊடுருவி எதிர்க்கரையைப் பார்த்ததும், "தாயே! சிவாய நமவென்று சிந்தித்திருப்போருக்கு அபாயம் ஒரு நாளுமில்லை! தாயே... என் இறைவன் எனக்கொரு உபாயம் காட்டி விட்டான்!" என்று ஆனந்த மலர்ச்சியுடன் கூவினார்.

"என்ன உபாயம்?" என்று கேட்டாள் தேவி.

"தாயே எதிர்க்கரையின் இருளில் ஒரு கூண்டு வண்டியின் உருவம் தென்படுகிறது! சற்றுமுன் பளிச்சென்று மின்னி மறைந்த வெளிச்சத்தில் அங்கே யாரோ ஒரு சாமானியமான வண்டிக்காரன் வைக்கோலைப் பரப்பிப் படுத்திருப்பதும், கூண்டு வண்டியில் ஒரு சாதாரணமான குதிரை பூட்டப் பட்டிருப்பதுங்கூடத் தெரிந்தது! யாரோ வைக்கோல் வண்டிக்காரன் வெள்ளம் வடியட்டுமென்று காத்திருக்கிறான்போல் இருக்கிறது!"

"காலொடிந்த நம் குதிரைக்குப் பதிலாக அந்தக் குதிரையை வாங்கி நம் மூடுவண்டியில் பூட்டலாம் என்ற உத்தேசமா?"

"ஆமாம், தாயே! வெள்ளம் பெருகிவிடுவதற்குள் வெள்ளத்தின் மத்தியில் சிக்கிக் கொண்டிருக்கும் நம் மூடுவண்டியை முதலில் எதிர்கரைக்குக் கொண்டுபோக வேண்டும்... ஆனால் காலொடிந்த வலது புறக்

குதிரையின் பக்கம் வண்டியின் இரண்டு சக்கரங்களும் சகதியில் அழுந்தியிருக்கின்றன!" என்று சொல்லிவிட்டுச் சுவாசபந்தனம் செய்துகொண்டு பெரிய குரலில், "வண்டிக்காரா... குதிரைக்காரா!... எங்கள் மூடுவண்டி வெள்ளத்தில் சிக்கிக் கொண்டுவிட்டது.... வண்டியை இழுக்கக் குதிரையைக் கொண்டு வா... சீக்கிரம்... சீக்கிரம்..." என்று பலவாறு இரைந்து கத்தினார். ஆனால் அவர் எவ்வளவு இரைந்து கத்தியும், காட்டாற்று வெள்ளத்தின் பேரிரைச்சலைத் தாண்டி அது வைக்கோல் வண்டிக்காரன் காதுக்கு எட்டவில்லை!

"தாயே! வண்டிக்காரன் படுத்துறங்குகிறானோ, அல்லது அவ்வாறு நடிக்கிறானோ, தெரியவில்லை!" என்றார் நாயனார்.

"அவ்வாறானால் இனி என்ன செய்வது? பிராணத்தியாகத்துக்குத் தயாராக நிற்கும் என்னை, இயற்கை அன்னை வெள்ளத்தை அனுப்பி மூழ்கடித்து விடலாம்! ஆனால்... என்னைக் காப்பாற்ற வந்த உமக்கும் அந்த துரதிர்ஷ்டமா?" என்று ஆறாத் துயருடன் கேட்டாள் தேவி.

"இல்லை, தாயே! இறைவனை நம்பியவர்களுக்குத் துரதிர்ஷ்டம் ஏது?"

"இன்னுமா நாயனாரே, வாழ்வில் நம்பிக்கை இருக்கிறது? நம் மூடுவண்டியை வெள்ளத்திலிருந்து இழுத்துக் கரை சேர்க்க இன்னொரு குதிரை வேண்டுமே?"

நாயனார் கலகலவென்று சிரித்தார்.

"இடையூறுகளின் மத்தியில் சிரிக்கப் பழகு என்ற திருவள்ளுவ நாயனாரின் உட்கருத்தை இப்போதுதான் புரிந்துகொண்டேன், தாயே!" என்று சொன்ன நாயனார் பக்திப் பரவசராகி உருக்கம் நிறைந்த குரலில் கூறினார்:

"மின்னார் சடையன் மின்னல் ஒளி தந்து காட்டாற்றில் என் கழுத்தளவு வெள்ளந்தான் ஓடுகிறது

என்று காட்டிவிட்டான். தாயே!.. தில்லைக் கூத்தனின் திருவுள்ளக் கருத்தை இந்த மூடன் இப்போது தான் புரிந்துகொண்டேன், தாயே!" என்று கூறிய நாயனார், சாரதித் தட்டிலிருந்து கீழே வெள்ளத்தில் குதித்து, "தாயே, நீ வெள்ளத்தில் இறங்காமல், மூடுவண்டியின் விதானத்தின்மீது ஏறிச் சாரதித் தட்டில் வந்து உட்கார்ந்து கொள், தாயே!" என்றார்.

அவ்வாறே தேவி மௌனமாகச் சாரத்தியத் தட்டில் வந்து அமர்ந்ததும், "நாயனாரே, நீர் வெள்ளத்தில் இறங்கி நிற்பது ஏன்?" என்று கேட்டாள்.

"தாயே! என்னுடைய இந்த ஊத்தைச் சடவம் ஒன்றுக்கும் உபயோகப்படாத பாண்டம் என்று இறுமாந்திருந்தேன்! இறைவன் படைப்பில் உபயோகப் படாதது எதுவுமில்லை என்று என்னப்பன் உணர்த்தி விட்டான்!... தாயே, கரைசேரவொட்டா என் ஊத்தைச் சடவத்தையும் உன்பொருட்டு ஒரு பொருட்டாகக் கரைசேர உபயோகப்படுத்தச் சொல்லுகிறான். என் இறைவன்!" என்றார். பிறகு தேவியின் கையில் குதிரைகளின் கடிவாளங்களையும் சாட்டையையும் கொடுத்துவிட்டு நாயனார் புன்னகை ததும்பும் விழிகளுடன், காலொடிந்ததாகச் சொல்லப்பட்ட வலதுபுறக் குதிரையை வண்டியிலிருந்து அவிழ்த்து வெள்ளத்திற்குள் போக விட்டார்.

"என்ன காரியம் செய்யப்போகிறீர். நாயனாரே...?" என்று தேவி மிகவும் கவங்கிய குரலில் கேட்டாள்.

"குதிரை செய்கிற காரியத்தை மனிதன் செய்ய முடியாதா? சிவபெருமான் திருவுள்ளத்தினால் நரி பரியாகும்போது நான் பரியாவது தான் பிரமாதமா, தாயே?" என்று நாயனார் சொல்லிக் கொண்டே, குதிரையின் கழுத்துப் பட்டையைத் தம் கழுத்தில் மாட்டிகொண்டு குதிரையைப்போல் வண்டியின் ஒரு பக்கத்தை இழுக்கத் தயாராகி நின்றார். தண்ணீருக்குள் புதைந்திருந்த அவர் திருமேனியிலிருந்து குங்குமமெல்லாம்

கரைந்து சுழிசுழியாக இரத்தப் பிரவாகம் ஓடுவது போலவும், தண்ணீருக்கு மேலேயே நீட்டிக்கொண்டிருக்கும் அவரது குங்குமம் பூசிய முகமும் தலையும் அக்கினிக் கொப்பரை போலவும் காட்சியளித்தன.

அந்தக் காட்சியைக் கண்டு ஒரு கணம் சிலையாகச் சமைந்துவிட்ட தேவி துடிதுடித்து, "இந்த அவலக் காட்சியை ஒருபோதும் காணமாட்டேன்! அதைவிட இந்த வெள்ளத்தில் குதித்து மாய்ந்து விடுவேன்!" என்று 'ஓ'வெனக் கத்தினாள்.

"தாயே! நீ சாரத்தியத் தட்டிலிருந்து சிறிது அசைந்தாலும், என் கழுத்தின் கடிவாளக் கயிற்றை நீ கைக்கொள்ள மறுத்தாலும் நான் இந்த வெள்ளத்தில் மூழ்கிப் பிராணத் தியாகம் செய்துகொள்வேன்! திருநீலகண்டத்தின் மீது ஆணை!" என்றார்.

"என்ன பயங்கரமான ஆணை! எனக்கு என்ன பயங்கரமான தண்டனை! ஆனந்தமாக நான் பிராணத்தியாகம் செய்து கொள்வதற்குப் பதிலாக இந்த அவலக் காட்சியை நினைத்து நினைத்து அணுஅணுவாகச் சித்திரவதைப்பட்டுச் சாகவேண்டுமென்று விரும்புகிறீரா? அவ்வளவு தூரத்திற்கு நான் யாருக்கு என்ன தீங்கு செய்தேன்? என் நெஞ்சிலுள்ள சுமை போதாதா? ஒரு சிவனடியாரைக் குதிரையாக்கிக் கொஞ்சநாள் உயிர் வாழ்ந்தாள் ஒரு பழிகாரி என்ற சுமை வேறா?" என்று தேவி பலவாறாகப் புலம்பினாள்.

நாயனாரோ ஆனந்தப் புன்முறுவலுடன், "தாயே! குதிரை என்றும் மனிதன் என்றும் ஏன் ஏற்றத்தாழ்வு நினைக்கிறாய்? இறைவன் படைத்த ஜீவராசிகளில் எந்தவிதப் பேதமுமில்லை!" என்று சொன்னவர். ஆத்மப் பரிபக்குவம் நிறைந்த குரலில். "தாயே! இழுக்கச் செய்பவனும் இழுக்கப்படுபவனும் ஒருவனே என்று உணர்ந்துவிட்டால் ஆத்மாவுக்கு அவமானம் ஏது? பசுவையும் பதியையும் வேறாக்கிப் பார்ப்பது பாசமே தவிர வேறல்ல!... தாயே! நம் வண்டி கரை சேருவதற்கு

நான் குதிரையாவதைத் தவிர வேறு உபாயமில்லை!" என்றார்.

அவ்வாறானால் மற்றொரு குதிரையையும் அவிழ்த்து விட்டு விடும்! நான் இழுக்கிறேன்!" என்றாள் தேவி.

"தாயே! உனக்காகப் பிறர் படும் அற்ப சிரமத்தையும் பொறாமல் உணர்ச்சி வசமாகிப் பேசுகிறாய்? உன் மெல்லிய பாதங்கள் வெள்ளத்தின் வேகத்தைத் தாளா! பாசிக்கற்களில் நீ வழுக்கி விழுந்துவிட்டால் நான் பட்ட முயற்சிகளனைத்தும் பாழாகிவிடும்! தாயே! என் மார்பளவு இருந்த வெள்ளம் ஒவ்வொரு கணமாகப் பெருகி என் கழுத்தளவிற்குப் பெருகிவிட்டது! நீ கடிவாளத்தைப் பிடித்து வண்டியைக் கரை சேர்க்கா விட்டால், வெள்ளம் என் தலைக்குமேல் செல்லினும் நான் அசையேன்! திருநீலகண்டத்தின் மீது ஆணை!"

தேவி ஓவெனப் புலம்பினாள்: "நாயனாரே! வெள்ளம் கணத்திற்குக் கணம் பெருகுகிறது! வண்டி கரை சேருவதற்குள் உம் கழுத்தளவுள்ள வெள்ளம் தலைக்குமேல் பெருகி, நீர் மூழ்கிவிட்டால் என்ன செய்வது?"

"என்னைப் படைத்த சிவபெருமானின் திருவுளச் சித்தம் அதுவானால் என் விதி அவ்வாறே ஆகட்டும்! உன்னைக் காப்பாற்றியதோடு இந்த உலகிற்கு வந்த என் திருப்பணி முடிந்துவிடட்டும்!"

தேவியின் கண்களில் தாரை தாரையாக நீர் வடிந்தது.

"சிவனடியாரே, உம் அன்புள்ளத்திற்கு என்ன கைம்மாறு செய்வேன்? இந்த நன்றிக் கடனை எப்படிக் கழிப்பேன்?"

"தாயே! உன்னிடம் நான் கேட்கும் வரம் ஒன்றுண்டு."

"கேளும்! எது வேண்டுமானாலும் தருகிறேன்!"

"தாயே! உன் கற்பிற்குப் பங்கம் நேரிட்டாலொழிய, உன் பிராணநாதன் உயிரோடிருக்கும்வரை, என் அநுமதியின்றி நீ வேறு எதற்காகவும் எந்தச் சந்தர்ப்பத்தில் எங்கிருந்தாலும் பிராணத்தியாகம் செய்துகொள்ளக்கூடாது! மீளவே முடியாத இடையூறுகளுக்கு மத்தியில் சிக்கிக்கொண்டு விட்டாலும் இறைவன் எந்த விதத்திலாவது எப்போதாவது உன்னை விடுவிப்பான் என்று நீ பரிபூரணமாக நம்பவேண்டும். இறைவன் திருப்பணியில் அலையும் நான் இந்த மரணாபத்தான காரியத்தில் உன்னிடம் கேட்கும் வரம் இது ஒன்றுதான், தாயே! ஒருவேளை வெள்ளத்தில் நான் மூழ்கிப் போனால் நீ கொடுக்கும் இந்த வரம் ஒன்றுதான் என் பிறவிப்பயன், தாயே! உன் பிராணநாதன் மீது ஆணையிட்டு இந்தப் பிரதிக்ஞை செய்துகொடு!" என்றார்.

முனிவர் செப்பியதைக் கேட்டதும் நஞ்சினை நுகர் என நடுங்குவாரினும் அஞ்சி அயர்ந்தன தேவியின் அருவிக் கண்கள்! எனினும் நாயனாரின் நிலை கண்டு மிகவும் மனமுருகியவளாய், "நீர் கேட்கும் பிரதிஞ்ஞை எனக்குக் கடுமையான சோதனை! அக் காரியத்தைக் கடைப்பிடிப்பது மிகவும் அருமையானது என்பது உமக்கே நன்றாகத் தெரியும்! எனினும் உம்முடைய அன்புள்ளத்திற்காக இப்பிரதிஞ்ஞை செய்கிறேன்!" என்று தேவி தன் பிராணநாதன் மீது ஆணையிட்டு அவ்வாறே வாக்குறுதி கொடுத்தாள்.

அதன் பிறகு தேவி, தாரை தாரையாகக் கண்ணீர் சொரிந்த வண்ணம், கடிவாளங்களைக் கையில் எடுத்து மூடு வண்டியை எதிர்க்கரையை நோக்கிச் செலுத்தினாள்.

அவளுடைய மனசின் ஏக்கப்படியே, நாயனாரின் கழுத்தளவுக்கு மேல் வெள்ளம் பெருகாமல் இருந்தது. ஆனால் மூடுவண்டி கரை ஏறிப் பனிச்சென்று மின்னல் பறிந்து மறைந்தபோது, "தாயே!.. மற்றொரு குதிரையின் காற்குளம்பும் பிய்ந்துவிட்டது!" என்று நாயனார் கூவினார்.

ஆனால் தேவி பதறவில்லை. இனி எந்தச் செயலும் தன் கையில் இல்லை என்ற அசக்தியான நிலைக்கு வந்துவிட்டாள்.

நாயனாரோ, தாம் கைக்கொண்ட காரியத்தில் மனம் தளராதவராய், படுத்திருக்கும் வைக்கோல் வண்டிக்காரன் அருகில் சென்று, அவனை எழுப்பினார். காட்டாற்று வெள்ளத்தில் தம்முடைய மூடுவண்டியின் இரண்டு குதிரைகளுக்கும் ஏற்பட்ட கதியை விவரித்தார். மூடுவண்டியின் முன் தட்டில் பொற்பதுமை போலவும் துறவினிபோலவும் அமர்ந்திருக்கும் தேவியைச் சுட்டிக் காண்பித்தார்.

வண்டிக்காரன், "ஐயோ, பாவம்!" என்று பரிதாபப் பட்டான். பிறகு அவன், தான் ஒரு குதிரை வண்டிக்காரன் என்றும், நெட்டூர்க் கோட்டைச் சண்டையில் தீ எரிக்க வைக்கோலுக்கு அறுபத்தேழு மடங்கு விலை கிடைப்பதாகக் கேள்விப்பட்டு வெகு தொலைவிலிருந்து வருவதாகவும், வைக்கோல் வாங்கிக் கூண்டுவண்டி நிறைய திணித்து, அவசரத்திற்குத்தன் அருமையான குதிரையைப் பூட்டிவந்தான் என்றும், வழியில் கண்ணாற்று உடைப்பில் வண்டியைத் துணிந்து இறக்கியதால் தன் குதிரை மிகவும் சோர்ந்து போய்விட்டதென்றும், இந்தப் பாழும் காட்டாற்று வெள்ளம் வடியட்டும் என்று இரண்டு நாளாகக் காத்துக் கிடப்பதாகவும் விவரித்தான்.

அவனிடம் நாயனார், ''எங்களை வெறும் ஓட்டாண்டி என்றும், சாமியார் பெண் என்றும் நினையாதே! மூடுவண்டியின் ஜொலிப்பைப் பார்! அதற்குள் ஒரு சிறு பெட்டகமும், பெட்டகத்திற்குள் ஒரு மாபெரும் பிரபுவின் ஸ்திரீதனமும் இருக்கின்றன! நீ எவ்வளவு தொகை கேட்டாலும் தருகிறோம்!'' என்றார்.

"நான் என்ன செய்யவேண்டும்?" என்று ஆவலோடு கேட்டான் கூண்டு வண்டிக்காரன்.

"உன் கூண்டு வண்டிக்குள் இருக்கும் வைக்கோல் களையெல்லாம் வாரியெடுத்து இந்தக் காட்டாற்று வெள்ளத்தில் போடு! உன் வண்டியை வந்த வழியிலேயே திருப்பி உன் குதிரையைக் கண்ணாற்றில் இறக்கி இன்றிரவுக்குள் அக்கரை தாண்டி எங்களை நான் சொல்லுமிடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடு! இந்தக் காரியத்தில் உன் உயிரைக்கூடப் பொருட்படுத்தக்கூடாது!"

அதைக் காதுகொடுத்துக் கேட்டதிலேயே வண்டிக்காரனுக்கு உயிர் போய்விடும்போல் இருந்தது.

"விளையாடுகிறீர்களா, சாமீ! என்னாலே அது முடியாது!" என்றான் வண்டிக்காரன்.

"உன்னாலே முடியாவிட்டால் என்னிடமாவது உன் கூண்டு வண்டியையும் குதிரையையும் ஒப்படை!"

"என் வண்டியைவிட என் உயிரைக் கேட்டிருக்கலாம், சாமி..."

நாயனார், தேவியின் பக்கம் திரும்பி, "திலகவதி! பெட்டகத்திலிருக்கும் வைர வாளை எடு!" என்றார்.

வாள் என்றதும் வண்டிக்காரக் கிழவன் நடுங்கினான்.

தேவி சிறிது தயங்கிய பிறகு வாளை எடுத்து நாயனாரிடம் கொடுத்தாள்.

வாளின் பிடியிலுள்ள வைரங்களின் ஜொலிப்பையும் பளபளவென மின்னும் அதன் கூர்மையான முனையையும் கண்டு வண்டிக்காரக் கிழவன் இடுகிடுவென்று நடுங்கினான்; சாமியாரின் காலில் விழவும் தயாரானான்.

"திலகவதி, இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் இந்த வண்டிக்காரன் நமக்குச் செய்யப்போகும் உதவிக்கு என்ன கொடுத்தாலும் தகும்!" என்றார் நாயனார்.

''இது யாருடைய வாள் என்பதை நன்றாக யோசித்தீர்களா...?'' என்று தேவி மெல்லிய குரலில் கேட்டாள்.

"நன்றாக யோசித்தேன்: உபயோகப்படுத்துபவன் இல்லாத போது இந்த வாளினால் நமக்கு என்ன உபயோகம்? கிரீடம் இன்றில்லாவிட்டாலும் நாளை உன் குமாரனுக்குத் தேவைப்படலாம். இவ்விரண்டில் ஒன்றைத் தவிர இவனுக்குக் கொடுக்கும்படியாக நம்மிடம் வேறெதுவுமில்லை!"

தேவி மௌனமானாள்.

நாயனார் அந்த இராஜவாளை எடுத்து வந்து வண்டிக்காரனிடம் கொடுத்தார்.

''இந்த வைரவாளின் கைப்பிடியிலுள்ள ஒரு வைரமே ஒரு இலக்கம் பொன் பெறும்! இந்த வாளை உன்னுடைய உழைப்பிற்குக் கூலியாகப் பெற்றுக் கொள்!"

வண்டிக்காரன் வாயைப் பிளந்தவாறு வாளை வாங்கிக்கொண்டான் என்றாலும் சிறிது தயங்கினான்.

"இன்னுமென்ன தயக்கம்!"

"என் உயிரைப்பற்றிக்கூடக் கவலையில்லை, சாமி! ஆனால் என் குதிரை கண்ணாற்று உடைப்பில் கதிகலங்குமே!"

"வைரவாளைவிட உன் சவலைக் குதிரை விலை மதிப்புள்ளதா?"

"சாமி! நான் குழந்தைகுட்டி இல்லாத கிழவன்! ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணுன்னு என் பெண்சாதி குழந்தைபோல வளர்த்த குதிரை சாமி அது!"

"சிவனடியார்களுக்கு உதவி செய்தால் உன் பெண்சாதிக்கு முருகபிரானையும் வள்ளி நாச்சியாரையும் போல இரண்டு குழந்தைகள் பிறக்கும்!"

பட்ட மரம் தழைக்கும் என்று கிழவன் அகமகிழ்ந்தான்.

வழிப் பிரயாணத்தைப்பற்றிய திட்டத்தையெல்லாம் கிழவனிடம் நாயனார் பேசிவிட்டு, தேவியிடம் வந்து, "திலகவதி! இனிக்கவலையில்லை; வண்டிக்குள் ஏறிக்கொள்" என்றார்.

மலர்கள் சிந்திய பூங்கொம்புபோல் தேவி சூன்யப் பார்வையுடன் நடந்து, கூண்டு வண்டிக்குள் ஏறி அமர்ந்ததும் பெட்டகத்தையும் தூக்கிவந்து ஏற்றிக்கொண்டு அவளருகிலே சற்றுத் தள்ளி நாயனாரும் உட்கார்ந்துகொண்டு, கிழவனைக் கூப்பிட்டு, "சிவத்துரோகிகளான சில வைஷ்ணவர்கள் எங்களை விரட்டி வருகிறார்கள். என் தமக்கையார் புகுந்த வீடோ ஒரு பௌத்தன் வீடு! பாபாத்மாக்களின் கண்ணில் படாமல் எங்களைப் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும். ஆனதாலே, கூட்டுவண்டியின் இருபுறத் திறனவயிலும் வைக்கோலை நன்றாக அடைத்து, விடிந்தாலும் உள்ளே ஒரு ஒளி கூடப் புகுந்து எங்கள் மீது படாதவாறு செய்துவிடு! யாரும் கேட்டால் வண்டிக்குள் இரண்டு கட்டு வைக்கோலைத் தவிர வேறெதுவுமில்லையென்று சொல்! பிறகு பொழுது விடிந்தாலும் பயமில்லை!" என்றார்.

அதன் பிரகாரம் வண்டிக்காரன் செய்துவிட்டு, தார்க்குச்சியை எடுத்துத் தன் அருமைக் குதிரையைக் கிளப்பினான். அந்த வெள்ளைக் குதிரை, இடிமயமான இருட்டில் மின்னலைப்போல் பாய்ந்து சென்றது.

# அத்தியாயம் 22

## உருக்காட்டுப் படலம்

'நஞ்சனையான் அகம் புகுந்த நங்கையான்
உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ?'

**கம்ப ராமாயணம்**

மலர்ந்த தாமரையைப்போல் கீழ்த்திசைச் செக்கர் வானத்தில் உதய சூரியன் குலுங்கினாலும், இராஜ பாட்டையில் பாய்ந்தோடும் கூண்டுவண்டிக்குள் உருவம் தெரியாத இருள் கவிந்திருந்தது. ஒரு சிறு ஒளிக்கீற்றுக்கூட உள்ளே நுழையாதபடி கூண்டு வண்டியில் இருபுறத் திறவைகளிலும் வைக்கோற் கட்டுகளை அடைத்திருந்ததால், உள்ளே குமையும் இருட்டுக்குள் குங்கிலியக் கலய நாயனாரின் உருவம் அவருக்கே தெரியவில்லை. குங்குமம் அப்பிய அவரது முகத்திலுள்ள பிரகாசமான இரு சுடர் விழிகள் மட்டுமே வைடூரியக் கற்கள் போல் ஜ்வலித்தன. அவரருகில் மௌனமாக வீற்றிருந்த வீரபாண்டியன் தேவியின் பொன்னிற உடல் இருளில் புலப்படவில்லையென்றாலும், அவளது உள்ளம் பளிச்சென்று தெரிந்தது.

"பொழுது விடிந்துவிட்டதா?" என்று ஆவலோடு கேட்டாள் தேவி.

"முன்புற வைக்கோலின் மினுமினுப்பிலிருந்து அவ்வாறுதான் நினைக்கிறேன்!" என்றார் நாயனார்.

"என் பிராணநாதரிடம் போய்ச் சேரப்போகிறேன் என்ற ஆனந்தக் கனவில் இந்த இரண்டு நாள் இரவும் நான் உறங்கவில்லை! நீரும் உறங்கவில்லையே?"

"உனக்காகவாவது உன் பிராணநாதரிடம் போய்ச் சேரப்போகிறோம் என்ற நம்பிக்கை இருக்கிறது. தாயே! ஆனால் என் நாதன் என்ன தன்மையன் என்று என் மனத்தால் உருவகப்படுத்திப் பார்க்கக்கூட என் புத்திக்கு எட்டவில்லையே! பொய்யனா மெய்யனா, ஒருவனா, இருவனா என்றெல்லாம் சில சமயங்களில் மதி குழம்புகிறேன்! தாயே! உன் பிரயாணம் முடிந்துவிடலாம். ஆனால் என்நாதனை நம்பி நான் புறப்பட்ட பிரயாணம் இந்தப் பிறவிவரை முடியாது. தாயே!" என்று நாயனார் தம் சிவநாதரின் திருநாமத்தைப் பஜித்தார்.

"என் பிராணநாதரே துணை என்றுதான் பிராணத் தியாகம் செய்து கொள்ளாமல் அபாயத்தின் மத்தியில் புறப்பட்டு வந்தேன்."

"தாயே, உனக்குத் துணையாவது ஒரு நாதன். எனக்குத் துணையாவதும் ஒரு நாதன். ஆனால் எவ்வளவு வித்தியாசம்!... தாயே, இலட்சியம் விரிய விரியச் சூன்யந்தான் தட்டுப்படுகிறது!"

"இறைவன் தொண்டில் இறங்கி மெய்ப்பொருளை நாடும் துறவியான நீர், உம் உடலெங்கும் குங்குமம் பூசி உம்மை மறைத்துக் கொள்வதன் தத்துவம் எனக்குப் புரியவில்லை!"

"தாயே! பரமாத்மாவோடு என் ஜீவாத்மா இரண்டறக் கலப்பதற்கு ஒரு பெருந்தடையாயிருப்பது இந்த உடல் தத்துவம். மாயாதேவியால் விளைந்த இந்த உடலை மறக்கவேண்டும் என்பதற்காகவே சக்தியின் பிரசாதமான குங்குமத்தால் என் உடலை மறைத்துக்கொள்கிறேன். தாயே! என்னை மறக்கப் பழகும்போதுதான் என் உயிரிலுள்ள நாதனைக் காணலாம் என்பது என் நம்பிக்கை..."

"நாதரின் மாளிகைக்குத்தானே நேரே போகிறோம்?" என்று தேவி ஆனந்தப் பரவசத்தோடு கேட்டாள்.

"ஆமாம். இன்னும் சிறிது நேரத்தில் நம் வண்டி நாதன் மாளிகையை அடைந்துவிடும்!" என்று நாயனார் தாரைதாரையாகக் கண்ணீர் வடித்தார்.

"நான் ஆனந்தப்படும்போது நீர் ஏன் அழுகிறீர்?"

"தாயே! நீ உன் நாதன்மீது அன்பு வைத்திருக்கும் அளவு அன்பே சிவம் என்று பஜிக்கும் என்னால் இந்த உலகிலுள்ள எதன் மீதும் அன்பு வைக்க முடியவில்லை, தாயே! நான் மகா பாபி..."

ஜல்ஜல் என்று வேகமாகப் போய்க்கொண்டிருந்த கூண்டுவண்டி சட்டென்று ஓரிடத்தில் நின்றது. மறுபடி இந்தக் குதிரைக்கும் காலொடிந்துவிட்டதோ என்று தேவி கலவரமடைந்தாள்.

"நாயனாரே! வண்டி ஏன் நின்றுவிட்டது? இறைவன் மறுபடியும் சோதிக்கிறானா?" என்று தேவி துயரந் தோய்ந்த மெல்லிய குரலில் கேட்டாள்.

"இல்லை, தாயே! சோதனைகளெல்லாம் முடிந்து விட்டன! நாதன் மாளிகை வாசலை அடையும்வரை வண்டியை வழியில் எங்கும் நிறுத்தக்கூடாதென்று வண்டிக்காரனுக்குக் கட்டளை!... தாயே! நாதன் மாளிகை வாசலை அடைந்துவிட்டோம்."

அவ்வளவுதான்; தேவிக்குச் சர்வாங்கமும் ஆனந்தத்தால் புல்லரித்தது. பிராணநாதரின் முக தரிசனம் காணப்போகிறோம் என்ற ஆசையில், ஒரே கணத்தில் பூலாகி, பிஞ்சாகி, காயாகி, கனியாகும் புத்துயிர் வேகம் அவள் மேனியெங்கும் துள்ளியது.

வேகமாய் வண்டிக்குள் அரசவைப் பெட்டகத்தின்மீது படுத்திருந்த பாலகுமாரனான வீரகேரளனைத் தட்டியெழுப்பி அவனது கையைப் பிடித்துக்கொண்டாள்.

கூண்டுவண்டியின் திறவையை அடைத்திருந்த லைக்கோற் கட்டை அகற்றினாள். முகமெங்கும் ஆனந்தப் புன்முறுவல் பொங்கி வழிய, மான்போல் துள்ளிக் குதித்துக் கூண்டுவண்டியிலிருந்து கீழே இறங்கினாள்.

வண்டி ஒரு பிரம்மாண்டமான மாளிகை வாசல்முன் நின்றிருந்தது. அங்கே தேவியை வரவேற்க வீரபாண்டியன் ஆவலோடு காத்திருக்கவில்லை. அதற்குப் பதில் சர்வாங்கமும் குங்குமம் பூசி இன்னொரு குங்கிலியக் கலய நாயனார் நின்றுகொண்டிருந்தார்.

தேவி திகைத்தாள்.

அவளை அழைத்து வந்த குங்கிலியக் கலய நாயனாரோ கூண்டு வண்டிக்குள் தலைகுனிந்தவாறு இருந்தார். அவருடைய திருமேனியை மறைத்திருந்த குங்குமந்தான் ஆற்றுத் தண்ணீரில் கரைந்து போயிருந்ததே தவிர அவருடைய திருமுகத்தை மறைத்திருந்த குங்குமப் பூச்சு இன்னும் அழியாமல் இருந்தது.

வண்டிக்கு வெளியிலோ, தேவியை வரவேற்க இன்னொரு குங்கிலியக் கலய நாயனார்! இருவருக்கும் ஏறக்குறைய ஒரே உயரம், ஒரே உருவத் தோற்றம்! இருவரும் சர்வாங்கக் குங்குமப் பூச்சால் தங்கள் உடல் தத்துவத்தை மறைத்துக்கொள்ளக் கூடியவர்களாய் விளங்கினார்கள்.

அவ்விரு நாயனார்களையும் அதிசயத்துடன் மாறிமாறிப் பார்த்த வண்ணம் தேவி அசைவற்று நின்றாள்.

வெளியில் நின்றுகொண்டிருந்த நாயனார் தேவியை வியப்புடன் பார்த்துவிட்டு, "திலகவதி! திலகவதி..." என்று ஆவலுடன் கூவிக்கொண்டே, வண்டிக்குள் எட்டிப் பார்த்தார். உள்ளே அவரைப்போல ஒரு நாயனாரின் உருவத்தைத்தவிர. வேறு எந்தத் திலகவதியும் வரவில்லை என்பதைக் கண்டதும் அவரது விழிகளில் பீதி நிறைந்தது.

பரபரப்புடன் தேவியை உற்றுநோக்கி, "தாயே! நீ யார்?" என்று கேட்டவர், ஏதோ பளிச்சென்று ஒரு நினைவு வந்தவராய், "தாயே! நீ வீரபாண்டியன் தேவியா?" என்று அலறினார்.

"ஆமாம்!" என்று பதிலளித்த தேவி அவரை வாஞ்சை ததும்பும் விழிகளால் பார்த்து, "சிவனடியாரே! நீர் கூப்பிட்ட திலகவதி எங்களுடன் வரவில்லை! இந்த நாயனாருடன் அந்தப் புண்ணியவதி நெட்டூர்க் கோட்டைக்கு வந்தாள். என்னைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக எனக்குப் பதில் அவளே சித்திரகூடத்தில் தங்கிவிட்டாள்! சோழியப் பகைவரிடம் சிக்கி அவளுக்கு எந்தவித அபாயமும் நேரிடாமல் இருக்கவேண்டும்!" என்று கண்ணீர் கலங்க கூறினாள்.

''இல்லை, தாயே! அவள் உண்மையில் திலகவதியாயிருக்கமாட்டாள்! என் தமக்கையார் எந்தப் பாபகரமான செயலிலும் பங்கு பெற மாட்டாள்!" என்று கூறிய நாயனார் ஆத்திரத்துடன் வண்டிக்குள்ளிருந்த நாயனாரைச் சுட்டிக் காட்டி, "அந்த மகா பாவி என்னைப்போல் நடித்து உன்னை வஞ்சித்துவிட்டான், தாயே!" என்று அண்டபகிரண்டமும் கிடுகிடுவென்று நடுங்குவதுபோல் பயங்கரமாய் அலறினார்.

"நீ யார்?" என்று தேவி அவரை வினவினாள்.

''நான்தான் உண்மையான குங்கிலியக்கலய நாயனார்! உன்னை அழைத்துவந்தவன் வெறும் வேஷதாரி! நாடகத்தால் இறைவனடியார்போல் நடித்து உன்னை ஏமாற்றிய வஞ்சகன்!" என்று கதறினார்.

ஒன்றும் விளங்காமல் தேவி கலவரம் அடைந்தாள். தன்னை அழைத்து வந்த நாயனாரை நோக்கி, "என்னைப் பகைவரிடமிருந்து காப்பாற்றி நேரே என் நாதரின் மாளிகைக்கு அழைத்து வந்திருப்பதாகச் சொன்னீரே?" என்று கேட்டாள்.

வேஷதாரி நாயனார் மெல்ல வண்டியிலிருந்து இறங்கிவந்து பதில் சொல்வதற்குள், "அதில் சந்தேகமில்லை!

அவர் உன்னை நாதன் மாளிகைக்குத்தான் அழைத்து வந்திருக்கிறார்" என்று கம்பீரமான ஒரு புதுக்குரல் கேட்டது:

அக்குரல் வந்த மாளிகை வாசல் பக்கம் தேவி திரும்பினாள்.

அங்கே

"வீரபாண்டியச் சக்கரவர்த்திகளின் தேவியாரே! உன்னை எங்கள் நாயனார் அழைத்து லந்திருப்பது சந்தேகமில்லாமல் இந்த நாதன் மாளிகைக்குத்தான்! ஆனால் உன் நாதன் அல்ல! ஜனங்களின் நாதன்!... ஜனநாதன் என்ற பெயரைக் கேள்விப்பட்டிருப்பாயே?" என்று ஜனநாதன் வழக்கம்போல் விஷமச் சிரிப்புடன் வந்து மாளிகை வாசலில் நின்றான்! அவன் கையில் நாமம் இடப்பெற்ற ஒரு செம்பு இருந்தது!

தேவி மதி குழம்பினாள்.

"என் நாதரின் ராஜப் பிரதானிகளையெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும்! ஆனால் ஜனநாதன் என்ற பெயருள்ள ஒருவர் முன்பு இருந்ததாகக்கூடக் கேள்விப்பட்டதில்லையே...?" என்றாள் தேவி.

"என்னுடைய நீளமான பட்டங்களையெல்லாம் வரிசைக் கிரமமாய்ச் சொல்லி, நான் யார் என்பதை விளக்கினால், என்னைவிட என்னைப்பற்றி நீ அதிகம் கேள்விப்பட்டிருப்பாய்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

"இது எந்த ஊர்?" என்று தேவி கலவரத்துடன் கேட்டாள்.

"உன் நாதனும் தந்தையும் தங்கியிருப்பதாக நீ எதிர்பார்த்து வந்த கொற்கையல்ல; உன்னுடைய நாதன் தோற்றோடிய உங்கள் தலைநகரான மதுரை!" என்று ஜனநாதன் சிரித்தான்.

"மதுரையா...?" என்று கேட்ட தேவியின் நெஞ்சில் எண்ணற்ற பீதியெண்ணங்கள் பறிந்தன. தன்னை அழைத்துவந்த நாயனாரின் பக்கம் திரும்பி, "இதெல்லாம் என்ன? நீர் யார்?" என்று ஓவெனக் கதறியவளாய்க் கேட்டாள்.

அதற்கவர் பதில் சொல்ல மனங் கூசியவர்போல் தலைகுனிந்து நின்றார்.

ஜனநாதனோ கலகலவென்று சிரித்துக்கொண்டே, "தேவி, உன்னை அழைத்துவந்த அந்த நாயனார் வேறு யாருமல்ல: நெற்றியில் நாமம் போடும் எங்கள் அநுமார்தான்!" என்று சொல்லிவிட்டு அவர் பக்கம் திரும்பி "அநுமாரே பிராட்டியார் முன் உன் உருக்காட்டுப் படலத்தை விரைவில் முடித்துவிடு!" என்று சொல்லிக் கொண்டே, தன் கையில் கொண்டு வந்த ஒரு செம்பு தண்ணீரையும் அவரது சிரசின்மீது கொட்டி, "இது காவிரி தீர்த்தம்! வைஷ்ணவ அநுமார் சிவமத நாயனாராக உருமாறிய பாவத்தை இந்த ஒரு செம்பு தீர்த்தம் கழித்துவிடும்!" என்று சிரித்தான்.

செம்பு தண்ணீரால் நாயனாரின் முகத்திலிருந்த குங்குமம் கரைந்து போகவே, அது ஓர் அழகிய வாலிபனின் முகமாக மாறியது.

தெருக்கூத்தாடிகள் மொட்டைத் தலைச் சாமியாராக வேஷமிடத் தலையில் அணியும் சிரசணியை நாயனாரின் சிரசிலிருந்து கழற்றிவிடவே, போலி நாயனார் சுருண்ட கேசங்களுடன் கூடிய ஒரு சுந்தர வடிவமுள்ள வாலிபனாக மாறினார்.

அந்த வாலிபனை நோக்கி தேவி, "குங்கிலியக்கலய நாயனாராக வேஷம் தரித்து வந்து என்னை இங்கே தந்திரமாக அழைத்துவந்த நோக்கமென்ன? உண்மையில் நீ யார்? நீ யார்?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

"நான் தான் வீரசேகரன்!" என்று பதில் வந்தது.

வீரசேகரன் என்று கேட்டதும் தேவியின் சர்வாங்கமும் நடுநடுங்கியது. தாமரை முகம் பிரேதம்போல் வெளிறியது. மூர்ச்சையுற்றவள்போல் அப்படியே கற்சிலையாகச் சமைந்து நின்றுவிட்டாள்.

வீரசேகரனோ குரல் குழற, "தாயே! என்னை மன்னித்துக் கொள்! உன்னை உயிரோடு சிறைபிடித்து வருவதாக எங்கள் சோழிய மந்திராலோசனை சபையில் சபதம் செய்தேன்! என் சபதம் நிறைவேறுவதற்கு இந்த வஞ்சகமான மார்க்கத்தைப் பின்பற்றுவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை!" என்றான்.

அதற்குத் தேவி பதில் சொல்லவில்லை; அழவில்லை; கதறவில்லை; கண்கலங்கவுமில்லை. சோக நாடகத்தில் எல்லாவிதக் கோர ஆட்டங்களும் முடிந்துவிட்டதுபோல் விரக்தியுணர்ச்சியுடன் அசைவற்று நின்றாள்.

நிஜக் குங்கிலியக்கலய நாயனாரோ, அவர்களிருவருக்கும் நடுவில் ஆத்திரமாக வந்து நின்று, தேவியை நோக்கி, "வீரசேகரன் என்ற இந்த வைஷ்ணவப் பாவியும் ஜனநாதன் என்ற அந்த மகா பாவியும் என்னைச் சிறையில் அடைத்து வைத்தார்கள் என் தமக்கையாரான திலகவதியையும் எங்கள் ஊரிலிருந்து சிறைபிடித்து வந்து அவளைத் தனியாக அடைத்துவைத்துச் சித்திரவதை செய்து மானபங்கமும் செய்யப் போவதாகச் சொன்னார்கள். என்னையும் அவளையும் விட்டு விடும்படி இந்தப் பாவிகளிடம் நான் கெஞ்சிக் கதறினேன்! என்னுடைய பூர்வாசிரம சரித்திரத்தையும், முக்கியமாக வீரபாண்டியச் சக்கரவர்த்திகளோடு நான் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு சிறு நிகழ்ச்சியையும் விடாமல் சொன்னால் எங்களை விட்டுவிடுவதாகச் சொன்னார்கள். நான் குன்றைக்குடித் திருவிழாவில் உங்கள் மந்திரத் தலைவர்களின் ஒருவரான பொன்னம்பலகாரரைச் சந்தித்தது உட்பட ஓர் அற்ப நிகழ்ச்சியைக்கூட விடாமல் அவ்வளவையும் சொல்லிவிட்டேன்! அவ்வளவும் இந்த வைஷ்ணவப் பாபி என்னைப்போல் நடித்து உன்னை ஏமாற்றிச் சிறைபிடித்து வர உபயோகப்படும் என்று

அறியாமல் மதிமோசம் போனேன்! உன்னை வஞ்சிப்பதற்கு என் உருவம் உபயோகப்பட்டது என் முன் ஜன்ம வினைதான்!" என்று பலவாறாகப் புலம்பினார்.

ஜனநாதன் அவரை நோக்கிச் சிரித்துக்கொண்டே, "மெய்யடியாரே! ஒன்றுக்கும் உபயோகப்படாத ஊத்தைச் சடலம் என்று பாடுவீரே! குங்குமம் பூசிய உம் திருவுருவம் உம்மையறியாமலே எங்களுக்கு எவ்வளவு பெரிய காரியத்துக்கு உபயோகப்பட்டது பார்த்திரா?" என்றான்.

அவனை எரித்து விடுவதுபோல் நாயனார் பார்த்துவிட்டு, தேவியை நோக்கிப் பரிபவம் ததும்பும் குரலில் கூறினார்: "தாயே! என் தமக்கையார் மீதுள்ள பாசத்தினாலும் அவளுடைய மானத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற உணர்ச்சியினாலும் நான் மதிமோசம் போனேன்! நீ இந்தப் பாவிகளிடம் சிறைப்பட என்னை யறியாமலே காரணமாகிவிட்டேன்!... தாயே!... என்னையும் திலகவதியையும் விடுதலை செய்யப் போவதாகவும், இளையான்குடிச் சிறையிலிருந்து திலகவதி நேரே கூண்டுலண்டியில் இங்கு லரப் போலதாகவும் சொல்லி அந்த ஜனநாதன் என்ற பாவி என்னை இங்கே நிற்க வைத்தான்! படுபாவி, நம்பிக்கை மோசம் செய்து விட்டான்!" என்றார்.

அதற்கு ஜனநாதன் அலட்சியச் சிரிப்புடன் அவரை நோக்கி, "நாயனாரே! உம்மைப் போன்ற வெற்றாள்களிடம் ஜனநாதன் அனாவசியமாக நம்பிக்கை மோசம் செய்வதில்லை! கூடிய வரையில் என் வாக்குறுதியைக் காப்பாற்றுவேன்! இதோ, பாரும், உம் திலகவதியை!" என்று சொல்லிவிட்டுக் கைகளைத் தட்டினான்.

மாளிகையின் உள்ளிலிருந்து இரண்டு சேவகர்கள் துறவினிபோல் காஷாய ஆடை தரித்த ஒரு பெண்ணை அழைத்து வந்து நிறுத்தினார்கள். அவளைக் கண்டதும் நாயனார் ஆனந்தத்துடன், "திலகவதி..." என்று கூவி, "திலகவதி! அந்தப் பாவியால் நீ எவ்வளவு துன்பப்பட்டாயோ?" என்றார்.

அதற்குத் திலகவதி தன் தம்பியை நோக்கி, "சிறையில் நான் ஒரு துன்பமும் அனுபவிக்கவில்லை! ஆனால் வீரசேகரன் என்ற அந்தப் பாவியோடு என் சிறைக்கு வந்த சிவகாமி என்ற ஒரு பெண்தான் என்னுடைய திருமஞ்சனப் பெட்டியைத் திருடிக்கொண்டு போய் விட்டாள்!" என்று குறைப்பட்டாள்.

ஜனநாதன் அவளை நோக்கி, "திலகவதி! உன்னுடைய தம்பியைப்போல எங்கள் வீரசேகரன் குங்கிலியக் கலய நாயனாராக உருமாற நேர்ந்தபோது, அவனது சிவகாமியும் உன்னைப்போல திலகவதியாக உருமாறவேண்டிய அவசியமேற்பட்டது! திருமஞ்சனம் பூசி முகத்தை மறைத்துக்கொள்ள உன் திருமஞ்சனப் பெட்டியை ஒரு நல்ல காரியத்துக்குத்தான் சிவகாமி திருடினாள்! அவள் நெட்டூர்க் கோட்டைச் சித்திரகூடத்திலிருந்து திரும்பி வந்ததும் உன்னுடைய திருமஞ்சனப் பெட்டியை அவளிடமிருந்து வாங்கி உன்னிடம் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்! குலோத்துங்க சோழ சக்கரவர்த்திகளின் ராஜப் பிரதானிகள் பெண்களிடமிருந்து அற்பமான பொருள்களைப் பறிப்பதில்லை!" என்று சிரித்தான்.

இவ்வளவு நாடகத்தையும் மௌனமாகக் கவனித்து வந்த தேவி, சிறிது சுயநினைவு பெற்றவளாய், தன் கண்ணிமைகளை மூடி, தன் இருதயத்திற்குள் தன் கணவரை ஸ்மரித்துக்கொண்டு சட்டென்று தன் கைவிரல் மோதிரத்தைக் கழற்றினாள்; அதன் நீலக்கல் ரத்தின மூடியை அவசரமாகத் திறந்தாள்.

அதைப் பார்த்த வீரசேகரன் சட்டென்று, "தாயே! மரணத்திற்கு அவசரப்படாதே! உன் கை மோதிரத்திற்குள் விஷப் பொட்டலம் இல்லை! சுரங்கப் பாதையின் இருளில் வரும்போதே அதை நீக்கிவிட்டேன்! உன் பிராணநாதரின் இராஜவாளோ வண்டிக்காரனிடம் ஒப்படைக்கப்பட்டு விட்டது! தாயே! வாழ்வதைப் போல இனி சாவது அவ்வளவு சுலபமல்ல!" என்றான்.

அதைக் கேட்டதும் தேவி நிலைகுலைந்து போனாள்; அவளுடைய நீலோற்பல விழிகளில் தூய்மையான

பனித்திவலைகளைப் போலத் துயரமான கண்ணீர்த் துளிகள் நிறைந்தன.

வீரசேகரன் பக்கம் திரும்பிப் பார்க்கவே அவள் அருவருப்புற்றவளாய், மெல்ல ஜனநாதனை ஏறிட்டுப் பார்த்து, "இனி என்னை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று சோர்ந்த குரலில் கேட்டாள்.

அதற்கு ஜனநாதன் கலகலவென்று சிரித்துக் கொண்டே, "எனக்கென்ன தெரியும்? இளைய பிராட்டியாரை என்ன செய்வதென்று சீதையைச் சிறைபிடித்து வந்த ராவணச் சந்நியாசிக்குத்தான் தெரியும்! ஆனால் வீரசேகரன் ராவணனுக்காக உருமாறிய சந்நியாசியே தவிர ராவணன் அல்ல!" என்றான்.

தேவி நடுங்கினாள்.

இளமை பொங்கித் ததும்பும் தேவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கியவாறு ஜனநாதன், "பிறன் மனைவிக்கு ராவணனாக விளங்கக் கூடியவன் யாரென்பதைத் தேவி நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால் தானாகவே விளங்கும்!" என்றான்.

"ராவணன்!" என்ற சொல்லை ஜனநாதன் அழுத்திச் சொன்னதும் தேவிக்கு ஏதோ அருவருப்பான பழைய துர்க் கனவைக் காண்பதுபோல் சர்வாங்கமும் புல்லரித்தது. ஆத்திரமும் மிகுந்தது. அவளுடைய ஆத்திரத்தையெல்லாம் வீரசேகரன் மீது திருப்பிவிட வேண்டும் என்பது போல் ஜனநாதன் வீரசேகரனைச் சுட்டிக்காட்டித் தேவியிடம் சொன்னான்: "எங்கள் வீரசேகரன் சந்நியாசி நடிப்பில் என்னையும் மிஞ்சியவன்! ஆனால் அவன் ராவணனை உண்டாக்குபவனே தவிர, அவனே ராவணனல்ல!" என்று சிரித்தான்.

வீரசேகரனை நோக்கி மனங் குமுறியவளாய் தேவி வெகுண்டு, "பாபி! பெரும்பிழை செய்துவிட்டாய்! பெண்ணை வஞ்சித்த பாவம் பெண்ணாலன்றித் தீராது!" என்று சபித்தாள்.

வீரசேகரனின் கண்கள் கலங்கின. "தாயே! வஞ்சனையை வாயளவிலும் விரும்பாத நான். என் வாழ்நாளில் என் மனச்சாட்சியறிந்து செய்த முதல் வஞ்சகச் செயல் இதுதான்! உன்னை உயிரோடு சிறைப்பிடிப்பதாக நான் செய்த சபதம் நிறைவேறுவதற்கு, ஜனநாதன் சொன்ன இந்த சூழ்ச்சி முறையைத் தவிர. எனக்கு வேறு வழியில்லை! தாயே, என்னை மன்னித்துக் கொள்!" என்று குரல் தழதழக்கக் கூறினான்.

தேவி அவனை நோக்கிச் சீறினாள்.

"தாயே தாயே என்று என்னைக் கூப்பிட்டு வஞ்சித்துவிட்டாய்! தாய் என்ற புனிதமான வார்த்தையை உன் வாயால் சொல்லாதே! உன்னுடைய காரிய வெற்றிக்காகப் பெற்றத் தாயையும் பிறனுக்கு தாரமாக்க மனங்கூசாத மகாப்பாவி நீ!" என்று சீறினாள்.

தேவியின் அந்த வாக்குகளைக் கேட்டதும் வீரசேகரனுக்கு மெய் சிலிர்த்தது. உதடுகளும் நெஞ்சும் துடிதுடித்தன.

தேவி மேலும் விடாமல், "பிறன் மனைவியைச் சிறை செய்வதைப் பெரும் இலட்சியமாகக் கொண்ட மகா வீரனே! நீ பெண்மையின் சக்தியை உணரவில்லை! சீதையின் கற்பு இலங்கையைச் சுட்டெரித்ததை நீ மறந்திருக்கலாம். முன்னம் கண்ணகியென்ற உங்கள் சோழ நாட்டுக் கற்பரசி எங்கள் மதுரையைச் சுட்டெரித்த கதையையும் நீ மறந்திருக்கலாம்! இனிப் பாண்டி நாட்டுப் பெண்ணொருத்தி உங்கள் சோழ நாட்டைச் சுட்டெரிக்கும் சரித்திரத்தை நீ காண்பாய்!" என்று சீறினாள்.

ஜனநாதன் கலகலவென்று சிரித்தான்.

தேவி அவனை நோக்கி ஆத்திரத்துடன், "நீ நம்பவில்லையா?" என்று கேட்டாள்.

"இல்லை, இல்லை! உன்னைவிட நான் தான் அதை அதிகம் நம்புகிறேன்! கதை, கதையாய் இருந்து விடாமல்

*சரித்திரமாக மாற வேண்டும் என்பதுதான் என் மனோரதமும்!" என்றான் ஜனநாதன்.*

*வீரசேகரன் பக்கம் தேவி விருட்டெனத் திரும்பி, "பிறன் மனைவியைச் சிறையெடுப்பதாகச் சபதம் செய்த பேதையே!... பெண்மையைக் களங்கப்படுத்தி எந்த நாடும் பொன்னாடாகத் திகழ்ந்ததுமில்லை. எவனும் பெருமையுடன் வாழ்ந்ததுமில்லை!" என்றாள்.*

*தேவியின் சுடுசொற்கள் முன் வீரசேகரன் உணர்ச்சி வசப்பட்டான். துள்ளித் தாவி ஜனநாதனின் இடையில் தொங்கும் தன் வீரவாளை வெடுக்கென்று உருவிப் பலமாக ஓங்கிப் பிடித்தான்.*

*"தாயே! என்ன வார்த்தைகள் சொல்லிவிட்டீர்கள்! என் கையில் வீரவாள் இருக்கும் வரை உன் பெண்மைக்கு எந்தக் களங்கமும் ஏற்படவிடேன்! உன்னை மாற்றான் சிறை செய்வதாகச் சபதம் செய்து வெற்றிபெற்ற நான், உயிரோடிருக்கும் வரை உன் கற்பைப் பாதுகாப்பதாகவும் சபதம் செய்கிறேன்! சேர சோழ பாண்டிய நாடுகள் சிதறிக் கிடக்காமல் ஒன்றுபட்ட தமிழகமாய் ஒரே சோழ சாம்ராஜ்யத்தின் சூரியோதயம் கிளம்ப வேண்டுமென எந்த இலட்சியக் கனவு காண்கிறேனோ, அந்த இலட்சியத்தின் மீது ஆணை! எந்தத் தமிழன்னை அகிலம் முழுதும் பிரகாசிக்கவேண்டுமென அல்லும் பகலும் அனவரதமும் பூஜிக்கிறேனோ, அந்தத் தமிழ் அன்னையின் மீது ஆணை! எந்த வெற்றிவாளை நம்பி என் இலட்சிய யாத்திரையில் குதித்தேனோ, அந்த என் விஜயவாளின்மீது ஆணை! எந்தத் தேசக் கடமைக்காக உன்னைச் சிறை செய்தேனோ, அந்த கடமையின்மீது ஆணை! என் உடலில் உயிரின் ஓர் அணு இருக்கும்வரை என் கடவுளே வந்தாலும் உன்னைத் தொடவிடமாட்டேன்! உன் கற்பிற்கு எவனாலும் ஹானி ஏற்படுமாயின் என் கையிலுள்ள இந்தக் கத்தியை பொடிப் பொடியாக உடைத்தெறிவது மட்டுமல்ல, அவற்றை என் நெஞ்சுக்குள் புதைத்தும் விடுவேன்!" என்று வீரசேகரன் ஆணையிட்டான்.*

அவனது வீர உள்ளத்திலிருந்து வெளிப்படும் உணர்ச்சிப் பிரவாகங்களைக் கண்டு தேவியும் சிறிது மனங் குழைந்தாள்.

"தாயே! உன் பெண்மையைப் பாதுகாப்பேன் என்ற என் சபதத்தை நீ பரிபூரணமாக நம்பவேண்டும்!" என்று கூறிக்கொண்டே வீரசேகரன் தன் கையில் ஓங்கிய கத்தியின் முனையினால் தன் நெற்றியில் கிழித்து, அதிலிருந்து கொட்டும் ரத்தத் துளிகளைத் தேவியின் மலர்ப் பாதங்களில் விழச் செய்தான். "தாயே! என் இரத்தம் இனி உன் புனிதத்தைப் பாதுகாப்பதற்காக உன் பாதங்களில் அடைக்கலம்! இன்று என் நெற்றியில் விழும் கத்தி வடு பெண்ணின் கற்பை நினைவூட்டும் சின்னமாய் என்றென்றும் விளங்கட்டும்!" என்றான்.

தேவியின் கண்களில் நீர் நிறைந்தது.

"தாயே! என் வாக்குறுதிக்குப் பிரதியாக உன் வாக்குறுதியை நினைவூட்டுகிறேன்! நான் உன்னைச் சிறை வைத்துப் பலத்த காவல் புரிந்தாலுங்கூட, உன் பிராணநாதர் உயிரோடிருக்கும் வரை, உன் கற்பிற்கு ஹானி நேர்ந்தாலொழிய, என் அனுமதியின்றி பிராணத்தியாகம் செய்து கொள்ளக்கூடாது. பெண் குற்றவாளிகள் தற்கொலை செய்துகொள்ளாமல் தடுப்பதற்காக அவர்களது தாழிருங் கூந்தலை நீக்கிவிடவேண்டும் என்று ஒரு சிறை விதியிருப்பதாலும், அதிலிருந்து உனக்குச் சலுகை தர விரும்புவதாலுமே உன்னிடம் அந்த வாக்குறுதியை வற்புறுத்திக் கேட்கிறேன்!"

"அவ்வாறே ஆகட்டும்! என் பிராணநாதரின் மீது ஆணையிட்டுச் சொன்ன என் வாக்குறுதியை என்றும் மறவேன்!" என்று தேவி கண்ணீருடன் உறுதி கூறினாள்.

"தாயே, இந்த வாக்குறுதிக்குப் பிரதியாக, உன் விடுதலையைத் தவிர வேறு எந்த உதவி கேட்டாலும் தருகிறேன்!" என்றான் வீரசேகரன்.

“சிறைக்குள் எப்போதாவது ஒரு துளி விஷம் மட்டும் கேட்பேன்! அதைத் தவிர வேறு எந்த உதவியையும் உன்னிடம் எதிர்பார்க்கவில்லை!” என்றாள் தேவி.

“தாயே! தேவைப்பட்டால் ஒரு துளி விஷமல்ல, என் நெஞ்சின் இரத்தத்தோடு பல துளி விஷத்தைக் கலந்து தருவேன்! உன் கற்பைப் பாதுகாக்க என் மரணத்தாலும் முடியாவிட்டால் நானே உன்னிடம் விஷம் கொண்டுவந்து தருவேன்!” என்று வாக்குறுதி கொடுத்தான் வீரசேகரன். இவ்வளவு உணர்ச்சிகரமான சம்பவங்களையெல்லாம் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே கவனித்து வந்த ஜனநாதன் மெல்ல வீரசேகரன் காதுக்குள், “வீரசேகரா! நீ வீரபாண்டியன் தேவியை உயிரோடு சிறைப்பிடிப்பதாகச் சபதம் செய்தது மட்டும் போதாது. அவளுடைய கற்பைப் பாதுகாப்பதாகவும் சபதம் செய்யவேண்டும் என்பது என் திட்டம்! அதற்காகவே தேவிக்கு ஆத்திரமுண்டாக்கி நீ இவ்வாறு சபதம் செய்யும்படியான ஓர் உணர்ச்சிகரமான சூழ்நிலையை உண்டாக்கினேன்!” என்றான்.

வியப்புற்ற வீரசேகரன் இரகசியமான குரலில் அவனிடம், “இதன் உள்ளர்த்தம்...?” என்று கேட்டான்.

“இப்போது உனக்குத் தெரியாது! அசல் ராவண சந்நியாசியின் உருக்காட்டுப் படலம் ஆரம்பமாகும்போது அது தானாகவே உனக்கு விளங்கும்!” என்றான் ஜனநாதன் பரமரகசியமாக.

“ராவணன் யார்?”

“யோசித்துப் பார்! அதுதான் இனி நான் ஒவ்வொருவரிடமும் எழுப்பப்போகும் கேள்வி!” என்று ஜனநாதன் விஷமப் புன்னகை செய்தான்.

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த தேவி நெஞ்சு விம்ம நெடுமூச்செறிந்தவளாய் அவ்விரு வாலிபர்களையும் நோக்கி, “என்னை நீங்கள் இங்கே மதுரையிலே சிறை

வைப்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை! என் பிராணநாதர் இங்கு படையெடுத்து வந்து என்னையும் எங்கள் தலைநகரையும் ஒருங்கே மீட்பார்."

"தாயே! உன் பிராணநாதர் உன்னைச் சிறைமீட்டுச் சென்றால் நான் அதிக ஆனந்தமடைவேன்! ஆனால் என் உடலில் உயிர் உள்ளவரை, உன்னையோ இம் மதுரையையோ என் கையிலிருந்து வீரபாண்டியன் மீட்க விடமாட்டேன். தலைநகரை மீட்க வராத வீரபாண்டியன் தன் பட்டத்தரசியைச் சிறை மீட்கவாவது இங்கு பெரும்படை எடுத்து வருவான் என்பது நாங்கள் எதிர்பார்க்கக் கூடியது தான்! இங்கு பெரும் யுத்தம் ஒன்றுக்கு நாங்கள் தயாராகவே இருப்போம்!" என்றான் வீரசேகரன்.

ஜனநாதன் அவனை நோக்கி கலகலவென்று சிரித்து, "இல்லை தம்பி! நீங்களிருவரும் எதிர்பார்ப்பது வீண்! இங்கு யுத்தமே நடக்காது!" என்றான்.

அவனை வியப்புடன் நோக்கிய வீரசேகரன், "எதனால் அவ்வாறு எதிர்பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

"இரண்டு மல்யுத்தர்களில் ஒருவன் கோழையாகி விடுவான்! இன்னொருவன் அரூபியாகி விடுவான்! யுத்தம் எப்படி நடக்கும்? தம்பி, நீ வீரபாண்டியன் மனைவியைச் சிறைபிடித்ததோடு இங்கே யுத்தகாண்டம் முடிந்துவிட்டது! இனி அடுத்த காண்டந்தான் ஆரம்பமாக வேண்டும்!" என்று ஜனநாதன் சிரித்தான்.

"அடுத்த காண்டம் என்ன?" என்று கேட்டான் வீரசேகரன்.

"அசோகவனம் எனும் சுந்தரகாண்டந்தான்!" என்று சிரித்தான் ஜனநாதன்.

• • •

**முதலாவது பாகமான யுத்த காண்டம் முற்றிற்று.**

**இக் கதையை எழுதும்போது சரித்திர ஆதாரங்களுக்கு உதவிய சில முக்கியமான ஆராய்ச்சி நூல்கள் :-**


1. The Pandyan Kingdom
2,3 The Cholas. Vol II (Part I & II)
4. Foreign Notices of South India (by Prof. K.A. Nilakanta Sastry)
5. The Mahavansa Part II (By L.C. Wijesinha.)
6. The Historical Inscriptions of Southern India (By S.R. Swell.)
7 South Indian Inscriptions.
8. Studies in the Ancient History of Tondamandalam (By R. Sathianathaier, M.A.L.T.)
9. Thirumalirunjolaimalai (Kallalagar Devastanam, Madura)
10. The Banas (By T.N. Rama Chandran, M.A.)
11. Inscriptions of the Pudukkottah State.
12. Gangas of Talakad (By M. V.K. Rao.)
13. Origin and Development of Saivism in South India.
14. பிற்காலச் சோழர் சரித்திரம் (பகுதி II)
15. பாண்டியர் வரலாறு (டி.வி. சதாசிவ பண்டாரத்தார்)
16. சோழர் வரலாறு
17. பெரிய புராண ஆராய்ச்சி
18. தமிழ்நாட்டு வட எல்லை (மா. இராசமாணிக்கனார் எம்.ஒ.எல்.)
19. சாஸனத் தமிழ்க் கவி சரிதம்
20. ஆராய்ச்சித் தொகுதி (மு.இராகவையங்கார்)
21. மூன்றாங் குலோத்துங்க சோழன் (வி.ரா. இராமச்சந்திர தீக்ஷிதர், எம்.ஏ)
22. தென்னாட்டு கல்வெட்டுகள் (பி.ஒ. எல். Degree Exam. by மு.சிவகுரு நாதன், பி.ஏ.)
23. சோழர் கோயிற்பணிகள் (ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை)
24. அகத்தியர் வரலாறு (துடிசை கிழார் அ. சிதம்பரனார்)
25. கம்பர் (டி.செல்வகேசவராய முதலியார். எம்.ஏ)
26. சரித்திரக் கொத்து (வி.ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார். பி.ஏ)
27. செயற்கை நலம்
28. யான் கண்ட இலங்கை
29. கொங்குதேச இராசாக்கள் (சி.எம். இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ.பி.எல்)
30. இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும் (வெ.ப. சுப்பிரமணிய முதலியார்)
31. தமிழ் வீரம் (ரா.பி. சேதுப் பிள்ளை, பி.ஏ.பி.எல்)
32. இலக்கிய உதயம் II (எஸ். வையாபுரிப் பிள்ளை)
33. கள்ளர் சரித்திரம் (ந.மு. வேங்கடசாமி நாட்டார்)
34. பழந்தமிழாட்சி (ஞா.தேவநேயன், எம்.ஏ)
35. பௌத்தமும் தமிழும் (மயிலை. சீனி. வெங்கடசாமி)
36. தமிழ் வரலாறு முதற்றொகுதி (ரா.இராகவையங்கார்)
37. தமிழ் நாவலர் சரிதை
38. விநோத ரசமஞ்சரி


மற்றும், இலக்கியங்கள், புராணங்கள், தத்துவ சாஸ்திரங்கள், கதை வளர வளர, ஆங்காங்கே சிறு குறிப்புகளுக்கு வேறு பல ஆராய்ச்சி நூல்களும் துணை புரியலாம்.

